# குமார சாமியம்

| | சூரி<br>செ | சுக் | புதன் |
|---|---|---|---|
| சந்<br>ராகு | இராசி | | சனி |
| | | | கே |
| | குரு | | ல |




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 497

# குமாரசுவாமியம்

## ( சோதிட நூல் )

**மூலமும் உரையும்**

*சிறப்புக் கௌரவப் பதிப்பாசிரியர் :*

முனைவர். திருமதி. **சத்தியபாமா காமேஸ்வரன்,**

எம். ஏ., எம். ஃபில்., எம். எட்., பிஎச். டி.,

சுவடியியல் பட்டயம்,

சோதிடவியல் பட்டயம்,




**தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்**

**சரசுவதி மகால் நூலகம்,**

**தஞ்சாவூர்.**

2007

விலை : ரூ. 150-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : குமாரசுவாமியம் - சோதிட நூல் (மூலமும் உரையும்) |
| பதிப்பாசிரியர் | : முனைவர். திருமதி. கா. சத்தியபாமா |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 497 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதற்பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : மே, 2007 |
| தாள் | : டி. என். பி. எல். 18.6 கி. கி. |
| நூல் அளவு | : 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 356 |
| படிகள் | : 1000 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும் ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : மெலிந்த அட்டை |
| பொருள் | : சோதிடம் |
| விலை | : ரூ. 150-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணிக்கெல்லாம் அறிவு வெளிச்சத்தை அளித்துவரும் அரிய கலை விளக்கமாகச் சரசுவதி மகால் நூலகம் திகழ்ந்து வருகின்றது. இந்நூலகம் பன்மொழிச் சுவடிகளையும், நூல்களையும் தன்னகத்தே கொண்டு இந்திய மொழிகளின் ஒருமைப்பாட்டு நிறுவனமாகவும் ஒளிர்ந்து வருகின்றது. இவ்வருமை பொருந்திய இந்நூலகம் தமிழ் இலக்கியச் சுவடிகளின் கருவூலகமாக மட்டுமின்றித் தமிழ்ச் சித்தமருத்துவச் சுவடிகள் மற்றும் சோதிடம், சிற்பம் போன்ற சுவடிகளின் இருப்பிடமாகவும் விளங்குகின்றது.

**குமாரசுவாமியம்** எனும் தலைப்பிலமைந்த மூன்று சுவடிகள் இந்நூலகத்தில் உள்ளன. அவை 802-இ, 1007-ஏ மற்றும் 15726 ஆகும். இந்நூலைப் பதிப்பித்து பொருள் கூறும் பொருப்பை முனைவர் திருமதி. சத்தியபாமா காமேசுவரன் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

"குமாரசுவாமியம் ஓர் சோதிட நூல். இது அறிஞர்களால் போற்றப்பெறுவது" என்று சோதிடப் பேரகராதிக் கூறுகிறது. "தமிழில் குமார சுவாமியம் என்ற நூல் இயற்றப்பட்டுள்ளது. இது அரிய பெட்டகமாகும். தமிழில் வந்த நூல்களில் மிகவும் சிறந்த நூலாகும்" என்று சோதிடக் கலைக்களஞ்சியம் இந்நூல் பற்றிக் கூறுகிறது என்று பதிப்பாசிரியர் கூறியுள்ளார்.

இப்பதிப்பாசிரியர், இந்நூலை இயற்றியவர் ஸ்ரீகுமார சுவாமி என்பவர் எனவும், இவர் செந்திலாண்டவன் திருவருள் பேற்றைப் பெற்றவர் எனவும், முருகனால் இவர்

சோதிடக்கலையை உபதேசிக்கப் பெற்றவர் எனவும், சோதிடக் கலையைக் கற்றுணர்ந்து தெளிந்து, இந்நூலை இயற்றி செந்திலாண்டவர் சன்னதியில் அரங்கேற்றம் செய்தார் எனவும் கூறியுள்ளார்.

இந்நூல் பல சோதிட நூல்கள் கூறும் செய்திகளையும், பலன்களையும் தொகுத்தும் வகுத்தும் திரட்டியும் எழுதிய ஒன்று. நான்கு காண்டங்கள் அடங்கியது. முறையே 14, 23, 6 மற்றும் 11 படலங்களைக் கொண்டு விளங்குகிறது. பதிப்பாசிரியர், நூலாசிரியரின் பொருள்களை நிரல்பட எடுத்துக்கூற மேற்கொண்ட முயல்வு மற்றும் கடும் உழைப்பிற்கு எனது இனிய பாராட்டுக்கள்.

இந்நூல் வெளிவர நிதியுதவி வழங்கிய நடுவண் அரசுக்கும், நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினியில் வெளிவர, கணினிப் பிரிவில் பணிபுரியும் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்
6-5-2007



# நன்றியுரை

தமிழுக்குப் பெருமை சேர்க்கும் பழந்தமிழ் சுவடிகளில் உள்ள அரிய நூல்களைப் பெரிதும் முயன்று தொடர்ந்து வெளியிட்டுத் தமிழுக்கு அருந்தொண்டாற்றிவரும் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தாரின் தமிழ்ப் பணிகளுக்குப் பெரிதும் நன்றியுடையேன். சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் பணியை எனக்கு வழங்கி, குமாரசுவாமியம் என்ற இந்நூலைப் பதிப்பிக்க வாய்ப்பளித்த இந்நூலகத்தினருக்கு என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இச்சிறந்த நூலை வெளியிட அனுமதித்து உத்திரவிட்ட தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் நூலக இயக்குநர் உயர்திரு. சா. விஜயராஜ் குமார், இ. ஆ. ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அலுவலர் திரு. சாமி. சிவஞானம், எம். ஏ., அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

குமாரசுவாமியம் என்ற இந்நூல் அரிதாகக் கிடைப்பதை எடுத்துரைத்து தக்க உரையுடன் பதிப்பிக்க ஆலோசனை வழங்கிய சேலம் மாவட்டம் ஆத்தூர், ஸ்ரீ குரு ஹயக்ரீவா ஜோதிட ஆராய்ச்சி மையத்தின் நிறுவனரும் ஜோதிட ஆராய்ச்சியாளருமான எஸ். சின்னையா அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இப்பணியில் நான் ஈடுபடுவதற்குக் காரணமாக இருந்த என் பெற்றோருக்கும், இப்பணிக்கு ஊக்கமளித்த என் கணவர் கேப்டன் அ. காமேஸ்வரன் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

அச்சுப் பணியைக் குறுகிய காலத்தில் சிறந்தமுறையில் செய்தளித்த நூலக அச்சகப் பிரிவினருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அறிஞர் பெருமக்கள் இப்பதிப்பணி குறித்த கருத்துக்களை வழங்கி வழிகாட்ட வேண்டுகிறேன்.

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்

# பொருளடக்கம்

# பதிப்புரை

நம் முன்னோர்கள் தங்களுடைய எண்ணங்களைத் தங்கள் சந்ததியினருக்கு உணர்த்தும் வண்ணம் இலக்கணம், இலக்கியம், மருத்துவம், சோதிடம், கணிதம், சிற்பம் போன்ற பல்துறைத் தொடர்பான நூல்களை எழுதியுள்ளனர். அவற்றுள் சோதிடம் மக்களிடையே செல்வாக்குப் பெற்ற கலையாக விளங்குகிறது. எதிர்காலத்தைப் பற்றி தெரிந்து கொள்ளவிரும்புவது, மனிதனின் எண்ணங்களுள் ஒன்றாக விளங்குகின்ற காரணத்தால், பரவலாக மக்களிடையே நிலைத்து நிற்கிறது எனலாம்.

தமிழ் மொழியில் ஆயக்கலைகள் அறுபத்து நான்கனுள் ஒன்றாகக் கருதப்படும் சோதிடக்கலை, மக்களின் பண்பாட்டோடு இயைந்து விளங்குகிறது. இக்கலைக்கு ஆதாரமாக விளங்கும் நூல்கள் பலவும் நம் முன்னோரால் இயற்றப்பட்டன. காலவெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டவை போக எஞ்சியுள்ள நூல்கள் பல ஓலைச் சுவடிகளில் இருந்து பதிப்பிக்கப்பட்டு அச்சு நூல்களாக வெளிவந்தன. இன்னும் ஓலைச்சுவடிகளிலேயே உறங்கிக் கிடக்கும் சோதிட நூல்களும் உள்ளன.

இன்று பல்கலைக்கழகங்கள் பலவும் சோதிடக் கலையை அறிவியலாக ஏற்றுக்கொண்டுள்ளன. சோதிட ஆர்வம் மிக்க பலரும் சோதிடக் கலையைக் குறித்து அறிந்து கொள்ளவும், ஆய்வுகளை மேற்கொள்ளவும் விரும்பு கின்றனர். இத்தகையோர்க்குப் பெரிதும் உதவக்கூடியவை சோதிட நூல்களாகும். ஓலைச்சுவடிகளில் இருந்து பதிப்பிக்கப்பட்ட பல சோதிட நூல்கள் பலவும் இன்று அரியனவாக உள்ளன. அவற்றுள் ஒன்றாக விளங்குவது குமாரசுவாமியம்.

"குமாரசுவாமியம் ஓர் சோதிட நூல். இது அறிஞர்களால் போற்றப்பெறுவது[1]" என்று சோதிடப் பேரகராதி இந்நூலினைப் பற்றிக் கூறுகிறது. தமிழில் குமாரசுவாமியம் என்ற நூல் இயற்றப்பட்டுள்ளது. இது ஒரு அரிய பெட்டகமாகும். தமிழில் வந்த நூல்களில் மிகவும் சிறந்த நூலாகும்[2]" என்று சோதிடகலைக் களஞ்சியம் இந்நூலின் சிறப்பினை எடுத்துரைக்கிறது.

இன்று அரிதாகக் கிடைக்கும் நூலாக விளங்கும் இக்குமாரசுவாமியத்தின் மூன்று ஏட்டுச் சுவடிகள் தஞ்சை சரபோசி மன்னரின் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் *802* e, *1007* a என்ற சுவடி எண்ணுள்ளவை பதிப்பிற்குத் தேர்ந்து எடுக்கப்பட்டன. *802*e சுவடியில் படலங்கள் வரிசையின்றி மாறிமாறி அமைந்திருந்தன. பாடல்கள் மிகக் குறைந்த எண்ணிக் கையிலேயே கிடைத்தன. இருப்பினும் உரைப்பகுதி சிறப்பாக அமைந்திருந்தது. *1007* a எண்ணுள்ள சுவடியில் பாடல்கள் முழுமையாக அமைந்திருந்தன. எனவே, இவ்விரு சுவடிகளில் உள்ள செய்திகளையும் ஒன்றாகச் சேர்த்து, நூலுக்கு முழுவடிவம் கொடுக்கப்பட்டுள்ளது. *15726* என்ற எண்ணுள்ள சுவடி மிகவும் சிறியதாகையால் ஒப்பிடப் பயன்படுந்திக் கொள்ளப்பட்டது. குமாரசுவாமியம் (மயநூல்) என்ற நூல் (சுவடி எண். *9136*) ஒன்றும் இந்நூலகத்தில் உள்ளது. மேலும், காளிதாசன் எழுதிய குமாரசுவாமியம் என்ற புராணம் தொடர்பான நூல் ஒன்று இருப்பதும் இங்கு சுட்டத்தக்கது.

### *நூலாசிரியர் வரலாறு*

குமாரசுவாமியம் என்ற நூலை எழுதியவர் ஸ்ரீ குமார சுவாமியாவார்.

"வயமுளசந் தாசலசெந் தூர்க்கதிபன் வீரை
வருமாறி யாடுபெரு மாள்புதல்வ னான
செயமுகும்ப்ர பலசுமுக குமாரசுவா மிக்கோர்
தெய்வமவ னுளத்திருந்து திருவுளம்பற் றியதே"

*(பாயிரம் : 5)*

---

1. சோதிடப் பேரகராதி - பக். 87
2. சோதிடக் கலைக்களஞ்சியம் - பக். 269

என்ற பாயிரப்பாடல் இவர் வீரவநல்லூரைச் சார்ந்த மாறியாடும் பெருமாளின் மகனார் என்பதை உணர்த்தும். இந்நூலில் புதூர் வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் இயற்றிய சிறப்புப் பாயிரப் பாடல்களின் வழி, பாண்டி நாட்டில் வீரவநல்லூரில் வணிகர் மரபைச் சார்ந்தவர் மாறியாடும் பெருமாள். அவருடைய அரும்பெரும் புதல்வர் குமாரசுவாமி. முருகப் பெருமானிடத்து மிகுந்த பற்றுடையவர். செந்திலாண்டவரின் பேரருளினால் சோதிடக் கலையை உபதேசிக்கப் பெற்றவர். இறைவனின் கட்டளையைச் சிரமேலேற்று சோதிடக் கலையைக் கசடறக் கற்று, இந்நூலைச் செந்திலாண்டவர் சன்னதியில் அரங்கேற்றம் செய்தார் என்பதை அறியலாம். இதனை,

"சொல்லுறும் பொழில்கள் சூழுஞ்செந்திலம் பதியைச் சேர்ந்து
வெல்லருங் கதிர்கொள் வேலன் விளங்குசன் னதியி லந்தச்
சொல்லரும் புகழ்க்கு மார சுவாமிய மென்னு நூலை
யெல்லறும் கனகப் பூணான் இனிதரங் கேற்றி னானே."

(சிறப். பாயி : 46)

என்ற சிறப்புப் பாயிரப் பாட்டால் அறியமுடிகிறது.

## நூலாசிரியரின் கல்விப்புலமை

நூலாசிரியர் குமாரசுவாமி, வடமொழியிலும் தமிழ் மொழியிலும் வல்லவர். ஆதியில் சற்குரு தேசிகனாக விளங்கும் சுப்பிரமணியக் கடவுள் அகத்தியருக்கு உபதேசித்தருளியது சோதிடக்கலை என்பதைக் கூறவரும் ஆசிரியர், வடமொழியில் சோதிடத்தில் சிறந்து விளங்கிய பதினெண்மருடைய பெயர்களை,

"ஆதிமுதற் குபதேசற் குருதேசி கன்முன்
அகத்தியனுக் குரைத்தருள்சோ திடத்தியல்பந் நாளில்
ஓதிவை நாயிலினர் வசிட்டர்கற் கயெவன
ரோமசர்ப ராசர்மநு நாரதர்வி யாசர்

போதகரங்கி ராமரத்ரி மரீசிபுரு குச்சர்
புகர்சவுனர் சவுகர்கா சிபரிவர்புத் தியினால்
ஏதெனினும் கவர்கடங்கட் கியன்றதுமாத் திரங்கற்
றிவ்வுலகில் இவர்முதலோர் சொனதபரி மிதமே".

*(பாயிரம் : 1)*

என்ற பாயிரப் பாடலில் இனர், வசிட்டர், கற்கர், யவனர், ரோமசர், பராசர், மநு, நாரதர், வியாசர், போதகர், அங்கிராமர், அத்திரி, மரீசி, புருகு, சர்புகர், சவுனர், சவுனகர், காசியபர் ஆகியோரைக் குறிப்பிட்டு அவர்கள் இயற்றிய நூல்களையும் பட்டியலிட்டுக் காட்டுகின்றார். மேலும்,

"இவர்களுரைத் தனவோரை சாரம்ரத்ன கோசம்
இந்துவணி வோரைமெயஞ் ஞானப்ரிதி வியோக
வுவரிசத மஞ்சரிலீ லாவதிசா தககற்
போதனமெண் வர்க்கமெம் சக்கர்மெய்க் குதையம்
நவநிதிய மரிட்டநவ நீதம்வார மேரை
நயவல்கிருஷ் ணைசித்தாந்தம் வாக்கியமின் னனவெஞ்
சவுரியப ராக்கிரமங் கேரளிலம் பாகம்
தாற்காலதீ தறிவதுபிர காசிச்சீ பதியே".

*(பாயிரம் : 2)*

"பதிபலசே கரம்புவனப் பிரிதிவிகற் பலதை
பராசரிரு வாசரிய மார்யபுடம் பலதா
விதப்ரபல முகுர்த்தவிதா னத்துளமா விதயம்
விதிலபிதஞ் சாந்திபடாம் விகணிதங்குட் டுணவஞ்
சிதப்படத்தி யல்புடவித் திறமைம்புட் சரமத்
திரிமலம னோமன்னர் தினமுகுர்த்தத் திரைய
மதத்துளது தெரிசனஞ்சொற் பனஞ்சகுனங் காதல்
மற்றவைமுன் னாளுளவிந் நாளினும்மற் றுளவே".

*(பாயிரம் : 1)*

என முன்னாளில் விளங்கிய நூல்கள்,

1. ஓராசாரம்
2. ரத்னகோசம்
3. சந்ராபரணவோரை
4. ஞானப்பிரிதிவி
5. யோகாருணவம்
6. யோகசதமஞ்சரி
7. லீலாவதி
8. ஜாதக பாரிஜாதம்
9. அட்டவர்க்கம்
10. காலசக்கரம்
11. நரசக்கரம்
12. நவநிதியம்
13. அரிட்ட நவநீதம்
14. வாரமேரை
15. சாராவளி
16. கிஷ்ணீயம்
17. சித்தாந்தம்
18. வாக்கியம்
19. பரகிதம்
20. சவுரிய பராக்கிரமம்
21. கேரளிலம்பாகம்
22. காலமறிதல்
23. காலப்ரகாசி
24. ஸ்ரீபதி
25. பாவகப்பலசேகரம்
26. புவனப்பிரிதிவி
27. கல்பலதை
28. பூர்வபராசரியம்
29. உத்தரபாராசரியம்
30. ஆரியபுடம்
31. பலதாவித பிரபலம்
32. முகூர்த்த மாதவியம்
33. விதிலபிதம்
34. சாந்தபடாம்
35. விகணிதம்
36. குட்டாகாரம்
37. அண்டகோளப்பகுதி
38. பூகோளகை
39. பஞ்சபக்ஷி
40. சரநூல்
41. திரிமல சம்பிரதாயம்
42. மனோமாண்டவியம்
43. தினமுகூர்த்தத்திரையம்
44. மதத்துள்ளது
45. தெரிசனை
46. சொற்பனம்
47. சகுனம்
48. காதல்

ஆகிய 48 நூல்களைக் கூறியுள்ளார்.

மேலும்,

"மற்றுளநீற் கழுத்தான்சர் வார்த்தசிந்தா மணியில்
வகைப்பேர்பத் திரிகைசம்பு வாஞ்சியிரு நாதம்
உற்பலகற் றொழில்சாத கத்துதயம் வேம்பத்
தூரருள்ள முடையான்கே சவிதனமெட் டுளதும்
கற்றிவரிப் படிபலவாய்த் தங்கட்கட் குடைய
கருத்துளதெவ் வளவுளதவ் வளவுகணிப் பதனால்
சொற்றிடலெப் படியெனிலிப் பேர்ப்பலசே கரமாய்ச்
சொல்வததி சயமுளகு மாரசுவா மியமே". (பாயிரம் : 4)

என்று தாம் வாழ்ந்த காலத்திய நூல்களை இக்காலத்துள்ள நூல்களாவன என்று குறிப்பிடுகின்றார். அவை நீலகண்ட தாசியம், சர்வதோ பத்திரிகை, சர்வார்த்த சிந்தாமணி, சம்பு நாதவ்யம், வாஞ்சிநாதவ்யம், சாதக பலரத்னம், சாதக சீவனம், சினேந்திரமாலை, வேம்பத்தூரர் உள்ளமுடையான், கேசவியம், அட்டைஸ்வரியம் என்பனவாகும்.

### மூலநூல்

குமாரசுவாமியம் பல சோதிட நூல்களின் பலன்களை ஒன்றாகத் திரட்டி எழுதப்பட்ட நூலாகும், "பேர்ப்பல சேகரமாய்ச் சொல்வததி சயமுள குமாரசுவா மியமே" (பாயிரம்: 4) என்ற பாடலடி இதனைப் புலப்படுத்தும். மேலும்,

"இயல்புளவிப் பலமுழுதுஞ் சேகரித்தொன் றாக
இயம்புமதி சயமுளகு மாரசுவா மியமே".
(பாயிரம் : 5)

என்பதும் இதனை உணர்த்தும்.

### நூல்

குமாரசுவாமியம் நான்கு காண்டங்களாகப் பகுக்கப் பட்டுள்ளது. அவை, (1) மூல காண்டம், (2) சாதக காண்டம்,

(3) முகூர்த்த காண்டம், (4) சிந்தனா காண்டம் ஆகியவை யாகும். காண்டங்கள் பல படலங்களாகப் பிரிக்கப்பட்டு உள்ளன. மூலகாண்டம் 14 படலங்களையும், சாதக காண்டம் 23 படலங்களையும் முகூர்த்த காண்டம் 6 படலங்களையும், சிந்தனா காண்டம் 11 படலங்களையும் கொண்டு விளங்குகிறது.

மூல காண்டம் காவியப் படலத்தில், இந்நூல் தோன்றக் காரணமானவனும் உபதேசித்தவனும் சுப்பிரமணியக் கடவுள் என்ற செய்தி காணப்படுகிறது. தினாதி நாமோதயப் படலத்தில், நட்சத்திரம், கோள்கள், இராசிகள், யோகம், கரணம் முதலானவற்றிற்கான பல்வேறு பெயர்கள் தரப்பட்டுள்ளன. நட்சத்திர சரித்திரப் படலத்தில், நட்சத்திரங் களுக்குரிய முதல் எழுத்துக்கள், விலங்குகள், மரங்கள், கணம், தேவதை, விடகடிகை, பகை, நட்பு, பஞ்சபட்சி, நட்சத்திரத்தன்மை, கிரக உதைப்பு, கிரக வேதைகள், இருப்பிடம், தேசம், மகாதிசைகள், ரோகம், யோகம், சூலம், பொருத்தங்கள், வடிவம், குலம் முதலானவை கூறப்பட்டு உள்ளன. வார சரித்திரப் படலத்தில், விதிலபித முகூர்த்தம், தின, மாத, வருட துருவங்கள், வார சூனியம், முகூர்த்தத் திரையம், காலன், அர்த்தப்பிரகரன், எமகண்டன், குளிகன் ஆகியோர் உதயமாகும் காலம், சரம், வார, ஊண், பஞ்சபட்சி முதலான செய்திகளும் அமைந்துள்ளன. மேலும், சூலங்களுக்கு நாழிகை, வார வர்க்கம், சுவாலாதிக் கிரகம், அவமாக தோஷம், வார லக்கினம், பஞ்சக தோஷம், மரணயோகம், அமிர்தயோகம் போன்றவை கூறப்பட்டு உள்ளன.

இராசி சரித்திரப் படலத்தில், கோள்களின் நட்பு, ஆட்சி, உச்சம், நீசம், பகை, வீடுகள், பார்வை, இராசியின் இடம், நிறம், நாழிகை, வடிவம், கால், இராசி, ஊண், இராகு விழிப்பு, இராசிக் கவிப்பு, சந்திரகெதி, இராசிக்குருடு, வெளி ராசி, உள்ராசி, இடைராசி, நவவர்க்கம், சஷ்டியாம்சம், சுப- அசுப இராசிகள் குறித்துச் சொல்லப்பட்டுள்ளது. திதி

சரித்திரப்படலம், திதி, தேவதை, திதித்தீது போன்றவற்றையும், யோக, கரண, சரித்திரப்படலம், யோகதீது, யோக தோஷம், கரணதீது போன்றவற்றையும் எடுத்துரைக்கின்றது. கிரகாதிபர், சரித்திரப்படலம், தாது, மூல, ஜீவ கிரகம், உச்ச, இடைநிலை, பூமி கிரகங்கள், கிரகாதிபருக்குக் கதிர், கால், திக்கு, வயது, குலம், வயது, குலம், அசைவு, தன்மை, கிரக அவஸ்தை, கிரக இடம், வடிவம், நிறம், அறிவு, குணம், காரகம் மற்றும் வக்கிரம், அதிவக்கிரம், வக்கிர நிவர்த்தி, அத்தமனம், கிரகயுத்தம், உச்சபங்கம், நீசபங்கம் போன்றவற்றைக் கூறுகின்றது. அட்டவர்க்கப் படலத்தில், கோள்களின் அட்டவர்க்கங்கள், சர்வாஷ்டவர்க்கம், பரல் தொகை, திரிகோண சோதனை, ஏகாதிபத்திய சோதனை, இராசி குணாகரம், கிரக குணாகரம், குணசமுகம், சுத்தபிண்டம், ஏகசமுகம், தினகண்டம், வயது கண்டம் போன்றவை கூறப்பட்டுள்ளன.

நரசக்கரப் படலத்தில், நர சக்கரம் கணக்கிடுவது குறித்த செய்தியும், காலச்சக்கரப் படலத்தில், வலவோட்டு, இடவோட்டு நட்சத்திரங்கள், வலவோட்டுச் சக்கரம், இடவோட்டுச் சக்கரம், காலசக்கர திசை போன்றவை அமைந்துள்ளன. மகாதிசைப் படலத்தில், மகாதிசை, மகாதிசை புத்தி, பாவக திசை, பாவக திசை அபகாரம் முதலானவை கூறப்பட்டுள்ளன. பாசகால வர்க்கப் படலத்தில் பாசகாதிபர், சத்துரு, பாசகாதிபருக்குத் தானம், காலம், காலப்பகை ஆகியவை கூறப்பட்டுள்ளன. நாழிகையியற் படலத்தில் பகல் நாழிகை, இராநாழிகை நாழிகை அறியும்விதம், சர்ப்ப முகூர்த்தம், உருத்திர முகூர்த்தம் முதலான செய்திகள் காணப்படுகின்றன.

இரண்டாவது காண்டமான சாதக காண்டத்தில், இலக்கனோதயப் படலத்தில், சென்ம இலக்கினம், ஓரா இலக்கனம், நாம லக்கனம், பாவ லக்கனம் முதலான பல்வேறு இலக்கனங்கள்; இரட்டைப் பிறவிகள், அலி, ஊமை, குறளுருவம் போன்றவை, அரிட்டங்கள், நீண்ட

ஆயுள் முதலானவை கூறப்பட்டுள்ளன. இரண்டாம் பாவகப் படலத்தில், தனம், கண், குடும்பம், முகம், குணம், வித்தை போன்றவை சொல்லப்பட்டுள்ளன. மூன்றாவது பாவகப் படலம், சகோதரபலன், பராக்கிரமம், ஆபரணம், காவியம் முதலானவற்றைக் கூறுகின்றது. நான்காம் பாவகப் படலத்தில் மாதுர்பலன், ஆளடிமை, சுகம் முதலானவற்றையும், ஐந்தாவ்து பாவகப் படலம், புத்திரர் பலன், குழந்தைப் பேறின்மை, புத்திரர் இயல்பு போன்றவற்றையும்; ஆறாம் பாவகப் படலம், சத்துரு பலன், கடன் படல், துன்பம், விரோதம், ரோகம் முதலானவற்றையும் கூறுகின்றது. ஏழாம் பாவகப் படலத்தில், காமபலன், களத்திர பலம், களத்திரத்தின் இயல்பு போன்றவையும்; எட்டாம் பாவகப் படலத்தில், அவமானப்பலன், மரணகாலம், மரணம் நிகழும் ஏது, மாதுர், பிதுர், சகோதரம், களத்திரம் முதலான செய்திகள் கூறப்பட்டுள்ளன.

ஒன்பதாம் பாவகப் படலத்தில் பிதா இயல்பு, தானம் கொடுத்தல், பாக்கியபலன் போன்றவையும், பத்தாம் பாவக படலத்தில், கர்மபலன், தொழில் முதலியவையும் கூறப்பட்டுள்ளன. பதினோராம் பாவகப் படலம், மூத்த சகோதரம், இலாபம், ஆதாயம் போன்றவற்றையும்; பன்னிரண்டாம் பாவகப் படலம், சுகசயனம், தனச்செலவு, வாகனம் முதலானவற்றையும் எடுத்துரைக்கிறது.

கிரக சேகரப் படலம், பல்வேறு கிரக சேர்க்கைகளின் பலன்களை எடுத்துரைக்கிறது. யோகாதியப் படலம், பல்வேறு யோகங்களைத் தொகுத்துக் கூறுகின்றது. மகாதிசைப் படலம், திசைபலன் சொல்லும் வகை, மாரக திசை போன்றவற்றையும், கோசர பலப் படலம் கோள்கள் சுற்றி வருவதால் உண்டாகும் பலன்களை எடுத்தோதுகின்றது. வருஷப்பலப் படலம், வருஷப் பிறப்புப் பற்றியும், மாதப் பலப் படலம் மாதம் பிறந்த நட்சத்திரத்தைப் பற்றியும், தினப் பலப் படலம், தினபலத்தைப் பற்றியும் கூறுகின்றன. காலசக்கர, நர சக்கரப் பலப் படலங்களில் திசை நாதர்களைக்

கொண்டு பலன் கூறுதலும், அட்டவர்க்கப் படலத்தில், அட்டவர்க்கங்களைக் கணக்கிட்டுப் பலன் கூறுதலும்; சமுதாயப்பலப் படலத்தில் பொதுப்பலம் குறித்தும்; மாதர் சாதகப் படலத்தில் வார-ருதுப் பலன், நட்சத்திர ருதுப் பலன், கர்ப்பகாலம், நாயகன் இயல்பு போன்றவை குறித்தும் கூறப்பட்டுள்ளது.

முகூர்த்த காண்டத்தில், தினாதி சுபாசுபப் படலத்தில், முகூர்த்தத்துக்கு ஆகாத நட்சத்திரம், பொருந்திய நட்சத்திரம், முகூர்த்தம் வைக்கவேண்டிய வாரம், திதி, யோகம், கரணம், விவாகத்துக்கு ஆகாத மாதம் முதலானவையும்; மணாதிப் பொருத்தப்படலத்தில், ஆணுக்குப் பெண்ணுக்கும் பொருத்தம், விவாக முகூர்த்தம், மணமகள் இலக்கனம், பல்வேறு நல்ல காரியங்களுக்கு முகூர்த்தம் முதலானவையும் கூறப்பட்டுள்ளன. யாத்திரைப் படலத்தில் திக்கு யாத்திரை, சமுத்திர யாத்திரை, யாத்திரைக்கு ஆகாத காலம், துற்சகுனம், யாத்திரைக்குப் பரிகாரம் போன்றவற்றையும்; கிரகவியற் படலத்தில் வீடுகட்ட தக்க காலத்தையும், குளம் கூவற் படலம், குளம், கிணறு வெட்டத்தக்க காலத்தையும் சதா முகூர்த்தப் படலம் நல்ல நேரத்தையும் கெண்டாந்த நாழிகை காலத்தையும் கூறுகின்றது.

சிந்தனா காண்டத்தில், பல ஞாபகப்படலம், ஆரூடம் குறித்தும்; சோரபலப் படலம், திருட்டுப்போன் பொருள் கிடைக்குமா கிடைக்காதா என்பது குறித்தும்; முஷ்டிபலப் படலம், திருட்டுப்போன பொருள் குறித்தும் கூறுகின்றன. சிந்தனாபலப் படலத்தில், ஆரூடமாக மரணம், தேர்வு, யாத்திரை குறித்தும்; உலகியற் படலம், மழை, தானிய விலை, நாடு, வளம் குறித்தும்; சொற்பனபலப் படலம், கனவுகள், குறித்தும் எடுத்துரைக்கிறது. காலமறிதல் படலம், செய்யக் கூடாத செய்கைகள் குறித்தும்; திரிமலசம்பிரதாயப் படலம் இந்திரிய இயல்பு, சிறுநீர் இயல்பு, மலத்தின் இயல்பு போன்றவை குறித்தும் பேசுகிறது. தெரிசனாபலப் படலம், சூரிய-சந்திர பிம்பங்களைக் காணுதலால் உண்டாகும்

நன்மைகள் பற்றியும்; காதல் பலப் படலம், பல்லியின் ஓசை குறித்தும், தும்மல், ஆந்தை அலறல், காகத்தின் குரல் போன்றவற்றைக் குறித்தும் எடுத்துரைக்கின்றது. பகனபலப் படலத்தில் பல்லி விழும் பலன், மனையிலும் உணவிலும் காண்பவற்றின் பலன் முதலானவை கூறப்பட்டுள்ளன.

இந்நூல், கம்ப இராமாயணத்தைப்போல காண்டங் களாகவும், காண்டங்கள் படலங்களாகவும் பகுத்தமைக்கப் பெற்று, **சோதிடம்** என்னும் தன்னிகரற்ற தலைவனைப் பற்றி எடுத்துரைக்கும் சோதிடக் காப்பியமாக விளங்குகின்றது எனலாம். மேலும், சோதிடம் தொடர்பான அனைத்துச் செய்திகளையும் தன்னகத்தே கொண்ட சோதிடக் களஞ்சியமாக விளங்கும் இந்நூல், சோதிடம் கற்போருக்கும், சோதிட ஆர்வலர்களுக்கும், சோதிட ஆய்வாளர்களுக்கும் நல்லதொரு விருந்தாக அமையும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.



நூல்

# குமாரசுவாமியம்

## மூலமும் உரையும்

### காப்பு

போதிட மாகிய வேதிய னாத புராதனன் மான்முதலோர்
ஈதிட மாய்வரு வாரெனில் யாவும் விடாதியல் பாகநவில்
சோதிட மேதிட மாக நடாவு குமாரசு வாமியம்மான்
ஓதிட வேயென தோரகம் வாழ்ப வனைச கோதரனே.

*செந்தாமரை மலரின்கண் வீற்றிருக்கும் பிரமதேவனும், சப்தாட்டம பரமரூப அநாதியான உருத்திரமூர்த்தியும் மகாவிட்டுணுவும், மகேஸ்வரனும், சதாசிவனும், இந்தப் பூமியின்கண் வந்து செனிப்பார்களேயாகில், அவர்களுடைய ஆயுர்த்தாயம் கிரியா கமன முதலாகிய யாவற்றையும், வழுவாது உள்ளவாறு சொல்லும் சோதிடத்தையே சத்தியமாகச் சொல்லாநின்ற குமாரசுவாமியம் என்னும் நூலை, யான் சொல்லும் பொருட்டு, எனது ஒப்பற்ற இதயக் கமலத்தின்கண் நீங்காமல் எழுந்தருளியிருப்பவன் விக்கினேசுவரன் சகோதரனான சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.*

### பாயிரம்

ஆதிமுதற் குபதேசற் குருதேசி கன்முன்
அகத்தியனுக் குரைத்தருள்சோ திடத்தியல்பந் நாளில்
ஓதிவை நாயிலினர் வசிட்டர்கற் கரெவுன
ரோமசர்ப ராசர்மநு நாரதர்வி யாசர்
போதகரங்கி ராமரத்ரி மரீசிபுரு குச்சர்
புகர்சவுனர் சவுகர்கா சிபரிவர்புத் தியினால்
ஏதெனினும் கவர்கடங்கட் கியன்றதுமாத் திரங்கற்
றிவ்வுலகில் இவர்முதலோர் சொனதபரி மிதமே. 1

ஆதிமுதலாகிய சிவனுக்கு உபதேச சற்குரு தேசிகனான சுப்பிரமணியக் கடவுள் முன், அகத்தியமகா முனிக்காகத் திருவுளம்பற்றி அருளிய சோதிடத்து இயல்பை அந்நாளில் படித்தவர்கள் இனர், வசிட்டர், கற்கர், எவுனர், ரோமசர், பராசர், மநு, நாரதர், வியாசர், போதகர், அங்கிராமர், அத்திரி, மரீசி, புருகுச்சர், புகசவுனர், சவுனகர், காசிபர் என்னும் பதினெண்மார்கள். இவர்கள் தத்தம் புத்திக்கியன்ற மாத்திரம் கற்று, இவ்வுலகில் இவர்கள் முதலானோர் செய்த நூல்கள் அளவில்லை என்றவாறு.

இவர்களுரைத் தனவோரை சாரம்ரத்ன கோசம்
　　இந்துவணி வோரைமெயஞ் ஞானப்ரிதி வியோக
வுவரிசத மஞ்சரிலீ லாவதிசா தககற்
　　போதனமெண் வர்க்கமெம் சக்கரமெய்க் குதையம்
நவநிதிய மரிட்டநவ நீதம்வார மேரை
　　நயவல்கிருஷ் ணைசித்தாந்தம் வாக்கியமின் னனவெஞ்
சவுரியப ராக்கிரமங் கேரளிலம் பாகம்
　　தாற்காலத் தறிவதுபிர காசிச்சீ பதியே.　　2

முன்சொன்ன பதினெண்மர் முதலானோர் செய்த சோதிட நூல்கள் ஓராசாரம், ரத்னகோசம், சந்திராபரண வோரை, ஞானப்பிரிதிவி, யோகாருணவம், யோகசதமஞ்சரி, லீலாவதி, சாதக பாரிஜாதம், அட்டவர்க்கம், காலசக்கரம், நரசக்கரம், நவவிதியம், அரிட்ட நவநீதம், வாராமேரை, சாராவளி, கிஷ்ணீயம், சிந்தாந்தம், வாக்கியம், பரகிதம், சவுரிய பராக்கிரமம், கேரளிலம், பாகம், காலமறிதல், காலப்ரகாசி, ஸ்ரீபதி என்றவாறு.

பதிபலசே கரம்புவனப் பிரிதிவிகத் பலதை
　　பராசரிரு வாசரிய மாரியபுடம் பலதா
விதப்ரபல முகூர்த்தவிதா னத்துளமா தவியம்
　　விதிலபிதஞ் சாந்திபடாம் விகணிதங்குட் டுணவம்
சிதப்படத்தி யல்புடவித் திறமைம்புட் சரமத்
　　திரிமலம னோமன்னர் தினமுகூர்த்தத் திரையம்
மதத்துளது தெரிசனம்சொற் பனம்சகுனம் காதல்
　　மற்றவைமுன் னாளுளவிந் நாளினும்மற் றுளவே.　　3

பாவகப் பலசேகரம், புவனப்பிரிதிவி, கல்பலதை, பூர்வபராசரியம், உத்தரபராசரியம், ஆரியபுடம், பலதாவிதப் பிரபலம், முகூர்த்த மாதவியம், விதிலபிதம், சாந்திபடாம், விகணிதம், குட்டாகரம், அண்டகோளப்பகுதி, பூகோளகை, பஞ்சபட்சி, சரநூல், திரிமலசம்பிரதாயம், மனோ மாண்டவ்வியம், தின முகூர்த்தத்திரயம், மதத்துளது, தெரிசனை, சொப்பனம், சகுனம், காதல் இவை முதலானவை முற்காலத்தில் உண்டாகிய நூல்கள். இக்காலத்தில் உண்டாகிய நூல்களும் சில உண்டு என்றவாறு.

**மற்றுளநீற் களத்தசன்சர் வார்த்தசிந்தா மணியில்**
**வகைப் பேர்பத் திரிகைசம்பு வாஞ்சியிரு நாதம்**
**உற்றபல கற்றொழில்சா தகத்துதயம் வேம்பத்**
**தூரருள்ள முடையான்கே சவிதனமெட் டுளதும்**
**கற்றவரிப் படிபலவாய்த் தங்கள்கட் குடைய**
**கருத்துளதெவ் வளவுளதங் வளவுகணிப் பதனாற்**
**சொற்றிடலெப் படியெனிலிப் பேர்ப்பலசே கரமாய்ச்**
**சொல்வததி சயமுளகு மாரசாவா மியமே.** 4

இக்காலத்துள்ள நூல்களாவன : நீலகண்டதாசியம், சர்வார்த்த சிந்தாமணி, சர்வதோபத்திரிகை, சம்புநாதவ்வியம், வாஞ்சிநாதவ்யம், சாதகபலரத்னம், சாதகசீவனம், சினேந்திரமாலை, உள்ளமுடையான், கேசவியம், அட்டைஸ்வரியம் இவை முதலாகிய பல நூல்களையும் அவரவர் புத்திக்குத் தக்கபடி கணித்துச் சொல்லி இருப்பதனால் எவ்வாறு பலன் சொல்லுவதென்னல், மேற்கூறிய நூல்களில் உள்ள பலன்கள் அனைத்தையும் ஒன்றாகத் திரட்டிச் சொல்லத்தக்க அதிசயமுடைய குமாரசுவாமியம் என்னும் நூலினால் சொல்வது என்றவாறு.

## பாயிரம்

**இயல்புளவிப் பலமுழுதும் சேகரித்தொன் றாக**
**இயம்புமதி சயமுளகு மாரசு வாமியமே**
**புயனெழுதும் எழுத்துமவன் எழுத்துமியல் பாகப்**
**புகல்வதுகண் டிதனியல்பிப் புவியிலுளோர்க் கறிய**

வயமுளசந் தாசலச்செந் தூர்க்கதிபன் வீரை
வருமாறி யாடுபெரு மாள்புதல்வ னான
செயமிகும்பிர பலசுமுக குமாரசுவா மிக்கோர்
தெய்வமவ னுளத்திருந்து திருவுளம்பற் றியதே. 5

இயல்பாகிய இப்பலன் அனைத்தையும் ஒன்றாகத் திரட்டிச் சொல்லும் அதிசயம் உள்ள குமாரசுவாமியம் என்னும் இந்நூல் பிரமன் எழுதும் எழுத்திற்கும், அவன் தலையெழுத்திற்கும் வகை விபரமாகப் பலன் சொல்லும் தன்மையை, இப்புவியின்கண் யாவரும் அறியும் பொருட்டு, வெற்றி பொருந்திய சந்தன சைலத்தையுடைய திருச்செந்தூர்க்கு அதிபனும், வீரவநல்லூரில் வந்துதயமான மாறியாடும் பெருமாள் புதல்வனாகிய, செயம்பொருந்திய பிரபல சுமுக குமாரசுவாமிக்கு, ஒப்பற்ற தெய்வமுமாகிய சுப்பிரமணியக் கடவுள், அவன் இதயத்திலிருந்து, இந்தக் குமாரசுவாமியம் என்னும் நூலைத் திருவுளம்பற்றி அருளினன் என்றவாறு.

## பாயிரம்

அவ்வையவட் கிளையவனெண் ணெழுத்திருகண் தெய்வத்
தாலாகா தெனினுமெய்த் தொண்டதற்குள தெவ்வளவுன்
டிவ்வுலகர்க்கு ரைத்ததுசத் தியமெனுமார்க் கண்டர்
கிறப்பிருப்பென் றைக்குமொன்றென் றிசைத்ததுகேட் டிருந்தும்
கவ்வையில்பாக் கியகாலத் தயத்தவனா கிலுந்துற்
காலமறிந் ததைக்கடத்தக் கடவுளர்க்குங் கடவாத்
தெவ்வடுவே லாயுததற் பரகுதே சிகனைச்
சிந்தைசெய லவனெமனாந் தகன்செகத்திந் திரனே. 6

ஔவையானவள், “எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்” என்றும், திருவள்ளுவ நாயனார், “எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு” என்றும், “தெய்வத்தால் ஆகா தெனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும்”

என்றும், லோகோபகாரமாகச் சொல்லியிருப்பதனுள் தெய்வத்தா லாகா தெனினும் என்ற வாக்கியத்தைச் சத்தியமாகக் கொண்டு முயற்சி பண்ணின மார்க்கண்டருக்கு, என்றும் பதினாறு வயதாக ஞானரூபமாகிய பரமசிவம் திருவுளம் பற்றியருளிய சரிதத்தைக் கேட்டிருந்தும், துன்பமே தெரியாத பாக்கிய காலத்தில், அவ்வித முயற்சியை மறைந்திருந்தானாகிலும், ஆபத்துக்காலத்தை, இந்நூலால் அறிந்து, அதைக்கடக்கும் பொருட்டுச் சகல தேவர்களாலும் வெல்லுதற்கு அரிய சத்துரு சங்காரனான வேலாயுதக் கடவுளைத் தியானம் பண்ணுவானாகில், அவனே எமனாந்தனென்றும் பூலோகேந்திரன் என்றும் சொல்லப் படுவான் என்றவாறு.

*பாயிரம் முற்றும்.*



# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.

# குமாரசுவாமியம்

## 1. மூலகாண்டம்

### காவியவியல் படலம்

பூங்கமலத் தேவனருள் பொற்கடத்துள் பவித்த
 பொதிமவரைக் குறுமுனிசெந் தமிழ்ப்பொருள்கேட் பதற்காய்
ஓங்கியசந் தாசலச்செந் தூர்க்கிவனெத் தினமும்
 உற்றிடுமத் தினத்திலொரு தினத்திலிவன் உளத்தில்
தாங்கியசோ திடத்தியல்சொல் குருநாத தேவ
 சகாயதிரு வுளமிரங்கித் தக்கதெனக் கெனுமுன்
தேங்கமழ்வாய் மலர்ந்துதின முதற்பேர்சொற் றனனத்
 திரிதருபுத் திரியெனுமத் திரிபுரைத் திரனே. 1

அழகிய கமலாசனனான பிரமதேவன் தந்தருளிய பொன் போலும் பிரபையையுடைய கும்போதயனான பொதிய வரையின்கண் வீற்றிருக்கும் அங்குட்டப் பிராமண வடிவாகிய அகத்தியனானவன், செவ்வியதாகிய தமிழ் நூல்களின் பொருள்களைக் கேட்கும் பொருட்டு, மிகுதியும் வளர்ந்தோங்கிய சந்தன சைலத்தை உடைய திருச்செந்தூர்க்குச் சதாகாலமும் வந்து கொண்டிருப்பன். இப்படி வருந்தினங்களில் ஒருநாள் சகலலோக சம்பிரதாயங்களையும் சோதிடத்தினாலேயே தான் தெரிய வேண்டுமென்று, தன்னுடைய இதயத்தில் உதயமானபடியால் தனது குரு சன்னிதானத்தில் வந்து, என் குருநாத தேவசகாய என்று அநேகமாகிய தோத்திரம் செய்து, சோதிட நூலை அடியேனுக்குத் திருவுளமிரங்கி உபதேசித்தருள வேண்டுமென்று, இவன் விண்ணப்பம் செய்யாமுன்னம், வாசம் கமழாநின்ற செவ்வாம்பலைப் போலும் அழகினையுடைய திருவாய் மலர்ந்து முதலில் நட்சத்திரம் முதலானவைக்கெல்லாம் உரிச்சொல் உரைத்தனன், பர்வதராஜன் தந்த புத்திரியாகிய பராசத்திக்குப் புத்திரனான சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

காவியவியல் படலம் முற்றிற்று.

## 2. தினாதி நாமோதயப் படலம்

### *நட்சத்திரத்தின் பெயர்கள்*

இரலைபரிப் பேரடுப்பின் பேரெரிப்பேர் பார்த்தே
    இன்பேர்மான் தலைப்பேர்யா ழிறைப்பேர்வேய் கடைப்பேர்
குருமதிதைப் பேர்யணிப்பேர் நுகப்பேரா குமைப்பேர்
    குளப்பேருத் தமன்பேர்வத் திரப்பேர்கோ கனகம்
திரிசுடர்ப்பேர் முறப்பேர்புற் பேரளிப்பேர் திதிபுத்
    திரர்பேர்நீர்ப் பேர்முடிப்பேர் சீதரன்பேர் வீச்செக்
குருவினம்பேர் நாழிப்பே ரரசுமுர சுப்பே
    ரோடப்பே ரசுபதிதொட் டுரைப்பதுமிப் பேரே.    2

1. அசுபதிக்கு இரலை, பரி, கிள்ளை, வாசி, கொக்கு, மா என்றும்,
2. பரணிக்கு அடுப்பு, அட்டுதல், சுசிதலம் என்றும்,
3. கார்த்திகைக்கு எரி, அங்கி, ஆரம் என்றும்,
4. உரோகிணிக்குப் பார், தேர், உருள்வையம், சகடு, சாகாடு என்றும்,
5. மிருகசிரத்துக்கு மான்தலை, மிருகவதனம், மான்முகம் என்றும்,
6. திருவாதிரைக்கு யாழ், வீணை, உருத்திரன், சிவன் என்றும்,
7. புனர்பூசத்துக்கு வேய், மூங்கில்கண், திகிரி, கடை என்றும்,
8. பூசத்திற்கு குரு, மதி, தை என்றும்,
9. ஆயில்யத்திற்குப் பணி, பாம்பு, கட்செவி, புயங்கம் என்றும்,
10. மகத்திற்கு நுகம், நாஞ்சில், கலப்பை என்றும்,
11. பூரத்திற்கு ஆகு, பெருச்சாளி, உமை, சிவை என்றும்,
12. உத்திரத்திற்குக் குளம், ஏரி, தடாகம், வாவி என்றும்,
13. அத்தத்திற்கு உத்தமன், பிரபலன், ஆரோகி என்றும்,
14. சித்திரைக்கு வஸ்திரம், ஒலியல், ஆடை, நீவி என்றும்,
15. சோதிக்குக் கோகனகம், கமலம், சுடர், தீபம் என்றும்,
16. விசாகத்திற்கு முறம், முற்றில், சுளகு என்றும்,

17. அனுசத்திற்குப் புல்பனை நிலம், தாழி, போந்தை,
பெண்ணை என்றும்,

18. கேட்டைக்கு அரி, கீடம், அதம் என்றும்,

19. மூலத்திற்கு அசுரர், இராக்கதர், அவுணர் என்றும்,

20. பூராடத்திற்கு நீர், புனல், பயம், அறல், கோ என்றும்,

21. உத்திராடத்திற்கு முடி, முதம், மூர்த்தம் என்றும்,

22. திருவோணத்துக்குச் சீதரம், இரட்சகன், மால்மயன்,
மாதவன் என்றும்,

23. அவிட்டத்திற்குப் புள், பறவை, வீ என்றும்,

24. சதயத்துக்குச் செக்கு, காணம், ஆலை என்றும்,

25. பூரட்டாதிக்கு நாழி, குஞ்சம், படி என்றும்,

26. உத்திரட்டாதிக்கு அரசு, கோ, மன்னவன், முரசு பறை
என்றும்,

27. ரேவதிக்கு ஓடம், நாவாய், தோணி, பாதை என்றும்
பெயராம்.

## *கிரகாதிபர் பரியாய நாமமும் அவர் புதல்வர் நாமமும்*

பதுமனின் பரிதிப்பேர் சசியாம்ப லின்மான்
பம்மிறைப்பேர் சேய்பவுமன் பார்மகன்பா லகன்பேர்
விதுதனையன் மால்புதன்பேர் வேதியன்பொன் குருப்பேர்
வெள்ளிபுகர் பார்க்கவன்பேர் விசிதனெம னீலன்
சுதிர்சுதன்பேர் பணிசிகிமற் றிருவர்கள்பேர் காலன்
கலைக்யான பாதகரே சன்பிர கன்பேர்
இதமிலெமண் டகப்பேர்வி டகடிகை குளிகன்
இன்னமிர்தம் இருந்தவர்கள் புதல்வர்களிப் பேரே. 3

1. ஆதித்தனுக்குப் பதுமன், இனன், பருதி என்றும்,

2. சந்திரனுக்குச் சசி, ஆம்பலின்மான், பம்மிறை என்றும்,

3. செவ்வாய்க்குச் சேய், பவுமன், பார்மகன், பாலகன் என்றும்,

4. புதனுக்கு விதுதனையன், மால் என்றும்,

5. வியாழனுக்கு வேதியன், பொன், குரு என்றும்,

6. சுக்கிரனுக்கு வெள்ளி, புகர், பார்க்கவன் என்றும்,

7. சனிக்கு விசிதன், எமன் என்றும்,

8. இராகுவுக்குப் பணி என்றும்,

9. கேதுவுக்குச் சிகி என்றும் பெயராம்.

1. ஆதித்தன் புதல்வன் காலன்

2. சந்திரன் புதல்வன் கலைக்யானபாதன்

3. செவ்வாய் புதல்வன் கரேசன்

4. புதன் புதல்வன் அர்த்தப்பிரகரன்

5. வியாழன் புதல்வன் எமகண்டன்

6. சுக்கிரன் புதல்வன் விடகடிகை

7. சனியின் புதல்வன் குளிகன்

8. இராகுவின் புதல்வன் அமிர்தகடிகை

9. கேதுவின் புதல்வன் அவமிருத்து.

## இராசிகளின் பரியாயப் பெயர்கள்
## இராசி முதலியவற்றின் பொதுப்பெயர்கள்

வருடையின்பேர் விடைப்பேர் யாழ்கதைதொந் துவமா
 மைதுனரா சிப்பேர்கார் கொண்டலல வன்பேர்
மிருகரசுப் பேர்மாதின் பேர்துலைப்பேர் தேள்பேர்
 விற்பேர்மான் தலைகலைப்பேர் வெறுங்குடப்பேர் மீன்பேர்
ஒருமுதற்பேர்க் கீதிடம்பா வகம்பவனம் பொதுப்பேர்க்
 குடுத்தினநாள் பேராம்வா ரங்கிழமைக் குளதாம்
முருகவிழ்தென் மலையதிதிப் பேர்க்கதுவாம் என்ன
 மொழிந்தனன்மும் முதற்குமொரு முதற்குமொரு முதலே. 4

மேடத்துக்கு வருடை, தகர், ஒரு என்றும்,

இடபத்துக்கு ஆன், விடை, ஏறு என்றும்,

மிதுனத்துக்கு கதை, யாழ், தொந்துவம், மைதுன ராசி என்றும்,

கடகத்துக்கு கார், கொண்டல், அலவன் என்றும்,

சிங்கத்துக்கு மிருகரசு, சீயம், கண்டீரவம் என்றும்,

கன்னிக்கு மாது, பொன், கரந்தை என்றும்,

துலாத்துக்குத் துலை, தூங்கல், கோல் என்றும்,

விருச்சிகத்துக்குத் தேள், கீடம், துட்டம் என்றும்,

தனுசுக்கு வில், கார்முகம், சராசரனம் என்றும்,

மகரத்துக்கு மான் தலை, கலை, நக்கிரம் என்றும்,

கும்பத்திற்குக் குடம், கடம், சால் என்றும்,

மீனத்துக்குக் கயல், கெண்டை, மிருது, ரோமம் என்றும்,

இராசிக்கு இடம், பாவகம், பவனம் என்றும்,

நட்சத்திரத்திற்கு உடு, தினம், நாள் என்றும்,

வாரத்திற்குக் கிழமை, என்றும் பேராம்.

வாசம் கமழாநின்ற பொதிய வரையினையுடைய அகத்தியனே ! திதிப்பெயருக்கு அதுவே பெயராம் என்று திருவாய் மலர்ந்தருளினவன், திரிமூர்த்திகளுக்கு முதன்மையாகிய பரமசிவனுக்கும் ஒப்பற்ற முதலாக நின்ற சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

### யோக கரண நாமம்

தலத்தியோகப் பேர்விஷ்கம் பம்பிரீதி யாபு
சௌபாக்ய சோபனதி கண்டகர்வந் திருதி
அலச்சூல்கண் டம்விருத்தி துருவம்வியா காதம்
அரிஷ்ணம்வக் கிரஞ்சித்தி விதிபாதம் வரியான்
பெலப்பரிகம் சிலஞ்சித்திம் சாத்யசுப சுப்ரம்
பிரமமயிந் திரவைதிரிப் பேர்பலம்பா லவங்க
உலகத்தைதுலங் கஜம்வணிஜம் பத்ரைக்கு னாக்கால்
உரககிருமிக் கரணம்ப வழுதற்பேர்க் குளவே. 5

(இ-ள்): விஷ்கம்பம், பிரீதி, ஆயுஷ்மான், சௌபாக்கியம். சோபனம், அதிகண்டம், சுகர்மம், திருதி,

சூலம், கண்டம், விருத்தி, துருவம், வியாகாதம், அரிஷ்ணம், வச்சிரம், சித்தி, விதிபாதம், வரியான், பரிகம், சிவம், சித்தம், சாத்திகம், சுபம், சுப்ரம், பிராமியம், மாகேந்திரம் ஆக இருபத்தி ஏழும் யோகமாம். பவம், பாலவம், கௌலவம், தைதுலம், கரஜை, வணிஜை, பத்திரை அல்லது விஷ்டி, சகுனி, சதுர்ப்பாதம், நாகவம், கிமிஸ்துக்கினம் ஆகிய பதினொன்றும் கரணமாம்.

## பாவக நாமம்

முதலோரை கல்யமுடி லக்கினமெய் யாங்கோ
முகங்குடும்பம் வித்தைபொன்னூண் மொழிதனில் புருவம்
பதமீதன் முதலியரெட் சகநாசி பன்னாப்
பர்த்திரபாண் டமுமாகும் பணிவல்பராக் கிரமம்
கதைகேள்விச் செவிகளிட்ட னாங்களயின் னீராய்
காலியுற வாள்சுகம்வா கனமனைகை கலையாம்
சுதனாருண் ணிறமிறையாம் சோரம்ரிணம் விரணம்
சுத்துதரம் ரிபுநோய்ஈ துடன்முதலா றதற்கே. 6

இதன் பொருள் : லக்கனத்துக்கு - முதல் ஓரை, கல்லியம், முடி, மெய் என்றும்,

இரண்டாமிடத்துக்கு - வலது நேத்திரம், முகம், குடும்பம், வித்தை, தனம், உணவு, வாக்கு, நெற்றி, புருவம், அன்னதானம் முதலிய ஜனரட்சகம் என்றும், நாசி, பல், நாக்கு, பத்திர பாண்ட ஸ்தானம் என்றும்,

மூன்றாமிடத்துக்கு - ஆபரணம், பலம், பராக்கிரமம், கதை, காவியம், கேள்வி, வலது செவி, இளைய சகோதர ஸ்தானம் என்றும்,

நான்காமிடத்துக்கு - கண்டம், கிரகம், நீர், மாதுரு, கன்றுகாலி, மித்திரம், ஆளடிமை, சுகம், வாகனம், மெத்தை, தழுலணை முதலானவை என்றும்,

ஐந்தாமிடத்துக்கு - புத்திரம், அன்பு, இருதயம், மார்பு, பிரபு ஸ்தானம் என்றும்.

ஆறாமிடத்துக்கு - சோரம், ரிணம், விரணம், பசி, வயிறு, சத்துரு, ரோக ஸ்தானம் என்றும் பெயராம்.

அதனுரைத்தான் பெனலணை தல்படல் களமாம்
அவமானம் வறைதுயின்மாய் வாயுவுவ பானம்
வதைபுரித லாந்திரந்தம் தாம்பிதிர்பாக் கியந்தன்
மங்குருசி வார்ச்சனைமா தவஞ்சகனத் தலமாம்
சிதமிசையாக் கினைமானம் செய்தொழிலுன் னதம்யாத்
திரையிடக்கை குறங்காமம் செவிமுழங்கால் சேட்டன்
இதமதிதம் பவமாயம் லாபமுமாம் வியந்தான்
இடக்கணிவை ஏழ்முதலீ றினித்தினமான் மியமே. 7

இதன் பொருள் : ஏழாமிடத்துக்கு - மன்மதன், வரத்து, ஆண்-பெண் லட்சணங்கள், சையோகம், பாடு, களத்திர ஸ்தானம் என்றும்,

எட்டாமிடத்துக்கு - அவமானம், அபகீர்த்தி, நித்திரை, மாரணம், தீர்க்காயுள், அபானம், கொலை செய்தல், ரத்திரம், தத்து ஸ்தானம் என்றும்,

ஒன்பதாமிடம் - பிதுர்பாக்கியம், தர்மம், குரு, சிவார்ச்சனை, தபசு, சகன ஸ்தலம் என்றும்,

பத்தாம் இடத்துக்கு - ஆகாயம், கீர்த்தி, ஆக்கினை, வெகுமானம், செய்தொழில், உன்னதம், யாத்திரை, இடக்கை, தொடைத்தானம் என்றும்,

பதினோராம் இடத்துக்கு - இடது செவி, முழங்கால், மூத்த சகோதரம், இதம், வர்த்தனை, பவம், ஆயம், லாபஸ்தானம் என்றும்,

பன்னிரண்டாமிடத்துக்கு - பாதம், இடக்கண், விரஸ்தானம் என்றும் பெயராம்.

இனி நட்சத்திர சரித்திரம் சொல்லுவோம்.

தினாதி நாமோதயப் படலம் முற்றிற்று.
ஆகப்படலம் இரண்டுக்குக் கவி - 7

## 3. நட்சத்திர சரித்திரப் படலம்

### *நாம நட்சத்திரம்*

அம்முதலோர் நான்கதும்அவ் விருநான்குள் ளதுங்குவ்
வாகவிரண் டிருமூன்று மெம்முதலாய் மூன்று
மம்முதலா றல்லதும்பந் நான்கிரண்டல் நதுந்தல்
வாகவிரண் டெழுநகரத் ததுவாய் ஆறு
நெம்முதலோர் மூன்றுயுயூ வுகரமுத லைந்து
நின்றுதுமக் கவினான்கு ஞம்முதலோர் மூன்றும்
தொம்முதலோர் மூன்றதுநொம் முதல்மூன்றும் யாவும்
சொல்சவினான் கைந்தொருமூன் றுமீன்தொட் டுளதே. 8

| | | |
|---|---|---|
| அ, ஆ, இ, ஈ | - | நான்கும் கார்த்திகை |
| வ, வா, வி, வீ | - | நான்கும் உரோகிணி |
| வெ, வே, வை, வெள | - | நான்கும் மிருகசிரம் |
| கு, கூ | - | இரண்டும் திருவாதிரை |
| கெ, கே, கை | - | மூன்றும் புனர்பூசம் |
| கொ, கோ, கௌ | - | மூன்றும் பூசம் |
| மெ, மே, மை | - | மூன்றும் ஆயிலியம் |
| ம, மா, மி, மீ, மு, மூ | - | ஆறும் மகம் |
| மொ, மோ, மௌ | - | மூன்றும் பூரம் |
| ப, பா, பி, பீ | - | நான்கும் உத்திரம் |
| பு, பூ | - | இரண்டும் அத்தம் |
| பெ, பே, பை, பொ, போ, பௌ | - | ஆறும் சித்திரை |
| த, தா | - | இரண்டும் சோதி |
| தி, தீ, து, தூ, தெ, தே, தை | - | ஏழும் விசாகம் |
| ந, நா, நி, நீ, நு, நூ | - | ஆறும் அனுஷம் |
| நெ, நே, நை | - | மூன்றும் கேட்டை |
| யு, யூ | - | இரண்டும் மூலம் |
| உ, ஊ, எ, ஏ, ஐ | - | ஐந்தும் பூராடம் |
| ஒ, ஓ, ஔ | - | மூன்றும் உத்திராடம் |
| க, கா, கி, கீ | - | நான்கும் திருவோணம் |
| ஞ, ஞா, ஞி | - | மூன்றும் அவிட்டம் |
| தொ, தோ, தௌ | - | மூன்றும் சதயம், |

| | | |
|---|---|---|
| நொ, நோ, நௌ | - | மூன்றும் பூரட்டாதி |
| யா | - | ஒன்று உத்திரட்டாதி |
| ச, சா, சி, சீ | - | நான்கும் ரேவதி |
| சு, சூ, செ, சே, சை | - | ஐந்தும் அசுபதி |
| சொ, சோ, சௌ | - | மூன்றும் பரணி |

## *நட்சத்திர மிருகம், நட்சத்திர பட்சி*

அறுமீனோ ராடரவு சாரைமுன்னாய் பூனை
அசம்வெருகான் எலியாகான் மேதிபுற்காண் பெண்மான்
உறுகலைநாய் முசுவாவம் முசுபெண்ணம் மாமகன்கோ
வுவாமாத் தோலுளமயி லாந்தையூர் புள்அன்றில்
குறுகனநீர்க் கொடிசிசிலி கழுகதுசிள் வீடு
கோவிமரங் கொத்தீயற் செவ்வாற்புட் கோர
மறைவளம்போர்த் துப்பகண்டை கார்வீநா ரைம்மா
வண்டமுள்ளான் கோட்டான்வல் லாளிசுன்வா கனமே. 9

| | | |
|---|---|---|
| கார்த்திகை | ஆடு | மயில் |
| ரோகிணி | பாம்பு | ஆந்தை |
| மிருகசிரம் | சாரைப்பாம்பு | கோழி |
| திருவாதிரை | ஆண் நாய் | அன்றில் |
| புனர்பூசம் | பெண் பூனை | அன்னம் |
| பூசம் | ஆட்டுக்கிடாய் | நீர்க்காக்கை |
| ஆயில்யம் | ஆண் பூனை | கிச்சிலி |
| மகம் | ஆண் எலி | கழுகு |
| பூரம் | பெருச்சாளி | பெண் கழுகு |
| உத்திரம் | எருது | சிள்வீடு |
| அத்தம் | எருமை | பருந்து |
| சித்திரை | ஆண் புலி | மரங்கொத்தி |
| சோதி | எருமைக்கிடா | ஈ |
| விசாகம் | பெண் எலி | செவ்வால் குருவி |
| அனுஷம் | மான் | சகோரம் |
| கேட்டை | கலை | சக்ரவாளம் |
| மூலம் | பெண் நாய் | செம்போத்து |
| பூராடம் | ஆண் குரங்கு | பகண்டை |
| உத்திராடம் | மலட்டுப் பசு | வலியான் |

| | | |
|---|---|---|
| திருவோணம் | பெண் குரங்கு | நாரை |
| அவிட்டம் | நாரி | வண்டு |
| சதயம் | பெட்டைக்குதிரை | அண்டங்காக்கை |
| பூரட்டாதி | புருடன் | உள்ளான் |
| உத்திரட்டாதி | பாற்பசு | கோட்டான் |
| ரேவதி | பெட்டை யானை | வல்லூறு |
| அசுபதி | குதிரை | இராசாளி |
| பரணி | யானை | காக்கை |

இவை மிருகமும் பட்சியுமாம்

## *நட்சத்திர தரு, நட்சத்திர கணம்*

கனனேரத் திசம்புகருங் காலிசெங்கால் கண்கோ
காப்புனையால் பலசலரி யார்வில்மருங் கரியூண்
வன்கேச விட்டின்மரா வஞ்சிபலா வெருக்கு
வனிநீபந் தேமாவேம் பிலுபமைபரை மலகம்
எனலாமுப் பூரமுமுக் குளம்பாணி பார்யாழ்
இவைமனுட கணமோண மீறுதைமா விதுவேய்
பனைசோதி அத்தமிவை தேவகண மற்றப்
பம்மவுன கணமாங்கும் பம்வருமா முனியே. 10

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகை | - அத்தி | அனுஷம் | - மகிழ் |
| ரோகிணி | - நாவல் | கேட்டை | - பிராய் |
| மிருகசிரம் | - கருங்காலி | மூலம் | - மரா |
| திருவாதிரை | - செங்காலி | பூராடம் | - வஞ்சி |
| புனர்பூசம் | - மூங்கில் | உத்திராடம் | - பலா |
| பூசம் | - அரசு | திருவோணம் | - எருக்கு |
| ஆயில்யம் | - புன்னை | அவிட்டம் | - வன்னி |
| மகம் | - ஆல் | சதயம் | - கடம்பு |
| பூரம் | - பலாசு | பூரட்டாதி | - தேமா |
| உத்தரம் | - அலரி | உத்திரட்டாதி | - வேம்பு |
| அத்தம் | - ஆத்தி | ரேவதி | - இலுப்பை |
| சித்திரை | - வில்வம் | அசுபதி | - காஞ்சிரை |
| சோதி | - மருது | பரணி | - நெல்லி |
| விசாகம் | - விளா | | |

இவை நட்சத்திர தருக்களாம்.

பூரம், பூராடம், பூரட்டாதி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, பரணி, ரோகணி, திருவாதிரை இவை ஒன்பதும் மனுடகணம்.

திருவோணம், ரேவதி, பூசம், அசுபதி, மிருகசிரம், புனர்பூசம், அனுடம், சோதி, அத்தம் இவை ஒன்பதும் தேவகணம்.

கார்த்திகை, ஆயில்யம், மகம், சித்திரை, விசாகம், கேட்டை, மூலம், அவிட்டம், சதயம் இவை ஒன்பதும் இராட்சத கணம், கும்போதயனாகிய அகத்திய முனியே!

## நட்சத்திர தேவதை ஆண் - பெண்- அலி நட்சத்திரம்

மாமுதனோ் வாணிதுர்க்கை வன்னியயன் மதிசே
மன்சுரர்பொன் பணிசிதன்றா யையன்மலா் கோவா
னேமகர்மா மாகுகன்கா னிருபனிசி சரர்நீா்
நெடும்புழைக்கை யான்மாலிந்த் ராணியெம னிதிமான்
காமமுத லாலாவசி தனாமுறமீ றோணம்
களிறுபுட்புல் வேய்முடியாழ் கவுரிகனல் கறவை
யாமிவைபெண் கெக்கிரவோ னலியாண்மற் றென்ன
அகத்தியனுக் குரைத்தனனீர் அணிந்தனணந் தணனே. 11

| | | | |
|---|---|---|---|
| அசுபதி | - சரசுவதி | சோதி | - லட்சுமி |
| பரணி | - துர்க்கை | விசாகம் | - சுப்ரமணியர் |
| கார்த்திகை | - அக்கினி | அனுடம் | - வாயு |
| ரோகிணி | - பிரம்மா | கேட்டை | - தேவேந்திரன் |
| மிருகசிரம் | - சந்திரன் | மூலம் | - அசுரர் |
| திருவாதிரை | - உருத்திரன் | பூராடம் | - வருணன் |
| புனர்பூசம் | - தேவர்கள் | உத்திராடம் | - விநாயகர் |
| பூசம் | - வியாழன் | திருவோணம் | -விஷ்ணு |
| ஆயில்யம் | - ஆதிசேடன் | அவிட்டம் | - இந்திராணி |
| மகம் | - சுக்கிரன் | சதயம் | - எமன் |
| பூரம் | - பார்வதி | பூரட்டாதி | - குபேரன் |
| உத்திரம் | - சாத்தா | உத்திரட்டாதி | -காமதேனு |
| அத்தம் | - சூரியன் | ரேவதி | - சனி |
| சித்திரை | - விசுவகர்மா | | |

இவைநட்சத்திரதேவதைகளாம்.

அசுபதி, பரணி, ரோகணி, பூசம், ஆயிலியம், மகம், உத்திரம், சித்திரை, சோதி, கேட்டை, மூலம், பூராடம், பூரட்டாதி இவை பதிமூன்றும் ஆண் நட்சத்திரங்கள்.

விசாகம், ரேவதி, திருவோணம், அத்தம், அவிட்டம், அனுஷம், புனர்பூசம், உத்திராடம், திருவாதிரை, பூரம், கார்த்திகை, உத்திரட்டாதி இவை பன்னிரண்டும் பெண் நட்சத்திரங்கள்.

சதயம், மிருகசிரம் இவை இரண்டும் அலி நட்சத்திரங்கள் என்று அகத்தியனுக்குத் திருவாய் மலர்ந்தருளியவன் கங்காதரனுக்குப் புத்திரனான சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

## நட்சத்திர விடகடிகை

நீர்பரணி முரசிவைக்கெண் மூன்றிரலைக் கைம்மா
நெடும்பணிகெண் ணான்குமைதார் நீவிமுடிக் கிருபான்
பார்பெறுநாற் பகுரவிக்கீர் பத்திரண்டாம் இறைக்கோர்
பதினொன்றோ டெழுமூன்றப் புரட்டையிற்பற் றுவதெண்
ணீருளதுத் திரஞ்சதயம் ஈரொன்பான் குருடுக்
கிருபைதம் பத்தாறெழில் வேயறுமீ னீறுக்
கோரொருமுப் பதுவோணம் புட்புலொரு பதுமற்
றுள்ளவைக்கீ ரேழிவைநஞ் சுறுங்கனனான் குயவே. 12

பூராடம், பரணி, உத்திரட்டாதியில் 24 நாழிகைக்குமேலும், அசுபதியில் 50 நாழிகைக்குமேலும், ஆயில்யத்தில் 32 நாழிகைக்கு மேலும், பூரம், பூசம், சித்திரை, உத்திராடத்தில் 20 நாழிகைக்கு மேலும், உரோகணியில் 40 நாழிகைக்குமேலும், அத்தத்தில் 22 நாழிகைக்குமேலும், திருவாதிரையில் 18 நாழிகைக்கு மேலும், விசாகம், சதயத்திற்கு 21 நாழிகைக்கு மேலும், பூரட்டாதியில் 16 நாழிகைக்குமேலும், சதயத்தில் 18 நாழிகைக்குமேலும், மூலத்தில் 20 நாழிகைக்குமேலும், மகம், புனர்பூசம்,

*கார்த்திகை, ரேவதியில் 30 நாழிகைக்கு மேலும், திருவோணம் அவிட்டம், அனுடத்தில் 10 நாழிகைக்குமேலும், மிருகசிரம், சோதி, விசாகம், கேட்டையில் 14 நாழிகைக்கு மேலும் 4 நாழிகைகள் விடமிருக்கும் என்றவாறு.*

## *நட்சத்திர சத்துரு, மித்துரு, பஞ்சபட்சி, கெண்டாந்தம், விதவை நட்சத்திரம்*

**நான்கெனுமீன் றாரூழ்பார் நாவாய்மா லரச**
**நக்கனிவை நட்பிவைக்கா மற்றதற்காம் வான்கோன்**
**மான்கணியீ றிம்மூன்றுக் கொன்றினுக்கோர் நான்காய்**
**வரலிடநேர் பரணிமுகன் மற்றவைக்குப் பகையா**
**மான்கடவு ணோராறைந் தாறைதீ தாந்தை**
**அக்கமொன்றாய் யுதக்காறோ கைவலியா னாகும்**
**ஊன்கலுண வோர்கோணத் தாதியதற் கிறீறும்**
**கால்கெண்டாந் தம்விண்ணோர் தார்விதவைக் குளவே. 13**

*(1) மூலம், பூசம், அத்தம், ரோகணி, ரேவதி, திருவோணம், உத்திரட்டாதி, திருவாதிரை இவை எட்டு நட்சத்திரங்களும் தங்களுக்குள் ஒன்றுக்கொன்று மித்திரராம்.*

*(2) கேட்டைக்கும் பரணிக்கும், அனுடத்துக்கும் கார்த்திகைக்கும், விசாகத்துக்கும் ரோகணிக்கும், சோதிக்கும் மிருகசிரத்துக்கும், அவிட்டத்துக்கும் திருவாதிரைக்கும், திருவோணத்துக்கும் புனர்பூசத்துக்கும், உத்திராடத்துக்கும் பூசத்துக்கும், பூராடத்துக்கும் ஆயில்யத்துக்கும், ரேவதிக்கும் மகத்துக்கும், உத்திராடத்துக்கும் பூரத்துக்கும், பூரட்டாதிக்கும் உத்திரத்துக்கும், சதயத்துக்கும் அத்தத்துக்கும் பகையாம். அசுபதிக்குச் சித்திரை, மூலமும்; சித்திரைக்கு அசுபதி, மூலமும்; மூலத்துக்குச் சித்திரை, அசுபதி பகையாம்.*

*(3) திருவாதிரை, புனர்பூசம், ஆயிலியம், மகரம், பூரம் இவை ஆறும் ஆந்தை. உத்திரம், அத்தம், சித்திரை, சோதி, விசாகம் இவை ஐந்தும் காகம். கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம் ஆறும் கோழி. அவிட்டம், சதயம்,*

பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இவை ஐந்தும் மயில். அசுபதி, பரணி, கார்த்திகை, ரோகணி, மிருகசிரம் இவை ஐந்தும் வல்லூறு.

(4) அசுபதி, மகம், மூலத்தின் முதல் பாதமும்; ஆயிலியம், கேட்டை, ரேவதியின் நாலாம் பாதமும் கெண்டாந்தம்.

(5) புனர்பூசமும் பூசமும் விதவை நட்சத்திரம் என்றவாறு.

### ஊர்த்தமுக நட்சத்திரம், அதோமுக நட்சத்திரம், புறமுக நட்சத்திரம், அமிர்தகடிகை, சதாசிவ நட்சத்திரம்

தாரெமன்பெண் மூவருத்ரத் திரையமுமிப் பேர்முன்
அழலவுணோர் முறம்பரணி கர்ப்பமுமற் றதுமேல்
பாரொடுபின் பானனமை ஒன்பதசுர்ப் பகன்மேல்
பணிரதவைந் தேழதிகம் பயம்பரியாழ் பரையீர்
தேரொருமூன் றொருபதுபன் னொன்றுகுறைந் ததுமற்
றுள்ளவைங்கெண் மூன்றுவிடத் துடனுயர்த லமிர்தம்
ஈரண்டு நாழிகையுற் றிருப்பதரி தாரீர்
இரவிபுற்றேர் முக்குளமெப் போதுமுயி ரெனுமே. 14

(1) பூரம், சதயம், அவிட்டம், ரோகணி, திருவாதிரை, திருவோணம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி இவை ஒன்பதும் ஊர்த்தமுக நட்சத்திரம்.

(2) பூரம், பூராடம், பூரட்டாதி, கார்த்திகை, மூலம், மகம், விசாகம், பரணி, ஆயிலியம் இவை ஒன்பதும் அதோமுக நட்சத்திரம்.

(3) அசுபதி, மிருகசிரம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை, சோதி, அனுடம், கேட்டை, ரேவதி இவை ஒன்பதும் புறமுக நட்சத்திரம்.

*(4) மூலம், அத்தத்தில் 45 நாழிகைக்குமேலும், ஆயில்யத்தில் 50 நாழிகைக்குமேலும், ரோகிணியில் 52 நாழிகைக்குமேலும், பூராடத்தில் 44 நாழிகைக்குமேலும், அசுபதியில் 42 நாழிகைக்கு மேலும், திருவாதிரையில் 35 நாழிகைக்குமேலும், பூரத்தில் 34 நாழிகைக்குமேலும், பரணி-உத்திரட்டாதியில் 48 நாழிகைக்கு மேலும், கார்த்திகை-புனர்பூசம்-மகம்-ரேவதியில் 54 நாழிகைக்கு மேலும், மிருகசிரம்-சோதி-விசாகம்-கேட்டையில் 38 நாழிகைக்கு மேலும், பூசம்-சித்திரை-உத்திராடத்தில் 44 நாழிகைக்குமேலும், உத்திரம்-சதயத்தில் 42 நாழிகைக்கு மேலும், அனுடம் - திருவோணம் - அவிட்டத்தில் 34 நாழிகைக்கு மேலும், பூரட்டாதியில் 40 நாழிகைக்கு மேலும், 4 நாழிகை அமிர்தகடிகை இருக்கும்.*

*(5)* திருவோணம், பூசம், ரேவதி, அஸ்தம், அனுஷம், ரோகணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி இவை ஒன்பதும் சதாசீவ நட்சத்திரம்.

## *கலைக்யானபாதம், அவசித்து நட்சத்திரம், அக்கினி நட்சத்திரம், வைநாசிகம், நட்சத்திரதீது, பாடாவரி நட்சத்திரம், நட்சத்திரராசி*

முயலகன்சே ருடுக்காற்குக் கலைக்யானம் பதமாய்
மொழியிலண முடிகடையான் முதன்மானற் கடிகை
அயன்மருவு விகடிகையும் அவ்வளவு வவசித்
தாமடுப்பா முதலெழுகாற் கலைருக்கற் குதையத்
துயர்வதெண்பத் தெண்கால்வை நாசியமற் பகறீண்
உரகதின முன்பின்னோ டெழுந்தீதொன் றுபய
இயமன்புன் மூன்றீர்சுடா மாலிவைபா டாவாரி
இரலைமுதல் இரண்டேகால் தினமொருநே ரெனுமே. 15

*(1)* சென்ம நட்சத்திரக்காலுக்கு 64ஆம் கால் கலைக்யானபாதம்.

*(2)* உத்திராடத்தின் நாலாம்கால் நாழிகை 15-ம், திருவோணத்தின் ஆதிநாழிகை 4, வினாடி4-ம் அவசித்து நட்சத்திரம்.

*(3)* பரணி 3 கால் முதல் ரோகணி முதல்கால் வரையும் ஆதித்தன் நிற்கும் காலம் அக்கினி நட்சத்திரம்.

*(4)* சென்ம நட்சத்திரத்துக்கு 88ஆம் பாதம் வைநாசிகம்.

*(5)* கிரகண நட்சத்திரமும் அதற்குமுன் மூன்று நட்சத்திரங்களும், பின் மூன்று நட்சத்திரங்களும் தீது.

*(6)* அசுபதி, பரணி, சதயம், அனுசம், கேட்டை, மூலம், சோதி, விசாகம், திருவோணம் இவை ஒன்பதும் பாடாவாரி நட்சத்திரம்.

*(7)*

| | |
|---|---|
| அசுபதி, பரணி, கார்த்திகை ¼ | - மேடம் |
| கார்த்திகை ¾, ரோகணி, மிருகசிரம் முன் ½ | - ரிஷபம் |
| மிருகசிரம் பின் ½, திருவாதிரை, புனர்பூசம் ¾ | - மிதுனம் |
| புனர்பூசம் ¼, பூசம், ஆயிலியம் | - கடகம் |
| மகம், பூரம், உத்திரம் ¼ | - சிங்கம் |
| உத்திரம் ¾, அத்தம், சித்திரை முன் ½ | - கன்னி |
| சித்திரை பின் ½, சோதி, விசாகம் ¾ | - துலாம் |
| விசாகம் ¼, அனுசம், கேட்டை | - விருச்சிகம் |
| மூலம், பூராடம், உத்திராடம் ¼ | - தனுசு |
| உத்திராடம் ¾, திருவோணம், அவிட்டம் முன் ½ | - மகரம் |
| அவிட்டம் பின் ½, சதயம், பூரட்டாதி | - கும்பம் |
| பூரட்டாதி ¼, உத்திரட்டாகி, ரேவதி | - மீனம் |

என்றவாறு.

## *கிரக உதைப்பு அல்லது லப்த்தை, கிரக வேதை, கிரக வேதையின் தொகை, கிரக வேதையின் பெயர்*

தினகரனே ரேறரித்தீ வேய்பினர்பின் முன்பின்
றெகித்தலல் லின்மதிவேய் தார்சேலைபுள் ளேர்தீப
மன்னமுடி மாலீறாம் வேயாடி சுடர்மகமா
மறலிமன்றா ராமகிவே யும்மிதுவா மதியாழ்
புனலனையே ருங்கனுமா முதல்தொகைவைத் தின்னேர்
போதன்மகித் துடிசூல்பூ சல்வேல்சூன் பொய்கே
தனல்கதைதோ விமாஞ்சக்கர மெமன்கண் டஞ்சூ
லாநேர்வீக் கொடுமைகுறை பாசநிப மாமே. 16

*(1) ஆதித்தன் நின்ற நாளுக்குப் பன்னிரண்டாம் நாளும், சந்திரன் நின்ற நாளுக்கு இருபத்தி இரண்டாம் நாளும், செவ்வாய் நின்ற நாளுக்கு மூன்றாம் நாளும், புதன் நின்ற நாளுக்கு ஏழாம் நாளும், வியாழன் நின்ற நாளுக்கு ஆறாம் நாளும், சுக்கிரன் நின்ற நாளுக்கு ஐந்தாம் நாளும், சனி நின்ற நாளுக்கு எட்டாம் நாளும், இராகு - கேது நின்ற நாட்களுக்கு ஒன்பதாம் நாளும் கிரக உதைப்பாகும்.*

*(2) சந்திரன் நீங்கலாக, இரவி நின்ற நாளுக்கு 5, 7, 8, 14, 23, 10, 15, 18, 21, 22, 27ஆம் நாட்களும், சேய் நின்ற நாளுக்கு 7, 21, 15, 10ஆம் நாட்களும், புதன் நின்ற நாளுக்கு 24, 18, 8ஆம் நாட்களும், வியாழன் நின்ற நாளுக்கு 9, 7ஆம் நாட்களும், வெள்ளி நின்ற நாளுக்கு 9, 7ஆம் நாட்களும், சனி நின்ற நாளுக்கு 5, 6, 20, 11ஆம் நாட்களும், இராகு- கேது நின்ற நாட்களுக்கு 7ஆம் நாளும் வேதையாகும்.*

இரவி வேதை *1*-க்கும் பிரமம், பூகம்பம், சூலம், பூசல், படை, சூனியம், பொய், கேது, அனல், தண்டம், தோஷம் *என்றும்,*

சேய் வேதை *4*-க்கும் சக்கரம், காலகண்டம், சூலம் *என்றும்,*

புத வேதை 3-க்கும் மரணம் என்றும்,

குரு வேதை 2-க்கும் கொடுமை என்றும்,

வெள்ளி வேதை 2-க்கும் விரணம் என்றும்,

சனி வேதை 5-க்கும் பாசபந்தனம் என்றும்,

இராகு-கேது வேதைக்கு நிபம் என்று பெயராம்.

## *நித்திய, தற்காலிகக் கிரக வேதைகள்*

பம்மனுக் காவணந்தேர் மான்தலையாழ் தார்முப்
பணியனனே நீதுநித்யம் பானுவுக்குச் சுடரோன்
கம்மிருவான் கைமுனரத் திசைச்சிகிநே ரிடமாய்க்
காண்பதவ ரவர்க்காயில் தற்கால்யங் கவுரி
சம்முகமன் தேர்வலமற் றிவைஇடமப் பரிநோர்
தரல்வேதை முறமணவுண் சதயமுதற் சதுர்த்தம்
இம்மகியோ தயமாமேல் சாங்காதி சமுதா
இகமாதா னந்தேச மனமினம்ராச் சியமே. 17

(1) மதி நின்ற நாளுக்கு ஏழில் செவ்வாயும், செவ்வாய்க்கு நான்கில் புதனும், புதனுக்கு ஐந்தில் குருவும், குருவுக்கு ஆறில் சுக்கிரனும், சுக்கிரனுக்கு எட்டில் சனியும், சனிக்கு ஒன்பதில் இரவியும், இரவிக்கு ஒன்பதில் இராகு-கேதுவும், இராகு-கேதுவுக்கு ஒன்பதில் மதியும் நிற்பது நித்திய கிரக வேதை.

(2) இரவி நின்ற நாளுக்குப் பதினைந்தில் கேதுவும், கேதுவுக்குப் பதினெட்டில் புதனும், புதனுக்குப் பதினேழில் சனியும், சனிக்குப் பன்னிரண்டில் குருவும், குருவுக்குப் பன்னிரண்டில் இராகும், இராகுவுக்குப் பன்னிரண்டில் செவ்வாயும், செவ்வாய்க்குப் பன்னிரண்டில் மதியும், மதிக்குப் பன்னிரண்டில் இரவியும் நிற்பது தற்காலிகக் கிரக வேதை.

| நட்சத்திரம் | சமூகவேதை | தெட்சணவேதை | வாமவேதை |
|---|---|---|---|
| அசுபதி | பூரம் | கேட்டை | ரோகணி |
| பரணி | உத்திரம் | மூலம் | மிருகசிரம் |
| கார்த்திகை | அஸ்தம் | பூராடம் | திருவாதிரை |
| ரோகணி | சித்திரை | உத்திரம் | புனர்பூசம் |
| மிருகசிரம் | சுவாதி | திருவோணம் | பூசம் |
| திருவாதிரை | விசாகம் | அவிட்டம் | ஆயிலியம் |
| புனர்பூசம் | அனுசம் | சதயம் | மகம் |
| பூசம் | கேட்டை | பூரட்டாதி | பூரம் |
| ஆயிலியம் | மூலம் | உத்திரட்டாதி | உத்திரம் |
| மகம் | பூராடம் | ரேவதி | அஸ்தம் |
| பூரம் | உத்திராடம் | அசுபதி | சித்திரை |
| உத்திரம் | திருவோணம் | பரணி | சுவாதி |
| அஸ்தம் | அவிட்டம் | கார்த்திகை | விசாகம் |
| சித்திரை | சதயம் | ரோகணி | அனுசம் |
| சுவாதி | பூரட்டாதி | மிருகசிரம் | கேட்டை |
| விசாகம் | உத்திரட்டாதி | திருவாதிரை | மூலம் |
| அனுசம் | ரேவதி | புனர்பூசம் | பூராடம் |
| கேட்டை | அசுபதி | பூசம் | உத்திராடம் |
| மூலம் | பரணி | ஆயிலியம் | திருவோணம் |
| பூராடம் | கார்த்திகை | மகம் | அவிட்டம் |
| உத்திராடம் | ரோகணி | பூரம் | சதயம் |
| திருவோணம் | மிருகசிரம் | உத்திரம் | பூரட்டாதி |
| அவிட்டம் | திருவாதிரை | அஸ்தம் | உத்திரட்டாதி |
| சதயம் | புனர்பூசம் | சித்திரை | ரேவதி |
| பூரட்டாதி | பூசம் | சுவாதி | அசுபதி |
| உத்திரட்டாதி | ஆயிலியம் | விசாகம் | பரணி |
| ரேவதி | மகம் | அனுஷம் | கார்த்திகை |

சென்மநட்சத்திரத்திற்கு பதினாறாம் நட்சத்திரம் சாங்காதியம், பதினெட்டாம் நட்சத்திரம் சமுதாயிகம்,

1. ஒவ்வொரு நட்சத்திரத்திற்கும் நான்காம் நட்சத்திரம் வாமவேதையாகவும் பதினோராம் நட்சத்திரம் சமூக வேதையாகவும், பதினெட்டாம் நட்சத்திரம் தெட்சிண வேதையாகவும் வரும்.

*பத்தொன்பதாம் நட்சத்திரம் ஆதானம், இருபத்துவோராம் நட்சத்திரம் தேசம், இருபத்தைந்தாம் நட்சத்திரம் மானதம், இருபத்தாறாம் நட்சத்திரம் சாதி, இருபத்தி ஏழாம் நட்சத்திரம் அபிசேகம்.*

## *நட்சத்திரப் பார்வை, வேதைகள்*

இயமுறந்தார் வேம்முடியா மினன்றினநோக் கயன்றார்
　　இறைசோதி மகமதிநாட் கெரிசுடர்கண் டார்சேய்
கயநடவி விதுப்புதனே ரசிதனள வுளநாள்
　　கவுண்டீப மவுணுகநோய் முகன்குருநாட் கதிக
முயலகனேர் தாரளவான் முதற்கலையும் பனைநேர்
　　மூன்றரியும் பரணிசுடர் முறமுமிய முடித்தீ
பயம்வலமற் றதுகவுணாற் கோணமற்றா னைமாய்ப்
　　பவுமனெனம ஹுறல்பரிநேர் பகர்வதிதற் காமே. 　　18

*இரவி நின்ற நட்சத்திரம் 26, 19, 8, 7 21, 11ஆம் நட்சத்திரங்களையும், மதி நின்ற நட்சத்திரம் 4, 8, 18, 15, 10ஆம் நட்சத்திரங்களையும், செவ்வாய் நின்ற நட்சத்திரம் 3, 15, 7, 8ஆம் நட்சத்திரங்களையும், புதன்-வியாழன்-சுக்கிரன்-சனி நின்ற நட்சத்திரங்கள் 3, 5ஆம் நட்சத்திரங்களையும் பார்க்கும். சனி நின்ற நட்சத்திரத்திற்கு 19, 15ம், வியாழன் நின்ற நட்சத்திரத்திற்கு 19, 10-ம் அதிக பார்வை.*

*சனி, சேய் நின்ற நட்சத்திரத்துக்கு 5, 6, 7, 8, 12, 13, 14ஆவது நட்சத்திரங்கள் தட்ணவேதை; 17, 18, 19, 22ஆம் நட்சத்திரங்கள் வாம வேதை; 2, 15, 16ஆவது நட்சத்திரங்கள் கர்ண வேதை; 26, 21, 3, 20ஆவது நட்சத்திரங்கள் நாற்கோண வேதை; 4, 9, 10, 11, 23, 24, 25, 27ஆவது நட்சத்திரங்கள் சமுகவேதை என்றவாறு.*

## *நட்சத்திரங்களுக்கு இருப்பிடம், நட்சத்திர தேசம்*

பரிமுதலூர் தருவனங்கா டிச்சால்கட் டிலின்கீழ்
　　பாகனிலாத் தேர்க்கீழ்நெற் குதிர்மனைகுப் பைநெல்
அரியலது கதிர்வெறும்வீ பயங்கரைசெய் பருத்தி
　　அங்கணம்பாழ் வனங்கடைலா யங்கூரை யாடை
நிருமலஞ்செய் துறைகோயி லாலைசெக்கு மறுகு

நெருப்பிடத்தில் பூஞ்சோலை நிகழ்த்துவதீ றளவு
மருவுமிடப் பேர்க்கிதன்மேற் றேசமதற் கதன்பேர்
வைத்ததற்கட் சரப்பெயராய் வழுத்துகமா முதற்கே. 19

| | | | |
|---|---|---|---|
| அசுபதி | - ஊர் | சித்திரை | - வயல் |
| பரணி | - தரு | சோதி | - பருத்தி |
| கார்த்திகை | - வனம் | விசாகம் | - முற்றம் |
| ரோகணி | - காடிசால் | அனுசம் | - பாழ்வனம் |
| மிருகசிரம் | - கட்டிலின்கீழ் | கேட்டை | - கடை |
| திருவாதிரை | - நிற்கும் தேரின்கீழ் | மூலம் | - குதிரைலாயம் |
| புனர்பூசம் | - நெற்குதிர் | பூராடம் | - கூரை |
| பூசம் | - மனை | உத்திராடம் | - வண்ணான்ஆலை |
| ஆயிலியம் | - குப்பை | திருவோணம் | - கோயில் |
| மகம் | - நெல்லறி அல்லது நெற்கதிர் | அவிட்டம் | - ஆலை |
| | | சதயம் | - செக்கு |
| | | பூரட்டாதி | - தெரு |
| பூரம் | - வெறும் வீடு | உத்திரட்டா | - அக்கினிமூலைக் கிரகம் |
| உத்திரம் | - சலம் | | |
| அத்தம் | - சலக்கரை | ரேவதி | - பூஞ்சோலை |

இருப்பிடங்களாகும். நட்சத்திர நாமங்களில் சொல்லியபடி அந்தந்த அட்சரங்களை முதலில் வைத்து, அசுபதி முதலானவற்றிற்குத் தேசம் சொல்லுக.

## பலவகை நட்சத்திரங்கள்

மாநீலந் தாரீறத் தேரிரவி மாலாய்
வருமனனேர் சுபமகப மாமுடிபுட் கோட்டை
கோநாவாய் துர்க்கைபய றாகுமுன்போல் அன்னேர்
குருகின்முதற் கனலிரண்டுக் குதைபுத்த மூல
மானேரென் றுமதிகன லரவுபொன்சுன் னருணன்
அனுவரவு சிதனளவத் திசைச்சொல்ல ரிப்பேர்
தானார்நாட் கிடமுன்மூன் றிதன்மேனான் கலதந்
தகமொருகண் ணிருகணெனச் சாற்றுதலவ் வியல்பே. 20

செவ்வாய் - அதிபதி; புதன்-அனுசம், வியாழன்-பூசம்; வெள்ளி-ரேவதி; சனி-ரோகணி; ஞாயிறு-அத்தம்; திங்கள்-திருவோணம் இவை சுபநட்சத்திரங்கள்.

செவ்வாய்-உத்திராடம்; புதன்-அவிட்டம்; வியாழன்-கேட்டை; வெள்ளி-பூராடம்; சனி-ரேவதி; ஞாயிறு-பரணி; திங்கள்- சித்திரை இவை அசுப நட்சத்திரங்கள்.

மூலம் முதல் நாழிகை முதல் இரண்டு நாழிகை வரைக்கும் அபுத்தமூலம் என்று சொல்லப்படும்.

இரவிக்கு உத்திரமும், மதிக்கு அத்தமும், சேய்க்குச் சித்திரையும், இராகுவுக்கு சோதியும், குருவுக்கு விசாகமும், சனிக்கு அனுசமும், புதனுக்குக் கேட்டையும், கேதுவுக்கு மூலமும், சுக்கிரனுக்குப் பூராடமும் மகாதிசை நட்சத்திரங்களாகும்.

இரவி நின்ற நட்சத்திரமும் அதற்கு முன்மூன்றும் பின்மூன்றும் ஆக ஏழு நட்சத்திரங்களும் குருட்டு நட்சத்திரங்கள்.

இதன்மேல் முன் நான்கு, பின் நான்கு நட்சத்திரங்களும் ஒரு கண்ணுள்ள நட்சத்திரங்கள்

மற்றவையெல்லாம் இருகண்ணுள்ள நட்சத்திரங்கள் என்றவாறு.

### நட்சத்திர ரோகம், நட்சத்திர அவமிருத்து

அவ்வகிவாத் தியமுமடுப்ப வுணருமால் குளமும்
அதற்கிறைதீ பமுநேர்மூன் னடிமுதலாய் ரோகம்
இவ்வடிதொட் டுளமூன்ற தவமிருத்தப் பரிநேர்
ஏழரைக்கே ழரையந்தத் தைந்திருபத் தொன்றேற்

கவ்வளதொன் பானிவைநேர் சோதிவரை முன்பின்
காண்பதுவெட் டிருபதின்மேல் கதுவுதல்பத் திவைநேர்
வவ்விலனற் சிகையிதுவாப் பிரதமையிவ் விடையின்
மருவும்விட கடிகையினாள் குகுமலையத் தவனே. 21

ஆயில்யம், உத்திரட்டாதியின் முதற்பாதங்களும், பரணி, மூலத்தின் இரண்டாம் பாதங்களும், திருவோணம், உத்திரத்தின் மூன்றாம் பாதங்களும், மிருகசிரம், சோதியின் நான்காம் பாதங்களும் நட்சத்திர ரோகம்.

ஆயில்யம், உத்திரட்டாதியின் மூன்றாம் பாதங்களும், பரணி, மூலத்தின் நான்காம் பாதங்களும், அவிட்டம், அத்தத்தின் முதல் பாதங்களும், திருவாதிரை, விசாகத்தின் இரண்டாம் பாதங்களும் நட்சத்திர அவமிருத்து.

அசுபதி, ரோகணி, புனர்பூசம், மகம், அத்தத்தில் 7½ நாழிகைக்குமேல் 7½ நாழிகையும்; பரணி, மிருகசிரம், பூசம், பூரம், சித்திரையில் 55 நாழிகைக்குமேல் ஐந்து நாழிகையும்; கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், உத்திரம், சோதியில் 21 நாழிகைக்குமேல் ஒன்பது நாழிகையும்; விசாகம், மூலம், திருவோணம், பூரட்டாதியில் ஆதி 8 நாழிகையும்; அனுசம், பூராடம், அவிட்டம், உத்திரட்டாதியில் இறுதி எட்டு நாழிகையும்; கேட்டை, உத்திராடம், சதயம், ரேவதியில் 20 நாழிகைக்குமேல் 10 நாழிகையும் நட்சத்திர அனற்சிகை.

அமாவாசை அந்தியமும், பிரதமை ஆதியுமாக வரும் நட்சத்திரத்தில் விடகடிகை பொருந்தில் அது நட்சத்திர குகுதோசம். பொதிய வரையினையுடைய அகத்தியனே! என்றவாறு.

## நட்சத்திர யோகம், ஏகார்க்களம், ஆகுலம்

வனசன்முதல் முறநீர்புள் ளீறிரதம் பூசம்
வாவியிவை தொட்டுதய மானதினத் தளவா
கினதையெழு வர்க்கீதல் யோகமிருத் தைகே
டிறலமிர்த சுபசித்த பரிகமிரு வினைப்பேர்

தனதுறனஞ் சொருவரைநேர் நிறுத்தியதில் குறுக்காய்ச்
சார்றும்வரை பதிமூன்றாய்த் தரித்தல்சிர மாகக்
கனன்முதலூழ்க் கெதிர்நாளில் யாருறினும் ஏகார்க்
களமிருநா ழிகைநாளீ றாகுலமா தவனே. 22

ஞாயிறில் விசாகம், திங்களில் பூராடம், செவ்வாயில் அவிட்டம், புதனில் ரேவதி, வியாழனில் ரோகணி, வெள்ளியில் பூசம், சனியில் உத்திரம் ஆகிய இந்த நட்சத்திரம் தொட்டு நாளது நட்சத்திரம்வரை எண்ணிக்கண்ட தொகையை ஏழுக்குக் கொடுக்க வந்த மிச்சம் ஒன்றாகில் இருத்தையோகம், இரண்டாகில் நாசம், மூன்றாகில் மரணம், நான்காகில் அமிர்தம், ஐந்தாகில் சுபம், ஆறாகில் சித்தம், ஏழாகில் பரிகம். அசுப சுபங்கூடில் விஷயோகம். ஓர் வரையினை நேர்நிறுத்தி, குறுக்காக 13 வரை கீறி உச்சி வரையில், கார்த்திகை முதலாக நட்சத்திரங்களை வைத்து இரவி நின்ற சேத்திரவரைக்கு, எதிர்வரை நட்சத்திரத்தில் கிரகங்கள் நிற்கில் ஏகார்க்களம். நட்சத்திர அந்தியம் இரண்டு நாழிகையும் ஆகுலம்.

## ஏகார்க்கள சக்கரம்



தபனனுற நாட்கிடமொன் றேழேக நான்காய்ச்
சாவதரை சாதலுயிர் சாற்றுவர்மற் றவைக்கும்
சுபர்விதுநேர் நாட்சூலம் பவர்க்குமா சூறபோர்
சுகிமுதனா லேழ்வரைநான் முகத்திடமேற் றொடிலாம்
உபயவரை கோணுறமற் றைவரைமுற் போல
உறிலதுச லாவேதை இவர்களுறி லுருட்டில்
உபயமுத னாழிமுதன் மூன்றுதைநே ராறு
மொழிவதிப்பா லப்பாற்பன் மூன்றுமற்றா குவதே. 23

இரவி நின்ற நட்சத்திரமும் அதற்கு இடம், வலம் ஒவ்வொன்றும் மாரணம். இதன்மேல் இடம், வலம் எவ்வேழ அர்த்தபிராணன். இதன்மேல் இடம், வலம் ஒவ்வொன்றும் மாரணம். இதன்மேல் இடம், வலம் நன்நான்குமுழுச்சீவன். கீழ், மேல் ஏழுவரையும் தென்வடல் ஏழு வரையும் கீறி, இடப்பால் உச்சவரையில் கார்த்திகை முதலாக நட்சத்திரங்களை வைத்து மதிநின்ற நட்சத்திரவரைக்கு எதிர்வரை நட்சத்திரத்தில் சுபர் நிற்கில் சூலம். பாபர் பார்க்கில் மகாசூலம். கீழ்மேல் 5 வரையும் தென்வடல் ஐந்து வரையுமாகக் கீறி கோண்நிலாவ இரண்டுவரை கீறி, இப்பால் உச்சவரையில் கார்த்திகை முதலாக நட்சத்திரங்களை வைத்து மதிநின்ற நட்சத்திரவரைக்கு எதிர்வரை நட்சத்திரத்தில் கிரகங்கள் நிற்கில் சலாவேதை. ரோகணி, கார்த்திகை, பூராடம், உத்திராடம், திருவோணம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, பூசம், ஆயிலியம், மகம், பூரம், உத்திரம், அத்தம் இவை பதிநான்கும் பாலுள்ள நட்சத்திரங்கள். அசுபதி, பரணி, மிருகசிரம், திருவாதிரை, புனர்பூசம், சித்திரை, சோதி, விசாகம், அனுசம், கேட்டை, மூலம், அவிட்டம், சதயம் இவை பதிமூன்றும் வைரமுள்ள நட்சத்திரங்கள்.

**சூலம் - மகாசூல சக்கரம்**

கா ரோ மி தி பு பூ ஆ
ப அ ரே உ பூ ச அ
ம பூ உ அ சி சோ வி
தி அ வ உ மு கே அ

**சலாவேதை சக்கரம்**

கா ரோ மி தி பு பூ அ
ப அ ரே உ பூ ச
ம பூ உ அ சி சே
தி அ வ உ பூ மு சே

ஆகுவதின் பாற்கோணொன் பதிமதிக்கோன் மூன்றும்
அல்லதுநேர் கீழ்மேல்மற் றதுவாமம் புலிமால்
வாகனன்கை முதனான்கு மால்கணுக்கீர் மூன்றும்
ஆகயிவை ஈராறு மறலெனன்மற் றதுவாம்
கோகசை னாற்றிசைநேர் குறித்தவரைக் கிடையிற்
குறுக்குயர மும்மூன்றாய்க் குறுகமுடிக் கனலீ
தேகமுதற் றிசைநான்கும் இடையிலிருந்து மூன்று
இகழ்தலிது சாற்பூர்த்திப் பெயரிதுவென் பர்களே. 24

*(1)* பரணி, பூரம், பூராடம், அசுபதி, மகம், மூலம், கார்த்திகை, உத்திரம், உத்திராடம் இவை ஒன்பதும் கீழ்நிலை நட்சத்திரங்கள்.

*(2)* மிருகசிரம், சித்திரை, அவிட்டம் இவை மூன்றும் உச்சநிலை நட்சத்திரங்கள்.

*(3)* ரோகணி, அத்தம், திருவோணம், திருவாதிரை, சோதி, சதயம், புனர்பூசம், விசாகம், பூரட்டாதி, பூசம், அனுசம், உத்திரட்டாதி, ஆயிலியம், கேட்டை, ரேவதி இவை பதினைந்தும் இடைநிலை நட்சத்திரங்கள்.

(4) மிருகசிரம், கேட்டை, அத்தம், சித்திரை, சோதி, விசாகம், திருவோணம், அவிட்டம், சதயம், புனர்பூசம், பூசம், ஆயிலியம் இவை பன்னிரண்டும் சல நட்சத்திரங்கள்.

(5) அசுபதி, பரணி, கார்த்திகை, ரோகணி, திருவாதிரை, மகம், பூரம், உத்திரம், அனுசம், மூலம், பூராடம், உத்திராடம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி இவை பதினைந்தும் சுட்க நட்சத்திரங்கள்.

கீழ்மேல் ஒரு வரையும் தென்வடல் ஒருவரையுமாகக் கீறி கோண்நிலாவ ஆறுவரை நேர் குறுக்காகக் கீறி உச்சிவரையில் கார்த்திகை முதலாக நட்சத்திரங்களை வைத்து இரவி நின்ற நட்சத்திர திசை வரை நட்சத்திரத்தில் கிரகம் இருக்கில் நாற்றிசை நட்சத்திரமும் விலக்கப்படுபவன. கோணவரை ஆறிலும் உள்ள நட்சத்திரங்களில் இரவியும் கிரகங்களும் கலக்கில் அக்கோண வரை நட்சத்திரம் ஆறும் விலக்கப்படுபவன. இது கும்பபூர்த்தி என்றவாறு.

## கும்பபூர்த்திச் சக்கரம்



## வேத கயிறு, சுமங்கள, ரச்சு, ஸ்திரீதீர்க்ககப் பொருத்தம்

பரைகோண்மா நீக்கீறிக் குறுக்கொருநான் காயப்
பாற்கோனுநன் நான்காய்ப்பற் றுவரைக்கி டப்பால்
சிரப்பான்மா வைத்திருவர் தினமுமொரு வரையில்
சேருதலா காதிதுவே தக்கயிறு சேட
அரிக்கோண்டார் நீர்கோண்டிப் படிக்கோண்மாழ் யாழ்க்கோன்
அடிமருங்கு லகடுகள மம்புலிகோள் சிரசாய்ப்
பொருந்தாண்பெண் ணாளொருட்கோ ஹூறிலவரச் சென்னப்
புகல்பதின்மூன் றிவணான்மேல் புலலிவடீர்க் கமுமே. 25

*(1) முக்கோணம் முனை மேலாகக்கீறி, குறுக்காக நான்குவரை கீறி, இருகோணங்களுக்கு மேலாக நன்நான்குவரை கீறி, இடப்பால் உச்சவரையில் அசுபதி முதல் நட்சத்திரங்களை வைத்து ஆண் பெண் நட்சத்திரம் ஒருவரையில் ஆகாது. இது வேதக்கயிறு.*

*(2) ஆயிலியம், கேட்டை, ரேவதி, அசுபதி, மகம், மூலம் இவை பாதக்கயிறு.*

*(3) பூசம், அனுசம், உத்திரட்டாதி, பரணி, பூரம், பூராடம் இவை இடைக்கயிறு.*

*(4) கார்த்திகை, உத்திரம், உத்திராடம், புனர்பூசம், விசாகம், பூரட்டாதி இவை வயிற்றுக்கயிறு.*

*(5) ரோகணி, அத்தம், திருவோணம், திருவாதிரை, சோதி, சதயம் இவை கண்டக்கயிறு.*

*(6) மிருகசிரம், சித்திரை, அவிட்டம் இவை முடிக்கயிறு.*

*(7) ஆண், பெண் நட்சத்திரம் ஒரு கயிற்றில் வரில் ஆகாது. பெண் நட்சத்திரம் தொட்டு 13 நட்சத்திரத்துக்குமேல் புருஷன் நட்சத்திரம் வரில் ஸ்திரீதீர்க்கம்.*

## வேதக்கயிறு




## சுமங்களாச்சு

| மிருக | | சித்திரை | | ஆவிட்டம் | |
|---|---|---|---|---|---|
| ரோ | திரு | அத் | சோ | தி | ச |
| கா | பு | உ | வி | உ | பூ-தி |
| ப | பூத | பூர | அ | பூரா | உத்-தி |
| அச் | ஆயி | மக | கே | மூ | ரேவ |

## மாகேந்திர நட்சத்திரம்

மும்மூன்றாய் அனுசனனத் தைந்துதரம் ஏறின்
　மொழிவதுமா கேந்திரம்யாழ் மூலமெமன் மூரசீர்
அம்மான்கம் மும்மால்வேய் தேர்புலனி யவசித்
　தாடியுமா வகிபுள்வெயி லான்சுடரா டையுநேர்
இம்மூன்று மண்டலறீர் மாகேந்திரம் வாயு
　வென்பதனன் மற்றதற்கா மிதமிலருக் கிடைசேர்
பம்மாம்ச வூணருறும் தினமாதம் வருடம்
　பருபொழுதீ றுபயமைமூண் டுப்பவமா குவதே. 26

பெண் நட்சத்திரத்துக்கு மேல் *4, 7, 10, 13, 16, 19, 22, 25* புருடன் நாளாகில் அது மாகேந்திரம்.

திருவாதிரை, மூலம், சதயம், உத்திரட்டாதி, ரேவதி, பூராடம், மிருகசிரம் இவை ஏழும் வருண மண்டலம்.

திருவோணம், புனர்பூசம், ரோகணி, அனுசம், கேட்டை, அவசித்து, உத்திராடம் இவை ஏழும் மாகேந்திர மண்டலம்.

அசுபதி, ஆயிலியம், அவிட்டம், அத்தம், உத்திரம், சோதி, சித்திரை இவை ஏழும் வாயு மண்டலம்.

பரணி, கார்த்திகை, பூசம், மகம், பூரம், விசாகம், பூரட்டாதி இவை ஏழும் அக்கினி மண்டலம்.

பாவர் மத்திய தினமும், பாவர் இருக்கிற தினமும், மாதாந்தியம் இரண்டு தினமும், வருடாந்தியம் பதினைந்து தினமும் பாவதினம்.

## *நட்சத்திரவடிவு, நட்சத்திரத் தொகை, நட்சத்திர திசைச்சூலம்*

மாச்சிரசவ் வடுப்புகள் றையூற்றாறேங் காய்க்கண்
மண்மணியா வணம்புடற்பூ வம்மிநுகங் கைமான்
கோச்சுடரம் முறமுடப்புல் வீட்டிபொற்கா ளங்கோல்
குவித்ததவிட் டுக்கூட்டங் கொத்தோடத் துருவர
முச்சிவைமுக் குளநாற்கான் மற்றதுநேர் வேய்மா
முறந்தீயா றன்மதிமான் மூன்றீரா றத்தேர்
தேச்சுடரா டைக்கேகம் வீப்பன்மறை மற்றாம்
திசைச்சூழ்புட் கோன்மாறேர் தையென்றுத் திரமே. 27

*அசுபதி ஆறும் குதிரைத் தலைபோல்.*
*பரணி மூன்றும் அடுப்பு.*
*கார்த்திகை ஆறும் கற்றை*
*ரோகிணி பன்னிரண்டும் ஊற்று*
*மிருகசிரம் மூன்றும் தேங்காய்க்கண்*

திருவாதிரை ஒன்று இராசமணி
புனர்பூசம் ஆறும் கடைவீதி
பூசம் நான்கும் புடலம் பூ
ஆயிலியம் நான்கு அம்மி
மகம் நான்கு நுகம்
பூரம் நான்கு கட்டில் கால்
உத்திரம் நான்கு கட்டில் கால்
அத்தம் நான்கு கைத்தலம்
சித்திரை ஒன்று புலிக்கண்
சோதி ஒன்று தீபம்
விசாகம் ஆறு சுளகு
அனுசம் நான்கு முடப்பனை
கேட்டை நான்கு சட்டி
மூலம் நான்கு கொற்காளம்
பூராடம் நான்கு கட்டில்கால்
உத்திராடம் நான்கு கட்டில்கால்
திருவோணம் மூன்று முழக்கோல்
அவிட்டம் பல தவிட்டுக்கூட்டம்
சதயம் நான்கு பூங்கொத்து
பூரட்டாதி நான்கு கட்டில்கால்
உத்திரட்டாதி நான்கு கட்டில்கால்
ரேவதி நான்கு ஓடம்.

| | | |
|---|---|---|
| அவிட்டம், கேட்டை | - | கீழ்த்திசைச் சூலம் |
| அசுபதி, திருவோணம் | - | தென்திசைச் சூலம் |
| ரோகணி, பூசம் | - | மேல்திசைச் சூலம் |
| அத்தம், உத்திரம் | - | வடதிசைச் சூலம் |

### *சன்மாதி நட்சத்திரத்தின் பெயரும், அதிபரும், குலமும்*

**என்றருகன் பணிகுருக்கே திந்தசிதன் சிதன்சேய்க்**
**கிகத்துதய முதல்சன்ப சம்பவிபச் சேமம்**
**பின்றருப்ரத் யாரமச்சா தகம்வகைமித் திரமிப்**
**பேர்ப்பரமம் இவைநோக்காம் குலப்பேர்பே சிடிற்றீ**

ஒற்றுமைத்ர யமுந்தேர்புல் லோடநுக மும்முன்
னும்பரவ சித்தினனுந் தாரொகுத்ரங் களுஞ்சே
மன்றினக்கோள் குருகுமதிக் கோன்மனுமற் றதுநால்
வரசுரர்வே டர்கீழ்மேல் வாரமதிப் பதுவே. 28

| | | | |
|---|---|---|---|
| முதல் நட்சத்திரம் | - | சென்மம் | - ஆதித்தன் |
| 2ஆவது நட்சத்திரம் | - | சம்பத்து | - புதன் |
| 3ஆவது நட்சத்திரம் | - | விபத்து | - இராகு |
| 4ஆவது நட்சத்திரம் | - | சேமம் | - வியாழன் |
| 5ஆவது நட்சத்திரம் | - | பிரத்யாரம் | - கேது |
| 6ஆவது நட்சத்திரம் | - | சாதகம் | - சந்திரன் |
| 7ஆவது நட்சத்திரம் | - | வதை | - சனி |
| 8ஆவது நட்சத்திரம் | - | மயித்திரம் | - சுக்கிரன் |
| 9ஆவது நட்சத்திரம் | - | பரமமயித்திரம் | - செவ்வாய் |

இவற்றை அனு, திரி சென்மங்களுக்கும் நேராக வைத்துக் கொள்க.

*(1)* கார்த்திகை, பூரம், பூராடம், பூரட்டாதி (பூரத்திரயம்) நான்கும் பிரமகுலம்.

*(2)* ரோகணி, அனுசம், ரேவதி, மகம் நான்கும் சத்திரிய குலம்.

*(3)* அசுபதி, புனர்பூசம், அவசித்து, அத்தம் நான்கும் வைசியகுலம்.

*(4)* பூசம், உத்தரம், உத்தராடம், உத்தரட்டாதி *(உத்திரத்திரயம்)* நான்கும் சூத்திரகுலம்.

*(5)* திருவாதிரை, சோதி, சதயம், மூலம் நான்கும் இராட்சதகுலம்.

*(6)* மிருகசிரம், சித்திரை, அவிட்டம், கேட்டை நான்கும் வேடர்குலம்.

*(7)* பரணி, ஆயிலியம், திருவோணம், விசாகம் நான்கும் நீசகுலம்.

இதன்மேல் வார சரித்திரம் சொல்லுவோம் என்றவாறு.

நட்சத்திர சரித்திரப்படலம் முற்றிற்று.

ஆகப் படலம் மூன்றுக்குக் கவி 28

## 4. வார சரித்திரப் படலம்

### விதிலபித முகூர்த்தம்

மதிபொனுஞ்சுன் மாலினனும் புகர்யுதனுஞ் சிதனே
மன்னிலது மேதைதரு வற்றதும்பெண் ணரிமா
னதிபெருமா தவனிலதும் பகற்கிரவுக் கான்மீன்
அரிக்கரச ருஞ்சிலைசா லசப்பதிப்பே ரலது
முதுமகனும் வெயிறூத னிற்றதுங்கோல் விலரு
மூத்தவனில் லலரிச்சி யும்மொழிதன் முடவோன்
விதுவுமதி செயகால மற்றதுநா யிறுநேர்
வேளையள விவ்விபரம் விதிலபிதத் தியல்பே. 29

*(1)* ஆதிவாரம் 2, 4, 5, 6ஆம் சாமமும், திங்கள் 1, 5, 4, 7, 8ஆம் சாமமும், செவ்வாய் 9, 5, 7, 8ஆம் சாமமும், புதன் 2, 3, 4, 6, 7, 8ஆம் சாமமும், வியாழன் 1, 4, 7, 8ஆம் சாமமும், வெள்ளி 3, 5, 7, 8ஆம் சாமமும், சனி 2, 5, 6, 7, 8ஆம் சாமமும் அதிசெய முகூர்த்தம்.

*(2)* மற்றச் சாமங்கள் அபசெய முகூர்த்தம். இவை பகல் காலத்துக்காம்.

*(3)* ஆதித்தவாரம் 1, 2, 6ஆம் சாமமும், திங்கள் 2, 4, 6, 8ஆம் சாமமும், செவ்வாய் 4, 6, 7ஆம் சாமமும், புதன் 2, 6, 7ஆம் சாமமும், வியாழன் 1, 4, 5, 6, 7ஆம் சாமமும், வெள்ளி 1, 2, 4, 6, 7ஆம் சாமமும், சனி 3, 4, 7, 8ஆம் சாமமும் அதிசெயமுகூர்த்தம்.

மற்றச் சாமங்கள் அபசெய முகூர்த்தம். இவை ராத்திரிக்காம். இவற்றிற்கெல்லாம் ஒரு சாமம் 3 ¾ நாழிகையாகக் கொள்க.

## துருவங்கள்

பரணிகுரு குதையாடி கண்முடியாழ் மூலம்
　　பாழ்பனைதார் நாழியடு சுரர்கரும்ப ருக்கன்
சுரர்படிரா வாடைகலை தோகைபுற்புள் ளிவைசேர்
　　துரகமுத வாயிரண்டாய்ச் சொல்லொருமா சமுமாய்
வருடமுமைப் பசிமுதலாய்க் கதநடப்போ டுபய
　　மானதெழ வர்க்கீய வரன்மாதத் துதையந்
தருதினனே ரின்னளவிம் முத்தொகைசொன் மிகிலேழ்
　　தள்ளிதுவென் மாதமிரண் டானதன்ய நாட்கே.　　　　30

*(1) சித்திரை மாதத்துக்கு 2, 19; வைகாசிக்கு 2, 21; ஆனிக்கு 7, 21; ஆடிக்கு 6, 19; ஆவணிக்கு 6, 17; புரட்டாசிக்கு 8, 25; ஐப்பசிக்கு 2, 19; கார்த்திகைக்கு 7, 13; மார்கழிக்கு 7, 25; தைக்கு 2, 14; மாசிக்கு 14, 23; பங்குனிக்கு 17, 23 இவை மாதத்துருவம்.*

*(2) ஐப்பசி வருடாதியாக நடப்புடனே, கதமுங்கூட்டி, இதனுடனே இரண்டும் கூட்டி, ஏழுக்குக் கொடுக்க வந்த சேடம் வருடத்துருவம்.*

*(3) மாதம் பிறந்த வாரம் முதல் ஞாயிறு வரை எண்ணிக்கண்ட தொகை தினத்துருவம்.*

*(4) இந்த மூன்று துருவமும் கூட்டிச் சொல்வது தன்னிய நாள். இத்தொகை நாளது மாதாந்திய தேதிக்கு அதிகப்படில், எவ்வேழு தள்ளிச் சொல்லுக. இப்படித் தன்னியநாள் மாதம் இரண்டுதரம் வரும். இவை பகற்காம் என்றவாறு.*

## வாரசூனியம், முகூர்த்தத் திரயம்

நாளிறைநேர் முறங்கனலேர் நாழிபுன ஊமனு
　　நாரிமன்மா லந்தகனு நாவாய்த்தீ புண்மா
வேன்பிதிர்தேட் கடையிரவும் வேய்புனல்பா ரோடம்
　　விதுவும்விது புள்புன்முறம் வெயில்குடந்தே ரும்வேய்

கோளிறைதார் குளமீறுங் கோனேரன் முறமற்
　　கோன்பனையு மிவைவார சூன்யமலர்க் கோமான்
வாளுதயத் திரயம்பிரா தவிசினத்தூள் கவிபொன்
　　மான்மதிநன் கவமவரிற் சரோருகனல் லவனே.　　31

*(1) திங்களில் விசாகம், கார்த்திகை, மகம், பூரட்டாதி, பூராடம், சதயமும்; செவ்வாயில் அவிட்டம், கேட்டை, திருவோணம், சதயமும்; புதனில் ரேவதி, கார்த்திகை, அவிட்டம், அசுபதி, திருவோணம், மூலம், பரணியும்; வியாழனில் புனர்பூசம், பூராடம், ரோகணி, ரேவதி, மிருகசிரமும்; வெள்ளியில் மிருகசிரம், அவிட்டம், அனுசம், விசாகம், அத்தம், பூசம், ரோகணியும்; சனியில் புனர்பூசம், அத்தம், பூசம், உத்திரம், ரேவதியும்; ஞாயிறில் கேட்டை, மகம், பரணி, விசாகம், மிருகசிரம், அனுசமும் வரில் வார சூனியமாம்.*

*(2) சூரியோதயம் பிராதகால முகூர்த்தம், மத்தியானம் அவிச்சின் முகூர்த்தம், அஸ்தமனம் கோதூளி முகூர்த்தம். இவை முகூர்த்தத் திரயமாம்.*

*(3) மற்றவை அசுபவாரம். இவற்றுள் ஞாயிறு உத்தமம் என்றவாறு.*

சரோருகன்மால் பொன்னசித னுக்குளநாற் றனையர்
　　தாதையுத யத்திருநா ழிகையுதயத் தவராய்
விரோதகெதி யாய்க்கடிகை நான்காய்மேன் மேலும்
　　மேற்கொளுவ ரற்கிவைபோன் மேயதொரு நான்காம்
வரோதயமேல் வருவதுதொட் டுரைத்திடுவர் ஓரை
　　வாரமுத னேராறாம் வாரம்நடத் துவரால்
சிரோதயநேர் தாமதசாத் திகமொடுரா சதமாம்
　　தெசக்காலை முக்காலுற் றிடுகனல்சொற் றிடலே.　　32

*(1) ஞாயிற்றுக்கிழமை பகல் இரண்டாம் நாழிகையிலும், சனி ஆறாம் நாழிகையிலும், வெள்ளி பத்தாம் நாழிகையிலும், வியாழன் 14ஆம் நாழிகையிலும், புதன்*

18ஆம் நாழிகையிலும், செவ்வாய் 22ஆம் நாழிகையிலும், திங்கள் 26ஆம் நாழிகையிலும் காலன் உதயமாவன்.

(2) புதன்கிழமை பகல் இரண்டாம் நாழிகையிலும், செவ்வாய் ஆறாம் நாழிகையிலும், திங்கள் பத்தாம் நாழிகையிலும், ஞாயிறு 14ஆம் நாழிகையிலும், சனி 18ஆம் நாழிகையிலும், வெள்ளி 22ஆம் நாழிகையிலும், வியாழன் 26ஆம் நாழிகையிலும் அர்த்தப்பிரகரன் உதயமாவன்.

(3) வியாழக்கிழமை பகல் இரண்டாம் நாழிகையிலும், புதன் ஆறாம் நாழிகையிலும், செவ்வாய் பத்தாம் நாழிகையிலும், திங்கள் 14ஆம் நாழிகையிலும், ஞாயிறு 18ஆம் நாழிகையிலும், சனி 22ஆண் நாழிகையிலும் வெள்ளி 26ஆம் நாழிகையிலும் எமகண்டன் உதயமாவன்.

(4) சனிக்கிழமை பகல் இரண்டாம் நாழிகையிலும், வெள்ளி ஆறாம் நாழிகையிலும், வியாழன் பத்தாம் நாழிகையிலும், புதன் 14ஆம் நாழிகையிலும், செவ்வாய் 18ஆம் நாழிகையிலும், திங்கள் 22ஆம் நாழிகையிலும், ஞாயிறு 26ஆம் நாழிகையிலும் குளிகன் உதயமாவான். இவை பகலுக்காம்.

(5) புதன்கிழமை இரவு இரண்டாம் நாழிகையிலும், செவ்வாய் ஆறாம் நாழிகையிலும், திங்கள் பத்தாம் நாழிகையிலும், ஞாயிறு 14ஆம் நாழிகையிலும், சனி 18ஆம் நாழிகையிலும், வெள்ளி 22ஆம் நாழிகையிலும், வியாழன் 26ஆம் நாழிகையிலும் காலன் உதயமாவான்.

(6) சனிக்கிழமை இரவு இரண்டாம் நாழிகையிலும், வெள்ளி ஆறாம் நாழிகையிலும், வியாழன் பத்தாம் நாழிகையிலும், புதன் 14ஆம் நாழிகையிலும், செவ்வாய் 18ஆம் நாழிகையிலும், திங்கள் 22ஆம் நாழிகையிலும், ஞாயிறு 26ஆம் நாழிகையிலும் அர்த்தப்பிரகரன் உதயமாவான்.

(7) ஞாயிற்றுக்கிழமை இரவு இரண்டாம் நாழிகையிலும், சனி ஆறாம் நாழிகையிலும், வெள்ளி பத்தாம் நாழிகையிலும், வியான் 14ஆம் நாழிகையிலும், புதன் 18ஆம் நாழிகையிலும், செவ்வாய் 22ஆம் நாழிகையிலும், திங்கள் 26ஆம் நாழிகையிலும் எமகண்டன் உதயமாவான்.

(8) செவ்வாய்க்கிழமை இரவு இரண்டாம் நாழிகையிலும், திங்கள் ஆறாம் நாழிகையிலும், ஞாயிறு பத்தாம் நாழிகையிலும், சனி 14ஆம் நாழிகையிலும், வெள்ளி 18ஆம் நாழிகையிலும், வியாழள் 22ஆம் நாழிகையிலும், புதன் 26ஆம் நாழிகையிலும் குளிகன் உதயமாவான். இவை இரவுக்காம்.

(9) ஞாயிற்றுக்கிழமை உதயம் முதல் 1. சூரிய ஓரை, 2. சுக்கிர ஓரை, 3. புத ஓரை, 4. சந்திர ஓரை, 5. சனி ஓரை, 6. வியாழ ஓரை, 7. செவ்வாய் ஓரை, 8. சூரிய ஓரை, 9. சுக்கிர ஓரை, 10, புத ஓரை, 11. சந்திர ஓரை, 12. சனி ஓரை, 13. வியாழ ஓரை, 14. செவ்வாய் ஓரை, 15. சூரிய ஓரை, 16. சுக்கிர ஓரை, 17. புத ஓரை, 18. சந்திர ஓரை, 19. சனி ஓரை, 20. வியாழ ஓரை, 21. செவ்வாய் ஓரை, 22. சூரிய ஓரை, 23. சுக்கிர ஓரை, 24. புத ஓரை.

(10) திங்கட்கிழமை உதயம் முதல் 1. சந்திர ஓரை, 2. சனி ஓரை, 3. வியாழ ஓரை, 4. செவ்வாய் ஓரை, 5. சூரிய ஓரை, 6. சுக்கிர ஓரை, 7. புத ஓரை, 8. சந்திர ஓரை, 9. சனி ஓரை, 10, வியாழ ஓரை, 11. செவ்வாய் ஓரை, 12. சூரிய ஓரை, 13. சுக்கிர ஓரை, 14. புத ஓரை, 15. சந்திர ஓரை, 16. சனி ஓரை, 17. வியாழ ஓரை, 18. செவ்வாய் ஓரை, 19. சூரிய ஓரை, 20. சுக்கிர ஓரை, 21. புத ஓரை, 22. சந்திர ஓரை, 23. சனி ஓரை, 24. வியாழ ஓரை.

(11) செவ்வாய்க்கிழமை உதயம் முதல் 1. செவ்வாய் ஓரை, 2. சூரிய ஓரை, 3. சுக்கிர ஓரை, 4. புதன் ஓரை, 5. சந்திர ஓரை, 6. சனி ஓரை, 7. வியாழ ஓரை, 8. செவ்வாய் ஓரை, 9. சூரிய ஓரை, 10, சுக்கிர ஓரை, 11. புதன் ஓரை, 12. சந்திர ஓரை, 13. சனி ஓரை, 14. வியாழ ஓரை,

15. செவ்வாய் ஓரை, 16. சூரிய ஓரை, 17. சுக்கிர ஓரை, 18. புதன் ஓரை, 19. சந்திர ஓரை, 20. சனி ஓரை, 21. வியாழ ஓரை, 22. செவ்வாய் ஓரை, 23. சூரிய ஓரை, 24. சுக்கிர ஓரை.

(12) புதன்கிழமை உதயம் முதல் 1. புத ஓரை, 2. சந்திர ஓரை, 3. சனி ஓரை, 4. வியாழ ஓரை, 5. செவ்வாய் ஓரை, 6. சூரிய ஓரை, 7. சுக்கிர ஓரை, 8. புதன் ஓரை, 9. சந்திர ஓரை, 10, சனி ஓரை, 11. வியாழ ஓரை, 12. செவ்வாய் ஓரை, 13. சூரிய ஓரை, 14. சுக்கிர ஓரை, 15. புதன் ஓரை, 16. சந்திர ஓரை, 17. சனி ஓரை, 18. வியாழ ஓரை, 19. செவ்வாய் ஓரை, 20. சூரிய ஓரை, 21. சுக்கிர ஓரை, 22. புத ஓரை, 23. சந்திர ஓரை, 24. சனி ஓரை.

(13) வியாழக்கிழமை உதயம் முதல் 1. வியாழ ஓரை, 2. செவ்வாய் ஓரை, 3. சூரிய ஓரை, 4. சுக்கிர ஓரை, 5. புத ஓரை, 6. சந்திர ஓரை, 7. சனி ஓரை, 8. வியாழ ஓரை, 9. செவ்வாய் ஓரை, 10, சூரிய ஓரை, 11. சுக்கிர ஓரை, 12. புத ஓரை, 13. சந்திர ஓரை, 14. சனி ஓரை, 15. வியாழ ஓரை, 16. செவ்வாய் ஓரை, 17. சூரிய ஓரை, 18. சுக்கிர ஓரை, 19. புத ஓரை, 20. சந்திர ஓரை, 21. சனி ஓரை, 22. வியாழ ஓரை, 23. செவ்வாய் ஓரை, 24. சூரிய ஓரை.

(14) வெள்ளிக்கிழமை உதயம் முதல் 1. சுக்கிர ஓரை, 2. புத ஓரை, 3. சந்திர ஓரை, 4. சனி ஓரை, 5. வியாழ ஓரை, 6. செவ்வாய் ஓரை, 7. சூரிய ஓரை, 8. சுக்கிர ஓரை, 9. புத ஓரை, 10. சந்திர ஓரை, 11. சனி ஓரை, 12. வியாழ ஓரை, 13. செவ்வாய் ஓரை, 14. சூரிய ஓரை, 15. சுக்கிர ஓரை, 16. புத ஓரை, 17. சந்திர ஓரை, 18. சனி ஓரை, 19. வியாழ ஓரை, 20. செவ்வாய் ஓரை, 21. சூரிய ஓரை, 22. சுக்கிர ஓரை, 23. புத ஓரை, 24. சந்திர ஓரை.

(15) சனிக்கிழமை உதயம் முதல் 1. சனி ஓரை, 2. வியாழ ஓரை, 3. செவ்வாய் ஓரை, 4. சூரிய ஓரை, 5. சுக்கிர ஓரை, 6. புத ஓரை, 7. சந்திர ஓரை, 8. சனி ஓரை, 9. வியாழ ஓரை, 10. செவ்வாய் ஓரை, 11. சூரிய ஓரை, 12.

சுக்கிர ஓரை, *13.* புத ஓரை, *14.* சந்திர ஓரை, *15.* சனி ஓரை, *16.* வியாழ ஓரை, *17.* செவ்வாய் ஓரை, *18.* சூரிய ஓரை, *19.* சுக்கிர ஓரை, *20.* புத ஓரை, *21.* சந்திர ஓரை, *22.* சனி ஓரை, *23.* வியாழ ஓரை, *24.* செவ்வாய் ஓரை.

இவற்றிற்கெல்லாம் ஓரை ஒன்றிற்கு $2\frac{1}{2}$ நாழிகையாகக் கொள்க.

*(16)* ஞாயிற்றுக்கிழமை உதயம் முதல் *1.* தாமச வேளை, *2.*சாத்விகம், *3.* இராசதம், *4.* தாமசம், *5.* சாத்விகம், *6.* இராசதம், *7.* தாமசம், *8.* சாத்விகம், *9.*இராசதம், *10.* தாமசம், *11.* சாத்விகம், *12.* இராசதம், *13.* தாமசம், *14.* சாத்விகம், *15.* இராசதம், *16.* தாமசம்,

*(17)* திங்கட்கிழமை உதயம்முதல் *1.* சாத்விக வேளை, *2.* இராசதம், *3.* தாமசம், *4.* சாத்விகம், *5.* இராசதம், *6.* தாமசம், *7.* சாத்விகம், *8.* இராசதம், *9.* தாமசம், *10.* சாத்விகம், *11.* இராசதம், *12.* தாமசம், *13.* சாத்விகம், *14.* இராசதம், *15.* தாமசம், *16.* சாத்விகம்.

*(18)* செவ்வாய்க்கிழமை உதயம் முதல் *1.* இராசத வேளை, *2.* தாமசம், *3.* சாத்விகம், *4.* இராசதம், *5.* தாமசம், *6.* சாத்விகம், *7.* இராசதம், *8.* தாமசம், *9.* சாத்விகம், *10.* இராசதம், *11.* தாமசம், *12.* சாத்விகம், *13.* இராசதம், *14.* தாமசம், *15.* சாத்விகம், *16.* இராசதம்.

*(19)* புதன்கிழமைக்கு ஞாயிற்றுக்கிழமைக்குச் சொல்லி யிருக்கிற கிரமம் போலவும், வியாழக்கிழமைக்கு திங்கட் கிழமைக்குச் சொல்லியிருக்கிற கிரமம் போலவும், வெள்ளிக்கிழமைக்கு செவ்வாய்க்கிழமைக்குச் சொல்லி யிருக்கிற கிரமம் போலவும் கொள்க.

*(20)* சனிக்கிழமை உதயம் முதல் *1.* தாமசவேளை, *2.* சாத்விகம், *3.* ராசதம், *4.* தாமசம், *5.* சாத்விகம்,*6.* ராசதம்,

7. தாமசம், 8. சாத்விகம், 9. இராசதம், 10. தாமசம், 11. சாத்விகம், 12. இராசதம், 13. தாமசம், 14. சாத்விகம், 15. இராசதம்.[1]

வேளை ஒன்றுக்கு 3¾ நாழிகையாகக் கொள்க. சனிக்கிழமைக்கு மாத்திரம் வேளை ஒன்றுக்கு 4 நாழிகையாம் என்றவாறு.

### *சரம், வார ஊண்*

இடத்தியங்கு மான்மதிபார்க் கவன்பூர்வ பட்சத்
தினிற்குருவின் மற்றதின்மற் றியங்குகன லைந்தாய்
நடத்துகலை இந்திரவி ரன்டொடனற் கலையாய்
நாமமிடை பிங்கலையச் சுழிமுனைப்பேர் நவில்வார்
கடத்தலிவை ஒன்றினுக்கைம் பூதமுநேர் நடக்கும்
கால்வலமும் இடமுமறு காற்கொருகால் கழிவாய்
விடத்தகுமவ் வாரமுதல் பகலிரவுக் கிவர்கள்
வீடளவு நேரிடமாய் மேவுவதூ ணெனுமே. 33

புதன், திங்கள், வெள்ளி, பூர்வபட்சத்து வியாழன் இந்த வாரங்களில் இடதுபுறத்தில் சரம் ஓடும். ஞாயிறு, செவ்வாய், சனி, அமரபட்சத்து வியாழன் இந்த வாரங்களில் வலதுபுரத்தில் சரம் ஓடும். இவை ஒவ்வொன்றுக்கும் 5 நாழிகை நேர் நடக்கும். இடம் சந்திரகலை. வலம் சூரியகலை. இவை இரண்டுங்கூடினது அக்கினி கலை. இவை மூன்றுக்கு முறையே இட, பிங்கலை, சுழிமுனை என்றும் பெயராம். இட, பிங்கலை ஒவ்வொன்றுக்கும் ஐம்பூதமும் நேர் நடக்கும். இப்பூதங்கள் இடத்துக்கு வலமும், வலத்துக்கு இடமுமாக நடக்கும். பிருதிவியின் கூறு 1½ நாழிகையும், அப்புவின் கூறு 1¼ நாழிகையும், தேயுவின் கூறு ஒரு நாழிகையும், வாயுவின்

---

1. வேளை ஒன்றுக்கு 3¾ நாழிகையெனக் கவியில் பொதுப்படக் கூறியிருக்க சனிக்கிழமைக்கு மாத்திரம் நான்கென விசேடித்துக் கூறியது நூலாசிரியர் கூறிய முறைமை நோக்கியென்க. இஃது உய்த்துணர்வைப்பென்னும் உத்தி.

கூறு ¾ நாழிகையும், ஆகாயத்தின் கூறு ½ நாழிகையுமாக நேர் நடக்கும். பகற்காலத்தில் ஞாயிறு சிம்ம லக்னத்திலும், புதன் கன்னியிலும், வெள்ளி துலாத்திலும், செவ்வாய் விருச்சிகத்திலும், வியாழன் தனுசிலும், சனி மகரத்திலும் உண்ணும். இரவில் திங்கள் கடகத்திலும், புதன் மிதுனத்திலும், வெள்ளி இடபத்திலும், செவ்வாய் மேஷத்திலும், வியாழன் மீனத்திலும், சனி கும்பத்திலும் உண்ணும். இவை வாரவூண்.

## *பஞ்சபட்சிக்குரிய தொழில்*

ஊணடையா திக்கமுறக் கம்மரணம் ஐந்துக்
    கும்இரவும் பகலுமொரு தொழிற்கறுநா ழிகையாய்ப்
பூணுமறு காலைக்கா லெண் முக்கா லிருக்கால்
    பொசிப்புமுதல் உட்கிரியை புகல்வாரிக் கிரியை
காணுதல்வல் லூராந்தை காகநங்கே தனம்வா
    கனமாமீ தகரமுதல் கடையொகரம் வரையா
மாணலனுக் கோரெழுத்தேன் மூப்புயரம் இளமை
    அதிபெலம்பே ரனுபுனர்நண் ணலரதற்கா வதுவே. 34

ஊண், நடை, அரசு, தூக்கம், சாவு இவை பஞ்சபட்சிக்குரிய தொழில். இத்தொழில்கள் ஒவ்வொன்றுக்கும் அவ்வாறு நாழிகையாய் இரவும் பகலும் நடக்கும். ஊண் ஒரு நாழிகை. நடை 1¼நாழிகை, அரசு 2 நாழிகை, தூக்கம் ¾ நாழிகை, சாவு ½ நாழிகை. இவை ஸ்தூலத்தில் சூட்சுமத் தொழிலாம். வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில் இவை மேற்கூறிய தொழில்களுடைய பஞ்சபட்சிகளாம்.

அகரமும் ஆகாரமும் இவை ஏறிய உயிர்மெய்யும் ஆந்தை.

உகரமும் ஊகாரமும் இவை ஏறிய உயிர்மெய்யும் காகம்.

எகரமும் ஏகாரமும் இவை ஏறிய உயிர்மெய்யும் கோழி.

ஒகரமும் ஓகாரமும் இவை ஏறிய உயிர்மெய்யும் மயிலாம்.

இருவர் அட்சரமும் ஒன்றாகில் ஊணில் மூப்புடையவனும், நடையில் வளர்ந்தவனும் அரசில் இளையவனும், தூக்கத்தில் அதிபலவானும், சாவில் அதிகப்பேருடையவனும் வெற்றி கொள்வான். வல்லூறுக்கு ஆந்தையும், ஆந்தைக்குக் காகமும், காகத்துக்கு கோழியும், கோழிக்கு மயிலும், மயிலுக்கு வல்லூறும் பகையாம்.

## பஞ்சபட்சி நடப்பு, படுபட்சி

ஆரன்முதல் சனிவரைநே ராய்வலியான் காகம்
மவலமவ்வா ரணக்கொடிதொட் டாதியந்தப் பொசிப்பாம்
சூரியனுக் கனலின்மதிக் கருணனசி தனைப்போல்
தொழிலதற்குத் தெற்குவடக் கிதற்கிடைவிட் டுணவாய்
மாரணநித் திரைநடைகோ வையெவைக்கும் வினையாய்
வகுத்துரைப்பர் பொன்முதல்வல் லூராந்தை மாறா
ஈரிருநாண் மற்றவைநே ரிறப்பிவைபோன் மயில்வைத்
திடமாகப் புதன்முதனே ரெய்துவதீ தினுக்கே. 35

செவ்வாய் முதல் சனிவரை பூர்வபட்சம் பகல் முதல் சாமம் வல்லூறு முதல்நேர் உண்ணும். இப்பட்சத்தில் இரவு முதல் சாமம் காகம் முதல்நேர் உண்ணும். அமரபட்சத்துப் பகல் முதல்சாமம் கோழி முதல் இடமாக நேர் உண்ணும். அமரபட்சத்து இரவு முதல் சாமம் காகம் முதல் இடமாக நேர் உண்ணும். ஞாயிறுக்குச் செவ்வாயைப்போல எப்போதும் சொல்லுக. திங்களுக்கும் பூர்வபட்சத்தில் புதனைப் போலவும், அமரபட்சத்தில் சனியைப் போலவும் சொல்லுக. பூர்வபட்சம் பகல் முதல் சாமம் மரணமான பட்சியை இரண்டாம் சாமத்துக்கு ஊண் பட்சியாக வைத்து வலமாக நேர் நடத்துக. இந்தப்படி மரணமான பட்சியை ஊண் பட்சியாக வைத்து மற்றச் சாமங்களுக்கும் நடத்துக. பூர்வபட்சம் இரவு முதற்சாமம் நித்திரை செய்த பட்சியை இரண்டாம் சாமத்துக்கு ஊண் பட்சியாகவைத்துப் பட்சி இடமாக நேர்

நடத்துக.இந்தப்படி நித்திரை செய்த பட்சியை ஊண் பட்சியாக வைத்து மற்ற சாமங்களுக்கும் நடத்துக. அமரபட்சம் முதல் சாமம் நடந்த பட்சியை இரண்டாம் சாமத்துக்கு ஊண் பட்சியாக வைத்து, வலமாக ஒன்றுவிட்டு நேர் நடத்துக. இந்தப்படி நடந்த பட்சியை ஊண் பட்சியாக வைத்து மற்ற சாமங்களுக்கும் நடத்துக. அமரபட்சம் இரவு முதல்சாமம் அரசு செய்த பட்சியை இரண்டாம் சாமத்துக்கு ஊண் பட்சியாக வைத்து இடமாக ஒன்றுவிட்டு நேர் நடத்துக. இந்தபடி அரசு செய்த பட்சியை ஊண் பட்சியாக வைத்து மற்ற சாமங்களில் நடத்துக. பூர்வபட்சம் வியாழக்கிழமை, சனிக்கிழமையில் வல்லூறும், வெள்ளி, ஞாயிற்றில் ஆந்தையும், திங்களில் காகமும், செவ்வாயில் கோழியும், புதனில் மயிலும் மரிக்கும். அமரபட்சம் புதன், வெள்ளியில் மயிலும், வியாழன் சனியில் கோழியும், ஞாயிறில் காகமும், திங்களில் ஆந்தையும், செவ்வாயில் வல்லூறும் மரிக்கும். இவை படுபட்சியாம்.

## இரவிப் பாய்ச்சல்

எய்தும்ரவிப் பாய்ச்சறெற்கா யெமனிசினே ரறுபான்
    இதற்குமுப்பா னேறலிரு பானொருபா னிளைத்த
ஐயிரண்டை நான்கேறல் பாதியுற இவைநேர்
    அலர்களுமுற் றிடல்சோமன் அசிதனுமந் தணனும்
வெய்யவன்பார்க் கவனுமனல் மேதையுநாற் றிசைச்சூல்
    விளம்புவரத் திசைமுதற்கோள் விட்டறுகோ ணமுமாய்
வைகுவதவ் வயதுளநா ழிகையாகும் அதிகம்
    வரிலுதயத் தேறுமிரா வீறறன்மற் றதுவே. 36

*சனிக்கிழமை இரவு 30, ஞாயிறுக்கிழமை பகல் நாழிகை 30 ஆக நாழிகை அறுபதும் தென்திசையிலும்; ஞாயிற்றுக்கிழமை இரவு 30 நாழிகை, திங்கள் இரவுபகல் 60 நாழிகை ஆக நாழிகை 90ம் தென்மேற்றிசையிலும்; செவ்வாய்க்கிழமை பகல் 30 நாழிகை, இரவு 10 நாழிகை ஆக 40 நாழிகை மேற்றிசையிலும், செவ்வாய்க் கிழமை இரவு 20*

நாழிகை, புதன்கிழமை பகல் 30 நாழிகை ஆக நாழிகை 50ம் வடமேற்றிசையிலும், புதன்கிழமை இரவு 30 நாழிகை, வியாழக்கிழமை பகல் 30 நாழிகை, இரவு 10 நாழிகை ஆக 70ம் வடதிசையிலும், வியாழக்கிழமை இரவு 20 நாழிகை, வெள்ளிக்கிழமை பகல் 60 நாழிகை ஆக80ம் வடகிழக்கிலும், சனிக்கிழமை பகல் 30 நாழிகை கீழ்த்திசையிலும் இரவிப் பாய்ச்சலாம்.

திங்கள்-சனி கிழக்கும், வியாழன் தெற்கும், வெள்ளி-ஞாயிறு மேற்கும், செவ்வாய்-புதன் வடக்கும் நாற்றிசைச் சூலமாம்.

திங்கள்-சனி தென்மேற்கும், வியாழன் வடமேற்கும், வெள்ளி-ஞாயிறு வடகிழக்கும், செவ்வாய் புதன் தென்கிழக்கும், மூலைச்சூலமாம். இச்சூலத்துக்கு அந்தந்த வாராதிபன் வயதை நாழிகையாகக் கொள்க.

ஞாயிறுக்கு 50 நாழிகை, திங்களுக்கு 70 நாழிகை, செவ்வாய்க்கு 14 நாழிகை, புதனுக்கு 20 நாழிகை, வியாழனுக்கு 30 நாழிகை, வெள்ளிக்கு 7 நாழிகை, சனிக்கு 100 நாழிகை. இவற்றுள் திங்கள்-சனிக்கு இராப்பகல் 60 நாழிகையல்லாமலும், திங்களுக்கு உதயந்தொட்டு 10 நாழிகைவரையும், சனிக்கு உதயந்தொட்டு இராத்திரி 10 நாழிகை வரையும் அதிக சூலமாம்.

### *வாரவர்க்கம்*

ஈறிடமற் றிடையதிக் கிந்துசித னூஞ்சாற்
    கிறைபுதனு மாகமற்றோர்க் கெய்துதலக் கடிகை
யாறுளதாய் வாலிபகு மாரதரு ணகிழ
    மாமிருத மாகவர வவரவர்ப்பேர் வாரம்
தோறுமுள தாமினனோர் சுவாலைதுதூம் சாயை
    தூர்வயங்கு பற்பமங்கா ரகமிதெண்சா மமுஞ்சுற்
றேறிவரும் தினந்திதியோ கம்இவைரண் டுறின்முன்
    றிவையிலொவ்வொன் றுறுங்கிழமை அவமாகம் எனுமே. 37

திங்கள் - வெள்ளியில் உதயந்தொட்டு அப்பிரதட்சண மாகவும், சனி - புதனில் அத்தமனம் தொட்டு நேராகவும், ஞாயிறு- செவ்வாய் வியாழனில் உதயந்தொட்டு நேராகவும் வாலிப, குமார, தருண, விருத்த, மாரணமென்று வைத்து, ஒவ்வொன்றுக்கும் அவ்வாறு நாழிகையாக நேர்நடத்துக. இவை வார அவஸ்தையாம்.

கீழ்த்திசையில் முதல் சாமம் சுவாலை.
தென்கீழ்த்திசையில் இரண்டாம் சாமம் தூமம்
தென்திசையில் மூன்றாம் சாமம் சாயை
தென்மேற்றிசையில் நான்காம் சாமம் சேறு
மேற்றிசையில் ஐந்தாம் சாமம் சலம்
வடமேற்றிசையில் ஆறாம் சாமம் பூமி
வடதிசையில் ஏழாம் சாமம் பற்பம்
வடகீழ்த்திசையில் எட்டாம் சாமம் அங்காரகன்

இவை சுவாலாதிக்கிரகமாம். இவற்றிற்கெல்லாம் சாமன் ஒன்றுக்கு 7½ நாழிகையாகக் கொள்க.

நட்சத்திரம், திதி, யோகம் இவை மூன்றும் ஒரு கிழமையில் இரண்டிரண்டாக வரினும் அல்லது இந்த மூன்றில் ஒன்று திரயமாக வரினும் அவமாக தோஷமாம்.

## வார லக்கினம், பஞ்சகதோஷம்

மாகமுஞ்சா லலவனுமீன் வருடையும்பெண் சிலையும்
மைதுனரா சியுமரிதே ளுமலதும்வா யசமாப்
பாகன்முத னேர்வார லக்கினமிப் பெயர்நாட்
பக்கமுஞ்சேர்த் தொட்டொருநான் கினர்பதினைந் தொருபான்
ஆகவொவ்வொன் றுடனவத்துக் கீயிலிரு மூன்றொன்
அடுத்ததெட்டோர் நான்குகா வவமிருத்திக் கினிநோய்
கோகடபஞ் சகம்பிணிமன் றீயினனோர் பிருகு
குருச்சோர மிக்கததாம் குற்றமின்மற் றதற்கே. 38

சனிக்கு மகரமும், ஞாயிறுக்குக் கும்ப-கடகமும், திங்களுக்கு மீன-மேடமும், செவ்வாய்க்குக் கன்னி-தனுசும், புதனுக்கு மிதுனமும், வியாழனுக்குச் சிங்க-விருச்சிகமும், வெள்ளிக்கு இடப-துலாமும் இலக்கனமாம். இலக்கனம், வாரம், நட்சத்திரம், திதி இவை நாலும் கூட்டி, இதனுடனே எட்டும் கூட்டி ஒன்பதில் கழிக்க, ஆறு மிச்சம் காணில் சோர பஞ்சகம். நாலு கூட்டி ஒன்பதில் கழிக்க ஒன்று மிச்சம் காணில் மிருத்து பஞ்சகம். பன்னிரண்டு கூட்டி ஒன்பதில் கழிக்க இரண்டு மிச்சம் காணில் அக்கினி பஞ்சகம். பதினைந்து கூட்டி ஒன்பதில் கழிக்க, எட்டு மிச்சம் காணில் ரோக பஞ்சகம். பத்துக் கூட்டி ஒன்பதில் கழிக்க நாலு மிச்சம் காணில் ராச பஞ்சகம். இவற்றுள் ஞாயிறில் ரோக பஞ்சகமும், திங்களில் ராச பஞ்சகமும், செவ்வாயில் அக்கினி பஞ்சகமும், வெள்ளி - வியாழத்தில் சோர பஞ்சகமும், சனி-புதனில் மிருத்து பஞ்சகமும் வரில் பஞ்சகதோஷம் சொல்லுக. மற்றது வரில் பஞ்சகதோஷம் இல்லை என்க என்றவாறு.

## *மரணயோகம், அமிர்தயோகம்*

அல்லளகம் கனலுமுன்னா டியும்படிதேர் முறம்யாழ்
அதுமினனு நமன்றீபுல் வானரனு மயனேர்
வல்லவன்தன் னையுமிதுநா ழியுடை விடையும்
மரணம்ரவி நேர்மூவான் மாறைகுரு கும்மூக்
கில்லவள்வேய் ரதமதியும் ஏறவுணு முடிமுச்
சிவைஎருது மலர்மதமா வும்மிதுமூ லமும்ஏர்
கொல்லெமன்நீ சுடரமிர்தப் பால்ராசித் திறமும்
கூறினன்றே வானையுடன் கூடியகோ ளரியே. 39

ஞாயிறில் அவிட்டம் கார்த்திகையும், திங்களில் அசுபதி உத்திராடமும்; செவ்வாயில் பூரட்டாதி, ரோகணி, விசாகம், திருவாதிரையும்; புதனில் அத்தமும்; வியாழனில் சதயம், கார்த்திகை, அனுசம், உத்திரம், திருவாதிரையும்; வெள்ளியில் ரோகணி, மகம், திருவோணம், ஆயிலியம்; சனியில் ஆயிலியம், பூரட்டாதி, சித்திரை, உத்திரமும் வரில் மரணயோகமாம்.

ஞாயிறில் உத்திரத்திரயம்(உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி), திருவோணம், புசம், மூலமும்; திங்களில் சோதி, புனர்பூசம், ரோகணி, மிருகசிரமும்: செவ்வாயில் உத்திரம், மூலமும்; புதனில் உத்திராடம், பூரத்திரயம் (பூரம், பூடாம், பூரட்டாதி) உத்திரமும்; வியாழனில் சோதி, மகம், அசுபதியும்; வெள்ளியில் அசுபதி, மகம், சோதி, மூலமும்; சனியில் மகம், சதயம், கார்த்திகை, சோதியும் வரில் அமிர்தயோகமாம்.

இதன்மேல் இராசி சரித்திரம் அறியும்படி திருவாய் மலர்ந்தருளினவன் தெய்வானையுடன் கூடிய சிங்கயேறு போன்ற சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

வார சரித்திரப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் நான்கிற்குக் கவி 39



## 5. இராசி சரித்திரப் படலம்

### *இரவி முதலானவர்களுக்கு ஆட்சி, உச்சம், நீசம், பகை, நட்பு வீடுகள்*

அரியலவன் இரவிமதிக் கருணனிர சதஞ்சேர்
அமரர்குரு சனியவர்கட் கவலம்வல மாக
இருபுறமும் ஒவ்வொரின்னே ரிதில்சனிசேய்க் கிடமற்
றெய்துதன்மற் றவர்க்காட்சி யில்லனுமற் றிலமாம்
ஒருவிடைபெண் கயல்கலைநண் டோர்துலைமுன் போனே
உச்சமிவைக் கேழவம்பாம் புக்குறவா டரியாம்
தெரிவையிலான் அலவனுச்சம் சிகிக்கிவைநேர் மிக்கு
தீதிலவர் பகைநீசம் தீர்க்குமின்மித் திரமே. 40

| கிரகம் | ஆட்சி | விடுதி வீடு | உச்சம் | நீசம் | பகை | நட்பு |
|---|---|---|---|---|---|---|
| சூரியன் | சிம்மம் | | மேடம் | துலாம் | மகரம் | விருச்சி |
| திங்கள் | கடகம் | | இடபம் | விருச்சி | இல்லை | தனுசு |
| செவ்வாய் | மேடம் | விருச்சி | மகரம் | கடகம் | தனுசு மீனம் | சிங்கம் |
| புதன் | கன்னி | மிதுனம் | கன்னி | மீனம் | ரிஷபம் துலாம் | மேஷம் |
| வியாழன் | தனுசு | மீனம் | கடகம் | மகரம் | மேஷம் விருச்சிக | கும்பம் |
| சுக்கிரன் | துலாம் | ரிஷபம் | மீனம் | கன்னி | கன்னி மிதுனம் | |
| சனி | கும்பம் | மகரம் | துலாம் | மேஷம் | சிங்கம் | ரிஷபம் |
| இராகு | கன்னி | --- | இடபம் கடகம் | விருச்சி | --- | மேடம் சிங்கம் |
| கேது | மீனம் | --- | விருச்சி மகரம் | ரிஷபம் | --- | துலாம் கும்பம் |

*1. உச்சத்திற்கு ஏழாம் வீடு நீசமாம்.*

*2. உச்சமும் நீசமும் ஒரே வீடாகில் இவர்களே தங்களில் பகையாம்.*

*3. நீசத்துக்கு அடுத்த வீடு நட்புவீடாகும்.*

திரசரமா நல்லதது வார்க்குமெதிர் விழிப்பாம்
சேய்க்கனையெட் டசிதனுக்குத் திரிதேசந் தேசிகனும்
குரநவறிப் பார்வையுமாம் கேந்திரமொன் றறல்வே
ஒருபதிதற் கடுத்ததெலாம் பணபரமற் றிவைபோல்
வரலதுவா போக்கிலிப மறைதலெட்டா தொடுக்க
மகவறங்கோ உபசெயநோய் வல்லணன்மா னமுமாம்
கரதிரமற் றுபயமுநேர் தகர்முதலாண் பெண்ணோர்
சாலலவக் கோண் கலைப்பின் சலப்பெயர்மற் றதுவே. 41

*திரமும், சரமும் மாறிப் பார்க்கும், உபயம் உபயத்தைப் பார்க்கும், சூரியாதி கேதுவரை சகலரும் ஏழாமிடத்தைப் பார்ப்பார்கள். செவ்வாய்க்கு நாலாம் இடமும், எட்டாம் இடமும்; சனிக்கு மூன்றாம் இடமும் பத்தாம் இடமும்; குருவுக்கு ஐந்தாம் இடமும் ஒன்பதாம் இடமும் அதிகப் பார்வை. ஒன்று, நான்கு, ஏழு, பத்து இடங்கள் கேந்திரம். மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டாம் இடங்கள் அபோக்லீபம். ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்கள் மறைவு. ஐந்து, ஒன்பதாம் இடங்கள்திரிகோணங்கள். மூன்று, ஆறு, பத்து, பதினோராம் இடங்கள் உபசெயம். மேஷம், கடகம், துலாம், மகரம் சரராசி. ரிஷபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் திர ராசி. மிதுனம், கன்னி, தனுசு, மீனம் உபயராசி. மேஷம், மிதுனம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம் இவை ஆறும் ஆண் ராசி அல்லது ஓச ராசி (ஓஜராசி) ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இவை ஆறும் பெண் ராசி அல்லது யுக்ம ராசி. கும்பமும் கடகக்கோணும் மகரத்தில் பின்னரையும் சல ராசி (ஜலராசி). மேடக்கோணும் ரிஷப-கன்னியும்; மிதுன-துலாமும்; மகரத்தில் முன்னரையும் சுஷ்கராசி என்றவாறு.*

சலமலைகான் விளைபுனந்தண் உலையொருஊர் வயல்கற்
சாரனக ரோடமொடு மாவணப்பால் கூவம்
கொலைபுரிபோர்க் களமொடுவூர்க் கொல்லையலைக் கரையாம்
குடமுதற்றேள் சேல்பசைபெண் கோற்கோண்மான் கறுப்பாம்
அலவன்விடைப் பாண்டரிக்கோ ணரத்தவைமீ னமுஞ்சால்
ஆனுமட மான்துலையுய் யாழரிதேள் களையும்
சிலையவனா லேகாற்கிரு கால்கால் காலே
சேல்வேல்கண் ணாயமிவை மாரகத்தின் இடமே. 42

கும்பத்திற்கு சலமும், மீனத்துக்கு சமுத்திரமும், மேஷத்துக்கு காடும், இடபத்திற்கு விளைபுனமும், மிதுனத்துக்குச் சோலையும்- பட்டணமும், கடகத்துக்கு வயலும், சிங்கத்துக்கு மலைச்சார்பும், கன்னிக்கு நகரமும், துலாத்துக்கு ஆறோட்டமும் - கடைவீதியும், விருச்சிகத்துக்குக் கிணறும், தனுசுக்குப் போர்க்களமும், ஊரடுத்த கொல்லையும், மகரத்துக்கு சமுத்திரக் கரையும் தானமாம். விருச்சிகம், மீனம் பச்சை; கன்னி, துலாக்கோல், மகரம் கருப்பு; இடபம், கடகம் வெளுப்பு; சிங்கக்கோள் சிவப்பாம். மேடம், மீனம் $4\frac{1}{4}$ நாழிகை; கும்பம், இடபம் $4\frac{3}{4}$ நாழிகை; கன்னி, துலாம் 5 நாழிகை, மிதுனம், சிங்கம், விருச்சிகம், மகரம் $5\frac{1}{4}$ நாழிகை, தனுசு, கடகம் $5\frac{1}{2}$ நாழிகை. இரண்டு, ஏழு, பதினோராம் இடங்கள் மாரகஸ்தானங்கள் என்றவாறு.

இடபமரி யாடலவன் தேள்கிவையாம் சால்கோல்
எடுத்துடைய ரொருமீன்வால் வவ்வுமொரு மீன்சேன்
மடவரனெற் கதிரனற்கை வைத்தவண்மா னிடமாய்
வரல்சிலையில் கரமரைக்குக் கீழ்ப்புரவி உருவம்
கடலினுடல் அமிழ்ந்திடக்கம் முறுப்பேறல் கலையாழ்
காரிகையோர் புருடனுடன் கலப்புறல்யாழ் கதையாய்
விடையரிக்கோ னாற்கான்மீன் மான்பறவை குளிர்தேள்
வெருகான்மற் றுபயமைநே ரொற்றைமற்ற தெனுமே. 43

இடபம், சிங்கம், மேடம், கடகம், விருச்சிகம் இவைக்கு இவையே வடிவம். கும்பம் - கும்பம் சுமந்த

புருடன். துலாம் - துலாக்கோல் பிடித்த புருடன். மீனம் - ஒருமீன் வாலை ஒரு மீன் கவ்விக்கொண்டு இரட்டை மீனாகச் சஞ்சரிப்பது. கன்னி - கன்னிகையாகிய கதிர் குலையும், அக்கினியும் கையில் வைத்திருப்பவள். தனுசு அரைக்குமேல் புருடனாகக் கையில் பிடித்த வில்லுமாகி அரைக்குக்கீழ் குதிரை உருவமாக இருப்பது. மகரம் - உடல் முழுவதும் சமுத்திரத்தில் அமிழ்ந்திடக்கிடக்கச் சிரசே ரூபமாகக் கடல் தீரத்தில் சஞ்சரிப்பது. மிதுனம் - வீணை பிடித்த பெண்ணும் கதை பிடித்த புருஷனுமாகச் சதாமைதுன சம்பந்தமாக இருப்பது. இவை இராசி வடிவமாம். இடபமும் - சிங்கக்கோளும் நாலு காலுடையன. மீனமும் - மகரமும் இறகே காலாகச் சஞ்சரிக்கும். கடகம் - விருச்சிகம் வெகு காலையுடையன. மிதுனம் - கன்னி - துலாம் - கும்பம் இவை நான்கு இரண்டு காலை உடையன. மேஷம், மிதுனம், சிங்கம், துலாம், தனுசு, கும்பம் இவை ஆறும் ஒற்றை இராசிகள். ரிஷபம், கடகம், கன்னி, விருச்சிகம், மகரம், மீனம் இவை ஆறும் இரட்டை ராசிகள்.

ஒற்றையரி யானலவன் தேளொருமற் றுபயம்
 உருமீன்விற் சால்விடைக்கோ னுறங்குலநான் காகும்
சிற்றிடைகோல் சேலாடுக் கான்முதல்தேள் முதலாய்ச்
 சேவயம்யாழ்த் தொருகுடைத்தா தும்மூலம் சீவன்
சொற்றகர்நேர் நேரக்கணன் தாதைவேளற் பகன்மற்
 றுஞ்சொலுவா ரரிமுதனான் குங்குடமும் சுறாமீன்
மற்றதுமுன் னிடைவெரிநாந் தேள்சிலைமுச் சந்தி
 வரிலதுகெண் டாந்தமைநேர் கழிதல்செய் தல்வரவே. 44

அ. இராசிகளின் உருக்கள் :

*(1) சிங்கம், இடபம், கடகம், விருச்சிகம், மேடம் இவை ஒற்றித்த உருவமாம்.*

*(2) மிதுனம், கன்னி, துலாம், தனுசு, மகரம், கும்பம், மீனம் இவை இரட்டித்த உருவமாம்.*

**ஆ. இராசிகளின் குலங்கள் :**

கடகக்கோள் பிராமணகுலம், இடபக்கோள் சூத்திரகுலம், மேடக்கோள் க்ஷத்திரய குலம், மிதுனக்கோள் வைசியகுலம்.

**இ. இராசிகளின் வீதிகள் :**

(1) கன்னி, துலாம், மீனம், மேடம் இவை இடபவீதி.
(2) இடபம், மிதுனம், கடகம், சிங்கம் இவை மேடவீதி. இவ்வீதியே சத்திரமுமாம் என்ப.

**ஈ. தாது, மூல, சீவ இராசிகள் :**

1. மேஷம், கடகம், துலாம், மகரம் இவை தாது இராசிகள்.
2. இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இவை மூல இராசிகள்.
3. மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை சீவ இராசிகள்.

**உ. இராசிகள் பார்வைகள் :**

1. தாது இராசிகளுக்கு பதினோராம் பார்வையாம்.
2. மூல இராசிகளுக்கு ஒன்பதாம் பார்வையாம்.
3. ஜீவ இராசிகளுக்கு ஏழாம் பார்வையாம்.

**ஊ. இராசிகளின் காலங்கள் :**

1. மேடம், கடகம், துலாம் மகரம் இவை இரவு இராசிகள்.
2. இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இவை பகல் இராசிகள்.

**எ. சந்திர இராசிகள் :**

1. மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை சந்திர ராசிகள்.

ஏ. இராசிகளின் உதயம் :

*1.* சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், கும்பம் இவை சிரோதயம்.

*2.* மகரம், மீனம் குறுக்குதயம்.

*3.* மேடம், இடபம், கடகம், தனுசு பிரிஷ்டோதயமாம்.

ஐ. இராசி கெண்டாந்தம் :

கடகக்கோள் அந்தியமும் சிங்கக்கோள் ஆதியும் கெண்டாந்தம்.

ஒ. திரிகால இராசிகள் :

*1.* மேடம், கடகம், துலாம், மகரம் இவை இறந்தகால இராசிகள்.

*2.* இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இவை நிகழ்கால இராசிகள்.

*3.* மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை எதிர்கால இராசிகள் என்றவாறு.

அல்லிறைநேர் சாலரைமுக் கால்கதையீ றாடா
மரிபெணந்த முக்காலான் கான்மைவிற்றேள் யாழாம்
வில்லசங்கார் கோலரைசா லீறாம்தேள் விற்கோன்
மீன்கடைசேல் பெண்மான்கால் விடையரையாம் இரவி
இல்லொருமுக் கால்கால்சா றுலையீறான் குளிராம்
ஈறுமுக்கால் கான்மான்சேல் இடபமரை யரியாழ்
வல்லிகலை தேண்மீனா மற்றவருந் தறிக்கால்
வான்குபின்னேர் முகமின்னாள் மனைகடைமுன் பவைக்கே.

சந்திரனுக்குக் கும்பத்தில் இரண்டாம் கால், மிதுனம் மூன்றாம் கால், மேஷம் நான்காம் காலும்; செவ்வாய்க்குச் சிங்கம், கன்னி, நான்காம் கால், இடபம் மூன்றாம் கால்; மேடம், தனுசு, விருச்சிகம், மிதுனம் முதல் காலும்; புதனுக்கு தனுசு, மேடம், கடகம், துலாம் இரண்டாம் கால்; கும்பம்

நான்காம் காலும்; வியாழனுக்கு விருச்சிகம், தனுசு, துலாம், மீனம் நான்காம் கால்; மீனம், கன்னி, மகரம் முதற்கால்; இடபம் இரண்டாம் காலும்; சுக்கிரனுக்குச் சிங்கம், மேடம் மூன்றாம் கால்; கும்பம், துலாம் முதல்கால்; இடபம், கடகம் நான்காம் காலும்; சனிக்கு மகரம் நான்காம் காலும்; மீனம் மூன்றாம் கால்; இடபம் முதல் கால்; சிங்கம், மிதுனம், கன்னி, மகரம், விருச்சிகம், மீனம் இரண்டாம் காலும்; இரவிக்கு கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், கடகம் மூன்றாம் கால், கடகம், சிங்கம் முதல்கால்; மிதுனம் நான்காம் காலும் தறிகால் இடமாம். இரவி நின்ற இராசி அதோமுக இராசி. அதற்குப் பின்புள்ள இராசி ஊர்த்தமுக இராசி. அதற்கு முன்புள்ள இராசி புறமுக இராசி அல்லது திரியங்கமுக இராசி. மற்றப் பின்வரும் இராசிகளையெல்லாம் முறையே ஊர்த்தமுக இராசி, அதோமுக இராசி, புறமுக இராசி அல்லது திரியம்முக இராசி என்று வைத்து நேர் நடத்துக என்றவாறு.

**கடைநான்கை முதன்முதலுண் பதுராசிக் கானேர்க்**
**காம்விழிப்புக் குரைப்பதுமிப் படிகார்பேர்க் குளதா**
**நடவாகி யுதயமிரண் டரைநாழி கைநேர்**
**நடத்திநடப் பதைக்கவிப்பா நடப்பிருப்பூ டுதலோ**
**திடல்சேய்நோய் களிகேடு லெங்கனமை துனநித்**
**திரையூண்மை நேரிவைசந் திரகெதிக்கா மிருண்மற்**
**றடைமீன்சால் அரிமுதல்நான் கும்மலவுங் குருடா**
**மசம்வெளியுள் இடையெனநேர் அறைகுவர்மா தவனே.46**

மேடத்தின் முதல்கால் மீனத்தின் நான்காம் காலையுண்ணும். இரண்டாம் கால் மூன்றாம் காலையுண்ணும். மூன்றாம் கால் இரண்டாம் காலையுண்ணும். நாலாம் கால் முதற்காலையுண்ணும். இந்தப்படி இராசிதோறும் ஆதியந்தமாக நடத்துவது இராசி ஊண்.

மேஷத்தின் முதல்கால் கும்பத்தின் நாலாம் காலை ¼ பார்வை பார்க்கும். இரண்டாம் கால் மூன்றாம் காலை ½ பார்வை பார்க்கும். மூன்றாம் கால் இரண்டாம் காலை ¾

பார்வை பார்க்கும். நாலாம் கால் முதல் காலை முழுப்பார்வை பார்க்கும்.

ரிஷபத்தின் முதல்கால் மகரத்து நான்காம் காலை ¼ பார்வை பார்க்கும். இரண்டாம் கால் மூன்றாம் காலை ½ பார்வை பார்க்கும். மூன்றாம் கால் இரண்டாம் காலை ¾ பார்வை பார்க்கும். நாலாம் கால் முதல் காலை முழுப்பார்வை பார்க்கும்.

மிதுனத்தின் முதல்கால் தனுசின் நாலாம் காலை ¼ பார்வை பார்க்கும். இரண்டாம் கால் மூன்றாம் காலை ½ பார்வை பார்க்கும். மூன்றாம் கால் இரண்டாம் காலை ¾ பார்வை பார்க்கும். நாலாம் கால் முதல் காலை முழுப்பார்வை பார்க்கும். இந்தப்படி மற்றத் தாதுமூல இராசிகளுக்கும் சர, ஸ்திர, உபய இராசிகளுக்கும் பார்வை அறிந்துகொள்க.

*(2)* உதய இராசி தொட்டு 2½ நாழிகை நேராக நடப்பு இராசியைக் கவிப்பது இராசிக் கவிப்பாம்.

*(3)* மேடத்தில் சந்திரன் நடை, இடபத்தில் இருப்பு, மிதுனத்தில் பூசம், கடகத்தில் வேதம் ஓதல், சிங்கத்தில் புத்திரப் பேறு, கன்னியில் ரோகம், துலாத்தில் கெர்ச்சிதம், விருச்சிகத்தில் கேடு, தனுசில் லெங்கனம், மகரத்தில் மைதுனம், கும்பத்தில் நித்திரை, மீனத்தில் பொசிப்பு இவை சந்திர கெதியாம்.

*(4)* சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், கும்பம், மீனம் இவை இராக்குருடு.

*(5)* மேடம், இடபம், மிதுனம், கடகம், தனுசு, மகரம் இவை பகல் குருடு.

*(6)* மேடம், கடகம், துலாம், மகரம் இவை வெளி இராசி.

*(7)* இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இவை உள் இராசி.

*(8)* மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை இடை இராசி.

*நவவர்க்கம்*

மாதுவிது மற்றுரவி மாறுமிரண் டோரை
வருவததன் முக்கோண திரேகாண மதமாம்
போதுபுரு டன்னேர்மற் றதற்கேழா மொருவாய்
புரவிமுதற் கானேரொன் பதுநவம்பெண் புருடர்க்
கோதுதநேர் தசமதுதொட் டுரைத்தறுவா தஞ்சேர்
ஊழ்அதன்பொன் மால்சுகனுக் குண்மகனெட் டேழைந்சு
தீதுமுத னேரிடமற் றெய்துதறீங் கிசமாம்
இதுபோற்சட் டியாங்கிசத்துக் கோரறுப தியல்பே. 47

ஒரு இராசியை இரண்டாகப் பகிர்வது ஓரை. ஸ்தீகளுக்குச் சந்திர ஓரை முன்னும், புருட இராசிக்குச் சூரிய ஓரை முன்னுமாம். ஒரு இராசியை மூன்றாய்ப் பகிர்வது திரேக்காணம். இதற்கு எந்த இராசியானாலும் முந்தினக் கூறு அந்த இராசித் திரேக்காணமாம். இரண்டாம் கூறு அஞ்சாம் இராசித் திரேக்காணமாம். மூன்றாம் கூறு ஒன்பதாம் இராசித் திரேக்காணமாம்.

*(2)* ஒரு இராசியை ஏழாகப் பகிர்வது சப்தமமாம். நாலாம் புருட இராசிக்கு அது முதல் நேரும், ஸ்திரீ இராசிக்கு ஏழாம் இராசி தொட்டும் நேர் நடத்துக.

*(3)* ஒரு இராசியை ஒன்பதாகப் பகிர்வது நவாம்சம். இதற்கு அசுபதி முதற்கால் தொட்டு மேடம் முதல் வைத்து நேர் நடத்துக.

*(4)* ஒரு இராசியைப் பத்தாகப் பகிர்வது தசாம்சம். புருட இராசிக்கு அதுமுதல் நேரும், ஸ்திரீ இராசிக்கு ஒன்பதாம் இராசி தொட்டும் நேர் நடத்துக.

*(5)* ஒரு இராசியைப் பன்னிரண்டாகப் பகிர்வது துவாதசாம்சம். இதற்கு இந்த இராசி தொட்டுப் பன்னிரண்டும் நேர் நடத்துக.

*(6)* ஒரு இராசியை முப்பதாகப் பகிர்வது திரிம்சாம்சம். இதற்குச் செவ்வாய்க்கு ஐந்திற்கும், சனிக்கு ஐந்திற்கும், வியாழனுக்கு எட்டிற்கும், புதனுக்கு ஏழிற்கும், சுக்கிரனுக்கு ஐந்திற்குமாக நேர் நடத்துக. இவை புருட இராசியாகில் நேராகவும், ஸ்திரீ இராசியாகில் விகிர்தியுமாக நடத்துக.

*(7)* ஒரு இராசியை அறுபதாகப் பகிர்வது சஷ்டியாம்சம். இது ஒற்றைக்கு நேரும், இரட்டைக்கு விகிர்தியுமாக நடத்துக என்றவாறு.

### *சஷ்டியாம்சம்*

கோரமவுண் டேவரள கைக்குமன்றூற் கிரியை
    கோடையின சனக்கோபம் கொடுவிடந்தீ கோதற்
றார்தன்மய லாந்தகம்பி ரேதபுரி பாவ
    மதிதேவம் கணநாதம் மெமரவம் மிரதம்
ஏர்மிருது கோமளம்ப்ர பலம்வாச மீசம்
    இயம்பிறைதி காம்பரம்வா னிறைகவிதை நாசம்
பாரதிப மலர்சனிசேய் சதமமிர்த பூரணம்பான் மதியே. 48

*1.* முதல் அங்கிஷம் கோரம்
*2.* இராக்கதம்
*3.* தேவம்
*4.* குபேரம்
*5.* இராக்கதயோகம்
*6.* கின்னரம்
*7.* இட்டகுலகோரம்
*8.* விடம்
*9.* அக்கினி
*10.* அகங்கம்
*11.* மாயாந்தகம்
*12.* பிரேதபுரிபாவம்
*13.* அதிதேவம்
*14.* கணேசம்
*15.* காலன்
*16.* சர்ப்பம்
*17.* அமிர்தம்
*18.* அபிராமம்
*19.* மிருது
*20.* கோமளம்
*21.* பிரபலம்
*22.* சுவாசம்
*23.* ஈசம்
*24.* வாகீசம்
*25.* திகம்பரம்
*26.* தேவேந்திரம்
*27.* கவிதை
*28.* நாசம்
*29.* பூபதி
*30.* கமலம்
*31.* சனீசுதம்
*32.* பவர்த்தகம்
*33.* அக்னிகோரம்
*34.* எமகண்டகம்
*35.* சுதம்
*36.* அமிர்தபூரணம்
*37.* சந்திரம்

## சஷ்டியாம்சம், தேவசாம்சப் பெயர்கள்

மதிமயக்கம் பாக்கியங்கே ணாசம்வெகு மானம்
வங்கிசக்கே டுற்பாதம் மறலியுரு மகிழ்மாய்
வதிதளமற் பகடசுமு கந்தெஷண குரூர
மாதண்ட மமலமதி சுபமலத தீதம்
ததிமுனரோ ததிசுழல்சந்த் ராங்கமறு தற்காம்
சாற்றுசுராங் கிஷம்பாரி சாதமொடுத் தமம்பின்
னுதிதருகோ புரமிருகா சனம்பாரா வதம்வா
னுலகம்வை சேடிகமை ராவதமிவைக் குளதே. 49

| | | |
|---|---|---|
| *38.* மதிமயக்கம் | *46.* மிருகம் | *54.* நிருமலம் |
| *39.* சௌபாக்கியம் | *47.* சுசீதளம் | *55.* சுபம் |
| *40.* குலநாசம் | *48.* திமிரம் | *56.* அசுபம் |
| *41.* முக்கியம் | *49.* திவா | *57.* அதிதம் |
| *42.* வங்கிசநாசம் | *50.* சந்திரமுகம் | *58.* பயோததி |
| *43.* உத்பாதம் | *51.* பிரதெட்சணம் | *59.* சுழல் |
| *44.* காலரூபம் | *52.* காலக்கினி | *60.* சந்திரதேசம் |
| *45.* சௌமியம் | *53.* தண்டம் | |

இவை அறுபதும் சஷ்டியாம்சப் பெயர்கள்.

| | |
|---|---|
| *1.* முதல் அம்சம் பாரிசாதம் | *5.* பாராவதம் |
| *2.* உத்தமம் | *6.* தேவலோகம் |
| *3.* கோபுரம் | *7.* வைசேடிகம் |
| *4.* சிங்காசனம் | *8.* ஐராவதம். |

இவை எட்டும் தேவதாம்சப் பெயர்களாம் என்றவாறு.

வைப்புதய முதலறுப தங்கிஷமீ றளவும்
வருஞ்சுபமான் டாய்த்தேவர்ங் கிஷநேர் வருமால்
இப்பருதி யிற்சாற்கோள் நடுமீன்கோள் மான்பின்
இவைக்கெருவை கேழன்மற்ற தரவூணி ரிருபான்

அப்புரமுக் கோணமது கரேசமென லாமீன்
அத்தினம்பொன் விற்றமைய நான்கலையார் அறிவே
டப்பினவெட் டிவைகதிர்கா மங்கதிர்நே ரிவர்கள்
தம்மிலசு பஞ்சுபமிவ் வாதிபஞ்சாற் றுதலே. 50

பூவோதய இலக்கணம் முதல் சட்டியாங்கிசம் வரைக்கும் உள்ள ஒன்பது வர்க்கத்தில், இரண்டு சுபவர்க்கம் ஏறில் பாரிசாதாம்சம். மூன்று சுபவர்க்கம் ஏறில் உத்தமாம்சம். நான்கு சுபவர்க்கம் ஏறில் கோபுராம்சம். ஐந்து சுபவர்க்கம் ஏறில் சிங்காசனாம்சம். ஆறு சுபவர்க்கம் ஏறில் பாராவதாம்சம். ஏழு சுபவர்க்கம் ஏறில் தேவலோகாம்சம். எட்டு சுபவர்க்கம் ஏறில் வைசேடிகாம்சம். ஒன்பது சுபவர்க்கம் ஏறில் ஐராவதாம்சம்.

சிங்கம், மிதுனம், துலாம் இவற்றின் நடுக்கூறு, கழுகு உண்ணும். மீனம், மகரம் இவற்றின் பிற்கூறு பன்றி உண்ணும். இவை இராசித் துற்பொசிப்பாம்.

ஜென்ம லக்கன திரேக்காணத்துக்கு இருபத்து இரண்டாம் திரேக்காணம் கரேசமாம்.

மீனத்துக்குக் கதிர் 27, தனுசு, கன்னிக்கு 11, இடபம், மகரத்துக்கு6, சிங்கத்துக்கு7, மேடம், மிதுனம், கடகம், துலாம், விருச்சிகம், கும்பம் இவற்றிற்கு எட்டாம் இராசியாதிபதி அறிந்து இராசிக்கு அசுப-சுபம் சொல்லுக என்றவாறு.

## புதனோட்டம்

சாற்புதனோர் நன்நான்காய்த் தபனனுடன் முன்பின்
தரித்தல்சர முதற்கதுவும் தந்தைதனை யருநெ
ராரபுகல்வ தங்கிசமை நேர்பாடல் கர்னா
டகமூவர் கோளங்கோன் மலையசிந்தா சால
மேற்பதெழில் கோசல்முன் னோர்முடிதூ செமன்க
ணெய்தல்புட் கராங்கிசமிப் பாகைசிகி யிற்கோ
ணீற்புரமி ருத்துபய வீறுலினிக் கானோர்
நிற்பனிவ னில்லதிப னிதனனனித் தியனே. 51

கும்பம், மீனம், மேடம், இடபம் இந்த நான்கு இராசியிலும் புதன் இரவியுடன் கூடி நடப்பன். மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, இவை நான்கிலும் இரவிக்கு முன் நடப்பன். துலாம், விருச்சிகம், தனுசு, மகரம் இவை நான்கினும் புதன் இரவிக்குப் பின் நடப்பன். சரத்துக்கு அதுமுதல் நேரும், திரத்துக்கு ஒன்பதாம் இராசி முதல் நேரும். உபயத்துக்கு ஐந்தாம் இராசி முதல் நேருமாக நடத்துவது இராசியாம்சமாம். மேடத்துக்குத் தேசம் பாடலம். இடபத்துக்குக் கர்னாடகம், மிதுனத்துக்குச் சேர நாடு, கடகத்துக்குச் சோழ நாடு, சிங்கத்துக்குப் பாண்டிய நாடு, கன்னிக்குக் கேரளம், துலாத்துக்குக் கொல்லம், விருச்சிகத்துக்கு மலையம், தனுசுவுக்குச் சிந்துதேசம், மகரத்துக்குப் பாஞ்சாலம், கும்பத்துக்கு யவனம், மீனத்துக்குக் கோசலமாம்.

மேடம், சிங்கம், தனுசில் பாகை இருபத்து ஒன்றும், இடபம், கன்னி, மகரத்தில் பாகை பதினான்கும், மிதுனம், துலாம், கும்பத்தில் பாகை இருபத்து நான்கும், கடகம், விருச்சிகம், மீனத்தில் பாகை ஏழுமாக நடத்துவது புட்கராம்சமாம்.

கேது நின்ற இராசித் திரிகோண உபயாந்தம் அவமிருத்துவாம். இவன் இக்காலும் நேர் நிற்பன். இவன் நின்ற இராசியாதிபதிக்கு நிதனன் என்றும் அனித்தியன் என்றும் பெயராம் என்றவாறு.

நித்திரைமா சுணமானேர் மூன்றிவைபெண் ணிடமாய்
நேர்கமுகம் களமகடு நிகம்பமவ்வா விவைநேர்
வைத்திவைபோல் வில்லவல மைவலமு மாக
வகுத்தல்பகற் கிவைவிகிர்திப் பேர்வரன்மற் றதற்கா
மித்தலநே ரோரையள வெய்துதலச் சணிக
மீதினனுக் கிடஞ்சிலைநே ரிவற்கெதிர்ந்து வுக்கா
மத்தனுநேர் றிற்றனடை இருத்தல்கெர்ப்பந் துவார
மதுவாந்தகர் முதனேரதி பெலப்பேருக் காமே. 52

## சயன இராகு

*(1)* மகரத்தில் சிரமும், கும்பத்தில் முகமும், மீனத்தில் கண்டமும், கன்னியில் வயிறும், சிங்கத்தில் யோனியும், கடகத்தில் வாலுமாகவும், தனுசில் சிரமும், விருச்சிகத்தில் முகமும், துலாத்தில் கண்டமும், மேடத்தில் வயிறும், இடபத்தில் யோனியும், மிதுனத்தில் வாலுமாகவும் பகல் காலத்தில் இராகு சயனித்திருப்பான்.

*(2)* கடகத்தில் சிரமும், சிங்கத்தில் முகமும், கன்னியில் கண்டமும், மீனத்தில் வயிறும், கும்பத்தில் யோனியும், மகரத்தில் வாலுமாகவும், மிதுனத்தில் சிரசும், இடபத்தில் முகமும் மேடத்தில் கண்டமும், துலாத்தில் வயிறும், விருச்சிகத்தில் யோனியும், தனுசில் வாலுமாகவும் இரவு காலத்தில் இராகு சயனித்திருப்பான்.

*(3)* மகரம், கும்பம், மீனம், கன்னி, சிங்கம், கடகம், தனுசு, விருச்சிகம், துலாம், மேடம், இடபம், மிதுனம் இந்த இராசிகளில் நேராய் 2½ நாழிகையாக வைத்து நடத்துவது **சணிக இராகு** *(க்ஷணிக ராகு)*.

*(4)* தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம், மிதுனம், இடபம், மேடம், மிதுனம், கும்பம், மகரம் இந்த இராசிகளில் நேராக 2 நாழிகை வைத்து நடத்துவது **சணிகாதித்தன்** *(க்ஷணிகாதித்தன்)*.

*(5)* மிதுனம், இடபம், மேடம், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம் இந்த இராசிகளில் நேராக 2½ நாழிகை வைத்து நடத்துவது **சணிக சந்திரன்** *(க்ஷணிக சந்திரன்)*.

*(6)* தனுசு, மீனம், மிதுனம், கன்னி இவை நிற்கும் இராசிகள்.

*(7)* மகரம், மேடம், கடகம், துலாம் இவை நடக்கும் இராசிகள்.

*(8)* கும்பம், இடபம், சிங்கம், விருச்சிகம் இவை இருக்கும் இராசிகள்.

*(9)* தனுசு, மீனம், மிதுனம், கன்னி இவை கர்ப்ப இராசிகள்.

*(10)* மகரம், மேடம், கடகம், துலாம் இவை வார இராசிகள்.

*(11)* கும்பம், இடபம், சிங்கம், விருச்சிகம் இவை வான்மிய இராசிகள்.

*(12)* மேடம், கடகம், துலாம், மகரம் இவை துர்ப்பல இராசிகள்.

*(13)* இடபம், சிங்கம், விருச்சிகம், கும்பம் இவை பல இராசிகள்.

*(14)* மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவை அதிபல இராசிகள் என்றவாறு.

அதிபதிப்பேர்க் கவரவருக் கமைத்தமனைக் கதுவாம்
அலவனுக்கே றந்தணனில் அரிக்கெனலங் கதிபன்
தனநிதிக்கெ னிற்சகட யோகமெனல் ஏழேழ்
பானுவிது வல்லவர்கள் பற்றல்சம சத்த
நிதயரியுற் றிடுநாண்மா மகபேரிந் திரவி
நிற்பதொரு ராசியில்ரண் டுதரநெடு மாதம்
புதனிடபத் திறைநடுவம் புயனுறிற்பேர் இவைபேர்
புகல்வரிதன் மேற்றிதிப்பேர்க் குளவியல்போ துதலே. 53

*(1)* மேட விருச்சிகமும், இடப துலாமும், மிதுன கன்னியும், கடக இடபமும், சிங்க தனுசும், தனுசு மீனமும், மகர கும்பமும் ஏகாதிபத்தியமாம்.

*(2)* குருவிக்கு 6, 8, 12ல் மதி நிற்கில் சகட யோகம்.

*(3)* இரவி, மதி நீங்கலாக மற்றவர்கள் ஏழுக்கு ஏழாக வரில்சமசப்தமம்.

*(4)* சிங்கத்தில் குரு இருக்கும் நாள் மாமககாலம்.

*(5)* இரவி நிற்கும் இராசியில் மதி இரண்டுதரம் வரில் மலமாதம்.

*(6)* புதன், சுக்கிரனுக்கு இடையில் இரவி நிற்கில் பானு மத்தியம்.

இதன்மேல் திதி சரித்திரம் சொல்லுவோம் என்றவாறு.

ராசி சரித்திரப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் ஐந்திற்குக் கவி 53



## 6. திதி சரித்திரப் படலம்

### *திதி தேவதை, காளகூட யோகம்*

திதிக்கதிபர் துர்க்கைவிசு வத்ததிபன் மதிமாச்
சிரசினன்றே விறைகுகனூழ் செல்விசொற்றாய் சீற்றத்
துதித்தவனம் பிகைமால்கம் முருத்திரனீர் தனத
னூதைகன லவுணர்சுர ருலகுதையன் முனிவோர்
அதித்தெருண்ம னமன்பொன்ன சிதன்சிதனந் தீசன்
ஐவரின்மற் றவர்பூர்வ பக்ஷமுதற் வைநோ
விதிப்பர்சுப தினத்தினனேர் பஞ்சமிதொட் டுடனே
மேவிலிதற் கோதல்கொடு விடகூடப் பெயரே. 54

*பூர்வபக்ஷத்தில்,*

| | | | |
|---|---|---|---|
| *1. பிரதமை* | *- துர்கை* | *9. நவமி* | *- சரசுவதி* |
| *2. துதியை* | *- விசுவதேவன்* | *10. தசமி* | *- வீரபத்திரன்* |
| *3. திரிதியை* | *- சந்திரன்* | *11. ஏகாதசி* | *- பார்வதி* |
| *4. சதுர்த்தி* | *- விக்னேசுவரன்* | *12. துவாதசி* | *- விட்டுணு* |
| *5. பஞ்சமி* | *- தேவேந்திரன்* | *13. திரயோதசி* | *- பிரம்மா* |
| *6. ஷஷ்டி* | *- சுப்ரமணியன்* | *14. சதுர்த்தசி* | *- உருத்திரன்* |
| *7. சத்தமி* | *- சூரியன்* | *15. பௌரணை* | *- வருணன்* |
| *8. அட்டமி* | *- இலட்சுமி* | | |

*அமரபட்சத்தில்,*

| | | | |
|---|---|---|---|
| *1. பிரதமை* | *- குபேரன்* | *9. நவமி* | *- நமன்* |
| *2. துதியை* | *- வாயு* | *10. தசமி* | *- வியாழன்* |
| *3. திரிதியை* | *- அக்கினி* | *11. ஏகாதசி* | *- சனி* |
| *4. சதுர்த்தி* | *- அசுரர்* | *12. துவாதசி* | *- சுக்கிரன்* |
| *5. பஞ்சமி* | *- தேவர்கள்* | *13. திரயோதசி* | *- நந்திஸ்வரன்* |
| *6. ஷஷ்டி* | *- அங்காரகன்* | *14. சதுர்த்தசி* | *- மகேசுவரன்* |
| *7. சத்தமி* | *- முனிவோர்* | *15. அமாவாசி* | *- சதாசிவன்* |
| *8. அட்டமி* | *- சேடன்* | | |

*இவை திதி தேவதைகளாம்.*

பஞ்சமியில் ஞாயிறு அத்தமும், சஷ்டியில் திங்கள் திருவோணமும், சத்தமியில் செவ்வாய் அசுபதியும், அட்டமியில் புதன் அனுசமும், நவமியில் வியாழன் பூசமும், தசமியில் வெள்ளி ரேவதியும், ஏகாதசியில் சனி ரோகணியும் வரில் காளகூட யோகமாம் என்றவாறு.

## *திதித்தீது*

ஓதிலைந்தே ழும்இரண்டெட் டும்மாறொன் பானெட்
டுமிதிலா றற்றொருபா னுற்றதும்பத் தோடொன்
றாதிகபொன் பானேழும் ஆறிரண்டோர் நான்கும்
ஆறேக தசமுமல்லா தயனிறைவும் அடுப்பேழ்
ஈதுமனு சம்பதின்மூன் றும்இருமூன் றரியும்
இரேவதியெட் டைந்தனவி ரண்டுடையும் இவைநேர்
பூதலநந் தணனேர்வா ரத்துறிலித் திதியும்
பூரணைபேர்க் காதியுமீ றும்புகலி லவமே. 55

திதி தீது அறியும்படி : பஞ்சமி, சப்தமி, அட்டமி, துதிகையும்; நவமி, அட்டமி, சட்டியும்; தசமி, அட்டமி, நவமியும்; நவமி, சப்தமி, ஏகாதசியும்; சதுர்த்தி, துவாதசி, ஏகாதசி, சட்டியும் இதுவுமல்லாமலும் ரோகணி-பூரணையும்; பரணி-சத்தமியும், அனுஷம்-திரையோதசியும், திருவோணம் -சட்டியும், ரேவதி-அட்டமியும், கார்த்திகை-பஞ்சமியும், சித்திரை-துதிகையுமாய்த் திதியும் இத்தினத் திதி செவ்வாய் வாரம் முதல் நேர்வரில் திதி தீதென்ப. இதன் மேலும் நத்தையும் இருத்தையும் ஆகாதென்பன் என்றவாறு.

(செவ்வாயில் பஞ்சமி, சத்தமியும்; புதனில் அட்டமி, துதிகையும்; வியாழனில் நவமி, அட்டமி, சட்டியும்; வெள்ளியில் தசமி, அட்டமி, நவமியும்; சனியில் நவமி, சத்தமி, ஏகாதசியும்; ஞாயிறில் சதுர்த்தி, துவாதசியும்; திங்களில் ஏகாதசி, சஷ்டியும் வரில் தீதாம். இவை அல்லாமலும் செவ்வாயில் ரோகணி-பூரணையும், புதனில் பரணி-சத்தமியும், வியாழனில் அனுசம்-திரயோதசியும்,

வெள்ளியில் திருவோணம்-சஷ்டியும், சனியில் ரேவதி-அட்டமியும், ஞாயிறில் கார்த்திகை-பஞ்சமியும், திங்களில் சித்திரை-துதியையும் வரில் தீதாம். நந்தையும் இருத்தையும் ஆகாது என்றவாறு என்பது இப்பாடலுக்கு அச்சு நூலில் கூறப்பட்டுள்ள உரையாகும்.[1])

## யோகினி நிலை, பூமி-சுக்கிர நிலை, திதி விஷநிலை

ஈரேழும் பத்திரண்டு மெட்டுமொன்றொன் பானு
மேகதசமூன் றும்பதிமூன் றோடைந்திவ வீறு
மாறீரேழ் வாயுமுதல் வைத்ததுதொட் டுள்ள
தாந்திசைநேர் மற்றதொன்றொன் றையிரண்டப் படிநேர்
மாறாசை வான்புவிபின் னான்முனெட்டுப் பின்னேழ்
வளர்ந்ததந்நால் பின்றிரிமுன் னெகதசம்பின் றசநேர்
கூறாசை சாமமிவை விஷமதுயோ கினிப்பேர்
கூச்சிதன்பின் வலமிடம்பின் கூட்டுதனற் றிதியே. 56

உவாச்சத்தமி வடமேற்கிலும்; தசமி, துதியை வடக்கிலும்; அட்டமி வடகிழக்கிலும், நவமி, பிரதமை கிழக்கிலும்; ஏகாதசி, திரிதிகை தென்கிழக்கிலும்; திரையோதசி, பஞ்சமி தெற்கிலும்; துவாதசி, சதுர்த்தி தென்மேற்கிலும்; சட்டி, சதுர்த்தசி மேற்கிலும் யோனி நிலையாம். பிரதமை கிழக்கில், துதியை தென்கிழக்கில், திரிதியை தெற்கில், சதுர்த்தி தென்மேற்கில், பஞ்சமி மேற்கில், சட்டி வடமேற்கில், சத்தமி வடக்கில், அட்டமி வடகிழக்கில், நவமி ஆகாசத்தில், தசமி, பூமியில் பூமி சுக்கிரன் நிலையாம். இந்தப்படி மற்றிருப்பதும் நேர்நடத்துக. அமரபட்சம் சதுர்த்தி முதல் சாமம் கிழக்கிலும், பூர்வபட்சம் அட்டமி இரண்டாம் சாமம் தென்கிழக்கிலும், அமரபட்சம் சப்தமி மூன்றாம் சாமம் தெற்கிலும், பூரணை நான்காம் சாமம்

1. குமாரசுவாமியம் - ப. 56.

தென்மேற்கிலும், பூர்வபட்சம் சதுர்த்தி ஐந்தாம் சாமம் மேற்கிலும், அமரபட்சம் திரிதியை ஆறாம் சாமம் மேற்கிலும், பூர்வபட்ச ஏகாதசி ஏழாம் சாமம் வடக்கிலும், அமரபட்சம் தசமி எட்டாம் சாமம் வடகிழக்கிலும் விஷ நிலையாம். யோகினிக்குப் பின்னும் வலமும் பூமி சுக்கிரனுக்குப் பின்னும் இடமும் ஆகும் என்ப. மற்றவை ஆகாவென்ப.

### *திதி கெண்டாந்தம், நந்தை, பத்திரை, சயை, இருத்தை, பூரணை, திதி நேத்திராந்தம்*

திதிப்பெயரின் முன்னேரைந் தாறிகன்முக் கோள்சந்
திதிப்பெயர்கெண் டாந்தமொன்றா றேதசமி வைசேர்ந்
துதிப்பதுநேர் நந்தையும்பத் திரைசெயை இருத்தை
யும்பரிபூ ரணமுமென வுஞ்சொலுவா ரமரத்
ததிற்பதினொன் றாய்நவமூன் றாறொருமூன் றுமூன்
றந்தகமற் றொண்டிரண்டாம் மக்கமூநே ருளதாம்
இதிற்பிரமற் கொருதனைய யோககர ணங்கட்
கியல்பிதுகே ளென்றனனென் னிதயசுகா திதனே. 57

*(1)* பஞ்சமி, சட்டி, தசமி, ஏகாதசி, உவாபிரதமை இவை அந்தமாதி சந்தி திதி கெண்டாந்தம்.

*(2)* பிரதமை, சட்டி, ஏகாதசி இவை மூன்றும் நந்தை.

*(3)* துதியை, சத்தமி, துவாதசி இவை மூன்றும் பத்திரை.

*(4)* திரிதியை, அட்டமி, திரையோதசி இவை மூன்றும் சயை.

*(5)* சதுர்த்தி, நவமி, சதுர்தசி இவை மூன்றும் இருத்தை

*(6)* பஞ்சமி, தசமி, உவா இவை மூன்றும் பூரணை.

*(7)* அமரபட்சத்து ஏகாதசி, துவாதசி, திரையோதசி, சதுர்தசி, அமாவாசி; பூர்வபட்சத்துப் பிரதமை, துதியை, திரிதியை, சதுர்த்தி ஆக ஒன்பதும் குருடு.

*(8)* இதன்மேல் பூர்வபட்சம் பஞ்சமி, சட்டி, சத்தமி ஆக மூன்றும் ஒருகண்.

*(9)* இதன்மேல் பூர்வபட்சம் அட்டமி, நவமி, தசமி, ஏகாதசி, துவாதசி, திரையோதசி ஆக ஒன்பதும் இருகண்.

*(10)* இதன்மேல் அமரபட்சம் அட்டமி, நவமி, தசமி ஆக மூன்றும் ஒருகண்.

இதன்மேல் பரமனுக்கு ஒப்பற்ற புத்திரனான அகத்தியனே! யோக-கரண சரித்திரம் கேட்பாயாகவென்று திருவாய் மலர்ந்தருளவன் என்னிதய சுகாதீதனான சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

திதி சரித்திரப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம்ஆறுக்குக் கவி 57



## 7. யோக - கரண சரித்திரப் படலம்

### *யோக தீதி, யோக தோஷம்*

அதிகண்டம் வச்சிரம்சூல் கம்பம்விதி தான்வி
யாகாதம் வைதிருதி பரிகெண்ட மாகா
திதிலுறல்புல் கார்விதுமா வகிவேய்நெய் மீனே
ரிராக்கரித் தினத்திரவி எய்தியநாட் கெதிர்நாண்
மதிவரியோ கத்தோட மாசுணநாய் கூகை
வாரணம்வே சரிகோலம் புழுகரணத் தவமாம்
பதுமனுத வுந்தனைய வினிக்கிரகா திபர்தம்
பண்பதும்கேள்! என்றனன்றற் பரகுருதே சிகனே. 58

*(1)* அதிகண்டம், வச்சிரம், சூலம், விஷ்கம்பம், விதிபாதம், வியாகதம், வைதிருதி, பரிகம், கெண்டகம் இவை யோகதீதாம்.

*(2)* அதிகண்டமும், அனுகண்டமும், வச்சிரமும் - பூசமும்; சூலமும் - மிருகசிரமும்; விஷ்கம்பமும் - அசுபதியும்; விதிபாதமும் - ஆயிலியமும்; வியாகாதமும் - புனர்பூசமும்; வைதிருதியை- சித்திரையும், பரிகமமும் - மகமும், கெண்டமும் சூலமுமாகிய இந்த யோகம் இந்த நட்சத்திரமும் கூடும் நாளில் இரவி வர, இவனுக்கு எதிர் மதிவரில் யோகதோஷமாம்.

*(3)* நாகவம், சதுர்ப்பாதம், சகுனி, பத்திரை, தைதுலம், கௌலவம், கிமிஸ்துக்கினம் இந்த ஏழும் கரணம் தீதாம்.

பிரமதேவனுக்குப் புத்திரனானவன் இதற்குமேல் கிரகாதிபர் சரித்திரம் கேட்பாயாக! என்றனன் தானே தனக்குப் பரமாக நின்று சிவனுக்குக் குருதேசிகனான சுப்பிரமணியக் கடவுள் என்றவாறு.

யோக - கரண சரித்திரப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் ஏழிற்குக் கவி 58

## 8. கிரகாதிபர் சரித்திரப் படலம்

குருமதிமால் உயிர்புகரூழ் மூலமது மற்றோர்க்
குளசிதன்பொன் னுச்சம்விது மானடுகூ வவர்க்காம்
பருதிமுதல் முப்பதெழு நான்கிருநான் காறொன்
பதுமேழுமூன் றுமிரண்டுக் கவர்க்காம் பாம்பின்
உருவிருவோர் இதுப்பலகால் உத்தமருக் குபயம்
ஒருநான்காம் மற்றவர்கட் குள்ளதுமாத் தாண்டன்
வருடையன்பொன் மால்கவியெ மன்மதிமா சுணமாய்
வளைதிடலக் குணதிசைநேர் வகுப்பதும்எண் டிசைக்கே. 59

*வியாழன், சந்திரன், புதன்ஜீவவர்க்கம். சுக்கிரன், இரவி, மூலவர்க்கம். மற்றுள்ளவர்கள் தாதுக் கிரகமாம். சுக்கிரன், வியாழன் உச்சநிலைக் கிரகம். மதி, புதன் இடைநிலைக் கிரகம். மற்றுள்ளவர்கள் பூமி நிலைக்கிரகமாம். இரவிக்குக் கதிர் முப்பது, மதிக்கு இருபத்தெட்டு, சேய்க்கு எட்டு, புதனுக்கு ஆறு, குருவுக்கு ஒன்பது, சுக்கிரனுக்கு ஏழு, சனிக்கு மூன்று, இராகு-கேதுவுக்கு இரண்டு, இராகு-கேது-சந்திரன் இவர்கட்டு வெகுகால், புதன்-குரு- சுக்கிரன் இவர்கட்கு இரண்டு கால். மற்றவர்களுக்கு நான்கு கால்களாம். இரவிக்குக் கீழ்த்திசை, சேய்க்கு தென்கீழ்த்திசை, குருவுக்குத் தென்திசை, புதனுக்குத் தென்மேல் திசை, சுக்கிரனுக்கு மேல்திசை, சனிக்கு வடமேல் திசை, மதிக்கு வடதிசை, இராகு- கேதுவுக்கு வடக்கீழ்த் திசையாம்.*

எண்ணிரண்டான் டிருபதையா றேழொருநூ ரைநூற்
றெழுபதன நேர்பொன்விது வும்மிரவி சேயும்
பொன்னிறைபார்க் கவநேர்நாற் குலப்பேர்மற் றதற்பேர்
பிருகொருவன் நேரிரண்டு பேர்நடத்தல் கிடத்த
னிண்ணிலிப்ப பரஞ்சிதனிந் தகிநீர்மற் றவர்மான்
நிசிதனலி நீர்க்கதிபர் பெண்ணதுநிற் பவராம்
மண்ணிறைநேர் விறுவிறுத்தல் துவரினித்தல் புளித்தன்
மகாசத்தில் எரித்தலுப்பாய் வகுப்பருசி அதற்கே. 60

சேய்க்கு வயது பதினாறு, புதனுக்கு இருபது, குருவுக்கு முப்பது, சுக்கிரனுக்கு ஏழு, சனிக்கு நூறு, இரவிக்கு ஐம்பது, மதிக்கு எழுபது. குரு-மதி பிரமாணகுலம், இரவி-சேய் க்ஷத்திய குலம், புதன் வைசிய குலம், சுக்கிரன் சூத்திரகுலம். சனி சங்கர சாதி, இராகு-கேது நீச சாதியாம். சுக்கிரன் நடக்கும் கிரகம், சனி - இரவி கிடக்கும் கிரகம், மதி-சேய் நிற்கும் கிரகம், புதன்-குரு இருக்கும் கிரகம். சுக்கிரன் - சந்திரன் - இராகு ஜலக்கிரகம், மற்றவர்கள் சுஷ்கக் கிரகமாம். புதன் - சனி அலிக்கிரகம், சுக்கிரன் - சந்திரன் - இராகு பெண் கிரகம், மற்றவை ஆண் கிரகமாம், சேய் - குரு விறுவிறுத்தல், புதனுக்குத் துவர்த்தல், குருவுக்கு இனித்தல், சுக்கிரனுக்குப் புளித்தல், சனிக்குக் கசத்தல், இரவிக்கு எரித்தல், மதிக்கு உப்பு.

வகுப்பதுவா லிபமுதலாய் ஐந்துவர்க்கத் துளதின்
   மனுவில்கொடை சமைத்தல்விருந் தயன்மகிழ்உண் டிருத்தல்
பகுத்தபல ஊர்திபயம் இடம்சுபம்வா கனமாம்
   பார்குலமூர் குடும்பமொரு பட்டணம்தே சமுமாம்
மகத்தவளூ டுதலதிக துயிலவள்சை யோக
   மசனதுயில் சயனமகிழ் வன்னியர்பால் புல்ல
நிகர்த்தமர ணம்கிடையா பத்தரசர் கோப
   நெருப்புவிஷா யுதபயநோய் நேரிவையென் பதுவே. 61

வாலிப, குமார, தருண, விருத்த, மாரண வர்க்கத்துள் போசன கெமன இராச்சிய நித்திரை மிருதக் கிரியையில் உட்கிரியை அறியும்படி போசன காலத்தில், நிர்ச்சன போசனம். அன்னதானம், சுயம்பாகம், விருந்தோடுண்ணல், பாரான்னப் பொசிப்பு, சுகபோசனம் என்ப. கெமன காலத்தில், சஞ்சாரம் வெகுவாகனம், தீர்க்கயாத்திரை, தானப்புரட்டம், மங்கள யாத்திரை, வாகன சஞ்சாரம் என்ப. இராச்சிய பத்தியத்தில், மண்டலாதிபத்தியம், குலாதிபத்தியம், கிராமபத்தியம், குடும்பாதிபத்தியம், நரசுராதி பத்தியம், தேசாதிபத்தியம் என்ப. நித்திரா காலத்தில்

களத்திர விரோதம், தீர்க்க நித்திரை, களத்திர விஷயம், நிர்ச்சன நித்திரை, சயன சந்தோஷம், பரதார விஷயம் என்ப. மிருத காலத்தில் ஆற்பன சமான சரீரபதனம், கெமனவர்ச்சிதம், ஆபத்தான காலம், இராச தண்டணை, விஷாக்கினி, கருவிபயம், ரோககாலம் என்ப.

பதுமமன நேர்வனநீர் பாருயர நகரம்
பயக்கரைமுன் நாசமுறம் பட்டணம்பட் சேரி
சதுரசம்வட் டந்துடிசட் கோணநெடும் பட்டம்
சாதுரட்டிக் கோண்தனுதார் முறம்தலமற் றுருவாம்
கதிரயன முகூர்த்தமொர்நாள் ருதுமாதம் பட்சம்
காரியொரான் டெட்டொருமுன் றாய்வரறிங் களுக்கா
மதியிலிட மாய்ஆறின் மற்றதின்பின் முன்பாய்
வருபவர்வெல் பவரிவையும் வக்கிரப்பேர்க் காமே. 62

இரவிக்கு ஸ்தானம் காடு, மதிக்கு ஜெலம், சேய்க்கு பூமி, புதனுக்கு உயர்ந்த இடம், குருவுக்கு நகரம், சுக்கிரனுக்கு ஜெலதீரம், சனிக்கு போகுடியுற்ற புராதன நகரம், இராகு-கேதுவுக்கு பட்சேரியாம். இரவி சதுரம், மதி வட்டம், சேய் தமருகம், புதன் அறுகோணம், குரு நெடும் பட்டம், சுக்கிரன் எண்கோணம், சனி வில், இராகு மாலை, கேது முறம். இவை கிரகாதிபர் வடிவாம்.

## வருங்காலம் அறியும்படி

இவிக்கு மாதம் ஆறு, மதிக்கு ஒரு முகூர்த்தம், சேய்க்கு ஒரு தினம், புதனுக்கு மாதம் இரண்டு, குருவுக்கு மாதம் மூன்று, சுக்கிரனுக்குப் பதினைந்து நாள், சனிக்கு வருடம் ஒன்று, இராகுவுக்கு மாதம் எட்டு, கேதுவுக்கு மாதம் மூன்று.

## வெற்றி அறியும்படி

கடகம் முதல் இடமாகக் கும்பம் வரைக்கும் இருந்த கிரகத்தை வருங்கிரகம் வெல்லும். மற்றவைகளில் வரும்

கிரகத்தை இருக்கும் கிரகம் வெல்லும். வக்கிரத்துக்கு இருப்பவனும் நடப்பவனும் வெல்லுவன்.

**வக்கிரனெல் சிகிசிவப்பாம் பொன்னதுமால் பச்சை**
**மதிசிதன்பான் மற்றசிதம் மறுவிடைகம் முதுகு**
**கைக்கொடுக்தந் தோண்முகங்கள் வான்கழலக் கதிர்நேர்**
**கனலிரவி முன்பரவு கனக்கனெக்கா லமும்பொன்**
**சுக்கிரன்மத் தியிலிகடையின் மற்றவராம் சம்பத்**
**துடையவர்தோற் றஞ்சுகனோர் துணையிணைமற் றவராய்**
**அக்கிரம நடுச்சரமா மேன்முகம்பால் கீழ்நே**
**ராய்க்கவிழ்தல் குறுக்கிரவி யாய்நவினோக் கதற்கே.** 63

சேய், இரவி, கேது - சிவப்பு; வியாழன்-பொன்னிறம்; புதன்- பச்சை; சந்திரன், சுக்கிரன் - வெளுப்பு; சனி, இராகு-கருப்பாம். இரவிக்கு இடையிலும், மதிக்கு சிரசிலும், சேய்க்கு முதுகிலும், புதனுக்குக் கைமூலத்திலும், வியாழனுக்குத் தோளிலும், சுக்கிரனுக்கு முகத்திலும், சனிக்கு தொடையிலும், இராகு- கேதுவுக்குக் காலிலும் மறுவாம். சேய், இரவி முன்பும்; இராகு, புதன் எந்தக் காலமும்; குரு, சுக்கிரன் நடுவிலும்; சனி, மதி கேது அந்தியத்திலும் பலன் கொடுப்பார்கள். சனி, இரவி- பிரிட்டோதயம்; மதி, சேய் - குறுக்கோதயம்; புதன், குரு, சுக்கிரன்- சிரசோதயமாம். இரவிக்கு மேல் பார்வை, மதிக்கு எதிர்பார்வை, சேய்க்குப் பக்கப்பார்வை, புதனுக்குக் கீழ்ப்பார்வை, குருவுக்கு நேர்பார்வை, சுக்கிரனுக்குக் கவிழ்தல் பார்வை, சனிக்குக் குறுக்குப் பார்வை.

**நவில்வதறி ஒன்றுமுதல் ஐந்தளவும் அசிதன்**
**நாரிகள்சேய் பார்க்கவன்பொன் னாமானோர் நடுக்கீழ்ச்**
**செவியலது பருத்துயர்ந்த தெரிவையரில் குறுக**
**திடசதுரம் வளைந்துயர்ந்த றிரனெடிதல் குடில**
**இவையிலுரைத் தனவலது சமமெனலல் லிரவி**
**ஈன்றவனுக் கருகனனைக் கெல்விதுப் பெயர்தான்**
**சவுரிசிதற் குளதிவாக டந்தையகி சிகியாய்**
**சாற்றிவர்கள் நாற்காலோ சனப்பேர்நோக் கதற்கே.** 64

சனிக்கு ஓரறிவு, புதனுக்கு ஈரறிவு சேய்க்கு மூவறிவு, வெள்ளிக்கு நான்கறிவு, வியாழத்துக்கு ஐயறிவாம். புதன் அரைக்குக் கீழ் அலகிலது, குரு பருத்து உயர்தல், சுக்கிரன் அரிவையர் ரூபம், சனி குறுகினது. இரவி திடசதுரம், மதி வளைந்துயர்தல், சேய் திரளுதல், இராகு நெடிதல், கேது குடிலம். இவற்றுள் உயர்தல், குறுகல் சொல்லாதவை சமமாம். இராக்கால சூரியன் பிதிர்ச்சகோதரக் காரகன், பகற்கால சந்திரன் மாதுரு சகோதரக் காரகன், இராக்கால சனி பிதுர்க்காரகர், பகற்காலச் சுக்கிரன் மாதுரு காரகன், இராகு பிதுர்பிதா காரகன், கேது மாதுருபிதா காரகனாம். இரவிக்கு யானைக்கண், மதிக்குக் குதிரைக்கண், சேய்க்கு ஆட்டுக்கண், புதனுக்குக்குச் செங்கன்றுக்கண், குருவுக்கு இடபக்கண், சுக்கிரனுக்குப் பசுக்கண், சனிக்குக் கிடாக்கண், இராகுவுக்கு வெள்ளாட்டுக்கண், கேதுவுக்குச் செம்மறி ஆட்டுக்கண்.

## சந்திர திருஷ்டி அறியும்படி

நோக்கமதிக் கவ்வாரத் தடவும்ரவி முதலாய்
    நுவல்வதைநான் கினில்பெருக்கி நோக்கலந்நாள் வரைக்கும்
போக்கலொன்பான் ஈராறேழ் ஒருகண்ணிரு கண்ணில்
    பூநிறைநே ரிருபான்மூன் றதின்மேல்நாள் போத
ராக்குபக்ஷத் தின்மேலைந் தையிரண்டு பூத
    மைநான்கவ் வாட்சியிலப் பாகையதி பெலமாம்
வாக்கனையுள் ளறமீறெட் டிதற்குறவுச் சமுமாம்
    மத்தியில்பின் னாரேர்க மற்றதிதற் கதுவே. 65

ஞாயிறு முதல் அற்றை வாரம் வரையும் எண்ணிய தொகையை நான்கில் பெருக்கிக் கண்ட நாள்முதல் அற்றை நட்சத்திரம் வரையும் எண்ணி அவற்றுள் முதல் ஒன்பதும் ஒரு கண்மேல் பன்னிரண்டும், இரு கண்மேல் ஏழும் அந்தகமாம். இரவிக்கு மூலத்திரிகோணத்தில் பாகை இருபது வரையும், மதிக்கு மூன்றுக்குமேல் முப்பதுவரை இருபத்து ஏழும், சேய்க்குப் பன்னிரண்டு வரையும், புதனுக்குப்

பதினைந்துக்குமேல் ஐந்து வரையும், குருவுக்கு பத்து வரையும், சுக்கிரனுக்கு ஐந்து வரையும், சனிக்கு இருபது வரையும் அதிக பெலமாம். இவன் அவன் மூலத்திரிகோணத்துக்கு இரண்டு ,நான்கு,ஐந்து, ஒன்பது, பன்னிரண்டு, எட்டாம் வீடும் மித்திரமாம். எவனுக்கு முற்பாதி பதினைந்து பாகையும் ஆரோகம், பிற்பாதி பதினைந்து பாகையும் அவரோகமாம்.

கதிரல்லர் வக்கிரத்தில் தனிப்பதிக பெலத்துக்
காமாறீ ரைந்தேழீ ரொன்பதுவீர் களைதல்
இதிலொருமூன் றதிகமிரண் டிதில்குறைதல் அனலில்
இருபதின்நேர் இவைமாதி சைவருடப் பெயர்க்காம்
உதயவன நேர்பத்தொரு மூன்றெழுநாள் கைமூன்றைந்
துடுவிருபான் அதிகஉச்சப் பாகையுமாம் அறுமூன்
றதிகமிரார் இதுவறுகா லொன்றகிசுன் பொன்சேய்
அவர்மாத மதிக்கிரண்டே காற்றினங்கோ சரமே. 66

இரவி, மதி நீங்கலாக மற்றவர்கள் வக்கிரத்தில் தனித்தால் அதிக பெலமாம். இரவிக்கு வருடம் ஆறு, மதிக்குப் பத்து, சேய்க்கு ஏழு, இராகுவுக்குப் பதினெட்டு, வியாழனுக்குப் பதினாறு, சனிக்குப் பத்தொன்பது, புதனுக்குப் பதினேழு, கேதுவுக்கு ஏழு, சுக்கிரனுக்கு இருபதும் மகாதிசை வருடமாம். இரவிக்கு பத்தும், மதிக்கு மூன்றும், சேய்க்கு இருபத்து எட்டும், புதனுக்குப் பதினைந்தும், குருவுக்கு ஐந்தும், சுக்கிரனுக்கு இருபத்து ஏழும், சனிக்கு இருபதும் அதிக உச்சப்பாகையாம்.

### *கோசர காலம் அறியும்படி*

இராகு - கேதுவுக்கு மாதம் பதினெட்டு, சனிக்கு மாதம் முப்பது, வியாழனுக்கு மாதம் பன்னிரண்டு, சேய்க்கு மாதம் ஒன்றரை, இரவிக்கு மாதம் ஒன்று, புதனுக்கு மாதம் ஒன்று, சுக்கிரனுக்கு மாதம் ஒன்று, மதிக்கு இரண்டேகால் தினம்.

சரத்திடபன் முக்கணொற்றை மற்றவர்போய் இருப்ப
தள்களவோ சனைபொனொன் பதிருபதர வஞ்சே
இருத்தலொரே ழிரசதமீ ரெட்டிருநான் கவர்பொன்
இளம்பிறைமால் புகர்தருமர் இவர்களலத் தர்மர்
குருத்துலைமன் மாலிரவி பகற்பொழுதுக் குடையோர்
குறைந்தவர்மற் றதற்குடையர் கோகனத் திறையோன்
விருந்தனரு ணன்இவர்கள் தாமதமாம் சேயும்
வெள்ளியும்ரா சதகுணமற் றவர்கள்விரும் புவதே. 67

இரவி, மதி, சேய் இவர்கள் ஒற்றித்த ரூபம், மற்றவர்கள் இரட்டித்த ரூபம். வியாழன் இருப்பது ஒன்பது யோசனைத் தூரம், இராகு-கேது இருபது, சேய் ஏழு, சுக்கிரன் பதினாறு, மற்றவர்கள் எட்டு, குரு, வளர்மதி, புதன், சுக்கிரன் இவர்கள் சுபக்கிரகங்கள், மற்றவர்கள் பாவக்கிரகங்கள். குரு, சுக்கிரன், புதன், இரவி திவாக்காலக் கிரகங்கள், மற்றவர்கள் நிசிக்காலக் கிரகங்கள். இரவி, சனி, புதன் தாமத குணம், சேய் - சுக்கிரன் இராட்சத குணம், மற்றவர்கள் சாத்துவித குணம்.

விருத்தன்மர வேலைகள வாயுஉயிர் வேதை
மேதிசிறை அற்றாதைவெட் கம்இன்னோய் வீண்சொல்
வருத்தமிரும் படிமையயன் வாயடித்தல் கடுகு
வயல்களநீல் உளுந்தசுபம் சேவகமெண்ணையுமாம்
பருத்தசிரம் சிலும்பன்மயிர் பயித்தியச ரீரம்
பான்மிளகு இரசவாதம் பண்டிதம்கோ தும்பை
ஒருதலைநோ வானைசிவம் லோகவச்ரம் வலக்கோள்
உயிர்த்தவன்யாத் திரைபகலீ தினக்குளகா ரகமே. 68

மரவேலை, களவு, தீர்க்காயுள், ஆத்ம இச்சை, எருமை வர்க்கம், சிறைபடல், நிசிகாலத்துப் பிதா, வெட்கம் இல்லாதவை, ரோகம், வீண் வார்த்தை, துன்பம், இரும்பு, ஆளடிமை, சாஸ்தா, வாயடித்தல், கடுகு, வயல்களம், நீலரத்தினம் முதலியவை, உளுந்து, அசுபகர்மம், சேவகாவிர்த்தி, எள்ளு, எண்ணெய் இவை முதலானவைக்கு

எல்லாம் சனியே காரகன். பருத்த சிரம், சிலும்பின மயிர், பைத்திய சரீரம், பால்மிளகு, இரசவாதம், வைத்தியம், கோதுமை, ஒருதலைநோவு, ஆனை, சதாசிவம், பஞ்ச உலோகம், வச்சிர ரத்னம், வலது நேத்திரம், பிதா, யாத்திரை, பகல் பொழுது இவைகட்கெல்லாம் சூரியனே காரகன்.

## *மதிக்கும் - சேய்க்கும் காரகம்*

**அகளங்கன் சிலையூண்மா வாய்துயில் வெண் கலமுப்**
**பளவர்வண் ணார்வெண்ணெய் குடையரிசி பணிப்பயறுப்**
**பிகழ்வரலங் கம்இடக்கண் சயரோகம் உழவன்**
**யாபாரம் மச்சமுத்தம் வஸ்திரமிவைக் கெனலாம்**
**குகன்முனவன் துவரைதுவர் கோவிகுலா லன்றீக்**
**குளவினையர் துணைவரிகல குருதிரிணம் சிவப்பித்**
**தகர்சுயம்பா கங்காயம் சாகசந்தாம் பிரம்பூ**
**தனையர்விர ணங்காளி தழலிவர்கா ரகமே. 69**

பராசக்தி, போசனம், குதிரை, மாதுரு, நித்திரை, வெண்கலம், உப்பளவர், வண்ணார், வெண்ணெய், குடை, அரிசி, பணி, பயறு, உப்பு, சிறுதுநாள் பருத்தும் இளைக்கும், சரீரம், இடக்கண், சயரோகம், உழவன், மச்சம், முத்து, புடவை இவைகளின் வியாபாரம், இவைகட்கு எல்லாம் சந்திரனே காரகன். சுப்பிரமணியர், விக்கினேசுரர், துவரை, பவளம், கோபவான், குலாவன், அக்கினி முகமாகச் செய்யும் தொழிலினர், சகோதரர், யுத்தம், இரத்தம், கடன், சிவந்த ரத்னம் முதலானவை, ஆட்டு வர்க்கம், சுயம்பாகம், காயம், சாகசம், செம்பு, பூபாலர், விரணம், பத்திரகாளி இவைகட்கு எல்லாம் செவ்வாயே காரகன்.

## *புதனுக்கும் - வியாழனுக்கும் காரகம்*

**கார்வணன்தேர்ப் பாகனம்மான் கல்விமர கதஞ்செங்**
**கன்றிலைவா ணிபன்தூதன் கணக்கன்புங் கிஷகன்**
**தேர்கதைகா வியந்தாதன் சேண்டனமெ முத்துச்**
**சௌவிஷயன் இராசிபரன் திரவசனா திக்கன்**

பாரறிவன் பயறுதரா வெந்தையமால் பாலர்
பசும்பொன்மது வான்கடலை பார்த்திபராண் ராகம்
பேரதிகள் சீரகஞ்சீ வன்மணிமே தகம்விப்
பிரன்பிரமா னாண்டிகுருப் பேரிவர்கா ரகமே. 70

விஷ்ணு, பகவான், தேர்ப்பாகன், அம்மான், கல்வி முதலானவை. பச்சை இரத்தினம் முதலானவை, செங்கன்று வர்க்கம், இலை முதலானவை, வைசியன், தானாதிபதி, தூதுவன், கணக்கன், அலி, தேர், கதைகாவியம், தாதன், அந்தர நாட்டியம் முதலானவை. லிகிதம் விடயசோரன், தாசிபரன், திரவசனாதிகன், சகல பிரபஞ்சமும் அறிந்தவன், பாசிப்பயறு, தரா, வெந்தியம் இவை முதலானவைக்கெல்லாம் புதனே காரகன். புத்திரர், சொர்ணம், தேன், இடப வர்க்கம், கடலை, அரசர், புருடராகரத்னம், பட்டப்பேர், சீரகம், வைடூரிய ரத்னம், கோமேதகரத்னம், விப்பிரவர்க்கம், பிரமா, ஆண்டிவர்க்கம், இவை முதலானவைக்கு எல்லாம் வியாழனே காரகன்.

பேரிலெற்காய் தாசர்பசு பெண்டிருற ஊர்தி
பேரியைவாத் தியமுதல்சங் கீதநடப் பிரியம்
தார்கொடிடா னாவிமுத லாயபரி மளவா
சனைசயன வணைமுதல்சா மரைசை யோகம்
ஏரிளமை மொச்சைபுளி ஈயமளை பயஞ்சோர்
எப்பொழுதும் பரியாசப் ப்ரசங்கம்ரக்ஷ கன்மால்
சூர்மலர்ப்பெண் ணிரசதமா சுணஞ்சோரம் வெகுபேச்
சுவ்வேடத் தொழில்சுகிதுற் தொழில்இவர்கா ரகமே. 71

பட்டப்பெயர், கிரகம், பகல் காலம், மாதுரு, தாசி தாசன் முதலானவை, பசு, களத்திரம், மித்திரம், வாகனம், பேரிகை முதலான வாத்தியம், சங்கீதம், நாட்டியம், முதலானவைகளில் பிரியம், மாலை முதலானவை, கொடி, டால் முதலானவை, நாவிப்பிள்ளை முதலாகிய நானாவித பரிமள வாசனாதிகள், கட்டில் மெத்தை, சப்பிரமஞ்சம், முதலானவை, வெண்சாமரை, போகபோக்கியம், அழகு, இளமை, மொச்சை, புளி, ஈயம், தயிர், பால், அன்னம், எப்பொழுதும் விகட வினோத பரியாசப் பிரசங்கப் பிரியம்,

சன ரக்ஷகம், ஆசை, தேவப் பெண்கள், இலக்குமிதேவி இவை முதலானவைக்கு எல்லாம் சுக்கிரனே காரகன். களவு, வெகுபேச்சு, நானாவித வேடத்தொழில், செப்பிடு வித்தை இவை முதலானவைக்கு எல்லாம் இராகுவே காரகன். கபடத்தொழில் முதலானவைக்கு எல்லாம் கேதுவே காரகன். இவை காரகாதிபர் வர்க்கம்.

**இவர்களெழு வருமூல வர்க்கவரின் பகரே !**
**இரசவகைக் குளதுமுள்ளி லசுபர்சுபர்க் கெனவும்**
**பவுமன்முதல் பூவிலையப் பழங்காய்வேர் தோபே**
**பாற்கிழங்காம் பொன்சிதன்சேய் பாகனெமன் பூதம்**
**அவர்சிரம்யார் நேர்சிதன்சுன் னனல்பொன்னரு ணன்னெ**
**ரைம்புலன்மற் றவரறிவுள் ளாமலரி முதலா**
**முவாபொசித்தற் கத்திரியோ ததிசமைத்தல் பாகத்**
**துற்றதுவூ ரோகங்கா னுளவிடமற் றுளர்க்கே.** 72

இரவி முதல் சனிவரை எழுவரும் மூலவர்க்கமாகவரில் இவர்களுக்குச் சொன்ன ருசி வர்க்கத் தருவாம். இவற்றுள் முள் உள்ளவை பாவருக்காம். முள் இல்லாதவை சுபருக்காம். சேய்க்குப் பூவினால் பிரபல தருவும், புதனுக்கு இலையினால் பிரபல தருவும், வியாழனுக்குக் கனியினால் பிரபல தருவும், சனிக்கு வேரினால் பிரபல தருவும், இரவிக்குத் தோல், பட்டையினால் பிரபல தருவும், மதிக்குக் கிழங்கினால் பிரபல தருவும் கண்டு சொல்லுக. வியாழன்- பிருதிவி, சுக்கிரன்-அப்பு, செவ்வாய்-தேயு, புதன்-வாயு, சனி-ஆகாயம் இவற்றிற்குமேல் சூரியனும் கீழ் சந்திரனும் சொல்லுக. சுக்கிரன்-சத்தம், சனி-பரிசம், சேய்-ரூபம், வியாழன்-ரசம், புதன்-கந்தம், இரவி-அறிவு, மதி-மனதாம். இரவிக்குப் பர்வத வர்க்கத்தில் உண்டான பதார்த்தம், மதிக்குச் சமுத்திரத்தில் உண்டான பதார்த்தம், சேய்க்கு நெருப்பில் வெந்தது, புதனுக்கு நானா ருசி வர்க்கசேகரம், குருவுக்கு நாடு, நகரங்களில் உள்ளவை. சுக்கிரனுக்குச் சுத்த ஜலவர்க்கம், சனிக்கு வனவர்க்கம், இராகு-கேதுவுக்கு விஷவர்க்கம் இவை ருசிபாகப் பொசிப்பாம்.

மற்றளதூ மாதியர்க்கம் மாதமுந்தெய் தியுநேர்
　　வைத்ததிலோர் நான்குமதில் பத்தொடுமூன் றதுவாய்
உற்றதிரா சிப்பெயரும் பாகையும்நேர் கூடி
　　உறுந்தூம மண்டலத்தீ தொழிப்பதுற்பா தழுமாம்
மிற்றதின்மூ விருராசி ஏறல்பரி வேடம்
　　இதைமுன்போல் களைதலித்ர தனுப்பதினேழ் பாகை
பெற்றதுப கேதுவரில் உச்சமுற்பேர்க் கிலதில்
　　பேரலது யாழ்முதல்நேர் பேசுதலிப் பெயர்க்கே. 73

*சென்ற மாதமும் தேதியும் வைத்து இதன்மேல் நான்கு இராசியும் பதிமூன்று பாகையும் கூட்டிக் காண்பது தூமம். இதை மண்டலத்தில் கழித்துக் காண்பது உற்பாதம். இதன்மேல் ஆறு இராசி கூட்டில் பரிவேடம். இதை முன்போல் மண்டலத்தில் கழித்துக் காண்பது இந்திரதனு. இதில் பதினேழு பாகை கூட்டில் உபகேதுவாம். தூமத்துக்கு மிதுனம், உற்பாதத்துக்கு விருச்சிகம், பரிவேடத்திற்கு மகரமும், இந்திர தனுசுவிற்கு மீனமும், உபகேதுவுக்கு இடபமும் ஆட்சி வீடாம். தூமத்திற்கு மிதுனமும், உற்பாதத்திற்குச் சிங்கமும், பரிவேடத்திற்கு விருச்சிகமும், இந்திரதனுசுக்குத் தனுசும், உபகேதுவுக்குக் கும்பமும் உச்ச வீடாம்.*

பேசுதல்வக் கிரமிரவி பிள்ளைபெறில் சுன்சேய்
　　பீதமிவாக் கேழதிகம் பிதுரறலத் தமனம்
வீசுகதிர் காரன்முதல் பதினேழபன் மூன்று
　　விடைக்குடைய ரெட்டொருபத் தஞ்சும்விது வெம்முன்
ஈசன்வலக் கண்ணிடைப்பா கைக்குளரேல் தீநேர்
　　எமன்வரைஅங் கிசமுமொன்றாய் என்றுடுக்கோ விலகில்
பூசலிப்பேர்க் குச்சம்வரின் அடுத்தினமப் பங்கம்
　　புகர்வதுமற் றதற்குமுள பொற்குடத்துற் றவனே. 74

*சனி, சேய், குருவுக்கு ஐந்தில் இரவி வரில் வக்கிரம். ஏழில் வரி இரவி வரில் அதிவக்கிரம், ஒன்பதில் வரில் வக்கிர நிவர்த்தியாம். இரவி பாகை பதினேழுக்குள் சேயும்,*

பதிமூன்றுக்குள் புதனும், பதினொன்றுக்குள் குருவும், எட்டுக்குள் சுக்கிரனும், பதினைந்துக்குள் சனியும் வரில் சேய் முதல் சனிவரை அத்தமனமாம். இரவிக்கு முன்பின் பன்னிரண்டு பாகைக்குள் சந்திரன் வரில் சந்திராஸ்தமனம். இரவி, மதி நீங்கலாகக் குசாதி சனிவரை அங்கிசம் ஒன்றாய்க் கூடில் கிரகயுத்தம். உச்ச இராசிக்கு நடுத்தினம் உச்சபங்கம். நீச இராசிக்கு நடுத்தினம் நீசபங்கமாம் கும்ப உதயனே!

குடப்புதல்வ விக்கிரகர் தங்களில்பத் தொருநான்
குக்காதி ஏற்றினதில் குறைத்திடுமுத் தொகைக்கு
நடப்பிலிவர் மித்திரர்மற் றவரிவர்கள் எழுவர்
நாகவுரு வினரிருவர் நந்தனரொன் பதின்மர்
இடர்ப்படிற ரைவரெழ மூன்றிருவர் இவர்கட்
கியல்புளதின் மற்றுளதில் இதுவும்உள இதன்மேல்
திடம்படக்கேள் அட்டவர்க்கத் தியல்புகல என்றான்
திருச்செந்தூர்க் கரசசுர திமிரதிவா கரனே. 75

கும்போதயனாகிய அகத்தியமா முனியே! சூரியாதி கேது வரை உள்ளவர்கள் தங்களில் பத்தாம் இடம், நான்காம் இடமாகவும், பதினோரம் இடம் மூன்றாம் இடமாகவும் நடப்பில் இருக்கில் இவர்கள் தற்காலிய மித்திரராம். மற்றுள்ளவையில் இருக்கில், தற்காலிக சத்துருவாம். இரவி முதல் சனிவரை எழுவரும் இராகு-கேதுவும் இவர்கள் புதல்வர் ஒன்பதுபேரும் தூமாதிபர் ஐந்துபேரும் ஆக இருபத்து மூன்று பேர்க்குள்ள சரித்திரத்தில் இதுவும் சிலது என்ப. இதன்மேல் அட்டவர்க்கத்து இயல்பு நாம் சொல்ல நீ திடப்படகேட்பாயாக என்று திருவாய் மலர்ந்து அருளினவன் திருச்செந்தூர்க்கு அரசன் எனவும் அசுராதிபதி மிரத்துக்கு திவாகரன் எனவும் உதயமாகிய சுப்பிரமணியக் கடவுள்.

கிரகாதிபர் சரித்திரப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் எட்டிற்குக் கவி 75

## 9. அட்டவர்க்கப் படலம்

### ரவி, மதி அட்டவர்க்கம்

திவிமன்முன் கோவாய்வே ணேரைந்து ழுபசெயமும்
சென்றதுமுன் புடனறந்தாள் சேயுமணன் ரிபுச்சேய்
நவமும்விய மாறேழு நளினனுநீ ரார்ந்த
நாட்கிறையு மாம்வேளொன் றைந்தணனோய் நடையும்
தவமுளண நோய்பொனடை தம்பியுங்கட் கணியாய்த்
தருகேந்த்ர பணபரமும் இதிற்றனைய ரிலது
மவமுனின்மா லுடனகமும் மாறுளண னவலும்
ஐந்திலதெட் டிதுவுமெட்டே ழிந்துவுமற் கிறைக்கே. 76

*இரவியில் இரவி 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 8. இரவியில் மதி 3, 6, 10, 11 ஆகப்பரல் 4. இரவியில் சேய் 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 8. இரவியில் புதன் 3, 5, 6, 9, 10, 11, 12 ஆகப்பரல் 7. இரவியில் குரு 5, 6, 9, 11 ஆகப்பரல் 4. இரவியில் சுக்கிரன் 6, 7, 12 ஆகப்பரல் 3. இரவியில் சனி 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 8. இரவியில் இலக்கனம் 3, 4, 6, 10, 11, 12 ஆகப்பரல் 6.*

*மதியில் மதி 1, 5, 6, 7, 10, 11 ஆகப்பரல் 6. மதியில் சேய் 1, 3, 4, 5, 7, 8, 10, 11 ஆகப்பரல் 8. மதியில் புதன் 1, 3, 4, 5, 7, 8, 10, 11, ஆகப்பரல் 8. மதியில் குரு 1, 2, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 7. மதியில் சுக்கிரன் 3, 4, 5, 7, 9, 10, 11 ஆகப்பரல் 7. மதியில் சனி 3, 4, 5, 11 ஆகப்பரல் 4. மதியில் இலக்கனம் 3, 6, 8, 11 ஆகப்பரல் 4. மதியில் ரவி 3, 6, 7, 8, 10, 11 ஆகப்பரல் 6. இவை இரவி மதி அட்டவர்க்கமாம்.*

### சேய், புதன் அட்டவர்க்கம்

அற்பகையில் அறமிலது மாறணர்சேய் அணியும்
அதிகமருகா றுமதற்க வமுறப்பத் தலது
முற்பகலூ ணறவுளது முதலொடுப செபயமும்
முன்னறவைந் திதுவுமணன் மூன்றினலு மாமு

னிற்பிறநோ யறநேரு மீறணநோய் அவமும்
மேழ்பிணிபத் தீறிலது மென்றுமற மிலதும்
சற்பனையுள் ளறமணன்தா ளுந்தனையர் புறங்கண்
தாகையண னடையுமெல்போ லுந்தழன்மாற் கெனுமே. 77

*சேயில் சேய் 1, 2, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 7. சேயில் புதன் 3, 5, 6, 11 ஆகப்பரல் 4. சேயில் குரு 6, 10, 11,12 ஆகப்பரல் 4. சேயில் சுக்கிரன் 6, 8, 11, 12 ஆகப்பரல் 4. சேயில் சனி 1, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 7. சேயில் இலக்கனம் 1, 3, 6, 10, 11 ஆகப்பரல் 5. சேயில் இரவி 3, 5, 6, 10, 11 ஆகப்பரல் 5. சேயில் மதி 3, 10, 11 ஆகப்பரல் 3.*

*புதனில் புதன் 1, 3, 5, 6, 9, 10, 11, 12 ஆகப்பரல் 8. புதனில் குரு 6, 8, 11, 12 ஆகப்பரல் 4. புதனில் சுக்கிரன் 1, 2, 3, 4, 5, 8, 9,11 ஆகப்பரல்8. புதனில் சனி 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 8. புதனில் இலக்கனம் 1, 2, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 7. புதனில் இரவி 5, 6, 9, 10, 11, 12 ஆகப்பரல் 5. புதனில் மதி 2, 4, 6, 9, 11 ஆகப்பரல் 6. புதனில் சேய் 1, 2, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல் 8 இவை சேய், புதன் அட்டவர்க்கம்.*

## *குரு, சுக்கிரன் அட்டவர்க்கம்*

தழலணியும் முண்ணோய்பத் ததின்பால்வித் தையும்சேய்
தாணோய்பூ ணுந்தாள பூண்டத்தில் துந்தவுமூன்
றழலுமதன் பணபரமும் அனலுமைந்தா றொன்றாய்
அறங்கோபத் தணனுமென லாறேழீ றிலதும்
விழல்போக்காய் இவ்வினைப்பா லுந்தான்மேற் காறேழ்
விடலுமெட்டீ றணனும்விண் ணோய்வேளி லதும்பவமில்
கொழுவியபோக் கிலிபமுநோய் இப்பால்பூ ணணனும்
குழந்தைதுயில் பத்ததன்பால் குருசிதனுக் குளதே. 78

*குருவில் குரு 1, 2, 3, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 8. குருவில் சுக்கிரன் 2, 5, 6, 9, 10, 11 ஆகப்பரல் 6. குருவில் சனி 3, 5, 6, 12 ஆகப்பரல் 4. குருவில் இலக்கினம் 1, 2, 4, 5, 6, 7, 9, 10, 11 ஆகப்பரல் 9. குருவில் இரவி1, 2, 3, 4, 7, 8, 9, 10, 11 ஆகப்பரல்*

*9. குருவில் மதி 2, 5, 7, 8, 11 ஆகப்பரல் 5. குருவில் சேய் 1, 2, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 7. குருவில் புதன் 1, 2, 4, 5, 6, 9, 10, 11 ஆகப்பரல் 8.*

*சுக்கிரனில் சுக்ரன் 1, 2, 3, 4, 6, 8, 9, 10, 11 ஆகப்பரல் 9. சுக்கிரனில் சனி 3, 4, 5, 8, 9, 10, 11 ஆகப்பரல் 7. சுக்கிரனில் இலக்கினம் 1, 2, 3, 4, 5, 8, 9, 11 ஆகப்பரல் 8. சுக்கிரனில் இரவி 8, 11, 12 ஆகப்பரல் 3. சுக்கிரனில் மதி 1, 2, 3, 4, 5, 8, 9, 11, 12 ஆகப்பரல் 9. சுக்கிரனில் சேய் 3, 4, 6, 9, 11, 12 ஆகப்பரல் 6. சுக்கிரனில் புதன் 3, 5, 6, 7, 11 ஆகப்பரல் 5. சுக்கிரனில் குரு 5, 8, 9, 10, 11 ஆகப்பரல் 5 . இவை குரு, சுக்கிர அட்டவர்க்கமாம்.*

## *சனிஅட்டவர்க்கம் - கிரகங்களின் மொத்தப் பரல்கள்*

உளநோய்பூ ணாயமுமாய் ஒன்றாய்பூ ணைன்போக்
    கும்அழலும் ஆறணன்பூ ணும்பவமப் பரலுள்
களவீடு மாறவநே ருங்களவைந் தாயம்
    காலும்விய நோயணனும் கரியவனுக் காமீ
தளவாறெட் டதின்லொன் றதில்தசமி லதனோ
    டைமூன்றா மூன்பினிரண் டனலிலருக் கன்னேர்
வளராறைம் பதிலாறா றொன்றதிகப் பரலாய்
    வருமிதன்மேல் சோதனைசெய் வதும்கேள்மா முனியே ! 79

*சனியில் சனி 3, 5, 6, 11 ஆகப்பரல் 4. சனியில் இலக்கினம் 1, 3, 4, 6, 10, 11 ஆகப்பரல் 6. சனியில் இரவி 1, 2, 4, 7, 8, 10, 11 ஆகப்பரல் 7. சனியில் மதி 3, 6, 11 ஆகப்பரல் 3. சனியில் சேய் 3, 5, 6, 10, 11, 12 ஆகப்பரல் 6. சனியில் புதன் 6, 8, 9, 10, 11, 12 ஆகப்பரல் 6. சனியில் குரு 5, 6, 11, 12 ஆகப்பரல் 4. சனியில் சுக்கிரன் 6, 11, 12 ஆகப்பரல் 3.*

*இரவி அட்டவர்க்கப்பரல் 48. மதிஅட்டவர்க்கப்பரல் 49. சேய் அட்டவர்க்கப்பரல் 39. புதன் அட்டவர்க்கப்பரல் 54. குரு அட்டவர்க்கப்பரல் 56. சுக்கிரன் அட்டவர்க்கப்பரல் 52. சனி அட்டவர்க்கப்பரல் 39. சர்வாட்டவர்க்கப்பரல் 337. இதன்மேல் சோதனை செய்வதும் கேட்பாயாக ! மகத்தான அகத்தியமா முனியே !*

## *திரிகோண சோதனை, ஏகாதிபத்திய சோதனை*

முன்னுளதின் மைக்கோள்நேர் மற்றுளமுக் கோண
    மும்மசமஞ் சமம்சூனியம் வரினிரத்தன் முழுதும்
மன்னிதம்வைத் திடதொடலா காதிவைமுக் கோண்சோ
    தனையசநே ரபிமுகரா சிப்பெயர்க்கும் அவைபோல்
பின்னுளமாத் திரமழிதல் கிரகருறின் முன்போல்
    பேசுவரோ ரிற்பெயரில் அதற்குமுதல் பெயராய்ச்
சொன்னளினக் கோன்மதிவீ டல்லதுமற் றவரில்
    சோதனையே காதிபத்ய சோதனைப்பேர்க் குளதே. 80

*அவரவருக்கு அமைந்த ஆதிப்பரலில் மேடம், சிங்கம், தனுசு என்றும்; ரிஷபம், கன்னி, மகரம் என்றும்; மிதுனம், துலாம், கும்பம் என்றும், கடகம், விருச்சிகம், மீனம் என்றும் சொல்லாநின்ற இத்திரிகோணங்களில் அந்தந்த கோண மூன்று வீட்டிலும் இருந்த பரல் ஒன்றுக்கொன்று அசமமாகில் சரி பண்ணுக. சமமாகில் முழுவதும் வாங்கிப் போடுக. மூன்றில் ஒன்று சூன்யமாகில் மற்ற இரண்டு வீட்டுப் பரலும் தொடாதிருக்க, இவை* ***திரிகோண சோதனையாம்.*** *மேட-விருச்சிகம், இடப-துலாம், மிதுன-கன்னி, தனுசு-மீனம், மகர-கும்பம் இவற்றை முன்போலும் சோதனை செய்க. இவற்றில் இரண்டில் ஒன்று சூனியமாகில் மற்றதும் வாங்கிப் போடுக. இரண்டு வீட்டிலும் கிரகங்கள் இருக்கில் தொடாதிருக்க. ஒரு வீட்டில் கிரகம் இருக்கில் மற்றதை முன்போலும் சோதனை செய்க. சிங்கம், கடகம் ஒவ்வொருவர் வீடாகையால் இவற்றிற்குச் சேதனை இல்லை. இவை* ***ஏகாதிபத்திய சோதனையாம்.***

## *இராசி குணாகரம், கிரக குணாகரம், குண சமுகம், சுத்தபிண்டம், ஏகசமுகம்*

சோதனை யிரண்டுமிழைத் ததன்மேற்சே வரியும்
    தொந்துவமும் மேடமும்பண் சுறவுநடை துயில்வேள்
பூதமொரு முதலாக மற்றவைக்கவ் வளவாய்ப்
    பொலிப்பதிவை ராசிகுண காரநிதி புகர்சேய்

சீதான்ற னவதாரம் வேடுயின்மற் றவர்க்காம்
சிசுவிவைப்பேர்க் கிரககுண காரமுற்சோ தனைசேர்த்
தோதல்குண சமுகமிரு காரஞ்சுத்த பிண்டத்
துக்கேச சமுகமுன்னோ ருற்றதைந்துக் குளதே. 81

*திரிகோண சோதனையும், ஏகாதிபத்திய சோதனையும் செய்ததின்பேரில் இராசி குணாகரம் செய்யும்படி, இடபத்துக்கு 10, மிதுனத்துக்கு 8, மேடத்துக்கு 7, கன்னி - மகரத்திற்கு 5, கடத்துக்கு 4, துலாத்துக்கு 7, விருச்சிகத்துக்கு 8, தனுசுக்கு 9, கும்பத்திற்கு 11, மீனத்திற்கு 12 ஆகிய இத்தொகையை வைத்துப் பெருக்குவது இராசி குணாகாரம். வியாழனுக்கு 10, சுக்கிரனுக்கு 7, சேய்க்கு 8, மற்றவர்கட்கு 5 வைத்துப் பெருக்குவ து கிரக குணகாரமாம். திரிகோணமும் ஏகாதிபத்தியமும் கூட்டுவது குணசமுகமாம். இராசி குணாகரமும் கிரக குணகாரமும் கூட்டுவது சுத்தபிண்டமாம். ஆதிப்பரல் முதல் கிரககுணகாரம் வரைக்கும் 5 தொகையும் கூட்டிச் சொல்வது ஏகசமுகமாம்.*

உற்றிடுமிப் பெயரிருநான் குக்குளவத் தொகையை
உயிர்த்தவன்தாய் பூணிர்சேய் இருவிலியெட் டினநேர்
சொற்றிடுமிப் பெயர்க்குளதால் பெருக்குவதத் தொகைநாட்
தொகைக்கீந்த வீவுவய துத்தொகைஈ வன்றி
மற்றதுமாத் தொட்டுவைத் தினப்பேர்தேய் மதிநாள்
வத்திரத்தொட் டுரைப்பரிவை அட்டவர்க் கமுமாய்
பற்றுதலவ் வயதுதின கண்டமென்பர் இதன்மேல்
பகர்தனர சக்கரத்துக் கிலயல்பதுரைப் பதுவே. 82

*முன்சொன்ன சோதனைப்படிக்கு உள்ள எட்டு வர்க்கமானவை ஆதிபரல், திரிகோணம், ஏகாதிபத்தியம், இராசிகுணாகரம், கிரக குணாகரம், குணசமுகம், சுத்தபிண்டம், ஏகாமுகம். இவை அட்டவர்க்கமாம். இவ்வகைப்படிக்குள்ள தொகையைத் தனித்தனியேவைத்து சூரியன் அட்டவர்க்குத்துக்கு சூரியன் நின்ற இராசிக்கு ஒன்பதாம் இடத்தில் இருந்த பரலைக் கொண்டு பெருக்கிக்*

காண்பது பிதாவுக்காம். சந்திரனுக்கு நான்காம் இடம், செவ்வாய்க்கு மூன்றாமிடம், புதனுக்கு நான்காம் இடம், குருவுக்கு ஐந்தாமிடம், சுக்கிரனுக்கு ஏழாமிடம், சனிக்கு எட்டாமிடமாக, அந்தந்த அட்டவர்க்கத்திற்குக் கண்ட பரலை இனம்தோறும் பெருக்கி, இருபத்தேழில் கழித்துக் கண்ட மிச்சம் பூர்வபட்சத்திற்கு அசுபதி முதலும், அமரபட்சத்துக்குச் சித்திரை முதலுமாக வைத்து எண்ணிக்கண்ட நட்சத்திரம் தினகண்டாமாம். இந்த ஈவு வயது கண்டமாம். இதன்மேல் நரசக்கரத்து இயல்பு சொல்லுவோம்.

அட்டவர்க்கப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் ஒன்பதுக்குக் கவி 82



## 10. நரசக்கரப் படலம்

உரைசெயுத யத்தினந்தொட் டிரவிசிரம் வாய்பூண்
உதரமுளம் கைகாலெட் டுலகிறைவாய் பூண்கோள்
இருகண்மி டறக்கையிரண் டணிபுடைகள் உடலம்
எச்சமகட் டிகளிரண் டெமலெமனுக் கிதன்மேல்
புரமிதழ்கை நீரடிநோ யாய்இடக்கை வயிறு
புத்திரரக் கம்மிடைவாக் குப்பூணச் சிரமாம்
தரமிடறங் கைகளணி தனையரக டிடைபொன்
தாடுயின்மால் இரசதமந் தணனரசக் கரமே. 83

*நரசக்கரம் அறியும் படி :* சென்ன நட்சத்திரம் தொட்டுச் சூரியனுக்குச் சிரசில் மூன்று, வாயில் மூன்று, வயிற்றில் ஐந்து, கையில் எட்டு, காலில் எட்டு ஆக இருபத்து ஏழு . சந்திரனுக்கு வாயில் மூன்று, வலக்கண்ணில் இரண்டு, இடக்கண்ணில் இரண்டு, கழுத்தில் மூன்று, வலக்கையில் மூன்று, இடக்கையில் மூன்று, வலப்பக்கத்தில் ஒன்று, இடப்பக்கத்தில் ஒன்று, வயிற்றில் ஐந்து, வலக்காலில் இரண்டு, இடக்காலில் இரண்டு ஆக இருபத்தேழு. சனிக்கு வாயில் ஒன்று, வலக்கையில் நான்கு, காலில் ஆறு, இடக்கையில் நான்கு, வயிற்றில் ஐந்து, கண்ணில் இரண்டு, அரையில் இரண்டு, சிரசில் மூன்று ஆக இருபத்து ஏழு. புத-குரு-சுக்கிரனுக்குச் சிரசில் மூன்று, கழுத்தில் மூன்று, வலக்கையில் மூன்று, இடக்கையில் மூன்று, வயிற்றில் ஐந்து, இடையில் இரண்டு காலில் எட்டு ஆக இருபத்து ஏழு

நரசக்கரப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் பத்திற்குக் கவி 83

---

??கூட்டுத்தொகை சரிபார்க்க

## 11. காலச்சக்கரப் படலம்

கரகளமச் சக்கரங்கேள் மாமுதல்மும் மூன்றாய்க்
கடத்துகநேர் வலவோட்டுக் கடுத்ததிட வொட்டாய்
வருமிதனேர் ஆதிஅந்த மாந்தினம்பத் ததற்கும்
வகுப்பர்முதல் காற்கொருநேர் ஒன்பதுமற் றவையோ
டெரியனுவி டைத்தான்மண் டூககதிக் காகும்
ஏறிடமா யாறிதன்மேல் தகர்முதலெய் துபுனம்
உரையலவ னேருளதென் பதுகடைக்கால் காமற்
றுளதின்முதல் காற்கிடமாய்த் தேண்முதலக் கதியே. 84

கும்போதயனாகிய அகத்தியமா முனியே! காலச்சக்கரம் கேட்பாயாக. அசுபதி, பரணி, கார்த்திகை வலவோட்டு; ரோகணி, மிருகசிரம், திருவாதிரை இடவோட்டு; புனர்பூசம், பூசம், ஆயிலியம் வலவோட்டு; மகம், பூரம், உத்திரம் இடவோட்டு; அத்தம், சித்திரை, சோதி வலவோட்டு; விசாகம், அனுசம், கேட்டை இடவோட்டு; மூலம், பூராடம், உத்திராடம், வலவோட்டு, திருவோணம், அவிட்டம், சதயம் இடவோட்டு; பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி வலவோட்டு நட்சத்திரமாம். இவற்றுள் வலவோட்டு ஆதியந்த நட்சத்திரம் பத்தில் முதல் காலுக்கு மேஷம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இரண்டாம் காலுக்கு கும்பம், மகரம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி, கடகம், சிங்கம், மிதுனம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. மூன்றாம் காலுக்கு இடபம், மேடம், மீனம், கும்பம், மகரம், தனுசு, மேடம், இடபம், மிதுனம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. நான்காம் காலுக்குக் கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இதன்மேல் வலவோட்டு நடு நட்சத்திரம் ஐந்தில் முதல் காலுக்கு விருச்சிகம், துலாம், கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், இடபம், மேஷம், மீனம் ஆக ஒன்பதும் நேர்நடத்துக.

முதற்கிடையில் இரண்டாங்கால் கும்பமுதல் தனுமேன்
மூவிரண்டு ஒருநேராம் கோன்முதலா றொருமூன்
றதற்கரிலோ கனமாகும் அலவனரி யாழ்தொட்
டவலமதாம் தனுவரைக்கீ தாந்தியக்காற் காகும்
இதற்கிதன மேலிடவொட் டுக்காதி முதற்காலுக்
கிடமாய்மீன் முதலாம்மேல் யாழிடமூன் றாறென்
பதற்கதுவின் நேராகும் மிதுனம்முதல் தேன்மேல்
பைஞ்சிலைதொட் டிடமூன்றிப் பதப்பெயருக் குளதே. 85

வலவோட்டு நட்சத்திரம் இரண்டாம் காலுக்குக் கும்பம், மகரம், தனுசு, மேடம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி ஆக ஒன்பதும் நேர் நடத்துக. மூன்றாம் காலுக்குத்துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், கன்னி ஆக ஒன்பதும் நேர் நடத்துக. நான்காம் காலுக்குக் கடகம், சிங்கம், மிதுனம், இடபம், மேஷம், மீனம், கும்பம், மகரம், தனுசு ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இதன்மேல் இடவோட்டு நட்சத்திரம் பன்னிரண்டில் ஆதி நட்சத்திரம் நான்கிற்கும் முதற்காலுக்கு மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, சிங்கம், கடகம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இரண்டாம் காலுக்கு மிதுனம், இடபம், மேடம், தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், இடபம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. மூன்றாம் காலுக்கு மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக.

பதமிடவொட் டாதியந்தத் தாஞ்சிலைநே ராய்த்தப்
பளைக்கெதிக்கா நடுமுதல் பற்றுதலீ திடமாய்
மதுரமொழி முதல்மூன்று மேலிருமூன் றிடமாய்
மச்சமுத லாகுமரி வைமுதலா றிடமக்
கதியொடுவின் நேர்மூன்றாங் கடைக்கால்மீன் முதலாக்
கதிநேரா மந்தியமுற் காற்றனுநேர் நான்காம்
துதியையிடந் தேளாய்நேர் தொந்துவமூன் றாநேர்
தோகைமுதன் மூன்றாறும் சொல்மீன்தொட் டிடமே. 86

இடவோட்டு ஆதிநட்சத்திரம் நான்காம் காலுக்குத் தனுசு, மகரம், கும்பம், மீனம், மேஷம், இடபம், மிதுனம், சிங்கம், கடகம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இதன்மேல் இடவோட்டு நடுநட்சத்திரம் முதற்காலுக்குத் தனுசு, விருச்சிகம், துலாம், கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், ரிஷபம், மேஷம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இரண்டாங் காலுக்குக் கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம் ஆகிய ஒன்பதும் நேர் நடத்துக. மூன்றாம் காலுக்குக் கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், இடபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம் ஆகிய ஒன்பதும் நேர் நடத்துக. நான்காம் காலுக்கு மீனம், மேஷம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இதன்மேல் இடவோட்டு அந்திய நட்சத்திரம் முதற்காலுக்குத் தனுசு, மகரம், கும்பம், மீனம், விருச்சிகம், துலாம், மிதுனம், கடகம், சிங்கம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. இரண்டாம் காலுக்குக் கன்னி, துலாம், விருச்சிகம், மீனம், கும்பம், மகரம், தனுசு, விருச்சிகம், துலாம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக.

இடமரிவை முதலாறக் கதியாய்வின் னேரும்
எட்டசமு மீனேரி திடவொட்டீ றிதற்காம்
சுடர்முதலான் டைந்திருபத் தொன்றேழொன் பதுபத்
தோரிரண்டெட் டோர்நான்கீ திவர்க்குளவில் தொறுமாய்
நடவதுமா வரியவலோ கனமிவைமுன் பின்பாய்
நடப்பதுமண் டூககதி விகிர்திநடைக் குளதாம்
குடமுனியே இதற்கபகா ரத்தியல்கேள் என்றான்
குறக்கொடிசேர்ந் திலகியபொற் குன்றெனநின் றவனே. 87

இடவோட்டு அந்திய நட்சத்திரம் மூன்றாம் காலுக்குக் கன்னி, கடகம், சிங்கம், மிதுனம், இடபம், மேஷம், தனுசு, மகரம், கும்பம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக. நான்காம் காலுக்கு மீனம், மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், மேஷம் ஆக ஒன்பதும் நேர் நடத்துக.

## காலச்சக்கர வருடம் அறியும்படி

சிங்க ஆதித்தனுக்கு வருடம் 5; கடக சந்திரனுக்கு வருடம் 21; விருச்சிக செவ்வாய்க்கு வருடம் 7; மிதுன-கன்னி புதனுக்கு வருடம் 9; மீன-தனுசு வியாழனுக்கு வருடம் 10; இடப-துலா சுக்கிரனுக்கு வருடம் 16; கும்ப-மகர சனிக்கு வருடம் 4. நேர் பாய்வது, துரகதி, மாறிப் பாய்வது, மிருகேந்திராவலோகனம் இவை கலந்து பாய்து மண்டூக கதியாம். கும்போதயனாகிய அகத்தியமா முனியே! இதற்கு அபகாரத்து இயல்பு கேட்பாயாக என்று திருவாய் மலர்ந்து அருளினவன் குறக்கொடியைச் சேர்ந்து இலாக நின்ற சாம்பூனக சைலம் போலும் நின்ற சுப்பிரமணியக் கடவுள்

## வலவோட்டுச்சக்கரம்

| அசுபதி, கார்த்திகை, புனர்பூசம், ஆயிலியம், அத்தம், சோதி, மூலம், உத்திரம், பூரட்டாதி, ரேவதி | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒன்றாங்கால் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| இரண்டாங்கால் | 10 | 11 | 12 | 8 | 7 | 6 | 4 | 5 | 3 |
| மூன்றாங்கால் | 2 | 1 | 12 | 11 | 10 | 9 | 1 | 2 | 3 |
| நான்காம் கால் | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |

| பரணி, பூசம், சித்திரை, பூராடம், உத்திரட்டாதி | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒன்றாங்கால் | 8 | 7 | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 12 |
| இரண்டாங்கால் | 11 | 10 | 9 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| மூன்றாங்கால் | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 8 | 7 | 6 |
| நான்காம் கால் | 4 | 5 | 3 | 2 | 1 | 12 | 11 | 10 | 9 |

## இடவோட்டுச்சக்கரம்

| உரோகிணி, மகம், விசாகம், திருவோணம் | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒன்றாங்கால் | 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 | 5 | 4 |
| இரண்டாங்கால் | 3 | 2 | 1 | 9 | 10 | 11 | 12 | 1 | 2 |
| மூன்றாங்கால் | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 12 | 11 | 10 |
| நான்காம் கால் | 9 | 10 | 11 | 12 | 1 | 2 | 3 | 5 | 4 |

| மிருகசிரம், பூரம், அனுஷம், அவிட்டம் | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒன்றாங்கால் | 9 | 8 | 7 | 6 | 4 | 5 | 3 | 2 | 1 |
| இரண்டாங்கால் | 6 | 7 | 8 | 12 | 11 | 10 | 9 | 8 | 7 |
| மூன்றாங்கால் | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 9 | 10 | 11 |
| நான்காம் கால் | 12 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |

| திருவாதிரை, உத்தரம், கேட்டை, சதயம் | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஒன்றாங்கால் | 9 | 10 | 11 | 12 | 8 | 7 | 3 | 4 | 5 |
| இரண்டாங்கால் | 6 | 7 | 8 | 12 | 11 | 10 | 9 | 8 | 7 |
| மூன்றாங்கால் | 6 | 4 | 5 | 3 | 2 | 1 | 9 | 10 | 11 |
| நான்காம் கால் | 12 | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 9 |

அவகாரத் தியல்பயநோ ரிவைவரை வலவோட்
டாதிமுதல் நடுவிரண்டாங் காலளவு மாந்தொந்
துவநேரா றொருமூன்று மீனிடமாம் வின்னோர்
சொல்வதிட மாமொருநேர் மற்றுளதுக் குளதாம்
தவளநடைக் கரிவைகுளிந் தபனனிலவீ ணையுமாம்
தகர்தலுமீன் விருச்சிகமும் தனுதகர்தேள் கயலும்
இவைஅரிமா வென்றுமிரு துற்கதிநேர்க் குளதாம்
இதன்மேன்மா திசைக்குளது இசைப்பதகத் தியனே. 88

## *காலச்சக்கரத்திசைக்கு அபகாரம் அறியும்படி*

மேட திசை முதலாகக் கன்னிவரை திசை ஆறுக்கும் வலவோட்டு ஆதியந்த நட்சத்திரத்தில் நான்கு நடுநட்சத்திரம் முதல்கால் இரண்டாங்கால் ஆக ஆறு கால்வரைக்கும் நடத்துவதுபோல் நடத்துக. துலா திசைக்கு மிதுனம் முதல் ஆறும், மீன முதல் இடமாக மூன்றுமாக ஒன்பதும் நடத்துக. விருச்சிக திசைக்கு தனுமுதல் இடமாக மேடம்வரை ஒன்பதும் நேர் நடத்துக. தனு திசை முதல் மீன திசை வரைக்கும் மேடம் முதல் கடகம் நடத்துவதுபோல் நேர் நடத்துக. மண்டூக ஸ்தானம் கன்னி, கடகம், சிங்கம், மிதுனம்; மிருகேந்திராவலோக கனத்துக்கு ஸ்தானம் மேடம், தனுசு, மீனம், விருச்சிகம்; துரககதிக்கு ஸ்தானம் தனுசு, மேடம், விருச்சிகம், மீனம். இதன்மேல் மகாதிசை இயல்பும் கேட்பாயாக அகத்தியமா முனியே!

காலச்சக்கரப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் பதினொன்றுக்குக் கவி 88

### 12. மகாதிசைப் படலம்

திசைக்கிரவி முதலவருற் றிடுந்தின்தொட் டுரைப்பர்
சிரமுதற்றா யளவுமிவர் சேரிடம்ஈ றாய்ச்சேர்த்
திசைப்பதொற்றை நேரிடமற் றதற்காமீ திரண்டாய்
இயம்புதன மூவேழ திசைக்காமிதற் கித்திறமாய்
அசைப்பதப காரமவர் நேருளமற் றவரும்
அவரவருக் கமைத்ததைமற் றவருமருந் துவரால்
தசத்துளமா தத்தொகைசம் வச்சரமா திசைக்காம்
தகர்முதலக் கடிகையிநேர் தற்பிரிவுக் குரையே. 89

சூரியாதி கேதுவரை ஒன்பது பேருக்கும் சாதகர் பிறந்த நட்சத்திரம் தொட்டு நடத்துவது மகாதிசையாம். இலக்கனம் முதல் பன்னிரண்டாம் இடம் வரைக்கும் அந்தந்த இராசிக்கு உடையவர்கள் இருந்த இடம் ஈறாக, அந்தந்த இராசி முதலாக

வைத்து ஒற்றைக்கு நேரும், இரட்டைக்கு இடமுமாக நடத்துவது பாவக திசையாம். இவை திசை இருபத்து ஒன்றுக்கும் என்ப. இவற்றிற்கு அபகாரம் அறியும்படி அவரவர்க்குள்ள திசை வருடத்தை வைத்து, அத்திசைநாதன் முதல் நேர் மற்றவரும் அவரவர் திசைப்படி பொசிப்பார்கள். மகாதிசை ஒன்பதுக்கும் பத்து மாதப்படி வருடம் நடத்துக. இதன்மேல் பாவக திசைக்கு அபகாரம் அறியும்படி மேடம் முதல் அந்தந்த இராசி நாழிகைப்படி நடத்துக.

ஒவ்வொருவனுடைய மகாதிசை வருடத்தையும் நூற்று இருபதிற்குக் கொடுத்துக் கண்ட ஈவு அபகாரத் துருவம். இந்தத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருடத்தில் பெருக்கிக் கண்ட தொகை அபகார காலமாம்.

ஒவ்வொருவனுடைய அபகார காலத்தையும் நூற்று இருபதிற்குக் கொடுத்துக் கண்ட ஈவு சித்திரத் துருவம். இந்தத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருடத்தில் பெருக்கிக் கண்ட தொகை சித்திர காலமாம்.

ஒவ்வொருவனுடைய சித்திர காலத்தையும் நூற்று இருபதிற்குக் கொடுத்துக்கண்ட ஈவு சூக்ஷ்ம துருவம். இந்தத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருடத்தில் பெருக்கிக் கண்ட தொகை சூக்ஷ்ம காலமாம்.

ஒவ்வொருவனுடைய சூக்ஷ்ம காலத்தையும் நூற்று இருபதிற்குக் கொடுத்துக் கண்ட ஈவு பிராணத் துருவம். இந்தத் துருவத்தை ஒவ்வொருவனுடைய மகாதிசை வருடத்தில் பெருக்கிக் கண்ட தொகை பிராணகாலமாம்.

மகாதிசைப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் பன்னிரண்டிற்குக் கவி 89

## 13. பாசகால வர்க்கப் படலம்

உரைத்திடுபா சம்போதும் கார்வேது மகப்பே
ருடனுதிபர் நால்வர்சுக னொருவனிதி புதனும்
மெருத்தனனல் சனியினனும் இளம்மதிசுன் தனமும்
இந்துகுருப் புகர்சேயும் எமனலவற் றிவியும
கருத்தறிவன் இரவிஇதுக் காரியும்பார்க் கவன்தற்
கடகம்வில் தேளினரும் இவர்கதிரவி நேர்க்குளராம்
விருத்தமொன்றீ கன்றீருநான் மேல்கீழ்பிற் பாதி
மேவிதனுக் கொன்றுவிடல் மித்திரர்மற் றதுவே. 90

பாசகன், போதகன், காரகன், வேதகன் இவர்கள் நால்வரும் பாசகாதிகளாம். இரவி திசைக்குச் சனி பாசகன், சேய் போதகன், குரு காரகன், புதன் வேதகன். சந்திர திசைக்குச் சுக்கிரன் பாசகன், சேய் போதகன், சனி காரகன், இரவி வேதகன், செவ்வாய் திசைக்கு இரவி பாசகன், மதி போதகன், சனி காரகன், குரு வேதகன். புதன் திசைக்கு மதி பாசகன், குரு போதகன், சுக்கிரன் காரகன், சேய் வேதகன். வியாழன் திசைக்குச் சனி பாசகன், சேய் போதகன், மதி காரகன், இரவி வேதகன். சுக்கிர திசைக்குப் புதன் பாசகன், இரவி போதகன், மதி காரகன், சனி வேதகன். சனி திசைக்குச் சுக்கிரன் பாசகன், மதி போதகன், குரு காரகன், சேய் வேதகன்.

| திசை | பாசகாதிகள் | | | |
|---|---|---|---|---|
| | பாசகன் | போதகன் | காரகன் | வேதகன் |
| சூரியன் | சனி | செவ்வாய் | குரு | புதன் |
| சந்திரன் | சுக்கிரன் | செவ்வாய் | சனி | சூரியன் |
| செவ்வாய் | சூரியன் | சந்திரன் | சனி | குரு |
| புதன் | சந்திரன் | குரு | சுக்கிரன் | செவ்வாய் |
| வியாழன் | சனி | செவ்வாய் | சந்திரன் | சூரியன் |
| சுக்கிரன் | புதன் | சூரியன் | சந்திரன் | சனி |
| சனி | சுக்கிரன் | சந்திரன் | குரு | செவ்வாய் |

இரவி திசைக்குப் பாசகன் சத்துரு. சந்திர திசைக்குப் போதகனும், காரகனும், வேதகனும் சத்துரு. சேய் திசைக்கு வேதகன் சத்துரு. புதன் திசைக்கு வேதகன் சத்துரு. வியாழ திசைக்குப் பாசகனும் வேதகனும் சத்துரு. சனி திசைக்குப் பாசகனும் காரகனும் சத்துரு. மற்றவர்கள் மித்திரராம்.

மற்றிடநோய் வேறைம்வர்த் தனையாம்வாய் நவலா
வம்மணியாம் வாக்கறமண் ணன்வியமாம் வாயில்
உற்றவர்பூ ணாமாறைந் துருவிலிஈ றாம்வாய்
உதரம்விய நீராம்பூ ணணநோய்தா ரமுமாம்
முற்றிறம்போல் அவரவருற் றிடமிடம்முன் னேர்க்காம்
முகமழநோய் மால்புகர்வேன் முற்றிசைபொற் காலூழ்க்
கற்றனையன் இவர்க்ககிக்கற் பாயுசனி இராகு
இரவிமதி புகர்சிகிமால் இவர்காலப் பகையே. 91

இரவி திசையில் பாசகனுக்கு ஆறாம் இடமும், போதகனுக்கு ஏழாம் இடமும், காரகனுக்கு ஒன்பதாம் இடமும், வேதகனுக்குப் பதினொராம் இடமும் தானமாம். சந்திர திசையில் பாசகனுக்கு இரண்டாம் இடமும், போதகனுக்கு ஒன்பதமா இடமும், காரகனுக்குப் பதினோரம் இடமும் வேதகனுக்கு மூன்றாம் இடமும் தானமாம். சேய் திசையில் பாசகனுக்கு இரண்டாம் இடமும், போதகனுக்கு ஒன்பதாம் இடமும், காரகனுக்குப் பதினோராம் இடமும், வேதகனுக்குப் பன்னிரண்டாம் இடமும் தானமாம். புதன் திசையில் பாசகனுக்கு இரண்டாம் இடமும், போதகனுக்கு நான்காம் இடமும், காரகனுக்கு ஐந்தாம் இடமும், வேதகனுக்கு மூன்றாம் இடமும் தானமாம். வியாழ திசையில் பாசகனுக்கு ஆறாம் இடமும், போதகனுக்கு ஐந்தாம் இடமும் காரகனுக்கு ஏழாம் இடமும், வேதகனுக்குப் பன்னிரண்டாம் இடமும் தானமாம். சுக்கிர திசையில் பாசகனுக்கு இரண்டாம் இடமும், போதகனுக்கு ஆறாம் இடமும், காரகனுக்குப் பன்னிரண்டாம் இடமும், வேதகனுக்கு நான்காம் இடமும் தானமாம். சனி திசையில் பாசகனுக்கு மூன்றாம் இடமும் போதகனுக்கு பதினோராம் இடமும், காரகனுக்கு ஆறாம் இடமும், வேதகனுக்கு ஏழாம் இடமும் தானமாம்.

### *காலம் அறியும்படி*

சொன்னமுதல் சேய் காலம் வருடம் இரண்டு, மேல் புதன் வருடம் ஆறு. மேல் சுக்கிரன் வருடம் ஏழு. மேல் வியாழன் வருடம் பதினாறு. மேல் ஆதித்தன் வருடம் பதினெட்டு. மேல் சனி வருடம் பத்தொன்பது, மேல் இராகு வருடம் முப்பத்து ஒன்று.

### *இவற்றிற்குப் பகை அறியும்படி*

சேய்காலம் சனி திசைக்குப் பகை, புதன் காலம் இராகு திசைக்குப் பகை, சுக்கிரன் காலம் இரவி திசைக்குப் பகை, வியாழன் காலம் மதி திசைக்குப் பகை, ஆதித்தன் காலம் சுக்கிர திசைக்குப் பகை. சனி காலம் கேது திசைக்குப் பகை, இராகு காலம் புதன் திசைக்குப் பகை. இவை காலப்பகையாம்.

பாசகால வர்க்கப் படலம் முற்றிற்று.
ஆகப் படலம் பதிமூன்றுக்குக் கவி 91

## 14. நாழிகையியல் படலம்

**காலனவேழ் கொன்றசநேர் கன்னிவரைக் கணியாய்**
**கருத்திறையில் உண்டுலைநேர் கெற்கடிகைக் கரையை**
**வேலையிலேற் றினகழித்தல் பகற்கிரத நேர்நோய்**
**வியந்தரும முன்னடுவீ றுச்சமிம்மீன் வரையாய்**
**நீலரிமா தம்முதனேர்க் கிவைகோள்நேர்க் கிடநான்**
**இரத்தலொன் பான்காலொ டைந்துநேர்நிறுத் தனிசிக்கரம்**
**சாலமையீர் தொழித்திடில்செல் காலம்விட்டைங் கானேர்**
**தளலொருகால் கிறுவிரநேர் சாற்றுதல்நா ழிகைக்கே.** 92

### *பகல் நாழிகை அறியும்படி*

*அளந்த அடியுடன் ஏழு கூட்டிச் சித்திரை மாதம் முதல் புரட்டாசி வரைக்கும் ஒன்றும், ஐப்பசிக்கு மூன்றும், கார்த்திகைக்கு நான்கும், மார்கழிக்கு ஐந்தும், மாசிக்கு நான்கும், பங்குனிக்கு இரண்டும் அவச்சாயை தள்ளி நின்ற*

அடிக்கு அந்தந்த மாதப் பகல் நாழிகை பாதியை ஏழில் பெருக்கிக் கொடுக்கக் கண்ட ஈவு பகல் நாழிகையாம்.

## இரவு நாழிகை அறியும்படி

உரோகணி, மிருகசிரம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயிலியம் இவை ஆறும் உச்சம் வருமுன் உச்சமாம். மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சோதி, விசாகம், அனுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம் இவை பன்னிரண்டும் உச்சம் வந்து உச்சமாம். திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுபதி, பரணி, கார்த்திகை இவை ஒன்பதும் உச்சம் திரிந்து உச்சமாம். ஆவணி முதல் மாதம் நான்கிற்கு அனுஷம் முதலாகவும், மார்கழி முதல் மாதம் நான்கிற்கு உத்திரட்டாதி முதலாகவும், சித்திரை முதல் மாதம் நான்கிற்கு பூசம் முதலாகவும் வைத்து உச்சமான நட்சத்திரம் வரையும் எண்ணிக்கண்ட தொகையை இரண்டேகாலில் பெருக்கி, முன்சொன்ன ஆவணி முதல் மாதம் ஒன்றுக்கு ஐந்தாகத் தள்ளி நின்றதொகை இரவு நாழிகையாம். பகலும் - இரவும் மேக சஞ்சாரமாகில், நாழிகை அறியும்படி, செல்காலம் மூன்றே முக்கால் வீதம் தள்ளி, சிறுவரல் நேர், ஒன்றே கால், ஒன்று, முக்கால், அரை, கால் நாழியாக வைத்துத் தொட்டவிரல் அறிந்து கண்ட நாழிகைக் கூட்டிச் சொல்லுக.

## நாழிகையறியும் வீதம்

சாற்றுதல்நா ழிகைப்பேருக் காலுவிதத் தைவீ
சரம்விரல்ராப் பகறமைத்தல் சனத்துரைசேர்த் திசைத்தன்
மேற்றன்மனத் தாற்கணித்தற் குடையவன்தற் பரைக்கும்
விதிப்பவனாம் மற்றவரால் விளம்புகல்சற் றரிதான்
காற்றசனம் ருத்திரபேர்க் குதித்திரண்டீ ரிரண்டாம்
கடிகையதாம் இவைமூல காண்டவியற் குளதாம்
மேற்றிறைமற் றோர்க்கொருவன் னெனமலையத் துதித்தான்
இதன்மேலே உரைப்பதென்றால் என்னிதயத் தவனே. 93

பஞ்சபட்சி, சரம், விரல் தொடல், இராப்பகல் நாழிகை அறிவதற்கு அமைத்த விதி, சனங்கள் உரை சேகரித்து உரைத்தல், மனோகணிதத் தறிதல் ஆகிய இந்த ஆறுவிதத்தினாலும் நாழிகை அறியத்தக்கது. இந்த ஆறுவகையும் கண்டு உரைப்பவன் தற்பரை வரைக்கும் சொல்லுவன். மற்றவரால் கண்டுரைப்பது சற்று அரிதாகும். உதித்து இரண்டாம் நாழிகை சர்ப்ப முகூர்த்தம். நான்காம் நாழிகை உருத்திர முகூர்த்தமாகும். இவ்வளவும் மூலகண்டத்து இயல்பாம், ஈசன் முதலிய தேவர்களுக்கும் ஒருவனாகப் பொதியாசலத்தில் உதயமான அகத்தியமா முனியே! இதன்மேல் சொல்லவேண்டுவது ஏதென்று திருவாய் மலர்ந்து அருளினவன் என் இதயசரோருக வாசனான சுப்பிரமணியக் கடவுள்.

நாழிகையியல் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் பதினான்கிற்குக் கவி 93

***மூலகாண்டம் முடிந்தது.***



# சாதக காண்டம்

## 15. இலக்கின உதயப் படலம்

எண்ணிதயத் துளதிலது முன்னுளத்தல் லாதொன்
றெனக்குளதோ பலத்தியல்சொற் றிடனைக்கேட் பதுவே
துன்னுடைய காப்பாய்நா ழிகைத்திறமீ றளவும்
உள்ளவெல்லாம் தெள்ளமிழ்தில் ஊறியசெம் பாகக்
கன்னல்இர சத்துளிபோல் சிறிதுசிறி தாய்நீ
கழறலும்யான் குழறலும்கேட் டுன்னிதயங் களித்துப்
பின்னும்உரை என்றனெஉன் அன்பருக்கன் புடையேன்
பெற்றதுபோல் அத்தஉனைப் பெற்றவர்க்கும் இலையே. 94

*சுவாமி ! இதன்மேல் சொல்லவேண்டுவது ஏது என்று திருவுளம் பற்றாமுன்னம் அகத்திய மாமுனி சொல்லும் உத்தரம், அடியேன் உள்ளத்தில் உள்ளதும் இல்லாததும் திருவுளம் அறியாதது ஒன்றுமில்லை. அதனால் இதன்மேல் பலத்தியல்பு சொல்லவேண்டுவது திருவளத்தில் இருக்க, அடியனைக் கேட்பது எவ்வாறு தேவரீர்! காப்பு முதலாக நாழிகைத் திறம் வரையும் நடத்திய சகல விருத்தாந்தமும் தெளிவினையுடைய தேவாமிர்தத்தில் பதபாகமாக ஊறிய கரும்பினது சுவை சுரந்து துளிதுளிப்பனபோல் சிறிது சிறிதாக அடியேனுக்கு அறியும்படி தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய ஆதிசிவன் அத்தை அடியேனுக்குப் பயிற்றுவித்து அடியேன் புன்சொல்லாய்க் குழறிய வசனத்தைத் திருச்செவியில் ஏற்றுச் சித்தம் களிகூர்ந்து இன்னம் சொல்லுவாயாக என்று அடியேனை அடுத்தடுத்துக் கேட்பதால் சுவாமீ உன்னுடைய அன்பருக்கு அன்பாகிய யான்பெற்ற பேறும் என்னைப் பெற்றவர் உன்னைப் பெற்ற உருத்திரமூர்த்திகும் கிடைத்ததல்ல*

பெற்றவனுக் கொருகுருவே சொற்றிடெனத் தாழ்ந்த
பிரமன்மகற் கவனுமுத யத்தியல்பே சினநான்
முற்றலநேர் புகந்தோறும் இலிங்கவியல் கலித
மூர்த்தமூல குதயமென மொழிவததா முதற்கோன்

உற்றதுடல் குளதிவ்னோ ராரூடம் கடிகை
உதயமுதல் ஒன்றதிரண் டரையோரைக் குலகோர்
சொற்றிடுநா மத்துடைய ததற்காம்அவ் வாரத்
துடையவன்தொட் டைந்தாகத் தோன்றுதல்பா வகமே.

*தன்னைப் பெற்ற பிதாவுக்கு ஒப்பற்ற குருவாகியவா! இலக்கின உதயத்து இயல்பு திருவுளம்பற்ற வேண்டுவது என்று தெண்டம் பண்ணா நின்ற அகத்திய மாமுனிக்கு சுவாமி திருவாய் மலர்ந்தருளினது.*

கிரேதாயுகத்துக்கு நிஷேக முகூர்த்தமே சென்ம இலக்கினம். திரேதாயுகத்துக்கு ஆதான முகூர்த்தமே சென்ம இலக்கினம். துவாபரயுகத்துக்கு சிரோதயமே சென்ம இலக்கினம். கலியுகத்துக்குப் பூவோதயமே சென்ம இலக்கினம், இலக்கனேசன் இருந்த இராசி இலக்கனத்துக்கு எவ்வளவோ அவ்வளவு இலக்கனேசனைத் தொட்டுச் சொல்வது ஆரூட இலக்கனமாம். உதயாதி சனனம் தம்தம் சென்ற நாழிகையை ஒவ்வொன்றாக உதயம் முதல் நேர் நடத்துவது கடிகா இலக்கனமாம். இரண்டரை நாழிகையாக நடத்துவது ஓரா இலக்கனமாம். தனது நாம நட்சத்திர இராசியேநாமலக்னமாம். அவற்றை வாராதிபனைத் தொட்டு ஐந்து நாழிகையாக நடத்துவது பாவ இலக்கினமாம்.

பாவகபேர்க் குரைத்திடுகா ரகப்பெயர்க்கத் தலமாம்
பாருதயத் தங்கிசம தாமதனைப் பகிர்ந்த
மூவகைக்கா ணுக்கதுபெண் ணுக்கேழ்நே ராக
முதலறமைந் திவைசரநேர் மொழுததிரேக் காண
மாவிறையா திபன்முதலோர்க் கிருப்பிடமா தவற்கோண்
வருசரந்தொட் டுதையமுதற் கால்கனல்சீ வனுமாய்
சேவிறைக்கா திபபதிக்கோள் உபயம்உடற் கிறைகோள்
திறமழியாப் புகழிவைலக் கனத்தியல்சொற் றிடிலே. 96

இலக்கனம் முதல் பன்னிரண்டு பாவகங்களுக்கும் பேராகச்சொல்லிய அந்தக் காரகங்களுக்கு அந்தந்தத் தானமே காரக இலக்கனமாம். இலக்கனாங்கிசமே அங்கிச

இலக்கனமாம். இலக்கனத் திரேக்காணம் மூன்றுக்கும் புருட இராசிக்கு அதுமுதல் நேரும் ஸ்திரீ இராசிக்கு ஏழாமிடம் முதல் நேருமாக நடத்துவதில் சர, திர, உபயம் கண்டு ஒன்று, ஐந்து, ஒன்பது தொட்டு நேர் செல்வது திரேக்காண இலக்கனமாம். இரவி முதல் உள்ளவர்களுக்குத் தம் இருப்பிடமே கிரக இலக்கனமாம். இரவி திரிகோண சர ராசி தொட்டு உதயம் முதல் கால் கடிகையாக நடத்துவது சீவ இலக்கனமாம். சுக்கிரன் இருந்த இராசியே ஆதிபத்திய இலக்கனமாம். சந்திரத் திரிகோண உபய ராசியே தேக இலக்கனமாம். இலக்கனேசத் திரிகோணத் ஸ்திர இராசியே பிரபல இலக்கனமாம். இவை இலக்கனத்து இயல்பு.

சொற்றிடும்இப் பெயர்ப்படிலக் கினப்பலம்அப் பலமாய்ச்
சொல்வர்இதன் மேலுதயத் துளவியல்போ துங்கான்
நற்றினமற் றதும்சுபமாய் நாட்கிறையா தவனும்
நட்புறவீ றிதயரொன்றாய் கண்ணுமுத யத்தில்
பொற்றனதின் உறவினர புருடவர்க்கத் தாக
புகரனைபத் தனல்கோள்கேந் திரமவர்கள் பொருந்த
உற்றதிப்பேர் தேவதிர தாதுவர்க்கோத் தமமாய்
உச்சஉச்சாங் கிசமாகில் தேவவின்போ தயமே. 97

முன்சொல்லிய இலக்கன வகைக்கெல்லாம் அந்தந்த வர்க்கத்துக்கு உள்ள பலனை அந்தந்த இலக்கனம் தொட்டு நடத்துக. இதன்மேல் உதயபலன் சொல்லுங்கால் திதி, வாரம், நட்சத்திரம் முதலானவை சுபமாகவும்; இரவி, மதி தங்களில் நட்பாகவும், பன்னிரண்டு, ஐந்துக்குடையவர்கள் கூடி இலக்கனத்தில் இருக்கவும், இந்த இலக்கனம் குருவுக்கு ஆட்சி, நட்பு, நரபுருட இராசியாகக் கூடவும், நான்கில் சுக்கிரனும் பத்தில் சேயும் கோண கேந்திரமுமாக மற்றவர்கள் இருக்கவும் இவர்கள் தேவ, தாது, திர வர்க்கம் ஏறி வர்க்கோத்தமம் ஆகவும் உச்சமாகி உச்சாங்கிசம் ஏறவும் ஆகிய இவை முதலானவை சேகரமாகில் தேவவின்போதய சனனமாம்.

உதயமுதல் கேந்திரஉச்சம் குருபுதனும் சிதனோ
டுடுபதியும் சனியும்அனல் உதயவனும் உறில்பார்
அதிசயவின் போதயமாம் அதற்குளதா தாதி
ஆகஉருப் பேரதற்காம் ஆட்சிஉச்சம் மனுவீ
டிதுமுதலுள் ளதற்கதுவாய் ஈசன்முதல் இதர
வீறாமப் பெயர்க்கியல்பாய் இனிக்கொடிவேர் கிழங்கு
விதைதழைகொம் பிவையால்உண் டாம்மூல வர்க்கம்
விபரமும்கேள் போதுதய வேதியன்புத் திரனே.

இலக்கனத்தில் குருவும் புதனும், கேந்திரத்தில் சுக்கிரனும் சந்திரனும், உச்சத்தில் சனியும் செவ்வாயும் இலக்கனேசனும் குடியிருக்கில் அதிசய வின்போத சனனமாம். தாது, மூல, சீவ வர்க்கங்களில் ஏறுவது அறிவந்து உருவியல் சொல்லுக. கிரக பெலாபெலம் அறிந்து ஈசன் முதல் இதர தெய்வம் ஈறாகப் பொருந்தும் பெயர் சொல்லுக. இனிமேல் கொடி, வேர், கிழங்கு, விதை, தழை, கொம்பர் இந்த வர்க்கங்களினால் உதயமாகும் மூலவர்க்க சனனம் கேட்பாயாக, செந்தாமரை புஷ்ப உதயனாகிய பிரமதேவனுக்குப் புத்திரனான அகத்தியமா முனியே!

இரவிமுதல் நேர்உதயத் தியல்பிவைமூ லமுமாய்
எமன்புகர்வர்க் கமும்ஆகி ஏகமிசைக் கிறைவன்
வரிலினனற் கிறைகாழ்ப்பின் மால்சிதனந் தணர்க்குண்
மற்றவர்க்குப் புறங்காழ்ப்பாம் அவர்க்குரைத்த மரமும்
தரைஇடமும் ருசிவகையும் தான்யமற்றும் தெரிந்து
தருச்சனனம் சொல்வர்முதல் போலுதயத் தவர்க்கண்
மிருகவியல் பாகவரில் அவரவருக் கிசைந்த
விபரமதாம் இதன்மேலும் விளம்புதல்சற் றுளதே. 99

இரவி முதலான கிரகங்களும் இலக்கனமும் மூலவர்க்கமும் சனி, சுக்கிர வர்க்கமுமாகி, பத்துக்குடையவன் இலக்கன உதயமாகில் தரு சனனம். இவ்வர்க்கம் இரவி, மதியாகில் வைரம் இல்லாதவை. புதன், குரு, சுக்கிர வர்க்கமாகில் உள்வைரம். மற்றவைகளாகில் புறவைரம். இதன் மேலும் இவர்களுக்குச் சொன்ன மரமும் இடமும்

ருசிவகையும் தானியவகையும் இலை, கனி, வேர், தோல், கிழங்கு முதலான வர்க்கங்களுக்கெல்லாம் முன்சொன்ன வையும் அறிந்து தருவர்க்க சனனம் சொல்லுக. முன்சொன்னபடி சூரியாதி கிரகங்களும் இலக்கனமும் மிருக வர்க்கமாகில் அவரவர்க்கு அமைந்த மிருகவர்க்கம் சொல்லுக. இதன் மேலும் சொல்லுதல் சிறிதுண்டு.

**விளம்புதயத் தில்லிசையர் மிருகவர்த்த மாதன்**
**மேடரவிக் கெனில்வேங்கை கரடிபுதன் விடைபொன்**
**களங்கன்மக னைக்கூடில் கவிகுருமா சேய்மான்**
**கனல்கதைபெண் அரிஅலவன் ஒட்டகைசிங் கத்தே**
**விளம்புலிமாய் குரங்குசித னாய்தனுப்பொன் கலையாம்**
**எவ்விடத்தும் இரவிமுதல் இனர்க்குளதும் இசைப்பர்**
**பளிங்கதிபன் நீசமுறில் பூனைசுறச் சனியேல்**
**பட்டிபன்றி யாமிவைபோல் பகர்வதுமற் றுளதே. 100**

இலக்கனமும் நான்கு, பத்துக்குடையவர்களும் மிருக வர்க்கமாய்க் கூடில் மிருகசனனம். இவை மேடரவியாகில் புலி, புதனாகில் கரடி, இடப வியாழன் புதனைக் கூடில் குரங்கு, வியாழன் தனிக்கில் குதிரை, சேயாகில் மான், செவ்வாய் மிதுன - கன்னியில் இருக்கில் நரி, கடகத்தில் இருக்கில் ஒட்டகம், சிங்கத்தில் இருக்கில் புலி, இந்தச் சிங்கத்தில் புதனாகில் குரங்கு, சுக்கிரனாகில் நாய், தனு குருவாகில் கலை. இதன்மேலும் மேடாதி சூரியாதி கிரகங்களுக்குச் சொன்ன மிருகங்களும் கூட்டிச் சொல்லுக. இதல்லாமலும் நீச சுக்கிரனுக்குப் பூனையும், மகரச் சனிக்கு நாய், பன்றியும் சொல்லுக. இவைபோல் மற்றுள்ள மிருக சனனமும் கண்டு சொல்லுக.

**உளத்தினுக்கா றுதயர்கலை வர்க்கமும்புள் வர்க்கத்**
**துறிலினனேர் மயிலனம்செம் போத்துடனா யுதக்கால்**
**கிளித்திருமன் ஊர்திநரை யான்காகம் கூகை**
**சித்துருமங் கயலாகில் கிரிச்சன மாந்தை**

வளர்த்தமர்செய் வதுபூவை வல்லூரப் புறவு
 வானெடிய கரிக்குருவி தாராவீ மழுமா
நளிர்ப்பவுன்பு னரிலிவை ஊர்வனவுக் குளதாய்
 நவில்வததற் கதுவாய்நேர் நளினன்முதற் குளதே. 101

பத்துகுடையவனும் இலக்கனேசனும் பறவை வர்க்கமாகி மகரத்தில் கூடில் பட்சி சனனம். இப்படிக்கு இரவி கூடில் மயில், மதி கூடில் அன்னம், சேய் கூடில் செம்போத்துடனே கோழி, புதன் கூடில் கிளி, வியாழன் கூடில் கருடன், சுக்கிரன் கூடில் நரையான், சனி கூடில் காகம், இராகு கூடில் கூகை, கேது கூடில் கித்துருமப் பட்சி. இந்தப்படிக்கு மீனமாகி இரவி கூடில் கழுகு. மதி கூடில் ஆந்தை, சேய் கூடில் காடை, புதன் கூடில் நாகணவாய்புள், வியாழன் கூடில் வல்லூறு, சுக்கிரன் கூடில் புறா. சனி கூடில் கரிக்குருவி, இராகு கூடில் தரா. கேது கூடில் ஈமப்புள்ளாம்.

## கீடசனனம் அறியும்படி

கடக - விருச்சிக லக்கனமும் கீடவர்க்கமும் கண்டு இரவி முதல் உள்ள கிரகங்களுக்குக் கீடவகை சொல்லுக.

இனன்முதல்வர்க் கிசைந்ததினால் மேல்கீழ்மற் றிதனால்
 இதற்குளதூர் தனநடப்ப திதில்கவழ்தல் பாய்தல்
சனிமுதனோர் தருவுமல கிப்பிவளை முதல
 சயனரிபுப் பேனெறும்பும் தலைவிஷந்தே னுளவு
மனுஷர்சுரர் மற்றுளது மைந்தறிவாய்ப் புனலூர்
 வனவரைவா னடவடிமற் றுளதும்வகுத் துரைத்த
அனநடவுக் கொருதனைய அவரவருக் குளதாய்
 அறிந்துரைப்பர் இதன்மேல்மா னிடசனனோ தயமே. 102

சூரியாதி கிரகங்களுக்கு உரைத்த வர்க்கத்தினாலும், மேல்-கீழ்-இடைநிலைக் கிரக வர்க்கத்தினாலும், இவற்றுள் ஊர்வன, நடப்பன, பறப்பன, தவழ்வன, பாய்வனவாகிய இந்த வர்க்கங்களினாலும், ஐவகை அறிவினுக்குள் ஓரறிவாகிய தரு வருக்கம் சனியாகவும், ஈரறிவாகிய அலகு, சிப்பி, சங்கு முதலானவை புதனாகவும், மூவறிவாகிய

முட்டை, பேன், எறும்பு முதலானவை சேயாகவும், நாலறிவாகிய ஈ, வண்டு முதலானவை சுக்கிரனாகவும், ஐயறிவாகிய மானிடர், தேவர், மிருகவர்க்கம் குருவாகவும் கண்டறிவதினாலும்; சலம், காடு, நகரம், மலை, அந்தரம் இவைகளில் சஞ்சார வர்க்கங்களை அறிந்து மிருகவர்க்கம் முதலானவைக்கு இனம் கண்டுசொல்லுக. இதன்மேல் அன்னவாகனனுக்குப் புதல்வனானவா! மானிடர் சனனம் கேட்பாயாக.

**மானிடர்வைம் புதயமெனில் இதுவும்இதற் கிறைபொன்**
**மதிரவியும் ஆணெனில்ஆண் மற்றெனின்மற் றுதயம்**
**பானுவிது லக்கனமன் மாந்திஇப்பேர்க் குளகோள்**
**பன்னிரண்டுக் குளதாகிப் பார்ப்பான்பார்த் திடில்சாற்**
**கோன்வயதுக் குடையவராம் குறைமதில் குறையில்**
**கோகனகத் திறைமுதலோர் பதனமுறக் கோளின்**
**மீனமன்கட் கெய்தாமன் மிக்குபயத் தருணன்**
**மேவினடுப் பின்னமிலா இரட்டைஉரு வினரே. 103**

பூவோதயம் ஆகுங்கால் சென்ம இலக்கனமும் இலக்கனேசனும் குரு, இரவி, மதியும் புருட வர்க்கமாகில் புருட ரூபம். ஸ்திரீ வர்க்கமாகில் ஸ்திரீ ரூபம். சென்ம இலக்கனமானது இரவி, மதி, இலக்கனேசன், குளிகன் இவர்கள் வர்க்கமாகிய பன்னிரண்டு திரிகோணத்துக்கும் உடையதாகி வியாழ வீட்சணமும் பெறில் நூறு வயதுக்கு உடையவராம். இதில் குறையில் வயது குறையும் என்ப. இரவி முதலானவர்கள் ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் இருக்க; ஐந்து, ஒன்பது ஆகிய இடங்களில் கன்னியாகிப் புதன் இருக்க; வியாழன் பாராதிருக்கில் அரைக்குக்கீழ் சுபாவ ரூபமும், அரைக்குமேல் பின்னமில்லாத இரட்டை உருவமுமாம்.

**இரட்டைஉரு வினர்இவைப்பே ரிடத்தவராங் கிசத்தர்**
**யாழிறைபார்த் திடும்உபய லக்கனகேந் திரமும்**
**மருட்டலைவர் அணைதலல்லால் அணையில்இரண் டுருவாய்**
**ஆணெனில்ஆண் மற்றெனின்மற் றாண்பெண்ணெனில் அதுவாம்**

உருட்டிதயர் இருவர்முதல் நால்வரும்நேர் முதல்போல்
முதல்தலமாய்ச் சேரில்உரு மொழிவதுநேர் உருவாய்
மருட்டதாம் அலிக்கிரக வர்க்கமும்ஒன் றேழாய்
வரில்இவரும் அதுவாகின புங்கிசர்ம தவனே. 104

இரவி முதலானவர்களில் இரட்டை உருவினரும், இரட்டை இராசிக்கு உடையவரும், இவர்கள் அங்கிசரும், புதன் பார்த்த உபய இராசி இலக்கனத்திலும், கேந்திரத்திலும், சுபவர்க்கம் இல்லாமல் இருக்கில் இரட்டை உருவமாம். இவை புருட வர்க்கமாகில் புருட இரட்டையாம். ஸ்திரீ வர்க்கமாகில் பெண் இரட்டையாம். இவை இரண்டு வர்க்கமுமாகில் ஆண் - பெண் இரட்டையாம். இவ்வர்க்க இலக்கனத்தில் பாவர் இருவர் கூடில் இரண்டு உருவமாம், மூன்றுபேர் கூடில் மூன்று உருவமாம். நான்குபேர் கூடில் நான்கு உருவமாம். பாவக்கிரகர் அலி வர்க்கமுமாகி ஒன்றாமிடம், ஏழாமிடம் இவற்றில் இருக்க, இவற்றிற்கு உடையவரும் அலி வர்க்கமாகில் அலி என்ப, மகத்தான தவசினையுடைய அகத்தியமா முனியே !

அவனிசுதன் அசிதனொன் றெட்டவரும் ஒன்றாய்ப் (பதனத்)
தரவுசிகி சகிதமுமாய் அமலமலா திருக்க
பவனமல அக்கோனும் பாவமுநீ சமுமாய்ப்
பற்றில்விகிர் திச்சனனம் பகர்வடிவப் படியாம்
புவிஉதயத் தாதிசிரம் கேகால்மற் றிவையில்
பூவிறைசேய் சனிமதியும் பொருந்திலதில் துதிப்பார்
தவனனின்முன் நேரிடமார் உள்ளவர்மற் றவர
சமயமதில் தனுநேர்ச்சந் திரர்க்கு மாமே. 105

சேய், சனி, ஒன்று, எட்டுக்குடையவர்களும் கூடி பதன தானத்தில் இருந்து, இராகு, கேது சகிதமாகிச் சுபவர்க்கம் அல்லாது இருக்க, கடகக்கோன் இலக்கனமுமாகிப், பாவ நீசமுமாகில் சனன விகிர்தியாம். இதற்கு இவ்வர்க்கத்தில் பெலவானுக்குச் சொன்ன ரூபம் சொல்லுக. சமபலமாகில் அந்த இலக்கன ரூபம் சொல்லுக. இச்சனன உதயத் திரேக்காண முதல் சிரம் கை, கால் நேர் வைத்து, இதில் இரவி,

சேய், சனி, மதி கூடில் அந்தந்த உறுப்பு இல்லாமல் பிறக்கும் என்க. கன்னி முதல் இடமாக மேடம் வரைக்குள்ள கிரகாதிபரைக் கொண்டு தற்சமய சூதகாதிபருக்கு இனம் சொல்லுக. மற்றுள்ளவை கொண்டு மற்றவை சொல்லுக, இதற்கு இலக்கனம் முதல் சந்திரன் வரைக்கும் சூதகாதிபரும் மதி முதல் இலக்கனம் வரைக்கும் மற்றவருமாக முன்சொன்ன வகைக்குக் கூட்டி யோசனைபண்ணிச் சொல்லுக.

**ஆமன்விது வலவாந்தி அக்கோள்பவர் அங்கிசமாய்**
**அக்கமவ மானனூறில் ஐந்தறனேர் அவைவாக்**
**கேமன்முத லானபவர் எய்தவதற் கிறைவன்**
**எய்திடிலொன் றமரமதி எட்டினில்வாக் கிறைபொன்**
**னாம்உறவ சுபருறில்நா வசைக்கோ னாக**
**நாயகனுக் கெட்டுள்சிகி நண்ணிலிதற் கூமை**
**பூமகன்சுன் மதிகூடித் தேளுதயாம் தத்தாய்ப்**
**பாவர்விழிப்பு றில்குறளாம் பொதியவரை முனியே ! 106**

இடபத்தில் மதி இருக்க, கோணாந்தியம் பாவர் அங்கிஷம் ஏற, இரண்டாம் இடத்தில் எட்டுக்குடையவன் இருக்கிலும்; ஐந்து, ஒன்பது, பதினொன்று, மூன்று, இரண்டு இவற்றில் சனி முதலாகிய பாவர் இருக்க, இவற்றிற்கு உடையவர்கள் பெலஈனமாகிலும், இலக்கனத்தில் அமர, மதி இருக்க, இரண்டுக்கு உடையவன் எட்டில் இருக்க, இரண்டில் பாவர் இருக்கினும், எட்டுக்குடையவன் இரண்டில் இருக்க, இலக்கனேசனுக்கு ஐந்தில் எட்டில் கேது இருக்கிலும் ஊமை என்ப. சேய், சனி, மதிகூடி விருச்சிகாந்தியம் இலக்கனமாகப் பாவர் பார்க்க இருக்கில் குறள் உருவம் என்ப பொதியவரை முனியே!

**முன்னிறைக்கைந் தெட்டசிதன் முற்றலவீ றயமாய்**
**முற்றினவன் அனலாகின் முதுசேய்சேய் மதியும்**
**மன்னியலக் கனமீனம் ஆகில்அர வுதயம்**
**வந்துதும்அச் சிகியாகில் வருவதும் முடமாம்**

பொன்னருணன் கவிமதியுள் புகஇறைக்கெட்

புயங்கமுறில் தேள்கோளப் பொய்யர்நவாங் கிஷம்

தன்னிருப னுறில்பவமூன் றரவசிதன் உறிலீ

தாம்செவிடொன் றாங்கலைசுன் னற்சேய்கூன் அதற்கே 107

இலக்கனேசனுக்கு ஐந்து, எட்டாம் இடங்களில் சனி நிற்க, பன்னிரண்டாமிடம் ஜல ராசியாகிச் செவ்வாய் நிற்கிலும், இலக்கனம் மீனமாகச் சனி, சேய், சந்திரன் கூடி நிற்கிலும், ஆயில்ய நட்சத்திரமாக இலக்கனத்தில் கேது இருக்கில் முடம் என்ப. குரு, புதன், சுக்கிரன், சந்திரன் கூடி ஐந்தில் இருக்க, இலக்கனேசனுக்கு ஐந்து, எட்டாம் இடங்களில் இராகு இருக்கில் விருச்சிகக் கோளில் பாவர் அங்கிஷம் செய்ய, இலக்கனத்தில் சந்திரன் நிற்கிலும், மூன்று பதினோராம் இடங்களில் இராகு, சனி கூடி நிற்கிலும் செவிடு என்ப. சென்ம இலக்கனம் மகரமாகிச் சனி, சந்திரன், செவ்வாய் கூடில் கூன் என்ப.

கூனுதய இதுவைஅனல் சனிகூடிப் பார்க்க

கோன்சனியாங் கிஷம்ஏறில் குறள்உதயத் தொருவில்

பானுசுத ஈர்அணியில் பாக்கவனுறில் உதயம்

பாற்குளமும் கவியுமெனின் முடத்துளபா லகரா

மானிறையை மதிகூட ஒன்றினில்வாக் கதிபன்

அணையவனல் சனிபார்க்கில் லாலரசு ரர்க்கே

தூனடியீ றடுப்பகிதா ருடைசுடர்பார்க் கவன்வேய்

வருத்திரனீ தாந்தகமித் தானமதுற் றிடிலே. 108

சென்ம இலக்கன மதியைச் சேய், சனி கூடிப்பார்க்க இலக்கனேசன் சனியாங்கிசம் ஏறில் கூன் என்ப. இலக்கனம் மேடமாகிச் சனி இருக்க நான்கு, மூன்றாம் இடங்களில் புதன் இருக்கில் குறள் உருவம் என்ப. உத்திர நட்சத்திரமாக இலக்கனத்தில் சுக்கிரன் இருக்கில் முடம் என்ப. சுக்கிரனை மதிகூட இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு உடையவன் நிற்கச் சேய், சனி பார்க்கிலும்; கார்த்திகை, மூலத்தில் கேது இருக்க; ரேவதி, பரணி, ஆயில்யம், பூசம், சித்திரை, சோதியில் சனி இருக்க; புனர்பூசம், திருவாதிரையில் சுக்கிரன்

இருக்க, இவை நேத்திராந்தகத் தானமாகிய இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களாகவரினும் குருடு.

அதன்மரிரண் டொன்றேழ்எட் டரிகுடமே றாகி
இயல்பருதி யைச்சேரவே தற்கிறையார் மறையின்
மதமுதலீ றாறுமுன்போல் ஆகஅதில் பவரும்
மதியில்வரில் இடைக்கண்முணர் மற்றதற்காம் இவைசேர்ந்
திதமிலுறில் இருகணுங்கே டென்பர்இதில் சுபர்நோக்
கெய்திலிது குந்தமிரண் டிறைஏகத் தேகக்
கதிரரியுற் றிடப்பாவர் காண்பதுமா லைக்கண்
கரும்படல்செம் படல்பூஒன் றயமிவர்காண் பதற்கே. 109

இரண்டு, ஒன்று, ஏழு, எட்டு இவை சிங்கம், கும்பம், இடபமாகி, இதில் இரவி பாவருடன்கூட, இதற்குடையவர் மறையில் வலக்கண் நாசம் என்ப. ஒன்று, ஏழு, பன்னிரண்டு, ஆறு இவை சிங்கம், கும்பம், இடபமாக மதியும் பாவரும்கூட, இவற்றிற்கு உடையவர்கள் மறையில் இடக்கண் நாசம் என்ப. இவை இரண்டும் கூடில் இரு கண்ணும் கேடு என்ப. இதில் சுபர் நோக்கில் குந்தம் என்ப. இரண்டிற்குடையவன் ஒன்றில் இருக்க, இரவி சிங்கத்தில் இருக்கப் பாவர் பார்க்கில் மலைக்கண் என்ப. இலக்கனம் மேடமாகி முன்போல் இரவி, மதி பாவர்கூடச் சேய் பார்க்கில் செம்படலைக்கண் என்ப. சனி பார்க்கில் கரும்பயலைக் கண் என்ப. சுக்கிரன் பார்க்கில் பூப்படலைக் கண் என்ப.

காணமிலொன் றானரிமை கட்செவிஊழ் மதிசேய்
காரியுரில் கொடிவுரக கல்லியத்ரேக் காணம்
பூணுவதும் உற்பனமாம் இலக்கனத்கோள் நிற்கில்
புயங்கமுறு மன்னிளைக்கப் போக்கனையர் புரத்தில்
நாணிலவர் நோக்கமுறில் கைமுனமாம் வியக்கோள்
நண்ணிவடி முனமாம்வே ணளினனவன் மகனோன்
தேணுளரோ டுற்றிடில்பை யோடுதித்தில் சேய் நோக்
கெய்திடில்பார் பார்ப்பதுபொன் வர்க்கமில்லென் பதற்கே. 110

சென்ம இலக்கனம் மேடம், சிங்கம், இடபமாக, குரு ஒழிய, இரவி, மதி, இராகு, சேய், சனி கலக்கில் கொடி சுற்றிப்

பிறக்கும் என்ப. இலக்கனம் சர்ப்பத் திரேக்காணமான இதில் பெலமாக முன்சொன்ன பாவபெலமும் பெலக்க இலக்கனேசன் பெலகீனமான பத்து, நான்காம் இடத்திற்கு உடையவர்கள் இலக்கனத்தில் பெலக்கப் பாவர் பார்க்கில் கைமுன் விட்டுப் பிறக்கும் என்ப. இந்த வர்க்கத்துடனே பன்னிரண்டிற்கு உடையவன் பெலக்கில் கால் முன்விட்டுப் பிறக்கும் என்ப. ஏழில் இரவியும் ஒன்றில் சனியுமாகப் பாவர் கூடப் பிறக்கில் பையோடு பிறக்கும் என்ப. சேய் பார்க்கில் பூமி பார்த்துப் பிறக்கும் என்ப. இவை குருவர்க்கம் இல்லாதாகில் சொல்லுக.

பதனமுற மற்றவரொன் பதுதனையர் புதன்மேல்
    படலும்இவன் தன்னில்வலி பற்றிலும்கை கால்கள்
அதிகவிரல் இறையொடுப கேதுமுக மாக
    வருணனில்லா கசச்சனிசேய் கயிறுதயத் தாகும்
உதயமுதல் ஈறளவுக் குரைத்தஉறுப் பதனுக்
    குளதீது மற்றதுங்கண் டுரைத்திடுவர் இதன்மேல்
மதனெனவல் லோர்கோண கேந்திரம்மேல் ஏறில்
    வசைனையுற் றிடில்கமல உதயமதில் வரிலே. 111

சகலரும் பதனத்தில் இருக்க புதன் ஒன்பது, ஐந்தில் உச்சமாக அல்லது தனது வீட்டில் பெலக்கிலும் கைகாலில் அதிக விரல் என்ப. இலக்கனேசனும் உபகேதுவும் கூடி, இரண்டில் இருக்க மிதுன-கன்னியில் சனி, சேய் அங்கிச மாகில் பல்லுடனே பிறக்கும் என்ப. இலக்கனம் முதல் பன்னிரண்டாம் இடம் வரைக்கும் சொன்ன உறுப்பறிந்து இதில் பாவர் சேகரிக்கில் அந்தந்த உறுப்புக்குப் பங்கம் சொல்லுக.

## அழகறியும்படி

சுபக்கிரகங்கள் இலக்கன கேந்திரத்தில் இருக்கினும், இவர்கள் இரவியுடன் கூடினாலும், சல இராசி உதயமாகப் பிறந்தாலும் அழகு என்ப.

வரும்உதயத் தியல்புமிதாம் இதன்மேலா யவும்கேள்
மலையமுனி யேகோணில் வருங்குருக்கேந் திரத்தில்
குருதிவர இவனிலொன்றாய்க் கொடியவர்கள் ஒளிக்கில்
குறைமதிஒன் றெட்டுறத்தார் கோஉதயத் தாக
பருதிமகன் போக்கீறில் பற்றில்இவன் ஒன்றேன்
படப்பவர்பார்த் திடர்சுபர்கேந் திரம்ஒழியப் பனையீர்
அரசுமுதல் இச்செனன மாகிலசு ரப்பே
அபுத்தமென விடமாகில் அன்றவனா யுவுமே. 112

இலக்கனோதய இயல்பும் இதொரு பிரகாரம் சொன்னோம். இதன்மேல் அகத்தியமா முனியே ஆயுர்த்தானம் கேட்பாயாக. ஐந்து, ஒன்பதாம் இடங்களில் குரு இருக்க, இவனுக்குக் கேந்திரம் செவ்வாய் இருக்க, மேட-விருச்சிகம் பிறக்கப் பாவர் மறையினும், சயமதி ஒன்று, எட்டாம் இடங்களில் இருக்க; பூசம், பூராடம் பிறக்க; பத்து, பன்னிரண்டாம் இடங்களில் சனி இருந்தாலும்; ஒன்று, ஏழில் சனி இருக்கப் பாவர் பாவ வர்க்கச் சுபர் கேந்திரம் விட்டிருக்க; அனுசம், ரேவதி, கேட்டை இவை இலக்கன உதயமாகப் பிறக்கிலும் அபுத்தமூலம் விறக்கவி கடிகை உதயமாகிலும் சத்தியோ மரணமாம்.

ஆயவுதேய் பிறைவேன்சேய் அண்ணல்பெல மற்றோன்
அங்கிசம்ரண் டுறத்தார்நீ ரதிலுதய மாகில்
தேயுமதி சீடமுறச் சனிஏழோன் தணையச்
சலமுதய மாகநல்லோர் தீதறக்கேந் திரிக்கில்
நேயமான லாகவது கடகமென அமர
நிலவுப்பத னம்பெறக்கோள் நிசிப்பகைபொன் னிலகின்
மாயும்இதுக் கேந்திரமும் மாசுளரெட் டேற
மாதவர்கேந் திரமகலின் வயதிருநாள் அவர்க்கே. 113

எட்டாம் இடத்தில் அமரமதி இருக்க, ஏழில் சேய் நிற்க, இலக்கனேசன் பெலகீனமாக இலக்கினாங்கிசம் இரண்டில் இருக்கப் பூசம், பூராடம் பிறக்கிலும், அமரபட்சத்துச் சந்திரன் விருச்சிகத்தில் இருக்க, ஒன்று, ஏழாம் இடங்களில் சனி இருக்க, சல இராசி உதயமாகச் சுபர் கேந்திரத்தில்

இருக்கிலும், ஐந்தாமிடம் கடகமாகிச் சேய் இருக்க, அமரமதி ஆறு, எட்டு, பன்னிரெண்டாமிடங்களில் இருக்க ஐந்து, ஒன்பதாம் இடங்களில் இரவி, குரு கூடிலும், அமரமதி கேந்திரிக்கப் பாவர் எட்டில் கூடச் சுபர் கேந்திரம் விட்டிருக்கிலும், வயது இரண்டு நாள் என்ப.

**வயதுறநல் லோர்மூன்றாம் நாளில்ரவி மதியை**
**மருவஇவர்க் கேழ்அரவு அரிஅணிஊழ் மதியும்**
**கயல்உதய மாகஅனல் அங்கிசங்கால் ஏறில்**
**கதிரில்வகை மதிகோணில் கள்வருமாய்க் கதுவில்**
**அயமனரி மன்மதிக்கே ழாகஇறை மறையில்**
**ஆயொருநேர் ஆறில்அதில் அம்புலிக்கெட் டதர்மர்**
**இயைமின்மதி கெண்டாந்தம் தீனருமாய்ச் சர்ப்பத்**
**தெய்தில் இவை மூன்றாம்நாள் எட்டாநாள் எமனே.** 114

சுபர் எட்டாம் இடத்தில் இருக்க, சன்ம நட்சத்திரத்திற்கு மூன்றாம் நட்சத்திரத்தில் இரவி, மதிகூட, இவர்க்கு ஏழில் இராகு இருக்கில், மூன்றாம் நாள் மரணம். இலக்கனம் மீனமாக, மகரரவி, மதி மூன்றில் இருக்க, சேய் கடகாங்கிசம் ஏறில் நான்காம் நாள் மரணம். இரவி நான்கில் இருக்க, ஐந்து, ஒன்பதாம் இடங்களில் பாவருடன் கூடிச்சந்திரன் இருக்கில் ஐந்தாம் நாள் மரணம். மதிக்கு ஏழில் இரவி சேய்கூட இலக்கனேசன் பதனமாகில் ஆறாம் நாள் மரணம். மேடம் முதல் கன்னி வரையுள்ள இராசி சென்ம இலக்கனத்துக்கு நான்காம் இடமாகிப் பாவர் நிற்கிலும் அல்லது துலாம் முதல் மீனம் வரைக்குள்ள இராசி மதிக்கு எட்டாகிப் பாவர் நிற்கிலும் ஏழாம் நாள் மரணம். கெண்டாந்தம் பிறக்கப் பாவருடன் மதிகூடச் சென்ம இலக்கனம் சர்ப்ப முகூர்த்தமாகில் எட்டாம் நாள் மரணம்.

**நாளிறைதேய் தொழியருத்ரன் நண்ணிடில்ஒன் பதுநாள்**
**நளினன்வசை யில்சேய்சுன் நாட்டமுற நாதன்**
**தாளுறப்பத் தாளத்தத் துளமொன் றசிதன்**
**தழல்சிகியுற் றிடில்இருப தாமிரவி சனியும்**

வேளெதிரில் உறப்பவுமன் விழிக்கில்அனல் சனிஊழ்
　　வெள்ளியிலெட் டகவுறில்வெயி லிறைகீபார் மேவிக்
கோளிலப செயமாகிக் கூடலுறில் ஒன்றாய்க்
　　கூறுதனேர் மூன்றெனும்திங் கட்குளதிவ் வயதே. 115

அமாவாசை பிறந்த இலக்கனம் உருத்திர முகூர்த்தமாகில் ஒன்பது நாள், எட்டில் இரவி, நாலில் சேய் இரண்டில் சனி, பன்னிரண்டில் இலக்கனேசன் இருக்கில் பத்து நாள். எட்டில் சனி, ஐந்தில் சேய், ஒன்றில் கேது இருக்கில் இருபது நாள். இரவி சனியுடன் கூடி இலக்கனத்தில் இருக்கச் சேய் பார்க்கில் மாதம் ஒன்று. இரவி, சனி, சேய் கூறி இடப-துலாம் எட்டாகி இருக்கில் மாதம் இரண்டு. இரவியும் இலக்கனேசனும் யுத்தத்தில் கூடிக் கிரகங்களினால் அபசெயப்பட்டு ஏழில் இருக்கில் மாதம் மூன்று.

குளித்தலர்ம னிற்பெறவெட் டரவிறையைச் சேரில்
　　கோஉதயச் சிகியுறில்வீ தல்கொடைகோ துடையோர்
உளத்தபன னாகில்நாலெட் டிறைசேர்ந்து திக்க
　　ஒன்றிறைதுற் பெலமாகில் உரகம்இறை ஒளிக்கில்
கழத்தழல்எட் டரவுசனி காலுறிலொன் றசிதன்
　　காமனன லினன்மதியைக் கதுவிலொன்றக் கயலாய்
விலத்தரவில் சேயுள்வெயில் வேளுறிநான் மதநேர்
　　மேவியபன் னொன்றுவரை விளிகுவர்வை யகத்தே. 116

ஆறில் இரவி நிற்க, எட்டில் இலக்கனேசனும் இராகுவும் இருக்கில் மாதம் ஆறு. பூராடத்தில் கேது இருக்க, அதுவே சென்ம இலக்கனமாகில் ஐந்து மாதம். இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டில் பாவர் இருக்க, ஐந்தில் இரவி நிற்கில் ஆறுக்குடையவனும் சேயும்கூடி இலக்கனத்தில் இருக்க, இலக்கனேசன் பெலகீனமாகில் ஏழு மாதம். ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இலக்கனேசனும் இராகும் கூடி இருக்கில், எட்டு மாதம். ஆறில் சேய், எட்டில் இராகு, பன்னிரண்டில் சனி இருக்கில் ஒன்பது மாதம். ஒன்றில் சனி இருக்க. ஏழில் இரவி, மதி, சேய் கூடில் பத்து மாதம். இலக்கனம் மீனமாக நான்கில் கேது, ஐந்தில் சேய், ஏழில் இரவியும் இருக்கில் மாதம் பதினொன்று.

வையகச்சேம் சிதனிலெட்டாய் வரிலிவனில் அதுவாய்
வக்கிரநீ லனைத்தழல்பார்த் திடில்அதில்பொன் மருவ
மெய்குளிக னைப்பெறில்தே யவிதுறைக்கெட் டாக
மேவுவதில் லாகவனல் விழிக்கில்இதுத் தனைய
ஐயனைப்பார்த் தலவனது பதனமதாய்ச் சேர
அனலுதிக்கில் ஐந்தரவாய் அசுபர்பல மாகக்
கைகனக முறில்பிறைசேர் காரியர உதிக்கில்
காலனிதொன் றாயேழுக் காம்வருஷக் கணக்கே.

இடப-துலாம் எட்டாகிச் சேய் இருக்கில் வருடம் ஒன்று. மேட-விருச்சிகம் எட்டாகிச் சனி வக்கரிக்கச் சேய் பார்க்கில் வருடம் இரண்டு. மேட-விருச்சிகம் எட்டாகிக் குருவிருக்க, இலக்கனத்தில் குளிகன் இருக்கில் வருடம் மூன்று. நான்காமிடத்தில் அமரமதி இருக்க, இவனுக்கு ஆறில் இலக்கனேசன் இருக்கச் சேய் பார்க்கில் வருடம் நான்கு. கடகம் ஆறு, எட்டு, பன்னிரண்டாகப் புதன் இருந்து, சந்திரனைப் பார்க்க இலக்கனத்தில் சேய் இருக்கில் ஐந்து வருடம். இலக்கனத்தில் இராகு இருக்கப் பாவர் பெலக்க, நான்கில் குரு இருக்கில் வருடம் ஆறு. இலக்கனத்தில் மதி, சேய், சனி, இராகு கூடில் வருடம் ஏழு.

கணக்கனைப்பெற் றவன்சிகியும் காமமுற மெய்பூண்
கள்ளருறில் அரவதிரேக் காணமொன்றாய்க் காரி
வணக்கமில்வா ரைக்கூடின் மதிகதிர்வேண் மருவ
மாசுளர்பார்த் திடவிறையும் மாசுணமும் மருவி
அணற்கெதிரில் சிகிஇதுஒன் றனைஅலரி யாகி
அமரமதி இரசதவீ டணைதலென அணையப்
பிணக்கனல்சே ரில்சனியைப் பிறைரவிசேய் கூடில்
பெறும்வயதெட் டாய்ப்பதின்மூன் றளவுமுள பெயர்க்கே. 118

மதி, கேதுவைக்கூடி ஏழில் இருக்க, ஒன்று, மூன்றாம் இடங்களில் பாவர் இருக்கில் வரும் இலக்கனம் சர்ப்பத் திரேக்காணமாக, இதில் சனி பாவருடன் கூடி இருக்கில் வருடம் ஒன்பது. இரவி, மதி ஏழில் கேதுவுடன் கூடி இருக்கில் வருடம் பத்து. ஒன்றில் மதி இருக்க, நான்கில் இரவி இருக்கில்

வருடம் பதினொன்று. இடப-துலாம் ஏழாகி அமரமதி இருக்க, ஆறில் சேய் இருக்கில் வருடம் பன்னிரண்டு. இரவி, மதி, சனி, சேய் கூடில் வருடம் பதிமூன்று.

அற்கனனன்மே தைமிலம்பு லிக்கேழாய் வரில்ஐந்
தமரமதி இரவிசேயும் அணையின்மதிக் கரந்த
முதற்கதிபன் அவமாகி இவன்இதுவிட் டிருக்க
முன்பினசு பர்சேர முதுசேய்பார்த் திடின்மால்
எற்கனல்சே ரில்சனிமர ணங்கிசமாய்ப் பவரோ
டிருக்கில்இவன் றாதைபுதன் எய்திலிது வரியில்
பற்கெதிர்சுன் கனலாயப் பார்கவன்பார்த் திருக்கில்
பதினான்காய் மூவேழென் பனவயதென் பதற்கே. 119

மிதுன, கன்னி மதிக்கு ஏழாக இதில் இரவி, சேய் கூடில் வருடம் பதினான்கு. அமரமதி, இரவி, சேய் கூடி ஐந்தாமிடத்தில் இருக்கில் வருடம் பதினைந்து. இலக்கனேசன் பெலகீனமாகி மதிக்குப் பன்னிரண்டாம் இடத்தில் இருக்க வருடம் பதினாறு. இலக்கனேசன் சந்திரனைக் கூடாமல் பாவமத்தியமாகச் சனி பார்க்கில் வருடம் பதினேழு. புதன், இரவி, சேய் கூடில் வருடம் பதினெட்டு. சனி, மகராங்கிசம் ஏறிப் பாவருடன் கூடில் வருடம் பத்தொன்பது. இரவி, புதன் கூடில் வருடம் இருபது. மதி சிங்கத்தில் இருக்கச் சேய், சனி எட்டில் இருக்கச் சுக்கிரன் பார்க்கில் வருடம் இருபத்தொன்று.

பதஹூனன் அங்கிசம்தே ளாய்இரவி பார்க்கில்
பார்ப்பதில்பொன் துலைமால்பெண் பணிஅரிகே தரிவை
முதலோன்யா ழிதுமுதலாய் அச்சனியாங் கிசநேர்
மொழிவதிரு பத்திரண்டாய் மூவொன்பான் றுயின்முன்
இதிலோர்மா தில்தேளாய் இரவிகுரு வதிக்க
எட்டிறைவே ளுறில்இறைவன் இருநான்குற் றிடில்சேய்
மதநீலன் நிறைமருவின் மனன்பதனத் திருக்கில்
வயதெழுநாள் காகஎண்நான் காம்வயது கெனுமே. 120

சனி விருச்சிகாங்கிசம் ஏற, இரவி பார்க்கில் வருடம் இருபத்து இரண்டு. இலக்கனம் துலாமாகச் சனியாங்கிசம் ஏறக் குரு பார்க்கில் வருடம் இருபத்துமூன்று. இலக்கனம் கன்னியாகச் சனியாங்கிசம் ஏறப் புதன் பார்க்கில் வருடம் இருபத்துநான்கு. இலக்கனம் சிங்கமாகச் சனியாங்கிசம் ஏற, இராகு பார்க்கில் வருடம் இருபத்தைந்து. இலக்கனம் கன்னியாகச் சனியாங்கிசம் ஏற, கேது பார்க்கில் வருடம் இருபத்தாறு. இலக்கனம் மிதுனமாகச் சனியாங்கிசம் ஏற, இலக்கனேசன் பார்க்கில் வயது இருபத்து ஏழு. ஒன்று எட்டுக்குடையவர்கள் கிரகம் மாறில் வருடம் இருபத்தெட்டு. இலக்கனம் விருச்சிகமாகி இரவி, குரு இருக்க, எட்டுக்கு உடையவன் ஏழில் இருக்கில் வருடம் இருபத்து ஒன்பது, இலக்கனேசனும் வியாழனும் எட்டில் இருக்கில் வயது முப்பது. ஏழில் சேய் இருக்க, சனி இலக்கனசேனைக் கூடில் வயது முப்பத்து ஒன்று. இலக்கனேசன் ஆறு, எட்டு, பன்னிரண்டில் இருக்கில் வருடம் முப்பத்து இரண்டு.

**துக்கமனன் பெறத்திறைதுற் பெலமாகில் பணியுள்**
**தோன்றவதற் றரைதிசையில் தோன்றிலிறை சுடருக்**
**கொக்கலரி லசிதனளை ஒன்றுளஎட் டிவர்கள்**
**உரனறசற் சனரொடுங்கத் துற்சனர்வந் துயரின்**
**மக்கபிடுல் ஒன்றசுபர் வரிலிவையற் பாயுள்**
**ஆகும்இவை மற்றுளது மற்றதுதீர்க் காயுள்**
**வக்களரித் தருமரையுற் றிடில்இடைமுன் புளதுக்**
**கரசனெட்டீ றாறுறிலப் பலத்துடன்ஆ குதற்கே.** 121

எட்டுக்குடையவன் பெலக்க, இலக்கனேசன் பெலகீன மாகிலும், ஐந்தில் இராகு இருக்க, அதற்குடையவன் திசையில் பிறக்கினும், இரவிக்கு இலக்கனேசன் சத்துருவாகிலும், சனியும் ஒன்று, ஐந்து, எட்டு, பத்தாம் இடங்களுக்கு உடையவர்களும் பெலகீனமாகவும் சுபர் பெலகீனமாகப் பாவர் பெலக்கினும், ஒன்று, ஐந்து, எட்டாம் இடங்களில் பாவர் இருக்கிலும் அற்பாயுளாம். இவை அல்லாத எல்லாம் தீர்க்காயுளாம். இவை இரண்டு கூடிக்கலக்கில் மத்தியம்

ஆயுளாம். சத்தியோ மரணம் தொட்டு அற்பாயுள் வரையும் சொன்ன பலத்துக்கு இலக்கனாதிபதி பதனமாகில் பலன் சொல்லுக.

ஆறிரண்டை நான்கெண்ணாவ கற்கிறைசன் வயதுக்
  கர்மவால யோகம்இவை அரிட்டமற்ப நடுத்தீர்க்
கேறுமிம்மூன் றாயுவெனலின் மொழிதேள்வி கற்கோல்
  என்றுவின்மான் கடமைவிடை சேல்யாழ்கார் விதுவாய்ச்
கூறில் ஒன்றாய் ஆறிரண்டாம் பாகைமுதற் காமால்
  கோச்செவிபார்க் கவன்பொன்வெயில் குசன்சனியற் கோள்நேர்
பூறுவமொன் றிடல்புனர்க்கம் புலிமாத்தார் பணிவேய்
  புகைபாரல் யாழ்கீழ்நேர் போதுறல்கிம் மதற்கே 122

ஒரு வருடம் முதல் பன்னிரண்டு வருடம்வரை வாலாரிட்டமாம். மேல் இருபது வருடம்வரை யோகாரிட்டமாம். மேல் முப்பத்து இரண்டு வருடம் வரையும் அற்பாயுளாம். மேல் எழுபது வருடம் வரையும் மத்திம ஆயுளாம். மேல் நூறு வருடம்வரையும் தீர்க்காயுளாம். கன்னியில் பாகை ஒன்றில் மதி இருக்கில் வாலாரிட்ட தோஷம் வருடம் ஒன்று. விருச்சிகத்தில் பாகை இரண்டில் மதி இருக்கில் வருடம் இரண்டு. தனுசில் பாகை மூன்றில் மதி இருக்கில் வருடம் மூன்று. துலாத்தில் பாகை நான்கில் மதி இருக்கில் வருடம் நான்கு. சிங்கத்தில் பாகை ஐந்தில் மதி இருக்கில் வருடம் ஐந்து. மகரத்தில் பாகை ஆறில் மதி இருக்கில் வருடம் ஆறு. கும்பத்தில் பாகை ஏழில் மதி இருக்கில் வருடம் ஏழு. மேடத்தில் பாகை எட்டில் மதி இருக்கில் வருடம் எட்டு. இடபத்தில் பாகை ஒன்பதில் மதி இருக்கில் வருடம் ஒன்பது. மீனத்தில் பாகை பத்தில் மதி இருக்கில் வருடம் பத்து. மிதுனத்தில் பாகை பதினொன்றில் மதி இருக்கில் வருடம் பதினொன்று. கடகத்தில் பாகை பன்னிரண்டில் மதி இருக்கில் வருடம் பன்னிரண்டு. இவை வாலாரிட்டதோஷம் என்ப. இலக்கனத்தில் புதன் உதயமாகில் யோகாரிட்ட தோஷம் வருடம் பதினான்கு. சுக்கிரன் உதயமாகில் வருடம் பதினைந்து. வியாழன் உதயமாகில்

வருடம் பதினாறு. இரவி உதயமாகில் வருடம் பதினேழு. சேய் உதயமாகில் வருடம் இருபது. இவை யோகாரிட்ட தோஷம் என்ப. செனனோதயம் மிருகசிரமாகில் அற்பாயுள் தோஷம் வருடம் இருபத்தொன்று. அசுபதியாகில் வருடம் இருபத்து இரண்டு. ஆயில்யமாகில் வருடம் இருபத்து நான்கு. புனர்பூசமாகில் வருடம் இருபத்தைந்து. கார்த்திகை யாகில் வருடம் இருபத்து ஆறு. உரோகணியாகில் வருடம் இருபத்து ஏழு. பரணியாகில் வருடம் இருபத்து எட்டு. திருவாதிரையாகில் வருடம் இருபத்து ஒன்பது. அருணோதய காலமாகில் வருடம் முப்பது. மத்தியான காலமாகில் வருடம் முப்பத்து ஒன்று. அத்தமன காலமாகில் வருடம் முப்பத்து இரண்டு. இவை அற்பாயுள் தோஷம் என்க.

கிம்பெயர்ப்பே றாயுவின்மேல் மத்தியவா யுவுக்கும்
  கிடைத்ததுயோ கம்கரணம் கீழ்நேரத் திதியாய்
இம்பர்வரில் தீர்க்காயுள் என்பரிதன் மேலும்
  இரசதம்பொன் திரமாய்மற் றவர்உபய மேனூற்
றைம்பதுமரல் புகர்பொன்இது மெதுவர்க்கோத் தமத்தில்
  ஆகமற்றோர் தீரமாகில் ஆண்டொன்றைஞ்ஞூ றருக
ணும்புகர்பொன் வைசேடி காங்கிசமாய்த் திரத்தில்
  உற்றிடமற் றவர்உபயம் உறில்யுகப்பேர்க் குளதே. 123

மத்திமாயுள் தோஷத்துக்கு முப்பத்துமூன்று முதல் எழுபது வருடம் வரைக்கும் யோகம் இருபத்தேழு, கரணம் பதினொன்று ஆக முப்பத்து எட்டும் நேர் வைத்து மத்திமாயுள் தோஷம் சொல்லுக. தீர்க்காயுள் தோடத்துக்கு எழுபத்து ஒரு வருடம் முதல் நூறு வருடம் வரைக்கும். அபரபக்ஷத்துப் பிரதமை முதல் பௌரணை வரைக்கும் நேர்வைத்து தீர்க்காயுள் தோடம் சொல்லுக. குரு, சுக்கிரன் திர இராசியிலும் மற்றவர் உபய இராசியிலும் இருக்கில் வயது நூற்று ஐம்பது. புதன், சுக்கிரன், குரு, மதி இவர்கள் தமது மூலத்திரிகோணம் வர்க்கோத்தமாக மற்றவர் திரத்தில் இருக்கில் வது ஐநூறு. புதன், சுக்கிரன், குரு இவர்கள் வைசேடிகாங்கிசம் ஏறி, திரத்தில் இருக்க மற்றவர்கள் உபயத்தில் இருக்கில் வயது ஒரு யுகம் என்ப. இவை வெகு ஆயுள்.

உறும்திரத்தில் யாவரும்வந் தூழ்சுதனாங் கிசமாய்
உற்றதுகேந் திரகோணத் தாங்கிசம்உச் சமுமாய்ப்
பெறும்பொழுது தெய்வகயத் தாங்கிசமும் ஆகில்
பெற்றயுகம் எண்ணிலதாம் பீடைமுதன் மூன்றும்
செறிந்திடமா நேரிருக்கில் சிலைமீன்சேய் அசிதன்
சேரஇவைக் கிடையின்மற் றோர்சேரி தேவிருவாய்
அறிபிறியார் போலும்உல கெங்கும்மதி சயிப்பர்
அவரினுமேல் மேலுளருண் டகத்தியமா முனியே ! 124

*திர ராசியில் யாவரும் இருந்து, சனியாங்கிசம் ஏற இவை கேந்திர கோணத்து உச்சாங்கிசமுமாகி, ஐராவதாங்கிசம் ஏறில் வயது எண்ணிறந்த யுகம் என்ப. ஆறாமிடத்தில் புதனும், ஏழாமிடத்தில் குருவும், எட்டாமிடத்தில் சுக்கிரனும் தனித்தனியே இருக்கினும், தனுவில் சேய் இருக்க, மீனத்தில் சனி இருக்க, இவைக்கிடையில் மற்றவர்கள் இருக்கினும் தேவதா ரூபமாகிச் சிறிது பேரறிந்தும் சிறிது பேர் அறியாமலும் இருக்கச் சகல லோகத்திலும் சிறிது அதிசயம் நடத்திக்கொண்டு இருப்பார்கள். இதன் மேலும் வயதும் தெய்வீகமும் அதிசயமும் அநேகமாக நடத்திக்கொண்டு இருக்கிற வர்களும் உண்டு அகத்தியமா முனியே!*

அகத்தியகேள் இதன்மேல்இலக் கனத்தியலவ் உதயம்
அற்பகல்மற் றாயிலச நேரதிக பெலமாம்
மிகத்திதன்மேல்கோள் மதிகுளிகன் இரவிஇறை இருக்க
இவர்கள்நவாங் கிசமுமதில் இறைவரும்உற் றிலகின்
மகத்துவமாம் இலிங்கஉரு மாறினும்பொன் வர்க்கம்
அல்லதுமத் திமமாமான் மாழையுறின் வலிதா
முகத்தலநேர்க் குளபவனர் முதற்கிறைக்கிப் பெலமாய்
முற்றிடிலப் பலமுழது முழுதுமுள தெனுமே. 125

*இரவாகில் சரராசி இலக்கனமே பெலமாம். பகலாகில் திரமே பெலமாம், சந்தியாகில் உபயமே பெலமாம். இலக்கனத் திரிகோணங்களில் மதி, குளிகன், இரவி, இலக்கனேசன் இவர்கள் இருக்கிலும், இவர்கள் அங்கிசம் இருக்கினும், இதற்குடையவர்கள் இருக்கினும் இலக்கனம் மகத்துவ பெலமாம். இலக்கனம் ஆண், பெண் வர்க்கம்*

பிறக்கினும், வியாழ வர்க்கம் இல்லாது இருக்கிலும், மத்தியாய் இலக்கனத்தில் புதன், குரு இருக்கிலும் அதிக பலமாம். இரண்டாம் இடம் தொட்டு பன்னிரண்டாம் இடம் வரைக்கும் உடையவர்கள் இலக்கனத்துக்கும் இலக்கனேச னுக்கும் பெலமாகில் அந்தந்த வர்க்கங்களுக்கு உள்ள பலம் ஆயுள்தாயம் வரைக்கும் நடக்கும்.

உள்ளதுரைத் திடவேண்டில் அவரவர்க்கு உரைத்த
　　உதயம்முதல் காரகமும் உடையவர்கா ரகமும்
கள்ளருக்கீ தில்லைஎன நல்லவர்க்குண் டெனவும்
　　கலிக்கில்இவை உளவெனவும் கண்டுரைப்பர் இதனுக்
கெள்ளளவும் மனதைவிடா தியம்புவதவ் உதயத்
　　திருந்தவன்பார்த் தவன்இறைவன் இவர்க்குதய இயல்பாய்
விள்ளுவதிப் பலமாமே இரண்டதனுக் கியல்கேள்
　　வேதியனுக் கொருதனையன் என்றவன்வே லவனே. 126

இலக்கனம் முதலுள்ள பாவங்களில் இருந்த கிரகங்களுக்கு உள்ள காரக பெலமும் அவ்விடத்துக்குள்ள காரக பலமும் கூட்டிச் சொல்லுங்கால், பாவக் கிரகங்களாகில் நிற்பலம் என்றும், சுபக்கிரகங்களாகில் பலம் முழுவதும் உள்ளதென்றும் இவை கலக்கில் பலமும் கலப்பு என்றும், பார்த்தவர்கள் இருந்தவர் உடையவர்களுக்கு உள்ள இயல்பும் கண்டு ஏகாக்கிரச் சித்தமாக இருந்துகொண்டு சகலமும் சூட்சித்துப் பார்த்துச் சொல்லுக. இவை இலக்கனபெலம் என்ப. இதன்மேல் இரண்டாம் இடத்து இயல்பு கேட்பாயாக, பிரம்மாவுக்குப் புதல்வனானவா! என்றனன் வேலாயுதனாகிய சுப்பிரமணியக் கடவுள்.

இலக்கன உதயப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் கவி 126

## 16. இரண்டாம் பாவகப் படலம்

அவமிலர்கேந் திரமுமற்றோர் உபசெயமும் ஆகி
　　அயக்கோன்ஒன் றாகவிரண் டுச்சமுறில் அரசன்
தவமுறப்பொன் ஒன்றுதிக்காய் தனிக்கவியத் தினில்சேய்
　　தபனனுறில் கேந்திரநான் குங்கிரகர் தனிக்கில்
அபஉதயம் பவம்வெகுபேர் நண்ணிலவைக் குடையோர்
　　நவையிலுத யத்தாகின் நளிர்மகரத் துச்சத்
திவர்கள்விற் கோள்மீனுதயத் தில்கூடி இருக்கில்
　　எப்பொழுதும் தனவானென் றியம்புவதில் புவியே. 127

சுபர் கேந்திரமும் பாவர் உபசெயமும் ஆகிலும், மேடக்கோணம் லக்கினமாக இரண்டில் உச்சிக்கிரகம் இருக்கிலும், இலக்கனேசன் ஒன்பதில் இருக்க, இலக்கனத்தில் குரு இருக்கிலும், நான்கில் சுக்கிரன் தனித்திருக்க, பத்தில் சேய், இரவி இருக்கிலும், நான்கு கேந்திரமும் கிரகம் இருக்கிலும்; ஆறு, ஒன்பது, பதினொன்றாம் இடங்களில் வெகுபேர் கூடிலும், இவைக்குடையோர் தீதற இலக்கனத்தில் இருக்கினும்; குரு, சேய், மேடக்கோணில் அல்லது மீன இலக்கனத்தில் கூடி இருக்கினும் எப்பொழுதும் தனவான் என்று இப்புவியோர் சொல்வர்.

என்றுமுதல் உள்ள வரில் இரண்டதனுக் கிறையாய்
　　எவர்வரினும் அவன்தனவான் என்பரவன் பெலமாய்ப்
பொன்றிறமாய் ஒன்றிவர்க ளிற்குமறை யாமல்
　　புரக்கோண்கேந் திரமாகப் புக்கிடமும் சுபமாய்
கன்றிலக இவர்கள்பத னத்தவர்கூ டாமல்
　　நிறைந்தவனுற் றிடஇவர்கள் அங்கிசமும் நிறைவாய்
முன்தலைவ னுக்குறவாய் இவர்க்கொளியா திருக்கின்
　　மொழிதலிவன் தனதனெனும் பெயர்முழுதும் உளதே. 128

இரவி முதலானவர்களில் தனாதிபதியாக வந்தவன் பெலமாகி வியாழனும் அதிபெலமாகி, இவர்கள் இலக்கனத்துக்கும் தங்கள் சொட்சேத்திரத்துக்கு மறையாமல்,

இலக்கன கோண கேந்திரத்தில் இருந்து சுபசகிதமாகி; ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களுக்கு உடையவர்களுடன் கூடாமல், பதினொன்றுக்கு உடையவன் வர்க்கம் ஏறி, இலக்கனேசனுக்கு நட்பாகி இவனுக்கு மறையாது இருக்கில் குபேரன் என்று பெயருடையவனாகி, ஆயுட்தாயம் வரைக்கும் இப்பெயர் நடத்துவன்.

## இதுவுமது

உளத்தினுக்கொன் பானிசையர் கேந்திரமுற் றெதிர்க்கில்
   ஒன்றருகன் இதுவும்உறல் உச்சமிரண் டுதிக்கில்
வளர்ந்திடல்பத் தவர்க்கிரக மாறஇறை பெலக்க
   மச்சமனன் பார்க்கிலிரண் டொன்றினர்கேந் திரமாய்க்
களத்தவிß வறமிலவர் கட்கதுவில் உதயம்
   கனகம்உற அதுவும்உறில் கயல்இறைஒன் றாகக்
குளத்தானண னின்மாறில் ஒன்றிகண்டீ தைந்தாய்க்
   கூடல்ரட்டி மும்மடங்காய் இரந்தனத்துக் குளதே. 129

பன்னிரண்டுக்குடையவர்கள் எதிர் கேந்திரமானால் ஆயிரம் பொன்னுடையவன். இப்பலத்துடனே புதன் இலக்கன உதயமாகில் இரண்டாயிரம் பொன் உடையவன். இப்பலத்தில் இலக்கனத்தில் புதன் அல்லாமல் இரண்டாம் இடத்தில் உச்ச கிரகம் இருக்கில் மூவாயிரம் பொன் உடையவன். பதினொன்று, பத்துக்கு உடையவர்கள் கிரகம் மாற, இலக்கனேசன் பெலக்கக் குரு பார்க்கில், ஐந்தாயிரம் பொன் உடையவன். ஒன்றாம், இரண்டாம் இடங்களுக்கு உடையவர் கேந்திரமாக நான்கு, ஒன்பதாம் இடங்களுக்கு உடையவர் பாவ சகிதம் அல்லாமல் கூடி, இரண்டில் இருக்கில் பதினோராயிரம் பொன்னுடையவன். இப்பலத்துடனே குரு உதயமாகில் இருபத்து இரண்டாயிரம் பொன் உடையவன். குரு உதயமாகி இரண்டு, பதினொன்றாம் இடங்களுக்கு உடையவர் கிரகம் மாறில் முப்பத்து மூன்றாயிரம் பொன் உடையவன்.

ஆயமிசை அவர்கூட வாக்குறக்கட் கோன்பத்
தாகவிற்பொன் உதயமெனில் ஆரல்வைசே டிகமாய்
நாயகனும்சேல் உதயநணப் பவன்பார்த்தி டத்தே
நடைமனங்கி சம்உறிலணன்கண் ணாதரொன்றாய்ச் சேர
தாய்மனிறை தங்களில்கேந் திரிக்கவுட லரவம்
தணவெணதிர்க்க இவர்களயி ராபதத்தங் கிசமாய்
ஏயிலற மொன்றறல்கண் பவர்நாற்கேந் திரத்தும்
எனிலரைஒன் றொருபதின்மேல் எண்ணிலட்சம் தனமே. 130

*பதினொன்று, பத்தாம் இடத்துக்கு உடையவர்கள் கூடி இரண்டில் இருக்க, இதற்குடையன் பத்தில் இருக்க, இலக்கனம் தனுவாகிக் குரு இருக்கில் ஐம்பதாயிரம் பொன் உடையவன். சேய் வைசேடிகாங்கிசம் ஏறி, இலக்கனேசனுடன் கூடி இலக்கனமாகிய மீனத்தில் இருக்க, பதினோராம் இடத்துக்கு உடையவன் பார்க்க, விருச்சிகாங்கிடம் ஏறில் நூறாயிரம் பொன் உடையவன். இரண்டு, பதினோராம் இடங்களுக்கு உடையவர்கள் கூட, நான்கு, ஒன்றுக்கு உடையவர்கள் கேந்திரமாக, ஒன்று, ஏழாம் இடங்களில் குரு, அரவெதிர்க்க, இவர்கள் ஐராவத அங்கிசம் ஏறில் பத்து நூறாயிரம் பொன் உடையவன். ஒன்பது, ஒன்று, நான்கு, இரண்டு, பதினொன்றுக்கு உடையவர்கள் நான்கு கேந்திரங்களிலும் சுபசகிதமாக இருக்கில் கோடிக்கு மேலுள்ள தனவான்.*

தனத்ததிபன் உற்றசுப வர்க்கமதெத் தனையத்
தனைக்குமுள கதிர்த்தொகையைத் தனத்தொகைவர் தளையாம்
சினத்தரிமன் முதல்வருறல் விழித்தலகம் எனுமுத்
திறத்தியல்புக் கமைத்தபடி வரத்தியல்செப் புவரால்
அணத்துணவுக் கிவன்புகரம் புலிக்குடைய பெலமும்
அபெலமுமுன் போலவிதற் கறியஉரைத் திடுவார்
இனித்தன்முதல் ருசித்தல்பொசித் தற்கிவர்கட் குரைத்த
இயல்குளதப் பொதியவரை இடத்தகுடத் தவனே. 131

*தனாதிபதி எத்தனை சுபவர்க்கம் ஏறினானோ அத்தனை சுபவர்க்கத்துக்கும் எத்தனைக் கதிருண்டோ, அவற்றை*

அறிந்து ஆட்சி, உச்சம், பகை, நீசம் கண்டு தனவர்த்தனை சொல்லுக. இந்தத் தனாதிபன் கூடினது, இருந்தது பார்த்தது அறிந்து, தனவரவுக்கு இனமும் திசையும் வகைதொகையும் சொல்லுத.

### *போசன பலம் அறியும்படி*

இரண்டுக்கு உடையவனும், சுக்கிரனும், சந்திரனும் முன் தனாதிபதிக்குச் சொன்ன பலன் போலும் பெலக்கில் எந்தக் காலமும் சுகபோசனம் என்ப. இவைகளில் பெலவான் அறிந்து, அவனுக்குள்ள ருசி முதலாகிய போசனவர்க்கம் சொல்லுக, பொதியவரையினை உடைய கும்போதயனே.

குடத்தகொடை அவன்தாயம் மகற்குடையவர் குருவும்
கோற்கிறையும் பெலக்கிலிவர் கொடுத்திடுவர் அதனும்
கடுத்தவர்பார்த் தவரிடத்த ராகவிளர் முதல்வர்க்
கன்புடைய ராகில்அவர் அளிப்பதும்அப் படியாம்
சுடர்ச்சகிரண் டிறையுமெட்டா தீதிறையும் சுபமாய்த்
தோன்றிலவர் எப்பொழுதும் சுபநயனம் உடையார்
விடைக்கிறைபொன் விழியின்மகன் வேளிறைவர் பெலக்கில்
வெகுகுடும்ப வானெனவும் விளம்புவதிப் புவியே. 132

கும்ப உதயனே! கேட்பாயாக. இரண்டு, நான்கு, ஐந்தாம் இடங்களுக்கு உடையவர்களும் சுக்கிரனும், குருவும் இலக்கனத்திற்கும் இவர்கள் சொட்சேத்திரத்திற்கும் பெலமாகிச் சுபவர்க்கம் ஏறில், ஈகை உடையவர். இவர்களுடன் கூடினவர், பார்த்தவர், இருந்த இராசிநாதன் இவர்கள், இலக்கனேசனுக்கு அனுகூலமாகில், இவர்களில் பெலத்தவனை அறிந்து அவன் காரக சரித்திரம் போலும் கொடுப்பதற்கு விபரம் சொல்லுக. இரவியும் மதியும் இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களுக்கு உடையவர்களும் முன்போல சுபமாய்ப் பெலக்கில் எப்பொழுதும் சுப நயனத்தை உடையவன். குருவும், சுக்கிரனும் இரண்டு, நான்கு, ஐந்து, ஏழு, ஒன்பதாம் இடங்களுக்கு உடையவர்களும் முன்சொன்னபடி பெலக்கில் வெகு குடும்பவான்.

விளம்பின்முகக் கோள்மதிபொன் வெள்ளியும்முன் போல
    விளங்கில்இவன் சுகமுகன்இதின் மேயதற்கும் அதுவாம்
களங்கன்மக னும்இவனுக் கருத்திறையும் பெலமாய்க்
    கதுவில்வெகு விந்தைஇவர்க் கன்புடையோர்க் கதுவாய்
வளந்தருமழ் வித்தையுமாம் வசனமும்அப் படியாம்
    வாத்தியசங் கீதநட நாட்டியமற் றெவையும்
குளங்கணயன் மால்முதல்வர்க் குள்ளதும்வித் தையதாய்க்
    கூறுவதவ் வாக்குடைய வனுக்குடைய குணமே. 133

இரண்டாம் இடத்துக்கு உடையவனும் மதி, குரு, சுக்கிரனும் முன்போலும் பெலக்கில் எப்பொழுதும் சமுகடையவன். இதன்மேல் இவர்களுடனே கூடிய வர்க்கம் கண்டு முக்குணவர்க்கம் சொல்லுக. புதனும் இரண்டாம் இடத்துக்கு உடையவனும் பலக்கில் வித்தியாதிகள் இவர்களுடன் கூடினவர்கள் அறிந்தும் இவர்கள் காரகம் கொண்டும் வித்தியாதிக வர்க்கம் சொல்லுக. வாய்ச்சாலக வசனாதிக, சபாவல்லவ, வசனப்பிரதாப, உத்தண்ட, கெம்பீர, வசனாதிக்கங்களுக்கும் இந்த வர்க்கம் கண்டு சொல்லுக. சிருட்டி, ஸ்திதி, சங்காரம் முதலானவைகளுக்கும் இந்த வித்தியாதிகப் பிரசங்கத்துடனே கூட்டிச் சொல்லுக. இவையும் இரண்டாம் இடத்துக்கு உடையவன் சரித்திரம்.

வாக்கிறைபாத் திரபாண்டத் துக்குடையவ னாக
    வரில்இவனும் சிதனும்வலி தாகவரில் வெகுவாய்
நீக்குளவர் இவர்ச்சேரில் பெலத்தவர்கட் குளதாய்
    நிகழ்த்துவரித் தாதினமும் இவர்க்குளது நிசமாம்
போக்குறும்வாக் கிறையைஇறை நோக்கவிழி யின்மால்
    பொன்னுதயத் தாகமனை புகர்இருக்க இவனை
நோக்குவதம் மனைக்குடைய னாகில்அள வற்ற
    நூற்கதிப ராமிதன்மேல் நுவல்வதுமூன் றினுக்கே. 134

இரண்டுக்கு உடையவனும் சுக்கிரனும் முன்போலும் பெலக்கில் பாத்திரப்பண்டம் மிகுதியும் உண்டென்ப. இதற்கு இவர்களுடன் கூடினவர்களையும் அறிந்து பலவானுக்குள்ள காரகப்படிக்குத் தாதின முதலான

வர்க்கங்களும் கண்டு சொல்லுக. பத்தில் இரண்டாமிடத்துக்கு உடையவன் இருக்க, இலக்கனேசன் பார்க்க, இரண்டில் புதனும், ஒன்றில் குருவும் இருக்க, நான்கில் சுக்கிரன் இருக்க, இவனை நான்காம் இடத்திற்கு உடையவன் பார்க்கில் அனேக புராணக்கதை, காவியம், சரித்திரம் முதலான பிரபந்தம் உண்டுபண்ணுவன். இதன்மேல் மூன்றாம் இடப்பலன் சொல்லுவோம்.

இரண்டாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் பதினாறுக்குக் கவி 134

## 17. மூன்றாம் பாவகப் படலம்

மூன்றதனுக் கிறைவனிட்ட னாகவரில் இவனும்
முன்புளரா சிக்கிறையும் முதற்கிறையும் பெலமாய்த்
தோன்றுவது முன்போலாய்ச் சுபமதிக மாகில்
துணைவரதி கம்உளர்இத் தொகையமுற்போல் தொகையாம்
ஈன்றவளல் லாதனுவாய் இடத்துளகட் கோன்எட்
டேறவனல் பூண்மனபெ லம்பெறிலீ ரசுபர்
மீன்றுவச னணிமனுறில் ஒன்றாம்என் றணியின்
மேயதிவன் ஏழிரண்டாம் ரூபமும்அவ் வியல்பே. 135

மூன்றாம் இடத்துக்கு உடையவனும் செவ்வாயும் இலக்கனேசனும் முன்போலும் பெலமாகிச் சுபவர்க்கம் ஏறில் இளைய சகோதரம் அதிகம் உண்டு என்ப. இவர்கள் கதிர்ச்சங்கை கொண்டு சகோதரசங்கை சொல்லுக. இரண்டாம் இடத்துக்கு உடையவன் எட்டாமிடத்தில் இருக்க, மூன்றாம் இடத்துக்கு உடையவனும் செவ்வாயும் பாவவர்க்கம் ஏறி பெலகீனமாகில் புனர்மாதாவினிடத்தில் சகோதரம் உண்டு என்ப. இரண்டாம் இடத்தில் பாவர் இருக்க, மூன்றாம் இடத்திற்கு உடையவன், ஏழாமிடத்தில் இருக்க, ஏக சகோரம் உண்டு என்ப. ஒன்றாமிடத்தில் மூன்றாம் இடத்துக்கு உடையவன் நிற்கில் இரண்டு சகோதரம் உண்டு என்ப. இவ்வர்க்கம் கண்டு ரூபம் சொல்லுக.

மும்முதல்வன் குருபார்க்க வக்கிரனைக் கூடி
    மூர்த்தமுறில் பாவர்உப சயமாகில் முதற்கோள்
பம்முதல்வ னைத்தழுவி பணிபெறில்கேந் திரத்தில்
    பண்புடையர் இருக்கில்வெயில் பணிசிகியைச் சேரில்
கம்முதல்வன் பெலவானைக் கதுவின்மதிக் கனலே
    கத்துறில்ப ராக்கிரம மாம்கருமத் துடையோன்
அம்முதல்வன் அணிமனின நன்நளிர்க்கோள் அனையில்
    ஆதிபெலவான் தைரியவான் அமர்க்களவல் லவனே. 136

*மூன்றுக்குடையவன் செவ்வாயைக் கூடி லக்கனத்தில் இருக்கக் குரு பார்க்கில் பாவரூப செயம் ஏறிலும், இலக்கனேசன் மதியைக்கூடி மூன்றில் இருக்கிலும், சுபர் கேந்திரம் ஏறிலும்; இரவி, இராகு அல்லது கேதுவைக் கூடிலும்; இலக்கனேசன் பெலவானைக் கூடிலும்; மதி, சேய் கூடிலும் பராக்கிரமவான் என்ப. பத்து, நான்கு, மூன்றாம் இடத்துக்கு உடையவர்கள் இரவி, சேய், மதியைக் கூடில் அதிக பெலவான், தைர்யவான், போர் வல்லவன்.*

வல்லதிபன் அணிக்கிறையாய் வரில்இவனும் பிருகு
    மறையவனும் பெலமாக மருவிலணி வெகுவாய்
மெல்லதிபன் முதலியவர்கள் வர்க்கத்தில் அலசி
    இவர்க்கிசைந்த ரத்னவிதத் தியற்றியபூ டணமாம்
வில்லதிகப் பணிதியெதாம் எண்ணிலவர்க் குரைத்த
    மெய்யுறுப்புக் காணதென விளம்புவர்அவ் வெயினோர்ச்
சொல்லதிகக் கேள்விகதை காவியமற் றெவையும்
    சொற்றிடுவர் இதன்மேல்நான் காமிடத்துக் குளரே. 137

*மூன்றாம் இடத்துக்கு உடையவனும், சுக்கிரனும், வியாழனும் முன்போலும் பெலமாகில் ஆபரணாதி மிகுதியும் உண்டு என்ப. இவர்களுடன் கூடின வர்க்கம் அறிந்து இவர்களுக்குச் சொர்ண இரத்தினங்களால் செய்த பூடணவர்க்கம் சொல்லுக. உறுப்பு அறிந்து ஆபரணப்பேர் சொல்லுக. இரவி முதலானவர்களுடன் கூடினது அறிந்து, காவிய, கதை, கேள்வி முதலானவையும் சொல்லுக. இதன்மேல் நான்காமிடப் பலன் சொல்லுவோம்.*

மூன்றாம் பாவகப்படலம் முற்றிற்று.

ஆகப்படலம் பதினேழிற்குக் கவி 137

## 18. நான்காம் பாவகப் படலம்

மிடற்றிடம்தாய்ப் பதியாக மேவில்இது இவனும்
இதற்குளகா ரகனும்வெகு பெலமாய்மேன் மேலும்
நடத்துவதும் சுபமாகி நல்லவர்பெற் றிலகி
நட்புளகேந் திரகோணின் நண்ணிமனை நாதர்க்
குடற்கதனுக் கெட்டுளஞ்சுத் தமுமாக்கி இதனுக்
கொளியாமல் தேவவர்க்கத் தாங்கிசத்தும் உயரில்
திடத்துடைய மாதுருதீர்க் காயுளுவாம் ரோகம்
திடகாத்ர புத்ரபவுத் திரமும்உடை யவளே. 138

*நான்காம் இடமும் அந்த இடத்துக்கு உடையவனும் மாத்ருகாரகனும் வெகுபெலமாகி மேன்மேலும் சுபவர்க்கம் ஏறிச் சுபவர்க்கங்களோடும் கூடி மித்திர கேந்திர கோணில் இருந்து நான்காம் இடத்துக்கு உடையவனும் இலக்கனத் துக்கும்; ஐந்து, எட்டாம் இடம் சுத்தமாகி, இதற்கு ஆறு, எட்டு, பன்னிரண்டில் விழாமல் தேவதாங்கிசத்திலேயும் அதிக சுபாங்கிடம் ஏறில் மாதுரு திடசரீரத்தோடும் கூடி அரோகியாகி புத்திர பௌத்திரர்களுடனே தீர்க்காயுள் உள்ளவளாக இருப்பாள்.*

வளர்மதியும் பார்க்கவனும் மனையுமனைக் கிறையும்
மறையவனா தவனறமன் வர்க்கமுமாய்ப் பெலக்கில்
அளவில்வெகு பாக்யவதி பதிவிரதை பதியும்
அன்புசெய்கு ணாதிகம னோரதமா துருவாம்
களரிவர்கள் உடன்கூடில் கறைமதிதேள் இருந்து
கான்முளையைப் பார்க்கிலனைக் கனல்விதுவா றிறையை
விளவரவூ னடிபார்க்க மேவில்இவள் உலகில்
விபசாரி யாகிவெகு பாபம்விளைப் பவளே.

*பூர்வபட்சத்துச் சந்திரனும், சுக்கிரனும், நான்காம் இடமும், நான்காம் இடத்துக்கு உடையவனும் ஆகிய இவர்கள் குரு, இரவி ஒன்பதாம் இடத்துக்கு உடையவன் வர்க்கம் ஏறி, முன்போலும் பலமாகில் மிகுதியும் பாக்கியவதியுமாகிப் பதிவிரதையுமாகி, பதிக்கு*

அன்புடையவளுமாகிய, மனோரதம் உள்ளவளுமாகிய மாதுருவாம். இவர்களுடன் பாவக்கிரகங்கள் கூடிலும், சந்திரன் விருச்சிகத்தில் இருந்து புதனைப் பார்க்கிலும், நான்காம் இடத்தில் சேய், மதி ஆறாமிடத்துக்கு உடையவனும் கூடி இருக்க; கேது, சனி பார்க்கில் விபசாரத்துவமாகி வெகு பாவத்தையும் செய்வாள் என்றவாறு.

### வாகன பலன்

பவர்கூடக் காரகனும் மனைப்பதியும் கூடப்
பங்கெதிர்பார்த் திடிலுமிவன் பார்த்திவதி பதியை
அவமானன் மேவவனல் அருக்கனுங்கா ரகனும்
அணையினும்மா துருவேசை யாமிதன்மே லறலில்
றவர்சேர இதற்கிறையும் இரசதமும் பலமாய்த்
தங்களின்மித் திரமாகித் தாட்கிறையைக் கூடி
இவர்களிறைக் கொன்றனைக்கெட் டாறுவிய மாகா
திருக்கிலிவன் வாகனவான் என்பதகத் தியனே. 140

நான்காம் இடத்துக்குடையவனும் காரகனும் பாவருடன்கூட, இவர்களைச்சனி ஏழில் இருந்து பார்க்கிலும் நான்கு, எட்டுக்கு உடையவர்கள்கூட மாதுருகாரகனும்; சேயும், புதனும் கூடிலும், மாதுரு விபசாரி என்ப. நான்காம் இடத்தில் சுபர் இருக்க, நான்காம் இடத்திற்கு உடையவனும் சுக்கிரனும் பலமாகித் தங்களில் மித்துருவுமாகி இவர்கள், பன்னிரண்டாம் இடத்துக்கு உடையவனைக் கூடி இலக்கனத்துக்கும் நான்காம் இடத்துக்கும் இலக்கனேச னுக்கும் மறையாமல் இருக்கில் இவன் வாகனவான் அகத்தியமா முனியே!

அகத்திறையி லிரசதமும் அதமர்நெரூக் கில்லா
தந்தணர்வர்க் கமமுமாய்க்கேந் திரகோணத் தாகிச்
சுகத்தமாரங் கிசத்தினிலுஞ் சுபமதிக மாகில்
சொர்ணாதி ரத்னசகி தத்துவா கனமாம்

மிகத்துதயத் தவனிவர்கள் நட்பாகிப் பார்க்க
எய்திலிவர்க் குளவூர்தி யும்மிசைப் பவரில்
தகுத்தொருவ ராகவரில் தனித்தனிவா கனமாய்
வகுப்பர்புகர் வர்க்கமிகல் வாத்தியவர கனமே. 141

நான்காம் இடம், நான்காமிடத்துக் குடையவனும், சுக்கிரனும் பாவமதியும் இல்லாமல், குரு வர்க்கம் ஏறிக் கேந்திர கோணத்தில் இருந்து, தேவாங்கிசத்தில் சுபவர்க்கம் அதிகம் ஏறில், சொர்ணாதி, ரத்னாதி சகித வாகனமாம். சூரியாதி கிரகங்கள் இவர்களை நட்பாகிப் பார்ப்பதறிந்து வாகனத்திற்கு இனம் சொல்லுக. இவர்கள் தனித்திருக்கின்ற தனித்தனி வாகனம் சொல்லுக. இவர்கள் சுக்கிரன் வர்க்கத்தில் மிகுதியும் ஏறினால் வாத்திய வாகனம் சொல்லுக.

### கிரக பலன்

வாகனமன் கிரகமன னாகவரில் இவனும்
மனையுமனைக் காரகனும் மறையவன்வர்க் கமுமாய்
ஏகமன னுக்கதனுக் கில்லதனுக் கொளியா
தெய்துதல்கேந் திரகோணத் தாகிமுன்போல் இருக்கில்
நாகவினத் தொடுங்காரைக் கட்டுளமா ளிகையும்
நாகரிக வெயிலுமதி நடுவிலரண் மனைக்கட்
டாகவரு மனையிதென்றா யதிவல்புதி தனற்பா
டபரிமித மானமலங் காரகமனூ தனமே. 142

நான்காமிடமும் நான்காமிடத்துக்கு உடையவனும் குரு வர்க்கமேறி இலக்கனத்துக்கும் இலக்கனத்துக்கு உடையவனும் நான்காம் இடத்துக்கும் ஒளியால் கேந்திர கோணம் ஏறி, முன்போலும் பலமாக இருக்கில் கல்வரியோடுங்கூடிய காரைக்கட்டுள்ள மாளிகையும் கோட்டையும் நடுவில் அரண்மனைக் கட்டுள்ள கிரகம் உண்டாகும் என்க. இதற்கு இரவி முதலான கிரக பலம் அறிந்து இரவி நேர் அதிக பலமுள்ள கிரகம், புதிது அனல்பட்டது, அபரிமிதம், வெகுமானாதிகம், அலங்காலம்ஸ புராதன கிரகம் என்று சொல்லுக என்றவாறு.

*சேத்திர பலன்*

தனத்தினுக்கோர் மூன்றுமிவ னும்புகலும் அவமாய்ச்
சனிவிழிக்கப் பணிதழுவில் பிரிந்ததுமற் றரவே
லித்திலொதுக் கின்மாந்தி யேல்வழியிற் றுயில்மன்
னினனாகில் யாத்திரையில் இதற்கிறைசேர்ந் திருக்கில்
சினத்தரச ராக்கினைக்கெய் திடுங்கிரக மிவர்கள்
பிரசரமற் றேற்றிரம்பல் சிறிதுளவில் லிவர்க்காம்
கனற்றபன னின்மன்விது களிப்புறமுற் பலமாய்க்
கதவுதல நேகமுள சேத்திரங்கட் காமே. 143

*நான்காமிடம், நான்குக்கு உடையவனும், சுக்கிரனும் பலகீனமாகி இராகுவுடன் கூடி, சனி பார்க்க இருக்கில் பிறந்த கிரகம் என்க. கேதுவாகில், தன் இனத்துக்குள் ஒதுங்கும் குடி என்க. குளிகனாகில் வழிக்கரைக் குடியிருப்பு என்க. எட்டுக்கு உடையவனும் சூரியனும் கூடில் இராசகோபாக்கினைக் கிரகம் என்க. இந்த வர்க்கம் திரவர்க்கம் ஏறில் திர கிரகம் என்க. சரமாகில் வெகுகிரகம் என்க. உபயமாகில் சிறிதுள கிரகம் என்க. சேய், இரவி, நான்காம் இடத்துக்கு உடையவன், மதி இவர்கள் முன்போலும் பெலமாகில் வெகுசேத்திரம் உண்டாம் என்க.*

காமவிற்கீ ரைந்தும்இவ னும்கவியும் பெலமாய்க்
கல்லியமன் னுக்குறவாய்க் கேந்திரகோண் கதுவச்
சோமனிதில் மால்சேரில் வெசெனமித் திரமும்
தொண்டடிமை கலைமுதல சுரபிமுத லவும்தார்ப்
பூமுதல பரிமளம் குடைகொடிடால் சயனப்
புரத்துளதும் பந்துசனப் பூச்சியமும் உலகில்
நாமதிகப் பெயரும்வாத் தியசங் கீத
நடனமுதல் உளவுமெந்த நாளும்உள வெனுமே 149

*நான்காமிடமும், நான்காமிடத்துக்கு உடையவனும், சுக்கிரனும், முன்போல் பெலமாகி, இலக்கனேசனுக்கு நட்புமாகிக் கேந்திர கோணில் இருந்து; மதி, குரு, புதனுடன் கூடில் சகலசன மித்திரமும், ஆளடிமை தாசிதாச வர்க்கமும், வஸ்திராதிக அலங்காரமும் கன்றுகாலியும், சுகந்த பரிமள*

*நானாவித வாசனாதிகப் பரிசமும்; குடை, கொடி, டால் முதலானவையும், சப்ரமஞ்ச முதலாகிய சயன அலங்காரமும், பந்துசன பூச்சியமும், பட்டப்பேரும், நடன நாட்டிய சங்கீத வாத்தியப் பிரியமும் எந்தக் காலமும் உண்டாம்.*

உளப்பதிகீ றும்இவனும் முதல்பதியும் செலமாய்
　　உதிப்பதுமங் கிசமுமிதாய் உடுபதியும் சிதனும்
அளப்பிலதி பெலமாகில் அவர்களைச்சேர்ந் திருக்கில்
　　ஆறுகுளம் கூவலுமுண் டாக்குவரொன் பதிமான்
களப்பதிமா னைக்கூடித் தனத்துறவுந் தணனும்
　　கல்லியமுற் றிடில்சிதனக் கமலமனை கதுவில்
வளர்ப்பரிவர் அதிகசுக மாமலைய முனியே !
　　வகுப்பதினில் ஐந்தெனும்பா வகப்பலமாம் அதற்கே. 145

*நான்காமிடமும், நான்காம் இடத்துக்கு உடையவனும் இலக்கனேசனும் சல வர்க்கமாகி, இலக்கனமும் இலக்கின அங்கிசமும் சல வர்க்கமாகி; மதி, சுக்கிரன் அதிபெலமாகி, முன் சொன்னவர்களைக் கூடில் ஆறு, குளம், கூவல் உண்டாக்குவன் என்க. ஒன்பது, நான்காம் இடத்துக்கு உடையவர்கள் ஏழாம் இடத்துக்கு உடையவனைக் கூடி, தனத்தானத்தில் இருக்க, ஒன்றில் குரு இருக்க, நான்காம் இடம் சல இராசியாய்ச் சுக்கிரன் இருக்கினும் சுகாதிபன் என்ப. பொதிய வரையினை உடைய அகத்தியமா முனியே! இதன்மேல் ஐந்தாமிடம் சொல்லுவோம்.*

நான்காம் பாவகப்படலம் முற்றிற்று.
ஆகப் படலம் பதினெட்டுக்குக் கவி 145

## 19. ஐந்தாம் பாவகப் படலம்

மதப்பதிக்காய் அத்திறைபுத் திரற்கதிப னாக
　　வரிலிவனும் அந்தணனும் வாக்கிறைவேட் கிறையும்
முதற்கிறையும் இம்மனையோர் நான்கினுக்கும் வலிதாய்
　　முடனருகன் வர்க்கமும்இல் லாமன்முழுப் பெலமாய்ச்
சதத்தளமன் முதலவரி நல்லவர்ப்பெற் றுதயத்
　　தாகியகேந் திரகோணத் தாங்கிசமும் சுபமாம்
இதத்தகிய மாயகித மின்றிவரில் உலகம்
　　இவன்சுபுத்ர பவுத்ரவர்க்கம் இலக்கிலையென் பதுவே. 146

ஐந்தாம் இடத்துக்கு உடையவன் புத்திராதிபனாக வருங்கால், குருவும் ஐந்து, இரண்டு, ஏழு, ஒன்றாம் இடங்களுக்கு உடையவர்களும் இந்தத் தானம் நாலுக்கும் பெலமாகிச் சனி, புத வர்க்கமும் இல்லாமல் முழு பெலமாகி இரவி முதலானவரில் சுபருடன் கூடி, இலக்கன கேந்திர கோணத்தில் இருந்து சுபர் அங்கிசமும் ஏறி இதம் அதிகமாகி அகிதம் இல்லாமல் இருக்கில் இவனுக்குச் சுபுத்திர பௌத்திர வர்க்கம் இலக்கில்லை.

இற்பதிக்கா னனம்பவர்வீ டாகஇதற் கிறைவன்
எய்திஅங் கிசத்திறைவன் ஏழ்க்கிறைவ னாகின்
முற்பதிக்கீ றிரசிதனும் இதுவுமுறக் கனகம்
ஒளிக்கிலகு கன்கவியும் முளரிமன்பின் இருக்க
வற்பதியில் லான்மீனைந் தாகில்வசை அசிதன்
அரவுநடை இரவிபுர மனையினனல் புனரில்
சொற்பதிக்கீ றாக இவன் தோன்றிலுன்மா நிதியும்
துர்ப்பெலமாய் உற்றிடிலீ தற்பசுதப் பெயரே. 147

ஐந்தாமிடம் பாவர் வீடாக, இதற்குடையவன் பொருந்திய அங்கிசாதிபதி ஏழாம் இடத்துக்கு உடையவன் ஆகிலும் பன்னிரண்டில் மதி, சுக்கிரன்கூடி இருக்க, வியாழன் மறையிலும், புதன், சுக்கிரன், இரவிக்குப் பன்னிரண்டாம் இடத்தில் இருக்க; இடபம், கடகம், மீனம் ஐந்தாம் இடமாகிலும், சனி பத்தாம் இடத்தில், இராகு ஒன்றில் இரவியும் இருக்கில் இலக்கனம் விருச்சிகமாகிச் செவ்வாய் இருக்கிலும் ஐந்தாம் இடத்துக்கு உடையவனும் வியாழனும் பலகீனமாகிலும் அற்ப புத்திரம் என்க.

சுதமவராய் அம்பவராய் கனன்கனையொன் றாகில்
துயில்பொன்னலீ றுளமான்றொ ழில்சனிமெய் யாகில்
வதைஇரவி யில்சுபர்கம் மனலுறில்வில் உளமாய்
மனன்பார்க்கில் சனிசேயுண் மறையவனொன் றாகக்
கதுவிடில்கா லாந்தரநந் தனராமை அலவன்
கான்முளையாய் பவுமனுறக் களங்கனின்மான் பவரோ
டதிகபெலமுற் றிடிலிரண்டாம் களத்திரத்தால் தனையன்
அநேகமுளன் என்றனன்சந் தாசலத்தா திபனே. 148

ஐந்து, எட்டாம் இடத்தில் பாவர் இருக்க, மேடம், விருச்சிகம் இலக்கனமாகிலும்; எட்டாமிடத்தில் குரு, பன்னிரண்டாம் இடத்தில் சேய், பத்தாம் இடத்தில் ஐந்துக்கு உடையவன் இருக்க, ஒன்றில் சனி இருக்கிலும், எட்டில் இரவி, நான்கில் சுபர், ஒன்றில் சேய் இருக்கிலும், ஐந்தாம் இடம் தனுவாகி இரவி பார்க்கிலும், ஐந்தாம் இடத்தில் சனி, சேய் இருக்க, ஒன்றில் வியாழன் இருக்கிலும், காலாந்திர புத்திரர் என்க. மேடம், கடகம், ஐந்தாம் இடமாகிச் சேய் இருக்க, மதி இருந்த இராசிநாதன் பாவருடன் கூடிப் பெலக்கில் இரண்டாம் களத்திரத்தின் இடமாக அநேக புத்திரர் உண்டென்றவன் சந்தன அசலாதிபனான சுப்பிரமணியக் கடவுள்.

ஆதியுளத் திறைவரின்மா றிடஇவர்கள் பாவரோ
டசிதனையுற் றிடில்இவன்தீ அன்யதர்நோக் காமல்
பாதியுடன் பற்றில்வெகு பாவருள தினமுன்
பாகவரி லைந்திறைபொன் பங்குவர்க்கத் தணையில்
போதிறையுள் ளிறைமாலின் னார்(கள்)வர்க்கத் தாகப்
பூப்பதிநந் தனநிரட்டை பொருந்திலுல கத்தோர்
ஓதுதத்து புத்திரராம் கடகமதி சனிபொன்
உதிக்கவனல் வர்க்கமிலா துறின்முடந்தை சுதனே. 149

ஒன்று, ஐந்தாம் இடத்துக்கு உடையவர்கள் கிரகம் மாற, இவர்கள் பாவவர்க்கமாகிச் சனியுடன் கூடிலும்; சனி, சேய் ஏழாம் இடத்தில் இருக்க, மற்றவர்கள் பாராது இருக்கிலும், பாவர் இருந்த நட்சத்திரத்துக்கு இரண்டாம் நட்சத்திரம் பிறக்கிலும், ஐந்தாம் இடத்துக்குடையவனும், குருவும், சனி வர்க்கம் ஏற, சனி இரட்டையில் இருக்கினும் தத்துபுத்திரர் என்க. கடக மதி, குரு, சனியுடன் அதுவே இலக்கனமாகச் செவ்வாய் வர்க்கம் இல்லாது இருக்கில் முடந்தை புத்திரர் என்க.

முடனனலைந் துறையமற்றோர் விழிப்பறில்கித் துருமர்
முதலரிகற் கடகமென விம்முதலல்வர் முந்நான்
கிடபனுறக் கனல்பாரா திருக்கில்அரி துவாமுன்
எய்தினவர் ஒற்றுமைபோக் கினர்மறைய லாபம்

படருநீல்சீ மந்தாதி அற்றவர்வேள் சிதனும்
பங்கருகற் கிடையுறிலக் களமலடப் பங்கன்
உடனுறத்தேள் கோணாந்தம் அம்புகர் இலைந்தேழ்(பத்)
தொன்னலாபா வகன்மதிபயன் மலடிவனுக் குளதே. 150

*சனி, சேய் கூடி ஐந்தாம் இடத்தில் இருக்க, மற்றவர் பாராது இருக்கில் கலியாணத்துக்குமுன் உண்டான கர்ப்பம் என்க. கடகம், சிங்கம் இலக்கனமாகிப் பன்னிரண்டில் இரவி, மதி, சுக்கிரன் கூடச் சேய் பாராதிருக்கில் ருதுவுக்கு முன் பிறந்த புத்திரர் என்க. ஒன்று, ஐந்து, பத்தாம் இடத்துக்கு உடையவர்கள் மறைய, பதினோராம் இடம் பாவர் இருக்கில், சீமந்தாதி இல்லாத புத்திரர்கள் என்க. ஏழாமிடமும் சுக்கிரனும் சனி, புதன் மத்தியமாகில் களத்திர மலடு என்க. ஒன்றாமிடத்தில் சனி, விருச்சிக கோணாந்தியம் சுக்கிரன் இருக்கிலும் ஐந்தாம் இடத்தில் சத்ருவும் ஏழாம் இடத்தில் சுக்கிரனும் பத்தாம் இடத்தில் மதியும் இருக்கினும் புருட மலடு என்க.*

உளமிலவர் கூடிய மாகிலொன்றா றறமாய்
உயைடரில்சே றிற்தேளர னுடுபதிமா லுறிற்றாய்க்
களாமருவ இதற்கிறைகா ரகர்பாவ மேவில்
கட்கோணேழ்க் காறாறாய்க் கதிர்சேய்சுன் கதுவில்
விளவரவர்ச் சேர்ந்தனையொன் றிவர்மாறில் சோதி
வெயிறுதியை எனிலீறேழ் விதுவெனில்வெள் ளியின்மால்
வளர்மதியும் பெலமாய்ஐந் தறத்ததிபர் அவமாய்
மறையிலவனன் யபிதாச்சுதப் பேர்வழுத்துவ திப்புவியே. 151

*ஐந்து, நான்காம் இடத்துக்கு உடையவர் கூடிப் பாவ வர்க்கம் ஏறினும்; ஒன்று, ஆறு, ஒன்பது, நான்காம் இடங்களுக்கு உடையவர்கள் கூடி நான்கில் இருக்கினும்; விருச்சிகத்தில் சந்திரனும், இடபத்தில் புதனுமாக இருக்கிலும்; நான்காம் இடத்தில் பாவர் இருக்க, இதற்கு உடையவனும், மதி, சுக்கிரனும் பாவ வர்க்கம் ஏறினும்; புனர்பூசம், சப்தமி, ஞாயிறு கூடிலும்; விசாகம், துவாதசி, செவ்வாய் கூடிலும்; புரட்டாசி, துதிதை, சனி கூடிலும்;*

நான்கு, ஒன்றாம் இடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறி இவர்களை இராகு, கேது கூடிலும்; ஞாயிறு, சோதி, துதியை கூடிலும்; திங்கள், ரேவதி, சத்தமி கூடிலும்; சுக்கிரனும் நான்காம் இடத்துக்கு உடையவனும், வளர்மதியும் அதிபெலமாக ஐந்து, ஒன்பதுக்கு உடையவர்கள் பாவ-நீச-அஸ்தமனத்தை அடைந்து மறையிலும் அன்னிய பிதா புத்திரர் என்க.

புவிமகன்கன் னிவன்மகன்பாம் பதுதனையரி தன்கோன்
    புரக்கோணம் தணனிவர்க்கு வெட்டுறில்புத் திரனேர்
நவினயன கீனமுடம் தொண்டுபடல் செவிடு
    நாக்கலது பேயனென னந்தனர்கோ னருக
இவர்சுபமாய்ப் பெலக்கினல்ல புத்தியும்சற் குணமும்
    எய்துவரந் தணனுறவாய் இவர்களுச்சம் தேறில்
குவிலதிக யோகமுள ராசவர்க்கத் திவனும்
    கூடியவர்க் குளதொழிலும் இவர்க்குளதுக் குளதே. 152

ஐந்தாம் இடத்துக்கும், ஐந்தாம் இடத்துக்கு உடையவனுக்கும் இலக்கனேசனுக்கும் குருவுக்கும் ஐந்தாமிடத்தில், எட்டாமிடத்தில் சேய் இருக்கில், நயன ஈன புத்திரன் என்க. சனி இருக்கில் மூடன் என்க. குளிகன் இருக்கில் தாசன் என்க. இராகு இருக்கில் செவிடு என்க. சேய் இருக்கில் ஊமை என்க. ஆறுக்கு உடையவனும் புதனும் பெலக்கில் நல்ல புத்தியும் குணமும் உடையவன் என்க. ஐந்தாம் இடத்துக்கு உடையவனும் புதனும், குருவும் தங்களில் மித்திரமாகி அதிகபெலமாகில் அதிக யோகமுள்ள ராசப்பிரபு சினேகனாகி ராசப்பிரவர்த்தகத்தில் இரவி முதலாகிய கிரகத்துக்கு உள்ளபடி பிறவர்த்தகத்தில் இரவி முதலாகிய கிரகத்துக்குள்ளபடி பிறவர்த்தகம் பண்ணுவன்.

ஐந்தாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப் படலம் பத்தொன்பதிற்குக் கவி 152

## 20. ஆறாம் பாவகப் படலம்

தொழிற்கிருநான் குப்பலமீ திதன்மேல்சட் பவனத்
துக்குளதும் கேள்முனியே சுடரிருமூன் றுதிக்க
விழிப்பதிக்கீ நீறைபெலக்கில் வேதியனொன் றுதிக்க
மேலவர்கோ னொளிக்கிலிவன் விப்பிரனைச் சேர்ந்து
பழித்தொழிலர்ச் சேராமல் ஒன்றுறிலர் பாவர்
பற்றுலப செயமாகில் பற்றலரற் றவனாம்
ஒழித்தலத்துக் கைந்திறையின் முற்கோன்றுற் பெலமாய்
முன்பின்ன சுபர்ச்சேரில் யுபுமுழுதும் உளதே. 153

ஐந்தாம் இடப்பலன் இவ்வண்ணம் சொன்னோம். இதன்மேல் ஆறாம் இடப்பலன் அகத்தியமா முனியே ! கேட்பாயாக. ஆறாம் இடத்தில் இரவி இருக்க, இலக்கனேசன் பெலக்கிலும், இலக்கனத்தில் குருவிருக்க, ஆறாம் இடத்திற்கு உடையவன் மறையிலும், ஆறாம் இடத்துக்கு உடையவனும் குருவும் கூடிப் பாவருடன் கூடாமல் இலக்கனத்தில் இருக்கிலும், பாவ ரூப செபத்தில் இருக்கிலும், சத்துரு இல்லாதவன் என்க. ஆறாம் இடத்துக்கு உடையவனுக்கு இலக்கனேசன் துர்ப்பெலமாகி பாவ மத்தியமாகில் எப்பொழுதும் சத்துரு உடையவன்.

உட்பதிக்கான் அம்பவமாய் இவனுமவம் ஆகி
உதித்திடில்கேந் திரகோணத் துச்சமுறில் இவனில்
கட்பதிம னசெலமுறில் கடன்படல்சுத் துணவு
களவிலவா உடையரிவர் கனல்சனிகட் செவியை
நட்பதிக மாகஉறின் முற்படிபோல் கலக
நடுக்கல்கள வினசனவி ரோதநடத் துவரால்
விட்பதிக்கொன் பானிவன்கே மத்துரும னாக
விளங்குவதும் கேள்கமல விப்பிரனந் தனனே. 154

ஆறாம் இடம் பாவவர்க்கமாகி, அதற்குடையனும் பாவ வர்க்கமாகி, இலக்கனத்தில் இருக்கிலும், கேந்திர கோணத்து உச்சம் ஏறிலும், இவனுக்கு இரண்டுக்கு உடையவன்

துர்ப்பெலமாகிலும், கடன்படுவான். பசி, பட்டினி உடையவன். பொசிப்புக்கு அளவில்லாத அவா உடையவன் என்க. ஆறாம் இடம், ஆறாம் இடத்துக்கு உடையவனும் சேய், சனி, இராகு வர்க்கமாகி, நட்பாகிக் கூடில் முன்சொன்ன பலமல்லாமலும், கலகம், துன்பம், சோரம், இனசன விரோதம் இவையும் உடையவன் என்க. இவன் கேமத்துருமாக வருவதும் கேட்பாயாக. புட்போதயனுக்குப் புத்திரனான அகத்தியமா முனியே!

பிரசமலர்க் கிறையிலொன் றாய்பிரு குருசேய்
    பிறையொடும்கண் பூணடையும் பெறிலமரப் பிறைதான்
சிரசிவன்பொன் இவர்க்கொளிக்கில் தீதுளரைச் சேரில்
    சேர்விடம்பின் முன்தனிக்கில் சீவவர்க்கத் தகவில்
ஆரசுவிடின் மற்றதுறில் இதற்குடையோர் அணையில்
    அசடர்கி ரகத்தினில்போய் அவர்பார்க்க இருக்கில்
பரசரமுற் றிடில்கேமத் துருமனிவன் தினமும்
    பயலொடும்பல் லக்கொடும்போய் யாசகம்பண் ணுவனே.

இலக்கனம் சிங்கமாக இரண்டாம் இடத்தில் சுக்கிரன், மூன்றாமிடத்தில் இரவி, பத்தாம் இடத்தில் குரு, ஐந்தாம் இடத்தில் சேய் இவை சந்திரனுடன் கூடிலும், அமரபட்சத்து சந்திரன் இலக்கனத்துக்கும், இலக்கனேசனுக்கும் குருவுக்கும் மறையிலும்; அமரமதி பாவருடன் கூடிலும், இவன் முன்பின் கிரகம் இல்லாமலும் தனித்திருக்கினும் இவன் வியாழ வர்க்கம் இல்லாது இருக்கிலும், இவன் உச்சம் விட்டு, நீசம் ஏறினும், நீசக் கிரகத்துடனே கூடிலும் இவன் பாவ இராசியில் இருக்க, பாவர் பார்க்கிலும், இவன் வர்க்கமெல்லாம் சரம் ஏறிலும், தரித்திரத்தில் கேமத்துருமன் என்க. இவன் பயலும் பல்லக்குமாகச் சஞ்சாரத்தில் யாசக சீவனம் பண்ணுவான்.

நுவலிருமூன் றிறையதிகம் பெலமாக இவனை
    நோக்கறமில் ஒன்றணன்பொன் உடுபதிமால் சுதனும்
பவரொடும்கூ டில்சிரங்கோன் மதிக்கிவர்கள் ஒளிக்கில்
    பவர்உயரச் சுபரொடுங்கில் பதனமிவர்க் காகில்

அவமதிக மாயிவர்நீ சத்துறிலொன் றீராய்
அவரவருக் கதுமறையில் அசிதன்வர்கத் தேறில்
தவமதனுக் கீறுநடைக் குடையவர்கள் சார்ந்து
சற்சனம்விட் டரவுசிகி சாரினும்ஆ துலனே. 156

ஆறாம் இடத்துக்கு உடையவன் அதிக பெலமாக, இவனை இரண்டு, ஒன்பது, நான்கு, ஒன்று, பதினொன்றாம் இடங்களில் குரு, மதி, புதன், சுக்கிரன் இவர்கள் பாவரைச் சேர்த்து கூடினும்; இலக்கனம், இலக்கனேசன், சந்திரன் இவர்களுக்குச் சுபர் மறையிலும், பாவர் பெலமாகச் சுபர் துர்ப்பலமாகிலும், இரவி முதலான கிரகங்கள் ஆறு, எட்டு, பன்னிரெண்டாம் இடங்களில் இருக்கிலும், இவர்கள் பாவாதிகமாய் நீசத்தில் இருக்கிலும்; ஒன்று முதல் பன்னிரெண்டாம் இடம் வரைக்கும் தத்தம் பாவகத்துக்கு மறையிலும் இவர்கள் சனி வர்க்கம் ஏறிலும்; ஆறு, எட்டு, பத்தாம் இடங்களுக்கு உடையவர்கள் கூடி, சுபவர்க்கம் இல்லாமல் இராகு, கேதுவுடன் கூடில் தரித்திரத்தில் ஆதுலன்.

மாதுசித னாகிவர்க்கோத் தமமாகில் சனியாய்
மதிரவியாய்க் கதிர்மாலாயத் துலையுதய மருவி
ஈதுமுதற் கெட்டனற்பார் வைக்குடுக்கோ ளிருக்கில்
ஈனன்ம[illegible] சுன்பார்வையுடன் யாழ்மீனொன் றிலகில்
போதிருவர் [illegible]பார்க்க மெய்மையுறில் பிறைசேய்
புருவையுறு முடன்பார்க்கில் புறக்கடைமுன் னடுவாய்த்
தாதுமுதல் காலமுநேர்ச் சியுறிலா துலனாம்
சலவையுடுத் திரப்பதிவன் தன்தொழில்சொற் றிடிலே. 157

சுக்கிரன் கன்னியில் வர்க்கோத்தமம் ஆகிலும், இலக்கனம் துலாமாகச் சனி இருக்கிலும் அல்லது இரவி, மதி கூடி இருக்கிலும்; இரவி, புதன் இருக்கிலும் எட்டாமிடத்தில் மதி இருக்கச் சேய் பார்க்கிலும்; இலக்கனம் மிதுனம், மீனமாகி இரவி, புதன், சனி கூடிப் பார்க்கிலும்; இலக்கனம் மேடமாகி இரவி, மதி இருக்கச் சனி பார்க்கிலும்; மேடத்தில் சேய், மதி இருக்கச் சனி பார்க்கிலும், இலக்கனாந்தியத்

திரேக்காணம் தாது வர்க்கமாகி, நிசிகால மதி இருக்கிலும், முதல் திரேக்காணம் மூல வர்க்கமாகித் திவாமதி இருக்கிலும் இரண்டாம் திரேக்காணம் சீவ வர்க்கமாகிச் சந்தியாகால மதி இருக்கிலும் ஆதுலன் என்ப. இவன் வெளுப்பு வஸ்த்திரம் கட்டிக் கொண்டு இரப்பன்.

சொற்றலமுன் னீர்பவமித் தலத்தவருத் தமரீ
　　காணுதற்கண் ணிவர்களத்த மனநீசம் அசுபம்
உற்றிடில்போர்க் குள்ளாகி அபசெயப்பட் டொடுங்கி
　　ஒன்றினுக்கெட் டுடையவனோ டுற்றொளிக்கில் உறவற்
தற்தலைவன் தேய்ந்தொழிய சிதன்வர்க்கத் தேறி
　　அவமானத் திறைபார்க்க வண்ணலுடன் ஒளிக்கின்
முற்றலைவன் அசுபசுட்க முறில்ரேகை இவன்பேர்
　　முழுதும்பிச் சாடனனெ னனவுமொ ருவதுமிப் புவியே.　158

இரண்டு, ஒன்று, நான்கு, பதினொன்றுக் குடையவர்களும் சுபக்கிரகங்களும், செவ்வாயும் அத்தமனம் நீசம்பாவம் இந்த வர்க்கம் ஏறினும் யுத்தத்தில் அபசெயப்பட்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடத்தில் வீழிலும், இவர்கள் எட்டுக்குடையவனைக் கூடி மறையிலும், அமர மதியும், இலக்கனேசனும் சத்துருவைக் கூடிச் சனி வர்க்கத்தேறி, எட்டுக்குடையன் பார்க்க மறையிலும் இலக்கனமும் இலக்கனேசனும் பாவசுட்க வர்க்கம் அடையிலும் தரித்திரத்தில் ரேகை என்ப. இவன் செனன முதல் ஆயுர்த்தாயம் வரைக்கும் பிச்சாடனன்.

வியந்துயில்போக் கிறைவரொன்றாய்ச் வெகுபாவர்ச் சேம
　　வேதியனும் அண்ணலுமெட் டேறில்வெகு மானம்
பயந்தவரொன் றிவர்களவ மானமனைச் சேர்ந்து
　　பற்றலற்குந் துர்ப்பெலமாய்ப் பங்குவர்க்கத் தேறி,
நயந்தருசு பாதிபர்தா மாதிபராய்ப் பெலக்கில்
　　நவில்வதிவன் ராசனின னால்இறைவே னண்ணக்
கயந்தவனீ தங்கிசமுற் றிவர்ப்பார்க்க வனல்பூண்
　　கவிபெணுறி லிவனனையோ டும்விலைக்கா குவனே.　159

பன்னிரெண்டு, எட்டு, பத்தாம் இடத்துக்குடையவர்கள் கூடி அநேக பாவ வர்க்கம் ஏறி, இலக்கனேசனும் குருவும் எட்டாம் இடத்தில் இருக்கினும்; பத்து, நான்கு, ஒன்பது, ஒன்றாம் இடங்களுக்கு உடையவர்கள் எட்டுக்கு உடையவனைக் கூடி ஆறுக்கு உடையவனுக்கும் பெலகீன மாகிச் சனி வர்க்கம் ஏறிலும்; சுக்கிரன் எல்லாம் தூமாதி பஞ்சக்கிரக வர்க்கமாகப் பெலக்கிலும் தாசன் என்ப. ஏழில் இரவி, மதி இருக்க; இதில் சனி அங்கிசமும் செய்து பார்க்க மூன்றாமிடத்தில் சேயும் கன்னியில் சுக்கிரனும் இருக்கில் இவனும் இவன் தாயும் தாசவர்க்கம் என்ப.

குவலையந்தெற் குயர்வதுகண் டிம்மலையத் துதித்த
    குறுமுனியே ! ரோகவியற் குள்ளதுங்கேள் கொடியூர்
பவன்முடங்கா மாலைசன்னி பைத்தியநீர் குட்டம்
    பசாசுபிடி குருவாதம் படர்வனவ மிவர்க்காம்
சுவர்கருவி தீப்படுதல் சுரம்பிளவை முதல
    தோடமம்செவ் வட்டைகடி சோரிதரல் விரணம்
இவைகனலுக் கரவுசிகிக் கிவைநேர்நஞ் சுடனாம்
    என்பரிவர் வர்க்கமிர ணத்தனொடுற் றிடிலே. 160

தெக்கணபூமி உயர்வது கண்டு இந்தப் பொதிகை வரையின் இடமாக வந்த அங்குட்ட பிரமாண வடிவமான அகத்தியமா முனியே ! ரோக இயல் கேட்பாயாக. ஆறாம் இடத்துக்கு உடையவன் வர்க்கமெல்லாம் சனி வர்க்கமாகில் மூடம், காமாலை, சன்னி, பைத்தியம், கருங்குட்டம், பசாசு, பிடி, வசூரி, வாதம், படர்தாமரை இவை முதலாகிய ரோகம் உண்டாம் என்ப. செவ்வாய் வர்க்கமாகில் சுவர் வீழ்தல், நெருப்பு, ஆயுதம்படல், சுரம், பிளவை முதலாகிய தோடம் செவ்வட்டைக்கடி, இரத்த ரோகம், விரணம் முதலானவையும் உண்டாம் என்ப. இராகுவுக்குச் சனி போலவும், கேதுவுக்குச் சேய் போலவும் சொல்லும். இதனுடனே விடபயமும் கூட்டிச் சொல்லுக.

இருணமன னினனாகில் சிரநோவு காந்தல்
எரிவுகடுப் புட்சுரகேந் திரரோகம் இரவுக்
கருசிகய முயல்வலியன் அரோசிகநீர்ப் பாடு
வசனவிரோ தம்மிருக வீழலிளைப் பருகற்
கொருநடவிக் கனுகூலியூ தல்வீங்கு தல்பொன்
னுக்கதிசா ரம்மரச ரோகமிர சதமேல்
பிரமைமருத் தீடுவிஷ யப்பிணிநீ ராமை
பெருவயிறு மேகமகோ தரமொடுபீ னிசமே. 161

ரோகாதிபன் வர்க்கம் இரவியாகில் சிரநோவு, காந்தல், எரிவு, கடுப்பு, அத்திசுரம், நேத்திரரோகம் என்ப. சந்திரனாகில் அருசி, சயரோகம், முயல்வலி, அரோசிகம், நீர்ப்பாடு, போசன விரோதம், இருமல், ஈழல், இளைப்பு என்ப. புதனாகில் வாய்வு, ஊதுதல், வீங்குதல் என்ப. வியாழனாகில் அதிசாரம், இராச ரோகம் என்ப. சுக்கிரனாகில் பிரமை, மருத்தீடு, விஷரோகம், நீராமை, பெருவயிறு, மேகம், மகோதரம், பீனிசம் என்ப.

தரமுதலீர் அளவுமுள்ள உறுப்பதனில் சார்ந்த
தபனன்முதல் சனிவரைரோ கத்தினர்தந் தளிப்பு
மருவுதலும் கண்டுரைத்த லால்சியம் எவரால்
வந்ததெனில் இப்பெயரால் வந்ததுஞ்சொற் றிடலால்
பிரிவதுவும் சொற்றிடுவர் பெண்களுக்கீ தன்றிப்
பெற்றிளைப்பும் துர்க்கனவும் பேய்க்குறையும் ருதுப்பேர்க்
குருதிபரு கிப்புணர்ப சாசுமவர்க் குளதாய்க்
குறித்துரைப்பர் இதன்மேலே ழாமிடத்துக் குளதே. 162

இலக்கனம் முதல் பன்னிரண்டாமிடம் வரைக்கும் பாவக நாமத்தில் சொன்ன உறுப்பு அறிந்தும், இதில் சூரியாதி கிரகங்கள் ரோகாதிபராக வருவது அறிந்தும், இவர்கள் தனிப்பது அறிந்தும், கூடுதல் அறிந்தும்; இன்ன ரோகம் என்று கண்டு சொல்லுக. இப்பெயர்களால் ரோகம் வரும் காலமும், நிவர்த்திதயாகும் காலமும் கண்டு சொல்லுக. பெண்களுக்கு இந்த ரோகம் அல்லாமலும் பெற்றிளைப்பும், துர்க்கனவும், பேய்க்குறைவும், ருதுவாகிய குருதியைப் பருகிப் புணர் பிசாசு

*பயமும் இப்பெயரால் கண்டு சொல்லுக. இதன்மேல் ஏழாமிடத்துப் பலன் சொல்லுவோம்.*

ஆறாம் பாவகப் படலம் முற்றிற்று.
ஆகப்படலம் இருபதுக்குக் கவி 162

### 21. ஏழாம் பாவகப் படலம்

ஏழதனுக் கிறைதொழிலாய் லக்கனக்கோள் பார்க்கில்
இரணமன னொன்றுறவேட் கிறைவிழிக்கில் இவர்கள்
வாழுவதும் கேந்திரகோ ணாகிலொரு வளவின்
மருவிலொன்றே ழுபயம சிதன்சிதன்மா லணையில்
ஊழனனீ லன்பார்க்கப் பாசவனீர்ச் சேரில்
ஒழியாத வெகுகாமத் துழல்வதும் இவனாம்
வீழ்வதும் வாக்குடலம் வேட்கிறைவர் புகராய்
மேதைவர்க்கத் துறில்காமம் வெறுத்திடுவ திவனே. 163

*ஏழாமிடத்துக்கு உடையன் பத்தில் இருக்க, இலக்கனேசன் பார்க்கிலும், ஆறுக்குடையன் ஒன்றில் இருக்க, ஏழுக்குடையன் பார்க்கிலும், இவர் கேந்திர கோணங்களில் இருக்கினும், இவர்கள் ஒரு இராசியில் கூடினும், ஒன்றில் சனி, ஏழில் சுக்கிரன், இரண்டாம் இடத்தில் புதன் இருக்கிலும்; இரவி, சேய், சனி, பார்க்க; நான்கில் சுக்கிரன் இருக்கிலும் வெகு காமாதிகன் என்ப. ஒன்றாமிடம், இரண்டாமிடம், ஏழாமிடத்துக்கு உடையவர்களும் சுக்கிரனும் ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் விழுந்து புத வர்க்கம் ஏறில் காமத்தில் வெறுப்புள்ளவர்.*

வதுவைமனன் புகர்பொனிவர் கேந்திரகோ ணேறி
மாதுளர்ப்பெ றாதுதனித் திருக்கமனன் பெலக்கில்
அதிகபெல மாயிவர்கள் அரவொழிய விதுசூழக்
கருகிலுறில் அல்லவெனில் ஐந்ததற்குள் ளாகின்
முதியவர்தம் மில்பெறல்மற் றவரபெல மாகின்
முதல்வனும்பொன் உதயமுறில் முகமதனுக் குடையோர்
நிதிமதியுற் றிவைசேரில் வாலிபவி வாக
நிறைவேறுபம் இவர்களின்ப நெடுநாளைக் குளதே. 164

ஏழாமிடத்துக்கு உடையவனும், சுக்கிரனும், குருவும் கேந்திர கோணங்களில் பாவருடன் கூடாமல் தனித்திருக்க, இலக்கனேசன் பெலக்கிலும்; இவர்கள் அதிக பெலமாகி இராகு, கேது ஒழிய இரவி, மதிக்கு முன்பின் இருக்கிலும் அல்லது ஐந்தாம் இடத்துக்கு உள்ளாக இருப்பினும்; சுபகிரகங்கள் எல்லாம் சொட்சேத்திரம் இருக்க, மற்றவர்கள் துர்ப்பெலமாகிலும், இலக்கனேசனும் வியாழனும் இலக்கனத்தில் இருக்கிலும்; இரண்டு, ஏழாம் இடத்துக்கு உடையவர்கள் குரு, மதியுடன் கூடி இரண்டு, ஏழாம் இடங்களில் இருக்கிலும் வாலிபத்தில் விவாகமாகி நெடுங்காலம் இன்பம் அனுபவிப்பர்.

## இதுவுமது

குளிரதற்குத் தாய்க்கிறைமுன் குயந்தைதந்தைக் கிறையும்
குடிக்கிறைசொல் லிற்கிறைகூ டற்கிறைபொன் பெலமாய்
வெளியுளர்ச்சேர்ந் தாட்சியுச்ச கேந்திரகோண மேவி
விண்ணவராங் கிசம்அதிகம் ஏறிமிக்காம் இறைக்கும்
களிதருதற் கொழியாமல் அவரவர்தம் மனைக்கும்
களங்கனுக்கு மறையாமல் கசடரைவிட் டிருக்கில்
வளர்மதனும் ரதியுமென ஆயுவரை சுபமாய்
மனைவியர்க ளுடன்கூடி வாழுவதும் இவனே. 165

சுக்கிரன் ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடத்துக்கு உடையவர்களும்; நான்கு, இரண்டு, ஏழாம் இடத்துக்கு உடையவர்களும்; வியாழனும் முன்போலும் பெலமாகி சுப கிரகங்களுடன்கூடி; ஆட்சி, உச்சம், கேந்திர கோணில் இருந்து, தேவதாங்கிசம் அதிகமாகி; அதிக பெலமாகிய இலக்கனேசனுக்கும் மதிக்கும் அவரவர்கள் சொட்சேத்திரத் துக்கும், மறையாமல் பாவருடன் கூடாமல் அதிக சந்தோஷத்தோடும் கூடி இருக்கில், அனேக களத்திரத்தோடும் கூடி மன்மதனும் ரதியும் போல் நெடுங்காலம் சுபமாக வாழ்வன்.

வனசன்முதல் கேதளவும் வாக்கணைகள் முதலின்
    மருவவுதலும் இதற்கிறையாய் வருவதும்கண் டெவர்க்கு
மினமியல்பு திரமழிதல் ஏகம்வெகு வாதல்
    யாவுமனை வியர்க்குளதாய் இசைந்திடுவர் இவர்கள்
கனகவின மாகிலிவள் பதிவிரதை மற்றக்
    கள்ளரெனின் மற்றதிவை கலப்பினுமக் கலப்பாம்
உனரிறைவேல் இறையிவர்கள் தங்களுக்குள் அதுவாய்
    மொழிகுவர்நட் புளகுணமும் விகுணமுமா முனியே. 166

*சூரியாதிக் கிரகங்களில் இரண்டு, ஏழு, ஒன்றாம் இடங்களில் இருந்தவர்களையும், இவற்றிற்கு உடையவர் களையும் அறிந்து, களத்திர இனம் இன்னதென்றும், இயல்பு இன்னதென்றும், இருப்பதென்றும், அழிவதென்றும், ஒன்றென்றும், அனேகமென்றும், இவை முதலான யாவும் கண்டு சொல்லுக, இவர்கள் குருவர்க்கம் ஏறில் களத்திரம் பதிவிரதை என்க. பாவரும், சுபரும் பார்க்கில் இரண்டும் கூட்டிச் சொல்லுக. ஒன்று, ஏழாம் இடத்துக்கு உடையவர்கள் குணத்தை அறிந்து குணமும் விகுணமும் சொல்லுக, அகத்தியமா முனியே!*

குணத்தியல்புக் கனங்கனிதற் கிறைபுகர்கட் கோவுக்
    குடதனாதல் எதிர்த்திடுதல் குருவிழிப்பல் லாமல்
அணத்தபனன் முதனோர்வன் நெஞ்சியபி மானி
    நாணமிலி வெகுவிரகி நந்தனர்ப்பெற் றிளைப்பள்
மணத்தவனைப் பிரியாத வகைக்குடைய மார்க்கம்
    வழுத்துவள்சோ ரத்துடைச வம்பியவ மானி
பணத்திலவா வுடையதரித் திரிரூப மற்ற
    பங்கறையாம் குளிகன்வரை பகர்வதும்இப் படியே 167

*ஏழாமிடம், ஏழாமிடத்துக்கு உடையவன், சுக்கிரன், இரண்டாம் இடத்துக்கு உடையவன் இவர்களுடன் கூடின பேர்கள்; இவர்க்கு ஏழாம் இடத்தில் இருப்பவர்கள் இவர்கள் குரு வீக்ஷணம் இல்லாது இருக்க, சூரியனாகில் வன்னெஞ்சி, மதியாகில் அபிமானி, சேயாகில் நாணமிலி, புதனாகில் வெகு விரகி, வியாழனாகில் பிள்ளைகளைப் பெற்று இளைப்பாள்,*

சுக்கிரனாகில் பதியை வசப்படுத்துவாள், சனியாகில் களவுடைய வம்பி, இராகுவாகில் அவமானி, கேதுவாகில் தரித்திரி, குளிகனாகில் அழகிலி.

### இதுவுமது

படிமகன்சுன் னரவிவர்பார்க் கவன்வேள்கோ விவையில்
பற்றிடினும் அப்பதியைப் பார்க்கினுமப் பதியோ
ருடனுறிலும் விடமார்க்கம் உடையவளாம் இதனுக்
குடையதின னேர்மலடி ஒத்தவய தணியின்
மிடலுடையள் விபசாரி அழுகுளவெவ் வர்ணி
விரகறியா வாலையல்ல வெனிற்கருப்ப முடையாள்
அடிபடிவ மானவய ததனிசுரா பானி
அனாசாரி ரிதுகாலத் தழகிலியாட் படலே. 168

சேய், சனி, இராகு, கேது இவர்கள் சுக்கிரனுடனாவது; இரண்டாம், ஏழாமிடத்திலாவது இவற்றிற்கு உடையவர்கள் இரண்டுடனாவது கூடிலும், பார்க்கிலும் விடமார்க்கம் உடையவள் என்ப. இதற்கு இனம் சொல்ல வேண்டில் இரவி நேர் மலடி, சமவயதுள்ள விதவை, விபசாரி, அழகுள்ள விதவை, விபசாரி, அழகுள்ள எவ்வர்ணி, வலை அல்லவெனில் கருப்பம் உடையவள், அடிபடு அவமானம் உடைய வயது அதிகம் உடையவள். சுராபனி, அனாசாரி, இருதுகாலத்து அழகிலி, தொழுத்தை.

ஆளதனுக் கனையாயும் அதற்கிறைவர் புகரோ
டடுத்தவர்பார்த் தவரவரா லணைபவர்தம் இனமும்
வேளிகலுக் காற்றாமன் முறைதவறித் தோய்த்த
விபரமுமீ திசைந்தமைந்த வீடிடமும் இவர்கள்
தாளளவும் சிரமுதலாய்ச் சாற்றியஅவ் உறுப்பில்
தகையுளதும் இலதுஞ்சுட் கத்தம்மூளது மிலதும்
கோளிறைநேர் சொற்றிடுவர் இருநான்காம் இடத்துக்
குளபலமும் கேளினிக்கும் போதயவே தியனே ! 169

ஏழாமிடம், இரண்டாமிடத்துக்கு உடையவர்கள், சுக்கிரன் இவர்களுடன் கூடினவர் பார்த்தவர்கள் அறிந்தும்

கூடும் இனமும் முறைதவறிக் கூடிய மார்க்கமும் இதற்குள்ள ஆதித்தலமும், நகைசிகை பரியந்தம் உள்ள உறுப்பில் அழகுள்ளதும் இல்லதும் சலசுட்கம் உள்ளதும் இல்லதும், இரவி முதல் நேர் அவரவருக்கு அமைந்த வண்ணம் சொல்லுக. இதன்மேல் எட்டாம் இடப்பலனும் கேட்பாயாகக் கும்போதயனாகிய அகத்தியமா முனியே!

ஏழாம் பாவகப் படலம் முற்றிற்று.
ஆகப்படலம் இருபத்தொன்றுக்குக் கவி 169

## 22. எட்டாம் பாவகப் படலம்

வேதியனைக் கூடாமல் இவன்விழிப்பெய் காமம்
வேட்பதிக்கா னனமனதன் வெகுபெலமாய்த் தோன்றில்
ஆதிமுதல் குங்கருமம் தண்ணுதலுக்கும் வலிதாய்
அசடரொடும் கேந்திரகோ ணணெயிலவ மானம்
ஏதுளதால் வருதலிவை என்றுரைக்கில் இவன்போய்
இருந்தும்பார்த் ததுவுமறிந் திசைத்திடுவர் இதன்மேல்
போதுதய உன்தாதைல பித்தபடிக் கிறப்பெப்
பொழுததற்கே துவுமிதனால் என்பதியம் புவதே. 170

எட்டாம் இடத்திற்குடையவன் குருவைக் கூடாமல் அல்லது அவன் வீட்டில் வீக்ஷணம் பெறாமல் அதிபெலமாக இருக்கினும், ஓன்றாமிடம் பத்தாமிடம் இவற்றிற்கு உடையவர்களுக்கு எட்டாம் இடத்துக்கு உடையவனே அதிக பெலமாகிப் பாவருடன் கூடிக் கேந்திர கோணத்தில் இருக்கிலும் அவமானம் அதிகம் என்ப, இது எதனால் வரும் என்னில், இவன் இருந்ததும், பார்த்ததும் கண்டு சொல்லுக. இதன்மேல் அகத்தியமா முனியே! கமலாலயனாகிய உன் தாதை இலபித்தபடிக்குள்ள மாரண காலமும் அதற்கேது இன்னது என்பதுவும் சொல்லுவோம்.

இதமுளபேர்க் காறீரண்டீ ரெட்டிதன்மே லாறும்
இருமூன்றோர் நான்கிரண்டா றிதிலிரண்டும் இதுவும்
அதன்மேல்நான் கெட்டொருநான் காகவரும் இவையீ
றாறிரண்டும் புருடகண்டம் அனுதினங்கண் டமுமாம்

உதயவய துக்கால சக்கரத்தக் கிரம
    முடதுமட்ட வர்க்கவயதுந் தினமுழு திப்போன்
முதலவருக் குரைத்ததிசை வேதையுங்கோ சரந்தான்
    மொழிந்திடுந்துர்ப் பெலமுமுறின் முகிவிவரா யுவுமே. 171

சுகமே இருக்கிற பேர்களுக்குப் புருடகண்டம் அறியும்படி வயது 12, 16, 22, 28, 32, 34, 40, 42, 44, 48, 56, 60 இவை பன்னிரண்டும் புருட கண்டம் என்ப. இதன்மேல் நித்திய கண்டம் என்பது. இக்கண்டத்துடனே இலக்கனோதய வயதும், காலச்சக்கரத் தப்புப் பாய்ச்சலும், அட்டவர்க்க வயது கண்டமும், தினகண்டமும், சூரியாதி கிரகங்களுக்குச் சொன்ன திசை வேதையும், கோசார துர்ப்பலனும் கூடிச் சேகரிக்கும் காலம் மரணகாலம்.

ஆயுவகட டிக்கிறைவர் தம்புடசே கரத்துக்
    காணதில்சுன் னவன்மகனும் றத்துயராங் கிசத்தில்
ஏயதென னாகஇவன் தன்மகன்பொன் மூவர்க்
    கேற்றியமுற் போலுளதைப் பனரேற்றி இவர்ச்சேர்த்
தோய்விலதில் குருவரும்போ திரவிபவுத் திரக்கோள்
    உளமாதத் திவன்சனிமுற் போலுயர்தற் குளநாட்
சாயைசரங் கிரியைகன இவைமுதலில் தெறிந்த
    தற்காலம் அறிதலுமுற் றிடில்சமனித் தினமே. 172

ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடத்துக்குடையவர்கள் புடத்தைக் கூட்டிக் கண்ட இராசியில் சனி குளிக புடத்தைக் கூட்டி, ஒன்பதில் பெருக்கிக் கண்ட ராசி நவாங்கிசத்தில் சனிவரும் காலமும்; சனி, குளிகன், குரு இவர்கள் மூன்று புடத்தையும் ஒன்பதில் பெருக்கி, மறுபடியும் கூட்டிக் கண்ட இராசியில் குருவரும் காலமும், குளிகன் இருந்த இராசித் திரிகோண மாதமும்; குளிக, சனி புடத்தைக் கூட்டி, ஒன்பதில் பெருக்கிக் கண்ட நாளும் சாயை, சரம், கிரியை கனவு இவை முதலானவைகளில் கண்ட காலமறிதலும் கூடில் அத்தினம் மரணம்.

## இதுவுமது

தினத்ததிபன் புடத்தைஎட்டில் பெருக்கியதில் குளிகன்
சேர்க்கிலது தேகமிலக் கனபுடமைந் தேற்றிச்
சனிக்குமக னைக்கூட்டி வாயுவுவக் கதிரில்
தனதுபவுத் திரனேழில் தாக்கலவம் இருத்தா
மேனிற்றனு வுக்குயிர்க்கும் இருத்தேறிலற் பாயுள்
இதுவுமது போலுரைப்பர் இவைமூன்றுக் கிசைந்த
மனைக்கியமன் கோசரத்தால் பாவருடன் கூடி
வரும்போதில் இவன்வாழ்நாள் அறுங்காலம் அதுவே. 173

*சந்திர புடத்தை எட்டில் பெருக்கிக் குளிக புடத்தைக் கூட்டிக் கண்டது **தேகம்** என்ப. இலக்கனப் புடத்தை ஐந்தில் பெருக்கிக் குளிக புடத்தைக் கூட்டிக் கண்டது **பிராணன்** என்ப. குளிக புடத்தை ஏழில் பெருக்கி, இரவி புடத்தைக் கூட்டிக் கண்டது மிருத்துப் புடம் ஏறில் **அற்பாயுள்** என்ப. சமமாகில் மத்திப ஆயுள் என்ப. குறையில் தீர்க்காயுள் என்ப. இந்த மூன்று புடமும் கூட்டிக் கண்ட இராசியில் கோசாரச் சனி பாவருடன் கூடிவரும் காலம் நிரியாண காலம்.*

## இதுவுமது

மதுமலர்க்கோன் பவுத்திரனின் மகன்புடத்தை வாங்கி
மதிப்பதுமுன் போலுளதாம் வர்ததிற்றூ மாதி
அதையொருமித் திடவுளதில் ஐந்திறையைச் சேர்வோர்க்
கானதிசை வருசமுன்போ பரித்ததைலக் கினமாய்
முதலுளதுக் கொருவாக அசிதனுறும் போதின்
முதலிரவி மாந்திபுட மூன்றினுக்குற் றதற்கப்
பதியிருந்த இராசியில்பொன் பற்றிடுமப் போதில்
பற்றலன்போல் இவனுயிரைப் பற்றுவதி பமனே. 174

*குளிக புடத்தில் சனி புடத்தை வாங்கிக் கண்ட இராசியில் சனிவரும் காலமும் தூமாதிபம் சக்கரத்தைக் கூட்டிக் கண்ட இராசியில் சனிவரும் காலமும், ஐந்தாம் இடத்துக்கு உடையவன் கூடின கிரக திசை வருடங்களைக் கூட்டிக் கண்ட இராசியை இலக்கனம் முதல் வைத்துக் கண்ட இராசியில் சனி வரும் காலமும், (முன்சொன்னவைக்கு*

*எல்லாம் மேடாதி முதலாக வைத்து நேர் நடத்துக) இலக்கனம் இரவி, மாந்தி இந்த மூன்று புடத்தையும் கூட்டிக் கண்ட இராசியாதிபதி இருந்த இராசியில் குரு வரும் காலமும் மரணகாலம்.*

### *இதுவுமது*

இமயனெனும் கண்டதனை இலக்கனத்தில் வாங்க
இதற்குளதில் குளிகபுடத்தை தெய்தினதில் குருவும்
தயைஇறைஒன் றிசைசார்ந்த தலைவர்திசை கூட்டிச்
சாற்றும்வரு சத்துளதில் தபனனனும்சுன் தனையன்
முயலகனைக் கூடஅவர்க் குளதினமும் மாந்தி
முதுசேயீ தொன்பத்தை முன்போல்செய் திதனில்
கயனுடைய காரகனைக் கூட்டியதில் கண்ட
கல்லியமும் உறிலிவனைக் கொல்வதுமந் தகனே. 175

*எண்கண்டகப் புடத்தை இலக்கனப் புடத்தில் வாங்கிக் கண்ட இராசியிலும், குளிக புடத்தில் கண்ட இராசியிலும் குரு வருங்காலமும் ஒன்று, ஐந்தாமிடத்துக்கு உடையவர்கள் கூடின கிரகதிசை வருடங்களைக் கூட்டிக் கண்ட இராசியில் சூரியன் வரும் காலமும்; மதி, மாந்தி புடத்தைக் கூட்டிக் கண்ட இராசியில் மதிவரும் காலமும், மாந்தி, சனி புடத்தைக் கூட்டி ஒன்பதில் பெருக்கி, மறுபடி சனி புடத்தைக் கூட்டிக் கண்ட இலக்கனமும், சேகரிக்கும் காலம் நிரியாண காலம்.*

### *இதுவுமது*

தகர்நீசன் அட்டவர்க்கத் துள்ளநாள் வருடம்
சாற்றுதலச் சனிபோலந் தணன்தபனன் சசிக்கும்
பகர்வதிவர் வரும்போதில் கோசரவே தையுமுற்
பாவகத்தில் உற்றவய துப்பகுதிக் கமைவாய்ப்
புகலுமுத யத்தும்இவை சேகரமாய்க் கூடிப்
புகும்போதில் இவனுயிரும் தெற்கினில்புக் கிடுமால்
இகம்வருவோர்க் காயுவிறப்பிப் படியாமி தன்மேல்
இதற்கேது இதனால்என் பதுவும்இசைப் பதுவே. 176

சனி அட்டவர்க்கத்தில் கண்ட வயது கண்டமும் நட்சத்திர கண்டமும் அறிந்து, இவன் அட்டவர்க்கத்தில் கண்ட குரு, இரவி மதிக்குள்ள கண்டமும் கோசார வேதையும் இலக்கன பாவத்தில் கண்ட வயசு கண்டமும் கோசார வேதையும் இலக்கன பாவத்தில் கண்ட வயசு கண்டமும் மற்றுள்ள கண்டமும் கூடும் காலமும் மரணகாலம் என்ப. இதற்கு எது இன்னதினால் என்பது இதன்மேல் சொல்லுவோம்.

**இசையில்இவை அமரமதி இரவிசனிசேய் கூடி**
**இவர்தவம்ஒன் றைந்துவசை எய்தில்எமன் உபயத்**
**தசமன்விழிப் பெய்தமிதி ஆதவனோன் துறையில்**
**அசிதன்மகன் எட்டுறமற் றவர்க்கோணத் தாகில்**
**பசியமரத்தல் லவெனில்பருப் பதமற்று யர்வால்**
**பங்கஇரவு நிசிறைகூடப் பாரிமனன் பார்க்கக்**
**குசனிரவி அன்னையுறில் கோன்தேளாங் கிசமும்**
**குளிகனெட்டு முறில்கலினால் கூறுதன்மா ரணமே.** 177

பத்தாமிடத்தில் அமரமதி, இரவியும்; நான்காமிடத்தில் சனி, சேயும் கூடிலும்; ஒன்பதாமிடத்தில் அமரமதியும், ஒன்றாமிடத்தில் இரவியும், ஐந்தாமிடத்தில் சனியும், எட்டாமிடத்தில் சேய் இருக்கிலும், சனி உபய இராசியில் இருக்கச் சேய் பார்க்க; இரவி, மதி கூடி ஒன்றாம் இடத்தில் இருக்கிலும்; குளிகன் எட்டாமிடத்தில் இருக்க, மற்றவர் ஐந்து, ஒன்பதாமிடங்களில் இருக்கிலும் மரத்தில் ஏறி விழுந்தாவது, மலையில் ஏறி விழுந்தாவது, மற்றுள்ள உயரத்தில் ஏறி விழுந்தாவது மரணமாவான் என்க. சனி, இராகு பவனாதிபதியுடன்கூட ஏழாம் இடத்துக்கு உடையவன் பார்க்க; இரவி, சேய் ஐந்தாமிடத்தில் இருக்கிலும், ஒன்றுக்கு உடையவன் விருச்சிகாம்சம் ஏறக் குளிகன் எட்டாமிடத்தில் இருக்கிலும் கல்லினால் மரணம்.

**இதுவுமது**

மாரணக்கோன் கோணரவி மதிசேய்சுதன் மருவில்
வரைப்பெயரான் மனைவேள் பத்தினன்சனிசேய் மதியைப்
போரினிலுற் றபசெயமு நீசமும்மற் றுளதும்
பொருந்திடில்கூ வலினானோம் புரந்துயிலுக் கிறைவர்
தாரமதில் புகர்சேரில் சாலினவாங் கிசக்கோள்
தரில்களத்தால் பதனமனர் தசஇறையைச் சார்ந்து
சோரரைச்சேர்ந் தும்மறையில் துர்த்தொழிலால் என்னச்
சொல்லுவரந் தியகாலத் துக்குளதித் தொழிலே. 178

*எட்டாமிடத்துக்கு உடையவன் இருந்த ராசித் திரிகோணத்தில் இரவி, மதி, சனி, சேய் நிற்கில் பருவத வர்க்கத்தினால் மரணம் என்ப. நான்கு, ஏழு, பத்தாம் இடங்களில் இரவி, சனி, சேய், மதியைக் கூடிப் போரிலுற்று அபசெயப்பட்டு நீச அத்தமன பாவ சகிதமாகில் கிணற்றில் விழுந்து மரணமாவன் என்ப. ஒன்று, ஆறு, எட்டாம் இடங்களுக்கு உடையவர்கள் சுக்கிரனைக் கூடி ஏழில் இருக்கிலும், இலக்கனேசன் கும்பாங்கிசம் ஏறிலும், களத்திரத்தால் மரணம் என்ப. ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களுக்கு உரியவர்கள் இலக்கனேசனைக் கூடிப் பாவ சகிதமாகி மறையில் துர்மரணம்.*

தொழில்கனைசுன் வேட்பணிபெண் சுங்கனுமாய் இருக்கில்
சுடரனலின் மாறிடமா றற்பெலமாய் ரிணனை
விழிப்பதியுற் றிடிலனல்பங் கிவன்கனைச் சேர
விபூடணன் ஆறிறைபார்க் கிலாயுதத்தால் இதுவும்
பழிப்பதியான் ஒன்றிறைவர் பார்க்கவனும் பயமாய்ப்
பவர்ச்சேரில் சேலுதயம் பானுவிதுப் பற்றில்
அழிப்பிரணம் எட்டுபய மாய்மதிமால் கூட
அவமானன் பார்க்கிலற லான்மரண மாமே. 179

*ஒன்றாம் இடத்தில் சனியும், ஏழாமிடத்தில் இராகுவும், கன்னியில் சுக்கிரனும் இருக்கிலும்; இரவி, சேய் கிரகம் மாறப் புதன் துர்ப்பெலமாகி ஆறாமிடத்துக்கு உடையனைக் கூடி,*

இரண்டாமிடத்தில் இருக்கிலும்; சேய், சனி, குளிகன் கூட மூன்று, ஆறாமிடத்திற்கு உடையவன் பார்க்கிலும் ஆயுதத்தால் மரணம் என்ப. சந்திரனும் சுக்கிரனும் ஒன்று, ஆறு, எட்டாம் இடங்களுக்கு உரியவர்களும் கூடி சல வர்க்கம் ஏறி, பாவ சகிதமாகிலும் இலக்கனம் மீனமாகி இரவி, மதி இருக்கிலும் ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் ஒன்று உபய இராசியாகிய மதி, புதன் கூட, எட்டாம் இடத்துக்குக் உடையவன் பார்க்கிலும் செல்வத்தினால் மரணம்.

**அம்மனைஎட் டசிதனில்லா அமரமகு ருப்பாம்**
**பனையுல்விதுச் சனிகேந்திரத் தசடரிடை இருக்கில்**
**கம்மணியுள் இறைபவர்கட் படவெட்டா றில்கட்**
**செவிபெற்றி டில்கோணில் கசடர்சுபர் கலக்கில்**
**பம்மனன்பத் தனலறம்பங் கோதையமைந் திரவி**
**பற்றலதிலா வனலொன்ப திற்றுயில்பங் காகில்**
**சொம்மெதிருக் கிறையசிதன் வர்க்கமுற மறைந்த**
**சோமனைக்கோன் விழிக்கின்மர ணங்கயிற்றால் சொலுமே.**

நான்கு, எட்டாமிடம் சனி வீடாகி அமர; மதி, குரு, இராகு, கேது கூடிலும்; மதி, சனி கேந்திரத்தில் இருக்கப் பாவர் நெருக்கிலும் ஒன்று, மூன்று, ஐந்தாம் இடங்களுக்கு உடையவன் இராகு, கேதுவுடன்கூடி ஆறு, எட்டாம் இடங்களில் இருக்கப் பாவர் பார்க்கிலும்; ஐந்து, ஒன்பதாம் இடங்களில் பாபர், சுபர் கலந்து இருக்கிலும்; பத்தாமிடத்தில் மதி, ஒன்பதாமிடத்தில் சேய், ஒன்றாமிடத்தில் சனி, ஐந்தாம் இடத்தில் இரவி இருக்கிலும்; ஐந்தாமிடத்தில் இராகு, ஒன்பதாம் இடத்தில் சேய், எட்டாமிடத்தில் சனி இருக்கிலும்; எட்டாமிடத்துக்கு உரியவன் சனி வர்க்கம் ஏறிச் சந்திரன் மறைய, இலக்கனேசன் பார்க்கிலும், கயிற்றினால் மரணம்.

**கயயோகி பவுமனையுற் றாட்சிஉச்சம் மேவக்**
**கடமகர முறக்கிகந்த்ரக் கரியவனைக் கலக்க**
**வயலாகப் பாவரிம்மூ வகைக்குமுறில் கனலால்**
**அகிபுதனெட் டாறணிகம் மணையிலர வான்மால்**

வயமாவில் அரவையுறச் சேயகமெய் யாக
    மதிரவிசே ரிற்றனதான் மாசுளர்வர்க் கமுமாய்த்
துயிலாதி பன்முதன்மா ரகனிவனென் றறிந்து
    சுடர்முதற்கா ரகவினத்தால் சொல்லுகமா ரணமே.    181

மதி சேயுடன் கூடி ஆட்சி, உச்சம் ஏற, பாவர் நெருக்கிலும் அல்லது மகர கும்பத்தில் இருக்க பாவர் நெருக்கிலும், அல்லது கேந்திரச் சனியைக் கூடப் பாவர் நெருக்கிலும், நெருப்பினால் மரணம் என்ப. எட்டு, ஒன்பது, மூன்று, ஒன்றாம் இடங்களில் இராகு , புதன் கூடில் சர்ப்ப பீடையால் மரணம் என்ப. சிங்கார குருவைப் புதன்கூட மேட விருச்சிகம் இலக்கனமாகி; இரவி, மதி இருக்கில் தன்னாலே தனக்கு மரணம் என்ப. இதன்மேலும் பாவ வர்க்கம் ஏறிய எட்டாம் இடத்துக்கு உடையவன் முதல் மாரகாதிபன் இன்னான் என்பது அறிந்து சூரியாதி கிரகங்களக்குச் சொன்ன காரக வர்க்கத்தை வைத்து மரணம் சொல்லுக.

சொல்லறநீர் வேளிவர்கள் காரககரு மெலிவாய்த்
    துற்றானத் துற்றிடிலீ சுரமுகுர்த்தம் பிறக்கில்
அல்லவெனில் திதிமுதல்கெண் டாந்தத்து திக்கில்
    அபுத்தமெனும் மூலம்வரி லானதவ சித்தாய்ப்
பல்லுதயத் துடனாகில் பாருதயம் விடமாய்ப்
    பணிக்கொடிமற் றுளதுடலைப் பற்றவரில் பவரி
நெல்லுதயந் திரந்தாராய் எட்டினில்பொன் இருக்கில்
    ஈன்றவர்தங் குலங்களுக்கும் இவன்எமனென் பதுவே.    182

இரண்டு, ஒன்பது, நான்கு, ஏழாம் இடங்களுக்கு உடையவர்களும் இவற்றிற்கு உடைய காரகாதிபவரும் மெலிவாய்ப் பாவ வர்க்கம் ஏறிலும்; ருத்திர முகூர்த்தம் பிறக்கிலும்; திதி, இராசி, நட்சத்திரம் முதலான கெண்டாந்தத்து உதிக்கிலும்; அபுத்தமூலம் பிறக்கிலும்; அவசித்து நட்சத்திரமாகப் பல்லுடன் பிறக்கிலும், இலக்கனத்தில் விடகடிகை இருக்கச் சர்ப்பம் முதலான கொடியவர்க்கம் உடலைப் பற்றிலும்; திவாகாலத்தில் பாவ

இராசியில் திர இலக்கனமும் பூச நட்சத்திரமும் கூடிப் பிறக்க, எட்டாமிடத்தில் குரு இருக்கிலும், மாதுர் பிதுர் வம்சம் நாசமாம்.

**என்றனலோ ராங்கிசம் இந்துறும்வேட் கோணில்**
**எமனுறில்ஒன் றேழ்விதுச்சேய்க் கெதிரசுபர் இருக்கில்**
**பொன்னுதல்சே யாயலம்பு இவரத்துள் ஏறப்**
**புவிமகன்சுன் னதற்கேழில் புக்கில்எமன் பெலம்போய்**
**நின்றதனல் வீடாகக் கனலனையுற் றிடில்கோன்**
**நில்லுடலுக் கனைஇறைகா ரகர்ஒளிக்கி னினைவாய்**
**ஒன்றில்இரவி சேய்சனியுற் றீடில்பவருக் கனைமான்**
**உள்ளாகில் தாயுயிரை உண்பதற்குற் றவனே.** 183

இரவி, சேய் ஓரங்கிசம் செய்ய, ஏழாம் இடத்தில் மதி இருக்க, இதன் கோணில் சனி இருக்கிலும்; ஒன்று, ஏழாம் இடங்களில் சேய், மதி இருக்க; இதற்கு ஏழாம் இடத்தில் பாவர் இருக்கிலும், மாதுருவினால் புத்திரன் மரணமாவான். ஐந்து, ஏழாம் இடங்களில் மதி இருக்கச் சேய், சனி அதற்கு ஏழாமிடத்தில் இருக்கிலும்; சனி பெலகீனமாய்ச் செவ்வாய் வீட்டில் இருக்க, நான்காம் இடத்தில் சேய் இருக்கிலும்; இலக்கனேசனுக்கும், இலக்கனத்துக்கும், நான்காமிடமும், நான்காமிடத்துக்கு உடையவனும், காரகனும் மறையிலும், ஐந்தாமிடத்தில் இரவியும், நான்காமிடத்தில் சேயும், ஒன்றாமிடத்தில் சனியும் இருக்கிலும், நான்காமிடமும், நான்காமிடத்துக்கு உடையவனும் பாவ மத்தியமாகிலும் மாதுரு மரணம்.

**அவமானத் தீலுறையைந் துறப்பிதுரா திபர்கள்**
**அன்னைவர்க்த் துறிலிதல்கூழ் மதிபதனம் ஆகில்**
**பவராயுற் றிடத்துயிர்கோன் பார்க்கிலிவன் இருக்கப்**
**பவுமன்விழிப் பெய்தவிழிப் பங்கனைக்கோ னாகில்**
**தவமாதி பன்னிதற்காய்க் கிறைமறைய வணியில்**
**சவுரியர வெரியிருக்கில் தாமரைமன் புடத்தில்**
**திவியீறா திபன்புடத்தை வாங்கலதங் கிசம்போல்**
**சேர்வதெம னாகிலன்னை சேர்வதும்தெற் கெனுமே.** 184

ஏழாமிடத்துக்கு உடையவன் ஐந்தாமிடத்தில் இருக்க, பிதுர்த்தானாதிபதி, காரகன், இவர்கள் மாதுரு வர்க்கம் ஏறிலும், நாலாமிட வர்க்கத்துக்கு ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இரவி, மதி இருக்கிலும், நான்காம் இடத்தில் பாவர் இருக்க, எட்டுக்குடையவன் பார்க்கிலும், நான்காம் இடத்தில் பாவர் இருக்க, எட்டுக்கு உடையவன் இருக்கச் செவ்வாய் பார்க்க, நான்காமிடத்துக்கு உடையவனும் சனியும் இரண்டாமிடத்தில் இருக்கிலும், ஒன்பதாம் இடத்திற்கும் இதற்குடைவனுக்கும் நான்கிற்கு உடையவன் மறைய, மூன்றாம் இடத்தில் சனி, சேய், இராகு, கேது இருக்கிலும், இரவி புடத்தில், மதி புடத்தை வாங்கிக் கண்ட இராசியிலும் இதற்கு அங்கிசத்திலும், கோசார சனி வருங்காலம் மாதுரு மரணம்.

வதுவையின அமரமதி யேஒருநான் கிருக்கின்
மாதுர்பிதிர் வர்க்கமிரண் டும்மாறின் மனைமான்
முதலிவனிக் காரகர்க்குத் தந்தைவர்க் மறையின்
முதுசேய்சேய் தாதைஇறை இம்மூவர் ஒளிக்கில்
பிதுர்மனர்பா வர்க்கூடி இவர்வளவில் இருக்கில்
பின்முனிவ ராகில்வெகு பேர்பவம்பெற் றுயிரில்
கதிர்புடம்பொன் மகனீக்கிக் கண்டதில்சுன் வருநாள்
காலனிற்பி தாஉயிரைக் கவரஉதிப் பதுவே. 185

ஏழாமிடத்தில் இரவி இருக்க, அமரமதி நான்காம் இடத்தில் இருக்கினும், மாதுர் பிதுர் வர்க்கம்மாறி இருக்கிலும், நான்காம் இடத்திற்குடையவன், இலக்கனம் இதற்குடையவன் இவர்கள், காரகர் ஆகிய இவர்களுக்குப் பிதுர்வர்க்கம் மறையிலும்; சனி, சேய், ஒன்பதாம் இடத்திற்கு உடையவன்கூடி மறையிலும், பிதுர்த்தானதிபதியும் காரகனும் பாவக் கிரகத்துடனே கூடிப் பாவ இராசியில் இருக்கிலும் அல்லது பாவ மத்தியமாகிலும் வெகுபாவர். பதினோராம் இடத்தில் பெலத்து இருக்கிலும் இரவி புடத்தில் எமகண்டக புடத்தை வாங்கிக் கண்ட இராசியில் சனி வருங்காலமும் பிதுர்மரணம்.

பதனமினன் சனிகோணத் தவரிவர்கண் மனைக்கும்
பாருதயத் துக்குமெனில் பட்சமொன்றில் பவுமன்
முதுமகன்பாம் பறமூளொன்றேல் சூற்பொழுதொன் பதுவூழ்
மூடவனிவர் வர்க்கமெலாஞ் சரமும்ஒளிப் பதுவும்
நிதிவிழிப்புக் கெய்தாதே அன்னியதே சத்தார்
ரிசிதவிரத் தருமனிவன் நிற்பதவர்க் கிடையாய்
உதயவினம் உருமாறக் காரகனும் பெலமுற்
றிடில்பெற்றவர்க் கெமனென்றுதித் தல்புத்ரோ தயமே. 186

இரவி, சனி ஐந்து, ஒன்பதாம் இடத்திற்கு உடையவர்கள் தத்தம் பாவத்துக்கும் சென்ம இலக்கனத்துக்கும் ஆறு, எட்டு, பன்னிரெண்டாம் இடங்களில் இருக்கில், புத்திரோதய நாள் முதல் ஒரு பட்சத்தில் பிதுர் மரணம் என்ப. ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடங்களில் இராகு, சனி, சேய் நேர் இருக்கில், புத்திரோதய காலத்துக்கு முன்னே கர்ப்ப காலத்தில் மரணம் என்ப. ஒன்பதாம் இடம் இரவி, சனி வர்க்கமும் சர வர்க்கமாகிப் பதனத்தில் இருக்க, குரு பாராதிருக்கில் அன்னிய தேசாந்திர மரணம் என்ப. பகலுதயமும் ஒன்பதாம் இடமும் ஒன்பதாம் இடத்திற்கு உடையவனும் பாவ மத்தியமாக இலக்கனவர்க்கம் எல்லாம் ஸ்திரீ வர்க்கமுமாகப் பிதுர்க்காரகனும் துர்ப்பெலமாகில் பிதா உயிர்க்கு எமனாக உதித்த புத்திரோதயம் என்ப.

உதயவன்பூண் இதற்கிறையைச் சேய்சரகேந் திரத்தில்
உறில்கேட்டை ஈறாண்பெண் மூன்றுதிக்கில் ஒருகோன்
முதியவன்துற் பெலமாகிப் பவமனனுக் கொளிக்கின்
முன்பின்னி வர்க்கவமாகின் மூத்தவவர்கட் கிறப்பாம்
சதுரனிமன் னவரிலுறச் சனிவிழிக்கில் உதயத்
தவன்புடத்தில் அணிமனவன் தன்புடத்தை வாங்கு
மிதலனலில் பணியேற்கும் இதில்சனிபொன் னுறுநாள்
இளையவர்கட் கிவைமாறின் மற்றதவர்க் கெனுமே. 187

இரவி மூன்றாம் இடத்தில் இருக்க, இதற்கு உடையவனும், செவ்வாயும் கேந்திர சரத்தில் இருக்கினும், கேட்டை நான்காம் பாதத்தில் ஆண் அல்லது மூன்றாம்

பாதத்தில் பெண் பிறக்கினும், சேய், சனி துர்ப்பெலமாகி பதினோராம் இடத்திற்கு உடையவனுக்கு மறையிலும் இவன் பாவ மத்தியமாகிலும், மூத்த சகோதரம் மரணம் என்ப. மூன்று, நான்காம் இடத்திற்கு உடையவர்கள் கூடிப் பாவ இராசியாகிய நான்காமிடத்தில் இருக்கச் சனி பார்க்கிலும், இலக்கனாதிபதி புடத்தில் மூன்றாமிடத்திற்கு உடையவன் புடத்தை வாங்கிக் கண்ட இராசியிலாகிலும், சேய் புடத்தில் இராகு புடத்தை வாங்கிக் கண்ட இராசியிலாகிலும், சேய் புடத்தில் இராகு புடத்தை வாங்கிக் கண்ட இராசியாகிலும்; சனி, குரு வருநாளிலும் இளைய சகோதரம் மரணம் என்ப. இவை இரண்டு புடமும் மாறிப் பார்க்கக் கண்டத்தில் சனி, குரு வருநாள் மூத்த சகோதரம் மரணம்.

தவத்தினுக்கா றாதாயம் இவைக்குளர்சுக் கிரனும்
　　சஞ்சலம்உற் றொன்றிறையத் தலமிவர்கட் கொளிக்கில்
அவத்தரிடைக் குள்ளாகில் பாகவன்தேள் வேளாய்
　　அணையிலச்சேல் வெயில்பார்க்க அசிதனுறில் அவமாய்க்
கவித்திடப்பொன் னணைதலெனக் கன்னியிலுற் றிருக்கில்
　　காமனிலெட் டிறைஇருக்கக் கசடர்விழித் திடில்கார்
செவித்தலத்துக் கைந்தாகிச் சனியசுபர்ச் சேரச்
　　சிதன்விழிக்கில் எமன்திசையில் சேர்தல்களத் திரமே. 188

இரண்டாம் இடம், இவைகளுக்கு உடையவர்களும், சுக்கிரனும் துர்பெலமாகி இலக்கனம், இலக்கனேசன் , இரண்டு, ஏழாமிடங்கள் இவற்றிற்கு மறையிலும் அல்லது பாவ மத்தியமாகியும், விருச்சிகம் ஏழாமிடமாகிச் சுக்கிரன் இருக்கினும், மீனம் ஏழாமிடமாகிச் சனி இருக்க, இரவி பார்க்கிலும், நான்காம் இடத்தில் வெகு பாவர்கூட, ஏழாமிடம் கன்னியாகிக் குரு இருக்கிலும், ஏழாமிடத்தில் எட்டாமிடத்திற்கு உடையவன் இருக்கப் பாவர் பார்க்கிலும், கடகம் ஏழாமிடமாகச் சனி பாவரை கூடியிருக்கச் சுக்கிரன் பார்க்கிலும் களத்திர மாரணம்.

களத்திரமைந் தானனமின் னவர்குருதுர்ப் பெலமாய்க்
　கசடரிடை யுறில்கலக்கில் கல்லியமுட் கொளிக்கில்
உளத்திறைமா லசிதன்வர்க்கத் துறமனதுக் காறெட்
　டுற்றதசு பம்மாகிலுள் ளிரணனொ டும்சேய்
விளத்தரவின் வர்க்கமுறின் மாரணம்புத் திரர்க்காம்
　மேவலரெட் டிறைவர்நிறை மேவல்விழிப் பவமாய்
வளர்ந்திடிலிப் பவர்க்குடைய ராகப்பே ரதனால்
　வருந்தனையர் தோசமலை யத்துளமா முனியே. 189

*ஏழு, ஐந்து, இரண்டாம் இடங்களுக்கு உடையவர்களும், குருவும் துர்ப்பலமாகிப் பாவமத்திய மாகிலும், அல்லது பாவ சகிதமாகிலும் அல்லது இலக்கனத்துக்கும் ஐந்தாம் இடத்திற்கு மறையிலும், ஐந்தாம் இடத்திற்குடையவன் புதன், சனி வர்க்கமும் உற, ஐந்தாம் இடத்திற்கு ஆறு, எட்டாம் இடத்தில் பாவர் இருக்கிலும், ஐந்து, ஆறாம் இடத்திற்கு உடையவனும் சேய், கேதுவும் கூடி இருந்து அங்கிசமும் செய்யிலும் புத்திர மரணம் என்ப. ஆறு, எட்டாமிடத்திற்கு உடையவர்கள் ஐந்தாமிடத்தில் இருந்தும், பார்த்தும், வெகு பாவர் சேகரிக்கில், அப்பாவாதிபர் காரகம் கொண்டு, புத்திரதோசம் இன்னதினால் வருமென்று சொல்லுக அகத்தியமா முனியே!*

மாக்கோண்டீக் கோண்டார்நீர் வத்திரமொன் றலரி
　மாகாது மூன்றரவக் கோணான்காய் வருதல்
வீக்காந்தாய்க் கிரவிலது அவர்க்காஞ்சேய்க் கிடையாய்
　விளம்புவரிந் நாள்தோஷம் விதுக்கலையெட் டீருக்கீ
தாக்கீதான் டிருமூன்றொன் றொன்பதொண்ணா றைந்தீர்
　ஆறிலறை அதில்பாதி மாதமுடு வடிநேர்
போக்காதன் மாதுலர்க்கோ தரபெந்து வுக்காம்
　புகல்வதிந்நாள் கனுபவமெவ் வளவுபொருந் திடிலே. 190

*அசுபதி, மகம், மூலம், கார்த்திகை, உத்திரம், உத்திரட்டாதி, பூசம், பூராடம், சித்திரை முதல்பாதமும்; அத்தம் பரணி மூன்றாம் பாதமும், ஆயிலியம், கேட்டை,*

ரேவதி நான்காம் பாதமுமாகப் பிறக்க இது நிசியாகில் மாதுர் மரணம் என்ப. பகலாகில் பிதாமரணம் என்ப. சந்தியாகில் சிசு மரணம் என்ப.

### இவற்றிற்கு தோடகாலம் அறியும்படி

அசுபதிக்கு வருடம் பதினாறு, மகத்திற்கு வருடம் எட்டு, மூலத்துக்கு வருடம் நான்கு, கார்த்திகைக்கு வருடம் நான்கு, உத்திரத்திற்கு மாதம் ஆறு, உத்திராடத்துக்கு மாதம் ஒன்று பூசத்திற்கு மாதம் ஒன்பது, பூராடத்திற்கு மாதம் நான்கு, சித்திரைக்கு மாதம் ஐந்து, அத்தத்திற்கு வருடம் ஒன்று, பரணிக்கு மாதம் ஆறு, ஆயிலியம் - கேட்டை - ரேவதிக்கு மாதம் மூன்று என்ப. இந்த நட்சத்திரங்களில் சொன்ன பாதம் நீக்கி மற்றுள்ள மூன்று பாதங்களும் நேர்வைத்து இதற்கு இராப்பகல் சந்தியும் நேர்வைத்து மாதுலர் சகோதர பந்துவுக்குத் தோடம் சொல்லுக. இந்தத் தினம் சொல்லுமிடத்து இந்தத் தோடத்துடனே இரண்டாவது ஒரு தோஷமும் கூடில் இந்தப்படிக்குத் தோடம் சொல்லுக.

**எவனவனை தாகையிவ ராதிபரோற் வர்க்கத்**
**தெய்திபிறப் பிறைகூட வெரியிலெட்டாய் இதுவும்**
**புவனமகன் வர்க்கமுமாய் பொன்விழிப்பெய் தாமல்**
**புக்கிடிறறாய் அனுமரணம் புகல்வரிது போலும்**
**அவலுமனை யும்மாகில் அனுமரணம் அவர்க்காய்**
**அரைந்திடுவர் அவமானத் தரசன்விழிப் பாரத்**
**தவனனிர சதனீச கேந்திரத்தில் பவமாய்த்**
**தரிக்கிலிவன் ஆன்மவதைக் காய்த்தலத்துற் றவனே.** 191

நான்கு, ஒன்பதாமிடம் இவற்றிற்கு உடையவர்கள் ஒரு வர்க்கம் ஏறி, எட்டுக்குடையவனைக் கூடிச் செவ்வாய் வீடு, நான்கு, எட்டாமிடமாகச் செவ்வாய் வர்க்கமுமாகிக் குரு பாராதிருக்கில், மாதுரு அனுமரணம் என்க. இந்தப்படி இலக்கனேசனும் களத்திரரேசனுமாக இருக்கில், களத்திரம் அனுமரணம் என்க. எட்டாமிடத்திற்கு உடையவன் பார்க்க; இரவி, சுக்கிரன் நீச கேந்திரத்தில் பாவ சகிதமாக இருக்கில், ஆன்மவதை செய்பவன் என்க.

உற்றிடும்இவ் ஆன்மவதைக் குனபவத்தோ டெட்டில்
  உறல்பொனெனில் ஆன்மவதை ரந்திரத்தை உடையோன்
அனல்தலைவன் முதலெழுவர் இருப்பிடம்மூன் றாக
  விரசதநீ சத்தாகில் இவன்கொலைபா தகனாம்
மற்றலைவன் முற்பவன மதற்கதிபன் வர்க்க
  அவமான வர்க்கமுறில் அவகீர்த்திக் கவனாம்
சொற்றலமெட் டாறுவியத் துடையர்சுன் வர்க்கத்
  துற்றிடில்எவ் வேளையினும் துயில்வதிவன் தொழிலே. 192

இரவி, சுக்கிரன் நீச கேந்திரம் இருக்க, எட்டாமிடத்தில் குரு இருக்க, ஆன்மவதைக்கு ரந்திரி என்க. இரவி ஆதி சனி வரை எழுவரும், மூன்று வீட்டில் இருக்க, இதில் சுக்கிரன் நீசம் ஏறில் கொலைபாதகன் என்க. சந்திரனும் இலக்கனமும் இலக்கனேசனும் எட்டாமிடத்திற்கு உடையவன் வர்க்கம் ஏறில், அவகீர்த்தி உடையவன் என்க. இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடத்திற்கு உடையவர்கள் சனி வர்க்கம் ஏறில் எவ்வேளையும் நித்திரைச் செய்பவன் என்க.

துயில்க்கிறைவன் இரவிசனி சோமனையும் கூடிச்
  சொற்றான வர்க்கமுறில் சொல்லணிக்கா திபர்தஞ்
செயிற்றரவு சிதன்கூடி எட்டிலிதற் கிறைசேர்ந்
  திருக்கின்மத் யபானனென இயம்புவதிப் புவியாம்
கயிற்கதிரில் அவனசிதன் வர்க்கமுறின் மலினக்
  கலைக்கிசைவன் ஒருக்காலும் சவுசமுங்கண் டறியான்
வெயில்கிரண வேணியவீ தெட்டியல்பாம் இதன்மேல்
  விளம்புவதொன் பானதனுக் குள்ளவியல் பெனுமே. 193

எட்டாமிடத்திற்கு உடையவனும்; சனி, இரவி, சந்திரனும் கூடி, இரண்டாம் இடத்தில் இருந்து வர்க்கோத்தமம் ஏறிலும்; இரண்டு, மூன்றாம் இடத்திற்கு உடையவர்களும்; கேது, சுக்கிரனும் கூடி எட்டாம் இடத்தில் இருக்க, இதற்குடையவன் கூடினும் மத்தியபானம் பண்ணுவான் என்ப. நான்காம் இடத்தில் இரவி இருக்க, நான்காமிடத்திற்கு உடையவன் சனி வர்க்கம் ஏறில், மலின வத்திரனுமாகிச் சவுசாதி முதலான சுசி இல்லாத அனாசார

வானாகவும் இருப்பான் என்ப. சூரியப் பிரகாசமான சடாமகுடத்தை உடையவா ! இஃது எட்டாம் இடப்பலன். இதன்மேல் ஒன்பதாம் இடத்துப் பலன் சொல்லுவோம்.

எட்டாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபது இரண்டுக்குக் கவி 193

## 23. ஒன்பதாம் பாவகப் படலம்

இயல்பிதயம் இதற்கிறைவர் காரகனும் சுபமாய்
இவர்கடம்மிற் கொளிக்காமல் இலக்கனகேந் திரக்கோள்
நயன்முறக்கீ தவாங்கிசத்தில் அதிகவர்க்கம் ஏறி
நவாங்கிசமுச் சாங்கிசமால் நண்ணிலிவன் தாதை
தயவுடைய னானசன ரெட்சகனும் ஆகி
சௌபாக்கிய னெனச்சதாயு வரையி ருப்பான்
வியரிணம்சந் திரம்பிதுராய்ச் சரச்சனியுற் றிடுநாள்
வேற்றூரில் இருப்பனன்றஈக் காவலின்மே வுவனே. 194

ஐந்து, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்களும், பிதுர்காரகனும் சுபமாகி இவர்கள் தங்கள் தங்கள் பாவத்துக்கு மறையாமல் இலக்கன கேந்திரக் கோணில் பெலமாகித் தேவாங்கிச வர்க்கத்தில் அதிக வர்க்கம் ஏறி, நவாங்கிசத்திலும், உச்சாங்கிசமானால் பிதா மனோதயவு உடையவனாகி சகலசன இரட்சகனாகவும், தீர்க்காயுள் உடையவனாகவும் இருப்பன். ஆறு, எட்டு, பன்னிரண்டு, ஒன்பது, நான்கு இவை சரமாகச் சனி இருக்கில் புத்திரோதய காலத்தில் பிதா தூர தேசத்தில் இருப்பன் அல்லது காரகக் கிரகத்தில் உட்படுவான்.

மேலவர்ப்பெற் றொளியாமல் கேந்திரகோண் இவர்கள்
விழிக்கிறைவிப் பிரன்புகர்மால் வெகுபெலமாய் மேவி
லீவதிர சதமொடுபொற் றுதலைமுதல தானம்
யாவையும்செய் திருப்பவனின் றவன்பொன்னில் இருக்க

பாவவர்க்கத் தேறாமல் பணமுகத்துக் குடையோர்
பார்க்கிலுப தேசிகனாம் சிவார்ச்சனைபத் திறைக்காம்
தேவவர்க்கத் தியல்புமறிந் துரைப்புதவ விரதம்
செய்வதின னாகிலினிச் செப்புதல்பாக் கியமே. 195

*சத்துருவைக் கூடாமல் ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் விழாமல் கேந்திரகோனுக்கு உடையவர்களும், இரண்டாம் இடத்திற்கு உடையவனும்; குரு, சுக்கிரன், புதனும் வெகுபெலமாக இருக்கில் இரசத பொற்றுலை முதலான தானம் யாவையும் செய்வான், ஒன்பதாம் இடத்தில் குரு இருக்கப் பாவ வர்க்கம் ஏறாமல்; இரண்டு, மூன்றாம் இடங்களுக்கு உடையவர்கள் பார்க்கில், உபதேசிகனாம். பத்தாமிடத்துக்கு உடையவன் பார்க்கில் சிவார்ச்சனை உடையவனாம். இரவி பார்க்கில் சிவதவ விரதம் உடையவனாம், இவ்வர்க்கம் கொண்டு இன்ன தேவதா விரதம் பண்ணுவான் என்றும் சொல்லுக. இதன்மேல் பாக்கிய விபரமும் சொல்லுவோம்.*

பாக்கியமொன் றன்னைஇவர் தங்களின்மித் திரராய்ப்
பாவகன்பொன் மாலிவர்கள் பார்ப்பதுபற் றுதலாய்
வாக்கிறைமன் மதத்திறைவர் வர்க்கம்வரில் களத்தான்
மற்றொனின்மற் றதுவால்பாக் கியம்வருதற் கிசைப்பார்
நோக்கினருற் றவரில்வெகு பெலவானுக் குளதாய்
நுவலூம்வய தாகிதொட்டு நூற்றினுக்கும் உரைப்பார்
போக்குவதப் பவர்கூடில் அவர்கமைத்த கதிரில்
புகல்வரழி வுக்குமினிப் பத்தியல்புக் குளதே. 196

*ஒன்பது, ஒன்று, நான்காம் இடங்களுக்கு உடையவர்கள் தங்களில் மித்திரமாகிக் குரு, புத, சுக்கிர வர்க்கமும் ஏறி, இரண்டு, ஏழாம் இடங்களுக்கு உடையவர்கள் சகிதமுமாகில் களத்திரத்தால் பாக்கியம் என்க. இந்தப் படிக்கு மற்றுள்ள வர்க்கமும் கண்டு பாக்கிய வரவு சொல்லுக. இவர்களைக் கூடினவர்கள் பார்த்தவர் அறிந்து, இதில் அதிக பெலவானை*

வைத்துப் பாக்கியத்துக்கு நிலை சொல்லுக. இதற்குக் கூடிய பாவக்கிரகங்கள் அறிந்து, அவருக்கு அமைந்த கதிரை வைத்து அதற்குச் செலவு சொல்லுக. இதன்மேல் பத்தாம் இடத்து இயல்பு சொல்லுவோம்.

ஒன்பதாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபத்து மூன்றுக்குக் கவி 196

## 24. பத்தாம் பாவகப் படலம்

**பத்தில்ரவி சேயிருக்கில் சீயமதி குருவை**
**பார்க்கிலனல் பானுவின்பின் பற்றிலிவன் பதியில்**
**புத்திரகா ரகன்விழிக்க உயிரில்பொன் உதயம்**
**புக்கிலனைப் புகர்தனிக்கில் புதன்இரண்டில் பொருந்தி**
**உத்தரத்தில் செய்தொழிலில் கணக்கிலுபா யத்தில்**
**உளத்துடன்மற் றிதிலுமிவன் சமர்த்துள்ளவ னாகும்**
**சித்தமுடற் கிறைவரரு கன்னிருந்த ராசித்**
**தேவனைநோக் கிடிலிவன்மந் திரிஎனுமிச் செகமே.** 197

பத்தாம் இடத்தில் சேய், இரவி இருக்கிலும், சிங்கமதி குருவைப் பார்க்கிலும், இரவிக்குப் பன்னிரண்டாம் இடத்தில் சேய் இருக்கிலும், சிங்கத்தில் சேய் இருக்க, குரு பார்க்கிலும், இலக்கனத்தில் வியாழன் இருக்கிலும், நான்காம் இடத்தில் சுக்கிரன் தனித்து இருக்கிலும், இரண்டாம் இடத்தில் புதன் இருக்கிலும், உத்தரத்தில் செய்தொழில், கணக்கில், உபாயத்தில், மனோதிடத்தில் மற்றவைகளில் சமர்த்து உள்ளவனாம். ஒன்று, ஐந்தாம் இடத்திற்கு உடையவர்கள் புதன் இருந்த இராசிநாதனைப் பார்க்கில் மந்திரியாம்.

**கம்மிறைவாக் குளத்திறைவர் கட்படக்கேந் திரிக்கில்**
**கல்லியமால் உறவறத்தில் கனகமுறில் கணக்கன்**
**சொம்முறுநே யத்திறையைத் தோயவிதற் குடையோன்**
**சுக்கிரனுக் கெதிரிருக்கில் தூதனிரண் டுதித்தல்**

பம்மிறையா தவர்கொடுக்க மாகிலிர சதம்பொன்
பவுமனும்கேந் திரந்தனிக்கில் பதுமனுக்கா னனத்தில்
அம்மறலாய்ப் புகர்இருக்கக் கன்னிதயத் துடையோன்
ஆக்கமுறின் மனர்க்கமைச்ச னாகவியம் புவதே. 198

இலக்கனேசன், இரண்டு, ஐந்தாம் இடங்களுக்கு உடையவர் பார்க்கக் கேந்திரத்தில் இருக்கிலும், ஒன்றாமிடத்தில் புதனும், ஒன்பதாமிடத்தில் குருவும் இருக்கிலும், புதன் ஐந்தாமிடத்திற்கு உடையவனைக்கூடி, இரண்டாமிடத்தில் இருக்க, அதற்குடையவன் சுக்கிரனுக்கு ஏழாமிடத்தில் இருக்கிலும்; புதன் ஒன்று, இரண்டாம் இடங்களில் அது இரவி, மதிக்குப் பன்னிரண்டாம் இடமாக இருக்கிலும், சுக்கிரன், வியாழன், செவ்வாய் இவர்கள் மூவரும் கேந்திரங்களில் தனித்து இருக்கிலும், நான்காமிடம் சல இராசியாகிச் சுக்கிரன் இருக்க, அது சூரியனுக்கு இரண்டாமிடமாக இரண்டு, ஐந்தாமிடத்துக்கு உடையவர்கள் பார்க்கிலும் இராச மந்திரியாம்

அம்புலியா தவனிவர்கள் இருபுறமும் சுபமாய்
அரவறவுற் றிடமுதல்வன் கேந்திரகோ ணனையில்
செம்பொனிசைக் கதிபதியாய்ப் பெலத்திருக்கத் துலையாய்ச்
சிதன்சிசுவில் தனித்திருக்கில் ரவிக்கிறைவன் புதல்வன்
கும்பமதில் அல்லவெனில் தேன்மதிநான் காகக்
கூடிலனல் இதுவுமொன்றாய்ப் பூண்டொழிலில் குறுகி
லிம்பரதி லபிமானன் இராசவெகு மானன்
எப்பொழுதும் அரசரில்வாழ்ந் திருப்பனின் எனுமே. 199

இரவி மதிக்கு முன்பின் இராகு, கேது தவிரச் சுபக்கிரகங்கள் இருக்க, இலக்கனேசன் கேந்திர கோணங்களில் இருக்கிலும், பத்தாமிடத்துக்கு உடையவன் குருவாகிப் பெலக்க, ஐந்தாம் இடம் துலாமாகிச் சுக்கிரன் தனித்திருக்கிலும் சனி, கும்பத்திலாவது, விருசிகத்திலாவது சந்தினைக்கூடி நான்காமிடமாக இருக்கிலும்; மதி, சேய் கூடி மூன்று, பத்தாமிடங்களில் இருக்கிலும் அபிமானியாகவும்,

இராச வெகுமானியாகவும், எப்பொழுதும் இராச சமான வாழ்வுடையவனாகவும் இருப்பான்.

வனசமலர்க் கிறைமுதல்யா வருமாட்சி யாகி
　　வருவதுகேந் திரகோண மாகின்மதிக் கிசையில்
கனகமுறன் முதலாகக் கல்லியமன் பார்க்கக்
　　கனல்பெலக்கில் இடபவிது இலக்கனமாய்க் கதுவத்
தனமனுச்சக் கோணாகச் சடத்ததிபன் பார்க்கத்
　　தனுஇறையைச் சாரிலிவன் தனைஉதயத் தலைவன்
தினமனுக்கைந் திறைப்பார்க்கத் தேவவர்க்கத் தேறித்
　　தெசத்துறப்பூ மகன்பெலக்கில் செகத்தரசன் எனுமே.　　200

சூரியாதிக் கிரகங்கள் யாவும் தத்தம் ஆட்சி வீடுகளில் இருக்க, அதுவே கேந்திர கோணமாகிலும், மதிக்குப் பத்தாம் இடத்தில் குரு இருக்க, அதுவே இலக்கனமாக இலக்கனேசன் பார்க்கச்சேய் பெலக்கினும், இலக்கனம் இடபமாகிச் சந்திரன் இருக்க, இரண்டாமிடத்திற்கு உடையவன் குருவுடன்கூடி உச்சக்கோணில் இருக்க, இலக்கனேசன் பார்க்கிலும், வியாழனும் இலக்கனேசனும் கூடி தேவதாங்கிசத்தில் அதிக வர்க்கம் ஏறி, பத்தாமிடத்தில் இருக்கச் சந்திரனுக்கு ஐந்தாம் இடத்திற்கு உடையவன் பார்க்கச் செவ்வாய் பெலக்கிலும் செகத்துக்கு அரசன்.

செகத்துதையத் தவனுயரச் சேய்குருவைக் கூடி
　　சேல்விலொரு ஒன்றிவர்மால் சனிவிழிக்கச் சேரில்
அகத்தணரின் மாறிலன்றே லனைபதின்ம ராக
　　வந்தன்னொன் பதிலிறைவ னாகியுறில் அருகன்
முகத்திறைபொன் புகரிவர்கள் கேந்திரத்தில் இருக்க
　　முதலிலுச்சக் கிரகமுற அதற்கிறையும் உதிக்கில்
தகர்க்கதிபன் உச்சம்வர ஒன்றாப்பெண் குருவும்
　　சனிதேளும் ரவியொருவும் சாரிலர செனுமே.　　201

இலக்கனேசன் உச்சம் ஏற, சேயும்-குருவும் கூடி இலக்கனத்தில் இருக்க, அதுவே மீனம், தனுசு,

மேடமாகிலும் நான்கு பதினோராம் இடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாற அல்லது பத்தாமிடத்திற்கு உடையவர் கிரகம் மாற ஒன்பதாம் இடத்தில் குரு இலக்கனேசனாகி இருக்கிலும், இரண்டாம் இடத்திற்கு உடையவனும் புதன், குரு, சுக்கிரனும் கேந்திரங்களில் இருக்க, இலக்கனத்தில் உச்சக் கிரகமும் இலக்கனேசனும் கூடி இருக்கிலும், இலக்கனம் மகரமாகிச் சேய் இருக்க, கன்னியில் குருவும், விருச்சிகத்தில் சனியும், மேடத்தில் இரவியும் இருக்கிலும் அரசன்.

இல்லெமனிந் துவுமாய்மற் றவர்களொன்றைப் பார்க்கில்
  இரசதமெட் டாறருகன் இடையுநிதி இருக்கில்
அல்லவெனில் சந்திரனுக் காகிலனல் சனிமற்
  றைவரையும் நடுவிருத்தி யபிமுகமாய் ஒதுங்கில்
சொல்லிடைவிட் டாதிமுதல் அன்றெனில்சொன் முதனேர்ச்
  சுதன்முதனேர் மற்றவராய்த் தோன்றலுடன் கறான்றில்
நல்லவர்கேந் திரநான்கு உபசயமற் றவரும்
  நாயகனும் பெலக்னராகி பதிஇவனென் பதுவே. 202

சனி, மதி கூடி நான்காமிடத்தில் இருக்க, இலக்கனத்தை மற்றவர்கள் பார்க்கிலும், ஆறாம் இடத்தில் புதனும், ஏழாமிடத்தில் குருவும், எட்டாமிடத்தில் சுக்கிரன் உக்கிரனுமாக இருக்கிலும் அல்லது அந்தப்படிக்குச் சனி நின்ற ராசிக்காகிலும் இருக்கிலும், சனியே இருவரும் அபிமுக இராசியாக இருக்க மற்றவர் இடையிலே இருக்க, ஒரு பாரிசமாக ஒதுங்கிலும் இரண்டாம் இடம் முதல் ஒன்றுவிட்டு நேர்க்கிரகங்கள் இருக்கிலும் அல்லது இலக்கனம் முதல் இருக்கிலும், அல்லது இரண்டாமிடம் முதல் நேர் இருக்கிலும், அல்லது ஐந்தாமிடம் முதல் மற்றவர் இருக்க, இலக்கனேசன் இலக்கனத்தில் இருக்கிலும் சுபர் நான்காமிட கேந்திரமும் பாவர் உபசெயமாக இலக்கனேசன் பெலக்கிலும் நராதிபன்.

நரனெனும் லக்கினமாகக் குருஉதிக்கப் புலனலாய்
நாளிறைசுக் கிரனிருக்க நளினமன்சேய் நாற்காற்
கிரகமெ னந்தழுவ வண்ணல்பெல மாகில்
கீடமுறச் சனிகுடம்பொன் கிரியைபுத னாகி
லிரவிறையில் அனலானில் இந்துவின னரியில்
இரசதம்பொன் னெடுத்துலையி இலக்கனமாய் இருக்கில்
சிரசிறைபார்த் திடக்குருக்கோண் சேரவனல் பெலக்கத்
திவியிலுச்சத் திற்றிரத்தில் செனிக்கினரா திபனே. 203

நரபுருட இராசியாகிக் குரு இருக்க, அதுவே இலக்கனமாக, நான்காமிடம் சல ராசியாகி, அதில் சுக்கிரனாகிலும், மதியாகிலும் இருக்க, பத்தாமிடம் நாற்கால் இராசியாக, அதில் சேயாகிலும் இரவியாகிலும் இருக்க, இலக்கனேசன் பலமாக இருக்கிலும், விருச்சிக சனியும், கும்ப குருவும், மேட புதனுமாக இருக்கிலும், கடகச் செவ்வாயும், இடப மதியும், சிங்க இரவியும் இலக்கனம் துலாமுமாகிக் குரு, சுக்கிரன் இருக்கிலும், ஐந்து, ஒன்பதாம் இடத்தில் குரு இருக்க, இலக்கனேசன் பார்க்கச் செவ்வாய் பெலக்கத் திவாகாலத்து உச்சத்தில் திர இரவி இலக்கனமாய்ப் பிறக்கிலும் நராதிபன்.

அதிபதிகா ரகர்சுபரா திக்கிறைமற் றவரும்
ஆறீறெட் டுடையவர்க்கத் தல்லததி பெலமாய்
அதயமுதற் கேந்திரகோ ணத்தும்வர்க் கோத்தமத்து
உச்சநவாங் கிசத்துமும் பராங்கிசத்துன் னதத்தும்
கதிருளபோ திற்திரத்து நிசிகாலச் சரத்தும்
கடுவறுவா ரத்தும்வியா ழக்கமனத் திடத்து
மதிபெருகி வருங்காலத் தமுதமுத லாக
வரிலிவன்பேர் யாவரும் கீபதிஎன் பதுவே. 204

ஐந்து, பத்தாமிடத்திற்கு உடையவர்களும்; புதன், குரு, சுக்கிரனும் இலக்கனேசனும் மற்றவர்களும் ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களுக்கு உடையவர்கள் வர்க்கத்து ஏறாமல், இலக்கனம் முதல் கேந்திர கோணங்களிலும் வர்க்கோத்தமத்திலும், உச்ச நவாங்கிசத்திலும்,

தேவகாங்கிசத்து உன்னதத்தும், திவாகாலத் திரத்தும், நிசகாலச் சரத்தும், விடகடிகை அற்ற வாரத்தும் வியாழ நடவடி வர்க்கத்தும் பூருவ பட்சத்தும் அமுதகடிகை இலக்கனமாக செனிக்கில் மகீபதி.

மகிமகன்மூன் றிறைபொனொன்றுக் கதிபனதி பெலமாய்
மாதுரிசைக் கிறைபார்க்க வனசனொரு மருவில்
சிகிஅரவுச் சோதஅம்பொன் சேர்தலன்றே அனலில்
சிரமாக இவர்களுறத் தெசத்திறைபூண் இருக்கில்
சுகிர்தமுடை யோர்கோண கேந்திரமுற் றுயரச்
சுக்கிரனுக் காறில்விதுத் தோன்றிலிவன் உலகில்
அகிதமிதம் இதுவெனக்கண் டவரவருக் கான
வாக்கினையன் புடைமையும்செய் தரசுசெய்த திவனே. 205

செவ்வாய் மூன்றாமிடத்திற்கு உடையவன், குரு, இலக்கனேசன் இவர்கள் அதிபெலமாகி இருக்க; நான்கு, பத்தாமிடத்திற்கு உடையவர்கள் பார்க்க, இரவி மேடத்தில் இருக்கிலும், இராகு, கேது உச்சமாக அதுவே இலக்கனமாகிக் குருகூட அல்லது மேடம், விருச்சிகம் இலக்கனமாகி இவர்கள் கூடியிருக்க, பத்தாமிடத்திற்கு உடையவன் மூன்றாம் இடத்தில் இருக்கிலும் சுபகிரகங்கள் கேந்திர கோண உச்சத்தில் இருக்க, சுக்கிரனுக்கு ஆறாம் இடத்தில் சந்திரன் இருக்கிலும், இதம், அகிதம் அறிந்து இதத்துக்கு அன்புடைமையும் ஆகிதத்துக்கு ஆக்கிணையும் செய்து இராசாதி பத்தியம் பண்ணுவான்.

திவிமனன்சேய் பொன்சிலைக்கோண் டெசத்திறைவர்க் கமுமாய்ச்
சிரக்கோன்கேந் திரக்கோணத் தாகஇவர் சேரில்
புவிமனராய்த் தேட்கோணப் பொன்மதிவிப் பிரராய்ப்
புதன்துலைக்கோன் வைசியராய்ப் புகரிடபக் கோனே
அலவில்வது சூத்தி ரராய் முற்போற் பெலமாக் கூடி
நாற்குலமும் செய்தொழில்நேர் நடத்துதல்சொற் றிடலால்
சவுரியின மாகவரில் சங்கரசா தியுமாய்ச்
சர்ப்பமெனில் நீசருமாய்த் தொழில்செய் குவரே. 206

சூரியன், சேய், குருவும், மேடம், சிங்கம், தனுசும் பத்தாமிடத்துக்கு உடையவன் வர்க்கமாகி இலக்கனேசன் கேந்திர கோணத்தில் இருக்க, இவர்கள் கூடில் இராச வர்க்கமாகி ஆதிபத்தியம் பண்ணுவார்கள். கடக, விருச்சிக, மீனமும், குருமதியும் முன்போல இருக்கில் விப்பிர வர்க்கமுமாகித் தமக்குரிய தொழிலைச் செய்வார்கள். மிதுனம், துலாம், கும்பமும், புதனும் முன்போல் இருக்கில் வைசிய வர்க்கமாய்த் தமக்குரிய தொழிலைச் செய்வார்கள். இடபம், கன்னி, மகரமும் சுக்கிரனும் முன்போல இருக்கில் சூத்திர வர்க்கமாய்த் தமக்குரிய தொழிலைச் செய்வார்கள். சனி வர்க்கமாகில் சங்கரசாதி வர்க்கமாய்த் தமக்குரிய தொழிலைச் செய்வார்கள். இராகு-கேதுவாகில் நீச வர்க்கமாகித் தமக்குரிய தொழிலைச் செய்வார்கள்.

செய்தொழிலா தலனாகில் போக்குவரத் தானைச்
    சேவுகமாந் திரிகம்வயித் தியமலைகா டிடத்தில்
வைகியகாய் கறிபறித்தல் புல்லறுத்தல் எடுத்தல்
    மன்னவரா சரியமிவை யாமதிக்குப் பரிசி
நெய்யொழுகு தசைமாம்ச மச்சமிவை முதல்
    நீவிநவ நீதமிவை விக்கிரையக் கிரைய
மெய்சொலல்போல் சாடிசொலல் விப்பிரர்மன் னவர்கள்
    வீட்டுடைய வாசரியம் வேளாணமை வாழ்வே. 207

முன்போலும் வந்தகன் வர்க்கம் சூரியனாகில் சஞ்சாரம் ஆனை, சேவகம், மாந்திரிகம், வைத்தியம், காடு, மலை யிடத்தில் காய்கறி பறித்தல், புல் அறுத்தல், சுமை எடுத்தல், அரசர், ஆச்சாரியர் இவை முதலான தொழில் பிரவர்த்தகத்தால் சீவனம் செய்வார்கள். சந்திரனாகில் உப்பு, அரிசி, தசை, மாங்கிசம், மச்சம், சீலை, புடவை, வெண்ணெய் இவை விக்கிரையத்தினாலும் கோள் சொல்லுவதினாலும் அந்தணர், அரசர் வீட்டுடையவர்களது ஆசரியத்தினாலும் வேளாண்மை யினாலும் உழவினாலும் சீவனம் செய்வார்கள்.

உழவுவுளை புனக்குளமற் றுள்ளளவும் பூமியினால்
உழைத்தலிகல் ரசவாதம் களவுயிரைப் யொறுத்தல்
அழலதனால் செய்தொழிலா யுதத்தொழினெய்த் தொழிலாட்
டுத்தொழில்போர்த் தொழில்பயிற்ற லருகர்தொழில் காதல்
பழகியமித் திரர்ப்பகைத்தல் கடன்கொடுக்கல் வாங்கல்
பவுமனுக்காந் தேர்நடத்தல் படிப்புரைத்தல் பெருமை
எழுதலிளங்கன் றிலைவிற்றி டறூதந்த ரத்தாட்
டிழைத்தல்வழக் குரைத்தலெண்ணல் வாணிபமாற் கெனுமே. 208

கன்ம வர்க்கம் செவ்வாயாகில், உழவு, விளை, புனக்குளம் இவை முதலாகிய பூமியில் உழைத்தல், சண்டை, ரசவாதம், களவு, சாகரம், அக்கினி, முகத்தில் செய்யும் தொழில், ஆயுதத் தொழில், நெய்த் தொழில், ஆட்டுத் தொழில், போர்த் தொழில், பயிற்றல், சகோதர வர்க்கத்தால் தொழில் செய்தல், மித்திரரைப் பகைத்தல், கடன்கொடுத்து வாங்கல், கடன்படல் இவை முதலானவையினால் சீவனம். புதனாகில் தேர் நடத்துதல், படிப்புரைத்தல், பாடம் படித்தல், எழுதுதல், செங்கன்று வளர்த்து விற்றல், இலை வாணிபம் செய்தல், தூது நடத்தல், அந்தர நாட்டியம் ஆடல், வழக்குரைத்தல், சோதிடம் முதலான கணக்குரைத்தல், செட்டு வியாபாரம் செய்தல் இவை முதலானவையினால் சீவனம்.

மாற்கொருகண் ணழித்தசிவார்ச் சனைகுருவாத் திமைதே
வர்க்கவுபா சனைமுதல்பொன் வாணிபம்செய் மனர்முந்
நூற்குடைய ராசரியம் தவவிரதம் முதல
நோற்பனபுண் ணியத்தொழிலாய் நுவல்வதும்வே தியர்க்காம்
கோற்கதிபன் முதற்சிகியீ றளவிவர்கா ரகமுற்
கூறினபோ லவரவருக் குள்ளதுங்கூ றுவரால்
சாற்குறிய முனியேமற் றவர்க்குளகா ரகத்தும்
சாற்றினதல் லாவிவர்கடந் தொழிலுக் காமே. 209

கன்ம வர்க்கம் குருவாகில் சிவார்ச்சனை, குரு உபதேசம், வாத்திமை, தேவவர்க்க உபாசனை முதலானவை,

பொன், வாணிபம், புத்திரர், அரசர், அந்தணர் இவர்களது ஆசரியம் தவ விரதம் முதலானவை நோற்பனவாகிய புண்ணியக்கிரியை இவை முதலானவைகளால் சீவனம் சொல்லுக. இரவி முதல் குரு வரைக்கும் முன்சொன்னவை அல்லாமல் அவரவர் காரகம் கொண்டும் சொல்லுக. அங்குட்டப் பிரமாணமாகிய கும்போதய முனியே!

காமமதற் கன்னையினி லதற்கிறையங் கிசத்தில்
கதுவுதல்பார்த் திடலுடையர்க் கமைந்திடுநற் கரும
நாமமவர வர்க்குளதாய் நன்மைதின்மை விரிவாய்
நவில்வரிவ ருடனாக ராகுவுநன் னளினப்
பூமனும் பெலமாகத் தாட்பதிதுற் பெலமாய்ப்
புக்கமனை மனைக்கிறையும் புரக்கோனும் புரமும்
சோமனிவன் இறைசரமும் தொழில்மனினன் கூடில்
சொல்லுவர்தே சாந்தரமற் றுபயதிரத் துளதே. 210

பத்தாம் இடத்தில், இதற்குடையவன் அங்கிசத்தில் இருந்தவன், பார்த்தவன், இதற்குடையவனும் இவர்கட்குச் சொன்ன தொழிலும் கண்டு அவரவருக்குச் சொன்ன நன்மை தீமைக்குத் தக்கதாகச் சீவனமும் சொல்லுக. இவர்களுடன் இராகுவும் சூரியனும் பெலமாக, பன்னிரண்டாம் இடத்திற்கு உடையவன் துர்ப்பெலமாக ஒன்று, நான்காமிடங்களுக்கும், இவ்விடங்களுக்கு உடையவர்களும் சந்திரனும் இவன் இருந்த இராசிநாதனும் இவர்கள் சர வர்க்கமாகி, பத்தாம் இடத்திற்கு உடையவனும் இரவியும் கூடில் தேசாந்திர சஞ்சாரம் என்க. இதற்குச் சரமாகில் வெகுதூர சஞ்சாரம், திரமாகில் இருந்த ஊரில் சஞ்சாரம் என்க.

உபயமதற் கொன்பதெட்டுக் குடையவர்சுன் சேய்வர்க்கத்
துற்றிடிலெக் கியகருமத் துடையவனாம் உடுக்கோன்
தபனன்மகன் வர்க்கமுற உற்பலத்தோ டிதுவும்
சாரில்எதிர் காமியெனச் சாற்றுவரத் தசமான்

அவமலது நல்லவர்ப்பெற் றிடிலிவனா சாரம்
அல்லவெனில் மற்றதுவாம் அருகனனல் கூடிச்
சுமுளமீன் தசமாகத் தோன்றிலறக் கோனால்
சுபரொடுங்கூ டின்மோட்ச முடையவரிவ ரெனுமே. 211

ஒன்பதாம், பத்தாமிடத்திற்கு உடையவர்கள், சனி, சேய் வர்க்கம் ஏறில் எக்கிய கருமத்தை உடையவர் என்க. இப்பலத்துடனே சந்திரன், சனி வர்க்கம் ஏறில் எதிர்கருமத்தை உடையவர் என்க. பத்தாமிடத்திற்கு உடையவர் சுபராகி சுபவர்க்கம் ஏறில் ஆசாரவான் என்க. பாவ வர்க்கமாகில் அனாசாரவான் என்க. மீனம் சுபமாக அது பத்தாமிடமாகிச் சேய், புதன் கூடிலும்; ஒன்பதாமிடத்திற்கு உடையவன் நான்கு சுபர்களுடன் கூடிலும் மோட்சத்தை உடைவர் என்க.

வரத்தினிற்பார்க் கவனுதய மறையவன்பெண் மதியாய்
வருடையிலாங் கிசமான தனுப்புரமாய் வரினும்
தரத்தினியுமந் தணனுறினும் சிவலோகம் இரவி
தழலிவர்கள் பெலக்கினர ருலகிலிர சதமும்
நிரத்துகலைக் குளவிதுவும் பெலத்தில்பிதி ருலக
நிதிமினத்து தயமுறினி மலருடன் கூடித்
திரத்துதய கேந்திரத்தில் திவிக்கிரவில் சரமாய்ச்
சீவனுறில் இவன்சேர்தல் பிரமபதம் எனுமே. 212

ஏழாமிடத்தில் சுக்கிரனும், ஒன்றாமிடத்தில் குருவும், கன்னி ராசியில் சந்திரனுமாக, இலக்கனம் தனுவாகி மேடாங்கிசம் ஏறிலும், லக்கனத்தில் வியாழன் இருக்கிலும், சிவலோகம் அடைவன் என்க. கிரகாதிபரில் இரவி, சேய் பெலக்கில் பூலோகத்தை அடைவான் என்க. சுக்கிரனும், பூர்வபக்ஷத்துச் சந்திரனும் பெலக்கில் பிதுர் உலகம் அடைவன் என்க. மீன இலக்கனமாகிக் குரு இருக்கிலும் திவியில் திரமும் நிசியில் சரமும் லக்கனமாக கேந்திரத்தில் சுபருடன் வியாழன்கூடி இருக்கிலும் பிரமபதம் அடைவன் என்க.

பதப்பதியும் இதற்கிறையும் உற்றவர்பார்த் தவரும்
பார்ப்பான்தன் வர்க்கமுறில் பண்ணவரா குவரால்
சிதப்பதியும் எட்டீறும் சுபராசி யாகித்
தீதகலச் சுபர்பார்க்கில் தேவருல கடைவர்
மதப்பதிமன் பெலக்கவசை யீறிவர்கள் நீசம்
அடைந்திடினும் நரகமைக்கோ நேர்பூமி வான
முதற்பதிமற் றவைபுரமாய் மொழிவர்குரு வர்க்க
முதற்புதனைச் சனிபார்க்கில் மாலுலுக முறலே. 213

பன்னிரண்டாமிடம், இதற்குடையவனும் இதில் இருந்தவன், பார்த்தவனும் குரு வர்க்கம் ஏறில் தேவனாவான் என்க. ஒன்றாம், பத்தாம், எட்டாம், பன்னிரண்டாம் இடங்கள் சுப இராசிகளாகிப் பாவர் இருக்கச் சுபர் பார்க்கில் தேவர் உலகத்தை அடைவான் என்க. ஏழாமிடத்திற்கு உடையவன் பெலக்க, எட்டாம், பன்னிரண்டாமிடத்திற்கு உடையவர்கள் நீச வர்க்கம் அடையில் நரகம் அடைவன் என்.க. மேடக்கோள் முதல் நாற்கோணில் இலக்கனமானது கண்டு பூலோகம், அந்தரலோகம், சொர்க்கலோகம், நரகலோகம் நேர் வைத்துச் சொல்லுக. இலக்கனம் குரு வர்க்கமாகிப் புதன் இருக்க, சனி பார்க்கில் வைகுண்டம் அடைவன் என்க.

உறக்கமுத றம்போக்குக் குடையபவர் உதயத்
துற்றதனுக் கிறைஒடுங்க இவர்களுயர் வாக
திறக்கனலெட் டுறக்கால நிற்பதுமெய் யாக
நிதிவர்க்கம் அறில்சிரசாக் கினைநினைவுக்கீறா
றறக்கனக வினமுமுன்போ லாதல்கராக்கி னைக்காம்
ஆதாயம் பூண்செவிக்கீ றடிக்காஞ்சே யமரப்
பிறைக்கிரவிக் கிடந்துயிலாய்ப் பிணிநடைஎட் டிறையாய்ப்
பெறஇவையும் மறைந்திடில்பீ ரங்கிவர்க்கம் எமனே. 214

ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டாமிடத்திற்கு உடையவர்கள் பாவராய் இலக்கனத்தில் இருந்து பெலக்க, இதற்குடையவன் மறைய, ஐந்தாம் இடத்துக்கு உடையவன் செவ்வாயாகில், எட்டாம் இடத்தில் இலக்கனத்தில் காலனும் கூட, குரு வர்க்கம் இல்லாது இருக்கில், சிரசாக்கினை என்க.

இந்தப்படி நான்காம், பத்தாமிடங்களில் கராக்கினை என்க. மூன்றாம், பதினோராமிடங்களாகில் செவியாக்கினை என்க. பன்னிரண்டாமிடமாகில் காலாக்கினை என்க. செவ்வாயும் தேய்ந்தொழிந்த மதியும் இரவியும் ஆறு, எட்டு, பத்தாம் இடங்களுக்கு உடையவர்களாகி எட்டாமிடத்தில் இருக்க, இலக்கனேசன் மறையில் பீரங்கி முதலான வர்க்கத்தினால் ஆக்கினை என்க.

கம்மதனுக் கெட்டாறி ரேழுபயம் இவர்கள்
    கதிர்மதிபார்க் கவனொடுங்கிக் கசடருமா ஒளிக்கச்
சொம்மதனுக் கறத்திறைவ யச்சுசிகூடிப் பார்க்கில்
    சுறவுதயக் கனலாய்மற் றவர்துயிறாள் கோரத்
தன்மறையவன் பாராது றில்விழியாக் கினையாம்
    ஆகஉறுப்ப தற்குமிவை ஆகஉரைத் திடுவார்
பன்மனன்முன் அண்ணலிதற் காய்சிகிசுன் னாகில்
    பகர்வதுகா ராக்கிரகத் தளைசிறைபந் தனமே. 215

ஆறு, எட்டு, பன்னிரண்டு, ஏழு, இரண்டாம் இடத்திற்கு உரியவர்களும்; இரவி, மதி, சுக்கிரனும் கூடிப் பாவ சகிதமாய்ப் பெலகீனமாகி மறைய, பத்தாமிடத்திற்கு உடையவன் செவ்வாயுடன் கூடிப் பார்க்கிலும், இலக்கனம் மகரமாகிச் செவ்வாய் இருக்க, மற்றுள்ளவர் பதனமாக வியாழன் பாராது இருக்கிலும், நேத்திராக்கினை என்க. இந்தப் படிக்கு அந்தந்த உறுப்புக்குத் தக்கபடி சொல்லுக. சந்திரன் நின்ற இராசிக்கும், இலக்கனேசனுக்கும் நான்காம் இடத்தில் கேது, சனி நிற்கில் தளை சிறைக்கவால, பாச பந்தனம்.

பத்தாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபது நான்கிற்குக் கவி 215



## 25. பதினோராம் பாவகப் படலம்

தனத்தினுக்கொன் பதற்கியலிவ் வளவுளதாம் இனிமேல்
சாற்றுதல்பன் னொன்றதற்காம் தழலுமிதற் கிறையும்
உணர்த்திரிகோ தினபலன்போன் மேடவிடன்மூத் தவற்கா
முதற்றொழிலுக் கிசைத்ததைப்பின் மொழிந்திடிலா பமுமாம்
தினத்தரிம னவர் முதலோர்க் கமைந்திடுக ராகத்தால்
திரவியவர் களைக்குடைய இயல்பும்செப் புவராம்
அனத்தனுக்கோர் தனையவினி ஆறிரண்டாம் இடத்துக்
காவதுங்கே ளென்றனன்றா ராரயிலா யுதனே. 216

பத்தாமிடத்திற்கு உள்ள பலன் இவ்வளவு என்ப. இதன்மேல் பதினோராம் இடத்துப் பலன் கேட்பாயாக. பதினோராம் இடத்திற்குடையவனும், செவ்வாயும் முன்சொன்ன மூன்றாம் இடத்துப் பலன்போல வைத்துப் பார்த்து மூத்த சகோதர பலமும் சொல்லுக. பத்தாமிடத்தில் சொன்ன தொழில் சீவன பலத்தைவைத்து இலாப பலமும் சொல்லுக. சந்திராதித்தர் முதலாகிய கிரகங்களுக்குச் சொன்ன காரகத்தைவைத்து ஆதாயத்துக்கு விபரம் சொல்லுக. அன்னவாகனனுக்குப் புத்திரனானவரே! இதன்மேல் பன்னிரண்டாம் இடத்துப் பலமும் சொல்லுவோம் என்று திருவாய் மலர்ந்து அருளினவன் வெற்றிமாலையை அணிந்த கூர்மை தங்கிய வேலாயுதக் கடவுள்.

பதினோராம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபத்தைந்துக்குக் கவி 216

## 26. பன்னிரண்டாம் பாவகப் படலம்

ஆயமதற் கானனமும் அதற்கிறையும் சுபமாய்
அதிபெலம்உற் றிடில்அதிக சுயசயனம் ஆகும்
தாயிசைசொல் லாயநவ மொன்றிறைவர் பதனத்
தலைவரொடும் கூடிடவித் தலத்தினுலுற் றிருக்கத்
தீயவர்பார்த் திடில்தேடுந் திரவியமும் செலவாம்
செலவுமின்ன தாலெனவும் செப்புவர்தாட் சிதனும்
மாயவரில் உறிலோந்தி பல்லிநரர் பதன
மாமனைஈ ரிறைவர்பெல மாய்வரில்வா கனமே. 217

பன்னிரண்டாம் இடமும், இந்த இடத்திற்கு உடையவனும் சுபவர்க்கம் ஏறி அதிபெலமாகில் அதிக சுகசயனம் சொல்லுக. பன்னிரண்டு, பதினொன்று, ஒன்பது, ஒன்று இவற்றிற்கு உடைவர்கள் எட்டு, பன்னிரண்டுக்கு உடையவர்களுடன் கூடிலும், இத்தானங்களில் இருக்கப் பாவர் பார்க்கிலும் தனச்செலவும், செலவுக்கு விவரமும் சொல்லுக. பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் பாவருடன் கூடில் பல்லி, ஒந்தி, நரர் பதனம் என்ப. பன்னிரண்டாம் இடத்திற்கு உடையவன் நான்காம் இடத்திற்கு உடையவனைக் கூடி அதிபெலமாகில் வாகனவான்.

பன்னிரெண்டாம் பாவகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபத்து ஆறுக்கு கவி 217

## 27. கிரக சேகரப் படலம்

கனகமய மாகியசந் தனக்கியாய் செந்தூர்க்
காதிபலக் கனமுதல் ராறலவும் கணித்தென்
மனதிசைய பாவையுங்கை யாமலகம் போல
வகுத்துவகுத் தெனக்கறியும் வகைவிபர மாக
வினதினதென் றடிக்கரும்பை இழைத்தழகாய் நறுக்கி
இன்னமிழ்தில் தோய்த்ததொவ்வொன் றெடுத்தெடுத்தீ வதுபோல்
சொனதெதுவென் றெடுத்துரைப்பேன் அடிமைபடைத் ததனால்
தொண்டுகொண்டா ளக்கடனென் றின்றெனக்கோ துதலே. 218

சொர்ணமயமாகிய சந்தன சைலத்தை உடையவர் செந்தூருக்கு அதிப! இலக்கன பாவகம் முதல் பன்னிரண்டாம் பாவகம் வரைக்கும் நிதானித்து அடியேன் மனது இசையும்படி சகல பலாபலமும் கையில் நெல்லியங்கனியை வைத்துக்கொண்டு காண்பதுபோல யாவையும் பகுத்துப் பகுத்து அறியும்படி விபரமாக அடிக்கரும்பை நன்றாக இழைத்து இதழிகளாக நறுக்கி இனிய அமிழ்தில் தோய்த்து ஒவ்வொன்றாய் எடுத்தெடுத்துக் கொடுப்பதுபோலத் தேவரீர் திருவுளம் பற்றியதை அடியேன் எதுவென்று விண்ணப்பம் செய்வது. சுவாமி அடிமை படைத்து ஆளவேண்டும் கடனாதலால் திருவுளம் பற்றினது.

ஓதியபா வகப்பலன்போல் அடியேனுக் கினிதாய்
உதயவன்தொட் டுள்ளவர்கட் குள்ளபலத் தியல்பு
நீதயவுற் றுரைத்திடெனத் தாழ்ந்துடற்றுச் சொடுக்கி
தின்றொருகை வாய்ப்புதைத்து நேரொருகை நினைவாய்
பாதமலர்த் தொட்டெனது சாமிபராக் என்னப்
பக்குவங்கண் டுரைத்ததனால் திருவுளம்பற் றினநான்
மாதவவா தவன்முதற்சே கரத்தியல்கேள் என்றான்
மாதரிக்கொக் கலைப்பிளைசெம் மான்பிளைமாப் பிளையே.

*பன்னிரண்டு பாவகத்துக்கும் திருவுளம் பற்றிய பலன்போல அடியேனுக்கு இனிதாக சூரியாதி கிரகங்களுக்கு உள்ள பலமும் தேவரீர் கிருபை வைத்துத் திருவுளம் பற்ற வேண்டும் என்று தெண்டம் பண்ணி உடலையும் வஸ்திரத்தையும் ஒடுங்கி நின்று ஒரு கையினால் வாயைப் பொத்தி ஒரு கையை நீட்டிப் பாதமலர் தொட்டு எனது சுவாமி பராக் என்று சமயம் அறிந்து விண்ணப்பம் செய்தால் திருவுளம் இரங்கி மகத்தான தவசினை உடையவர் கேட்பாயாக என்று கிரக சேகரப் பலத்தியல்பு திருவுளம்பற்றி அருளினவன் பராசக்திக்கு ஒக்கலைப் பிள்ளையும் மான்பிள்ளையாகிய வள்ளி நாயகிக்கு மாப்பிள்ளையுமாகிய சுப்பிரமணியக் கடவுள்.*

பிள்ளைமதி முதனேராய் இரவியுடன் கூடில்
பேரியல்கா ரியசமத்தன் பெண்டிர்வசப் படுவன்
உள்ளமதி பாங்கபடம் உரைத்திடமாம் வித்தை
உருவநல்ல புத்தியுர மாம்அரசர் உறவு
கள்ளமிலான் வெகுமானி பனகமுள னாகும்
களவசியன் பந்துசனன் கருதலர்ப்பெற் றவனாம்
எள்ளலுளான் மந்தபுத்திரி புவசனாம் விதுநேர்
எமனைவும் மாதவனோ டெய்துதற்கிப் பலமே. 220

*இரவியுடன் பூர்வமதி கூடில், பிரபலவான், இயல்பு உடையவன், காரிய சமத்தன், களத்திர வசியன், அடக்கம் உடையவன், இரவி, சேய் கூடில் கபடன், திடவசனாதிகன்,*

இரவி, புதன் கூடில் வித்தை, அழகு, புத்திரசரீரபலம் இவை உடையவன். பரிசுத்தன், வெகுமானி, தனவான். இரவி, சுக்கிரன் கூடில் களத்திர வசியன், பந்துசன சத்துரு உடையவன். இரவி, சனி கூடில் அபகீர்த்தி உடையவன் மந்தபுத்தி உடையவன். சத்துருவசன். இவை இரவி முதல் நேர் சனி வரை இரவி சகிதப்பலம்.

பலமில்வச னம்புகழாம் இராசசமா னனுமாம்
 பைம்பொனுக்குள் ளதுவாம்சத் துருவிடன்பொன் பவனா
நலமினமதி தேசாந்திரி யாம்புதல்வர் தனமாம்
 நல்வசனன் மந்திரிசே னாபதியாம் நயனம்
சலவிரண நோய்போகம் தனகுலமாம் பந்து
 சனப்பிரிவு ரோகிதன மூர்க்கனுமாம் தனமும்
நிலைமையும்கீர்த் தியுமுடைய னாம்காந்தி வித்தை
 நிலவனனேர் மால்புகராய் நிற்பதினன் பலமே. 221

இரவி, மதி, சேய் கூடில் வீண்வார்த்தை சொல்பவன், கீர்த்திமான். இரவி, மதி, புதன் கூடில் இராசசமானன்,. இரவி, மதி, குரு கூடில் இராச வெகுமானன், நல்லவன், பிரபு சேவையை உடையவன். இரவி, மதி, சுக்கிரன் கூடில் விடமார்க்கன், சத்துரு உடையன், பொன் உடையவன், பாவம் செய்பவன். இரவி, மதி, சனி கூடில் குண ஈனன், தேசாந்திரி. இரவி, சேய், புதன் கூடில் புத்திரவான், தனவான். இரவி, சேய், குரு கூடில் நல்ல வசனன், மந்திரி, சேனாதிபதி. இரவி, சேய், சுக்கிரன் கூடில் நயனசல விரண ரோகமும் உடையவன், போகம் உடையவன், தனமுடையவன், குலவான். இரவி, சேய், சனி கூடில் பந்துசனப் பிரிவு உடையவன். ரோகம் உடையவன், தனம் உடையவன், மூர்க்கன்,. இரவி, புதன், குரு கூடில் தனம், நிலைமை, கீர்த்தி உடையவன். இரவி, புதன், சுக்கிரன் கூடில் சரீர காந்தியும் வித்தையும் உடையவன்.

நிற்குணம னாசார நிதனனுமாம் தனமும்
 நேத்திரரோ கமுமறிவும் வசியமுமாம் நிருபர்
சொற்கினிய தொழில்திடமாம் கெருவமபி மானம்
 துர்க்கரும மால்சனிநேர் சுக்கிரன்சுன் னளவு

மெற்கிறையோ டிருபெயர்கூ டற்கிதுவாம் முப்பேர்
 கிதன்மேல்பொய் கபடுசமர்த்தெழுதலுமாம் இசைபொன்
சற்குணமித் திரபுத்ர களத்திரன நீசன்
 சசியனன்மா லொடும்பொனொடும் தபனனைச்சா ருதற்கே. 222

இரவி, புதன், சனி கூடில் குண ஈனன், அனாசாரன், தரித்திரன். இரவி, குரு, சுக்கிரன் கூடில் தனம், நேத்திரரோகம், அறிவு, சனவசியம் இவை உடையவன். இரவி, குரு, சனி கூடில் இராசப்பிரியன், இராசப் பிரவர்த்தகன், மனோதிடன். இரவி, சுக்கிரன், சனி கூடில் கர்வி, அபிமானி, துற்கருமி. இவை இரவியோடு இருபேர் கூடும் பலமாம். இரவி, மதி, சேய், புதன் கூடில் பொய்யன், மனோகபடி, சமர்த்தன், எழுத வல்லபி. இரவி, மதி, சேய், குரு கூடில் கீர்த்திமான், தனவான், சற்குணம், புத்திர - மித்திர - களத்திரவான். சேனாதிபதி.

சார்பில்விடல் கட்பிணிய னாஞ்சனவி ரோதி
 தரித்திரனாம் புத்திதனம் ராசசமா னனுமாம்
பாரியிடத் ததிபிரியன் பாடகனாம் குடிலன்
 பண்டிதனாம் தராசுத பாக்கியனாம் பணம்சேய்
நாரிவையி லானாந்தாய் பிதிர்தார கீன
 னாஞ்சமர்த்தன் சுதந்தரனாம் நாடகவித் தையுமாம்
சோரமிர ணம்விரணந் துர்த்தொழிலாம் மதிசேய்
 சுக்கிரனே ரனன்மால்சுட ரொடுந்தோன் றுதற்கே. 223

இரவி, மதி, சேய், சுக்கிரன் கூடில் பந்துசன கீனன், விடன், நயனரோகி. இரவி, மதி, சேய், சனி கூடில் இனசன விரோதி, தரித்திரன். இரவி, மதி, புதன், குரு கூடில் புத்திமான், தனவான், இராசசமானன். இரவி, மதி, புதன், சுக்கிரன் கூடில் களத்திர மோகி, பாடவல்லான். இரவி, மதி, புதன், சுக்கிரன் கூடில் குடிலன், பெரியவன். இரவி, மதி, குரு, சுக்கிரன் கூடில் களத்திர - புத்திர பாக்கியவான், இரவி, மதி, குரு, சனி கூடில் மாதுர், பிதுர், தார ஈனன். இரவி, சேய், புதன் குரு கூடில் சமர்த்தன், சுந்தரன். இரவி, சேய், புதன், சுக்கிரன் கூடில் நாட்டிய வித்தை அதிகன். இரவி, சேய், புதன், சனி கூடில் சோரம், விரணம், ரிணம், துர்த்தொழில் இவை உடையவன்.

தோன்றல்களந் தனமதிகம் கிரகமும்அப் படியாம்
சுததார கீனனுமாம் இவையொடுபிச் சகனாம்
மீன்றுவசன் சுகிபோகி அரசனுமாம் கர்வி
வித்தைநித னததானாம் விடனினவி ரோகி
ஈன்றவர்த்து வேசியுமாம் இன்மைஅவ மானம்
எய்துகளத் திரனாம்சேய் பொன்கவிநே ரீழ
மான்தலைவன் சனிவரையூ ழணைதலுக்கா நாற்பே
ராய்க்கூட இதன்மேல்கேள் அகத்தியமா முனியே. 224

இரவி, சேய், குரு, சுக்கிரன் கூடில் வெகு புத்திர - களத்திரவான், தனவான், கிரகவான். இரவி, சேய், குரு. சனி கூடில் தாரசுத ஈனன். இரவி, சேய், சுக்கிரன், சனி கூடில் தாரசுத ஈனன், பிச்சகன். இரவி, புதன், குரு, சுக்கிரன் கூடில் மன்மத சுகி, போகவான், தராபதி. இரவி, புதன், குரு, சனி கூடில் கர்வி, வித்தை உள்ளவன், தரித்திரன். இரவி, புதன், சுக்கிரன் சனி கூடில் விடன், இனசன விரோதி, மாதுர் பிதுர்த்துவேசி. இரவி, குரு, சுக்கிரன், சனி கூடில் தரித்திரன், அவமான களத்திரவான். இவை இரவியுடன் மூன்றுபோர் கூடும் பலனாம். இதன்மேல் நாலுபேர் கூடும் பலமும் கேட்பாயாக அகத்தியமா முனியே!

அமர்வலவன் கோள்சமர்த்த னாம்தயைஉ தாரன்
அபாக்கியனாம் சுதசீன சையற்பா யுவுமாம்
தமர்சனவி ரோதிஎத்த னாம்தார ஈனன்
சலரோக நேத்திரனாம் துராசையிச்சா டனுமாம்
சுமதிதனம் படைக்கலனாம் பாவிசுரா பானி
துற்கரும னாநிதனி சோரனுமாம் சுகளம்
விமலமதி வித்தையுமாம் மதிசேய்மால் பொன்சேர்
விதுநிதிசுக் கிரன்விசிதன் வெயிலிடைமே வுதற்கே. 225

இரவி, சனி, சேய், புதன், குரு கூடில் போர் வல்லவன், கோள் சமர்த்தன். இரவி, மதி, சேய், புதன், சுக்கிரன் கூடில் தயை உடையவன், உதாரம் உடையவன், அபாக்கியவான். இரவி, மதி, சேய், புதன், சனி கூடில் புத்திர ஈனன், துராசை

உடையவன், அற்பாயுள் உடையவன். இரவி, மதி, சேய், குரு சுக்கிரன் கூடில் இனசன விரோதி, எத்தன். இரவி, மதி, சேய் குரு, சனி கூடில் தார ஈனன், நேத்திர சல ரோகி. இரவி, மதி, சேய், சுக்கிரன், சனி கூடில் துராசை உடையவன், பிச்சகன். இரவி, மதி, புதன், குரு, சுக்கிரன் கூடில் நல்ல புத்தி உடையவன், தனவான், சேனாதிபதி. இரவி, மதி, புதன், குரு, சனி கூடில் பாவி, சுராபானி, துர்க்கர்மி. இரவி, மதி, புதன், சுக்கிரன், சனி கூடில் தரித்திரன், சோரன். இரவி, மதி, குரு, சுக்கிரன் கூடில் நல்ல களத்திரம் உடையவன், பரிசுத்தன், வித்தை அதிகன்.

## இதுவுமது

மேலவர்ச்செற் றவன்விடனாம் பிச்சகன்வத் திரமும்
மெய்யுமழக் குள்ளவனாம் மேன்மைவித னமுமாய்ப்
பாவம்வதை செய்வதற்குப் பயமிலனாம் தேவ
பத்தியபி மானனுமாம் பார்மகனோர் நால்வர்
நாவலன்பொன் கவிசனியும் நணுமதற்கா மிதனமே
நவில்வதைவர்க் காந்தீர்த்த யாத்திரைஎந் நாட்கும்
போவததில் சோரமுமாம் மோனமெய்ஞ்ஞா னமுமாய்ப்
பொசிப்புமில தாமறுபேர் பொருந்துதற்கிப் பலமே. 226

இரவி, சேய், புதன், குரு, சுக்கிரன் கூடில் சேனாபதி, விடன். இரவி, சேய், புதன், குரு, சனி கூடில் பிச்சகன், சரீரமும் ஆடையும் அழுக்குடையவன். இரவி, சேய், புதன், சுக்கிரன், சனி கூடில் பெரியவன், மனோதுக்கி, பாவி, கொலைபாதகன். இரவி, சேய், புதன், குரு, சுக்கிரன், சனி கூடில் தேவபக்தி உடையவன், அபிமானி. இவை இரவியோடு நாலுபேர் கூடும் பலனாம். இரவியுடன் ஐவர் கூடில் எந்நாளும் தீர்த்தயாத்திரை சஞ்சாரமும் சோரமும் உடையவன். ஆறுபேர் கூடில் மௌன மெய்ஞ்ஞானமும் உடையவனாகிப் பொசிப்பு இல்லாமல் இருப்பான்.

இப்பவுமன் முதலவரும் இந்துவும்சேர் தலுங்கேள்
இயல்புதன நல்லகுல மிதயதிட வானாம்
தப்பறைசொல் பவன்தூதன் கவிஞனுமாம் சாது
சனப்பிரியன் புத்திரனாம் சகலசனத் துவேசி
துப்புரவில் லானாம்பொல் லாக்களந்தாய் தந்தை
துவேசிதரித் திரனாம்துர்த் தொழில்பலமா துலனாம்
செப்புதல்கு ரூரம்விடன் ரோகியுமாம் தீநேர்
செய்பொன்ன ளவும்மதியைச் சேருதற்கித் திறமே. 227

மதி, சேய் கூடில் பாக்கியம், தனம், நல்ல குணம், மனோதிடம் இவை உடையவன். மதி, புதன், கூடில் பொய்யன், தூதன், புலவன். மதி, குரு கூடில் சாது மார்க்கன், வெகுசனப்பிரியன், புத்திரவான். மதி, சுக்கிரன் கூடில் சகல சனத்துவேசி, அனாசாரவான். மதி, சனி கூடில் பொல்லாத களத்திரம் உடையவன். மாதுர்-பிதுர்த் துவேசி, தரித்திரன். மதி, சேய், புதன்கூடில்துர்க்கர்மி, பாபி, தரித்திரன். மதி, சேய், குரு கூடில் குரூர வாக்கு உடைவன், விடமார்க்கன், ரோகி.

தற்குணம்அ னாசாரன் சஞ்சாரம் தாரம்
தனையரிழப் பவனாமா தரவவமா னியுமாம்
சொற்கணழ கறிவுகன வானாம்துர்க் கர்மி
துர்ச்சனனாம் வெகுமானி சுகிகொடைநல் லவனாம்
நல்குலநற் புத்தியபி மானியுமாம் விருத்தை
நாயகன்வா சலகனாம்பு ரோகிதனல் லவனாம்
மற்கிறையைக் கனலிகவி நேர்க்கவிசுன் வரைக்கும்
அணைதலிதாம் இதன்மேல்சொல் வதுவுமுப்போ தற்கே. 228

மதி, சேய், சுக்கிரன் கூடில் சுதந்திரன். அனாசாரன், சஞ்சாரன், தாரசுக ஈனன். மதி, சேய், சனி கூடில் ஆதரவு, அவமானம் உடையவன். மதி, புதன்,குரு கூடில் அபிமான வசனன், அழகு நேத்திரம் உடைவன். அறிவுடையவன், கனவான். மதி, புதன், சுக்கிரன் கூடில் துர்க்கர்மி, துர்ச்சனன். மதி, புதன், சனி கூடில் வெகுமானி, சுகி, விதரணன், நல்லவன். மதி, குரு, சுக்கிரன் கூடில் நல்ல குலம், நல்ல புத்தி,

அபிமானம் இவை உடையவன். மதி, குரு, சனி கூடில் விருத்தை நாயகன், வாய் சாலகன். மதி, சுக்கிரன் ,சனி கூடில் புரோகிதன், நல்லவன். இதன்மேல் மூன்றுபேர் கூடும் பலன் சொல்லுவோம்.

பேரதிக நல்லபுத்தி ராசவசி யனுமாம்
 பிரக்யாதி அழகுகள மிவனதுபெற் றிலனாம்
சீரலதிலா சைசதாநித் திரையனாம் சிசியும்
 திடமனதும் உளனாம்பொல் லாதகளத் திரனாம்
வாரமறி விசைதனலா பஞ்செவிமந் தமுமாம்
 வங்கிசபூச் சியன்தனவா னாம்விடமார்க் கமுமாம்
போரதிகன் சனப்பகையாம் புவிமகன்மால் பொன்னர்
 புதன்கவியே மன்மதியைப் பொருந்துகற்கிற் றிறமே. 229

மதி, சேய், புதன், குரு கூடில் பிரபலன், நல்ல புத்தி உடையவன், இராச வசியன். மதி, சேய், புதன், சுக்கிரன் கூடில் கீர்த்திமான், ரூப களத்திரன், அழகில்லாதவன். மதி, சேய், புதன், சனி கூடில் துராசை, சதா நித்திரை உடையவன். மதி, சேய், குரு, சுக்கிரன் கூடில் சுகி, மனோதிடன். மதி, சேய், குரு, சனி கூடில் பொல்லாத களத்திரம் உடையவன். மதி, சேய், சுக்கிரன், சனி கூடில் அன்பு, அறிவு, கீர்த்தி, தனலாம், செவிமந்தம் இவை உடையவன். மதி, புதன், குரு சுக்கிரன் கூடில் பந்துசன பூச்சியன் தனவான். மதி, புதன், குரு, சனி கூடில் விடமார்க்கன். மதி, புதன், சுக்கிரன், சனி கூடில் வெகுகலகம், சனப்பகை உடையன்.

திறற்கோடன் துக்கிபொல்லா தவனாகும் மதியைச்
 சீவன்முதல் மூவர்களும் சேரிலிவைத் தீரப்
பிறைச்சேர்வ நால்வரெனில் தனங்குலநல் லவனாம்
 பெரியவனாம் மீதுலனாம் பிச்சகனாமீ துளனாம்
குறைத்தேக னாகுமைவர் கூடில்அண்டத் தளவும்
 குணிக்குமறி வுடையனழக் குடையவனாம் இதன்மேல்
பொறைப்போதற் கொருதனைய மான்முதனோர் னைல்பால்
 பொருந்துதல்கேள் என்றனன்சந் தனப்பொருப்புந் தவனே. 230

மதி, குரு, சுக்கிரன், சனி கூடில் திறக்கேடன், பொல்லாதவன், துக்கி. இதன்மேல் நான்குபேர் கூடில் பலன்

அறியும்படி. மதி, சேய், புதன், குரு, சுக்கிரன் கூடில் தனவான். குலமுடையவன், நல்லவன். மதி, சேய், புதன், குரு, சனி கூடில் பெரிவன், தரித்திரன். மதி, சேய், புதன், சுக்கிரன், சனி கூடில் பிச்சகன். மதி, சேய், குரு, சுக்கிரன், சனி கூடில் பிச்சகன். மதி, புதன், குரு, சுக்கிரன், சனி கூடில் அங்கஹீனன். மதி, சேய், புதன், குரு, சுக்கிரன், சனி கூடில் அண்டத்தளவும் குனிக்கும் அறிவுடையவன், அழுக்குடையவன். இதன்மேல் பிரமாவுக்குப் புத்திரனானவா ! செவ்வாய் சேகர பலமும் கேட்பாயாக என்று திருவாய் மலர்ந்தருளினவன் சந்தன சைலத்தையுடைய சுப்பிரமணியக் கடவுள்.

தனமறிவு வைத்தியமாம் சற்குணஞ்சோ திடத்தில்
　　தயவுளனாம் தாதுருவா தத்தசடுற் றவனாம்
மனதிதமில் பாடகனாம் வாத்யநடம் கீத
　　மனதுளனாம் அங்கமதில் வடுக்குறைமற் றுளனாம்
இனசனமில விலைக்குளனாம் இராசரிடத் துளனாம்
　　இயல்புடையன் தனிவிடனாம் இன்பமில்புத் திரனாம்
சினமில்சனத் துவேசனுமாம் தரித்திரனாம் கொடிய
　　சேவகனாம் களனாமா னேரனல்சே ருதற்கே.　　　　231

சேய், புதன் கூடில் தனவான், அறிவுடையவன், வைத்தியன். சேய், குரு கூடில் சற்குணன், சோதிடப்பிரியன். சேய், சுக்கிரன் கூடில் தாதுருவாதி, அசடன். சேய், சனி கூடில் மனோசஞ்சலி, பாடகன். புதன், குரு கூடில் வாத்திய சங்கீத நடப்பிரியன். சேய், புதன், சுக்கிரன் கூடில் அங்கஹீனன். சேய், புதன், சனி கூடில் பந்துசன ஈனன். விலைப்படுவன். சேய், குரு, சுக்கிரன் கூடில் அரசரிடத்து உறவு உடையவன். சேய், குரு, சனி கூடில் தீய இயல்புடையவன், தனவான், விடன். சேய், சுக்கிரன், சனி கூடில் துர்ப்புத்திரனை உடையவன். சேய், புதன், குரு சுக்கிரன் கூடில் சாந்தன், சனதுவேஷி. சேய், புதன், சுனி கூடில் தரித்திரன். சேய், குரு, சுக்கிரன், சனி கூடில் சேவகன். சேய், புதன், சனி கூடில் சோரன்.

சேர்தல்புதப் பலனிதுபாக் கியமறிவம் முளனாம்
செப்புதல்வி னோதவிதம் பாடகனாம் செஞ்சொல்
சாரகஞ்சோ திடம்தனவான் சத்துருவற் றவனாம்
சௌபாக்கிய வானாம்சத் தியன்விடனாம் தனியாம்
சூரனுமாம் குருநேராய்த் தூதனையுற் றிடற்காம்
சுக்கிரநேர் பொன்னையுறில் சொம்மழகாம் சுதனில்
ஆரெனலாம் சௌக்கியமாம் அசிதசிதற் சேரில்.
அவமான களத்தரதாசன் அழிவதுமாம் அதுவே. 232

புதன், குரு கூடில் பாக்கியம், அழகு, அறிவு இவை உடையவன். புதன், சுக்கிரன் கூடில் வினோத வசனன், பாடகன். புதன், சனி கூடில் கல்விமான், கணிதன், தனவான், சத்துரு இல்லாதன். புதன், குரு, சுக்கிரன் கூடில் சௌபாக்யன். புதன், குரு, சனி கூடில் சத்தியவாக்கு உடையவன், விடமார்க்கன். புதன், சுக்கிரன், சனி கூடில் தனவான். புதன், குரு, சுக்கிரன், சனி கூடில் சூரன். இவை புதசேகரம், குரு, சுக்கிரன் கூடில் தனவான், அழகன். குரு, சனி கூடில் புத்திர ஈனன். குரு, சுக்கிரன், சனி கூடில் சௌபாக்யம் உடையவன். இவை குரு சேகரம். சுக்கிரன், சனி கூடில் அவமானமுடைய களத்திரம் உடையவன் , அவதும், அழிவதுமான தாசி, தாசர் உடையவன்.

மாவரசன் கூடலறு பத்திரண்டு வர்க்கம்
மதிக்கதனில் பாதிபதி பதினான் குக ணக்கற்கே
ழாவதொரு மூன்றேக அந்தணர்க்கும் சிதற்கு
அசிதனுக்குப் பூச்சியமா மலரிமுதல் இவர்கள்
பாவகத்தில் உற்றதும்கண் டதற்குடைய பலமிப்
பலத்துடனே சேகரமாய்ப் பகர்ந்திடுவர் இதன்மேல்
நாவுதய வாணிஇறைநந் தனயோ கத்தால்
நவில்வதும்கேள் என்றனனென் நளினமனத் தவனே. 233

இரவி சேகர வர்க்கம் அறுபத்து இரண்டு. மதி சேகர வர்க்கம் முப்பத்து ஒன்று. சேய் சேகர வர்க்கம் பதினான்கு. புதன் சேகர வர்க்கம் ஏழு. குரு சேகர வர்க்கம் மூன்று. சுக்கிர சேகர வர்க்கம் ஒன்று. ஆக, கிரக சேகர வர்க்கம் நூற்றுப்

பதினெட்டு. சனி சேகரம் பூச்சியம். இவர்கள் சேகர பலத்துடனே, இவர்கள் கூடும் பாவக வர்க்கம் காரக வர்க்கமும் கூட்டிப் பலன் சொல்லுக. நா உதயவாணி நாயகனுக்குப் புத்திரனானவா ! இதன்மேல் யோகாதிசயப் பலமும் கேட்பாயாக என்று திருவாய் மலர்ந்தருளியவன் என்னுடைய இதய செந்தாமரை புட்போதனாகிய சுப்பிரமணியக் கடவுள்.

கிரக சேகரப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபத்து ஏழிற்கு க் கவி 233

## 28. யோகாதிசயப் படலம்

**தவமுனியே ! யோகபலத் ததிசயங்கேள் என்ற**
**சடாக்கரனை அகத்தியனும் தாழ்ந்தெவர்க்கு முதலாம்**
**சிவகுருவே இரவிமுதல் சேகரத்துள் ளனவும்**
**சிறிதுசிறி தாய்வகுத்துச் சிறியேனுக் கறிய**
**நவரசசெம் பாகமொரு நாட்குமுதத் தூறி**
**நனையவிந்தூற் றுவபோலும் நவின்றனைஅப் பாலிப்**
**புவனமதில் இவன்யோகப் புருடனெனும் மார்க்கம்**
**புகலெனுமுன் னவன்மனதன் புருகவுரைத் தனனே.** 234

தவசினை உடைய அகத்தியமா முனியே ! யோகாதியப் பலமும் கேட்பாயாக என்று திருவாய் மலர்ந்தருளிய சடாட்சர ரூபனுக்குச் சித்தம் வரும் பொருட்டு அகத்தியமா முனிவனும் தெண்டம் பண்ணி யாவர்க்குந் தெய்வமாகிய சிவனுக்கும் குருவாகியவர் சூரியாதி சேகரப் பலனையும் சிறிது சிறிதாக வகுத்து அடியேனுக்குத் தெரியும்படி நவரச செம்பாகம் ஒருநாள் குமுத மலரிடத்தில் ஊறி முகை அவிழ்ந்து ஊற்றுவது போலத் தேவரீர் திருவுளம் பற்றினது சரி இதன்மேல் பூமியினிடத்தில் இவன் யோகபுருடன் என்று சொல்லும் தன்மை அறியும்படி திருவுளம் பற்றவேண்டும் என்று விண்ணப்பம் செய்யாமுன்னம் அவன் மனது உருகமுபடி திருவாய் மலர்ந்து அருளினவன் சுப்பிரமணியக் கடவுள்.

மனத்தினுக்கைந் தினில்மதிபொன் பார்க்கவனும்கூட
    மாலிறைபத் துறிலறத்தில் வாக்கனையர் சேர
தனத்தினைமன் னுறவிறையாய் அத்துறிலொன் றுச்சம்
    தனைப்பொன்னுற இறைபெலக்கில் சடத்திறையந் தணனும்
முனார்ப்பதியில் உறத்தாய்மன் பார்க்கிலனை யறத்தோர்
    முற்பதியில் உறவணிமன் உச்சமுறின் முதலாய்
அனத்துவச னரிபரமன் அம்பிகைலா மண்யம்
    ஐந்தளவு நேர்யோகம் அவ்வருடத் ததுவே. 235

ஒன்பதாமிடத்தில் மதி, குரு, சுக்கிரன் கூட, இலக்கனேசனும் புதனும் பத்தாமிடத்தில் இருக்கில் பிரமயோகம். இந்த யோகம் செனனமான வருடம் முதல் நடக்கும். ஒன்பதாம் இடத்தில் நான்கு, இரண்டாமிடத்திற்கு உடையவர்கள் இருக்க, இரண்டாம் இடத்தில் பத்தாம் இடத்திற்கு உடையவன் இருக்க, இலக்கனேசன் பதினோராம் இடத்தில் இருக்க விட்டுணுயோகம். இது இரண்டாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனத்தில் உச்சக் கிரகம் இருக்க, வியாழன்கூட இலக்கனேசன் பெலக்கில் உருத்திர யோகம், இது மூன்றாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனேசனும் குருவும் கூடி இலக்கனத்தில் இருக்க, நான்காம் இடத்திற்கு உடையவன் பார்க்கில் அம்பிகா யோகம். இது நான்காம் வருடம் முதல் நடக்கும். நான்கு, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் இலக்கனத்தில் இருக்க, மூன்றாம் இடத்திற்கு உடையவன் உச்சமாகில் லாமண்ணிய யோகம். இது ஐந்தாம் வருடம் முதல் நடக்கும்.

வருபுரக்கோன் கேந்திரம்பூ ணிற்றவன்பொன் னுறில்கோள்
    மாழையுற லொருவிணனொன் பதின்மதியுண் மனவ
னருகருறில் எட்டிறையங் கிசனறத்தக் கோனோ
    டரசுயரி லிசைத்துலைசுன் னுறவனலங் கிசக்கோள்
தருமிலிறைக் கைந்தறம்பொன் புகருறிலத் தனக்கோன்
    தவத்தவனா யத்திவனுச் சத்துறிலுள் ளவன்கண்
புரமனங்கிஷ முறில்யோக மரவியக்கர் மிருகம்
    புகையோகம் சுடராறாய்ப் புகல்பதினொன் றதற்கே. 236

இலக்கனேசன் கேந்திரத்தில் இருக்க, மூன்றாமிடத்தில் ஒன்பதாமிடத்திற்கு உடைவனும் குருவும் கூடில் சர்ப்ப யோகம். இது ஆறாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனேசனும் குருவும் கூட, மேடத்தில் இரவி இருக்க, ஒன்பதாமிடத்தில் மதி இருக்க, ஐந்தாமிடத்திற்கு உடையவன் ஒன்பது, பதினொன்றில் இருக்க, கெந்துருவயோகம். இது ஏழாம் வருடம் முதல் நடக்கும். எட்டாமிடத்திற்கு உடையவனுடைய அங்கிசாதிபதி, ஒன்பாமிடத்தில் இருக்க, இதற்கு உடையவும் இலக்கனேசனும் உச்சமாகில் மிருகயோகம். இது எட்டாம் வருடம் முதல் நடக்கும். துலாம் பத்தாமிடமாகிச் சனி இருக்க, செவ்வாயுடைய அங்கிசாதிபதி இருந்த இராசி நாதனுக்கு ஐந்து, ஒன்பதாம் இடத்தில் குரு, சுக்கிரன் இருக்கில் தூமயோகம். இது ஒன்பதாம் வருடம் முதல் நடக்கும். இரண்டாமிடத்திற்கு உடையவன் ஒன்பதாம் இடத்தில் இருக்க, ஒன்பதாமிடத்திற்கு உடையவன், பதினோராமிடத்தில் இருக்க, பதினோராமிடத்திற்கு உடையவன் உச்சமாகில் சித்திரயோகம். இது பத்தாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனேசன், அங்கிசாதிபதி ஐந்தாம் இடத்தில் இருக்க, ஐந்தாமிடத்திற்கு உடையவன் பார்க்கில் தீபயோகம். இது பதினோராம் வருடம் முதல் நடக்கும்.

**ஒன்றுதிர மாய்ப்பகைவன் பார்க்கவறத் திரவி**
**உதரனங்சனங் கிசம்இம்மூன் றுமொன்றாய் இருக்கின்**
**முன்றலைவன் உச்சம்வரப் பத்துளரின் மாரின்**
**மூன்றரக்கோ னிற்கஉச்சன் முறலுறச்சேய் பார்க்கில்**
**பொன்றனிலா யத்திறையாய் எட்டிறையுச் சமுமாய்ப்**
**பூணுறில்பத் திறைவனங்சத் தறமனுங்கட் புரத்தில்**
**நின்றிடில்யோ கங்காளி விற்சடையாழ் நிருப**
**நேர்பனிரெண் டாய்ப்பதினா றளவுநிகழ்த் துவதே.** 237

இலக்கனம் திரமாக ஆறாம் இடத்திற்கு உடையவன் பார்க்க, ஒன்பதாமிடத்தில் ஒன்பதாம் இடத்திற்குடைய அங்கிசகனும், அவன் அங்கிசமும் கூடில் சண்டிகா யோகம். இது பன்னிரண்டாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனேசன்

உச்சமாக; பத்து, ஐந்தாம் இடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறில் கார்முக யோகம். இது பதிமூன்றாம் வருடம் முதல் நடக்கும். மூன்றாம் இடத்தில் ஒன்பதாமிடத்திற்கு உடையவன் நிற்க, ஒன்றாமிடத்தில் உச்சக் கிரகம் இருக்க, செவ்வாய் பார்க்கில், சடாமகுடயோகம். இது பதினான்காம் வருடம் முதல் நடக்கும். இரண்டாமிடத்தில் பதினோரம் இடத்திற்குடையவர் நிற்க, எட்டாமிடத்திற்கு உடையவன் உச்சமாகி மூன்றாமிடத்தில் நிற்கில் வீணா யோகம். இது பதினைந்தாம் வருடம் முதல் நடக்கும். பத்தாமிடத்திற்கு உடையவன் ஒன்பதாமிடத்தில் அங்கிசம் பண்ணி, அதற்கு உடையவனைக்கூடி இரண்டு, ஒன்றில் இருக்கில் இராச யோகம். இது பதினாறாம் வருடம் முதல் நடக்கும்.

வதைக்கணியிற் றடில்சொலுச்சத் திலனைறம்பொன் மதியும்
 வருவிலிரண் டிசையாய மனரொருவ ரேனும்
விதுத்தனக்குக் கேந்திரமாய்ப் பவமுனிறை குருவாய்
 மேவிலிவன் வாக்கறம னாகஇவன் மேவு
நிதிப்பதியில் அறக்கோன்அங் கிசமனுறில் அலிமா
 நிலமகனும் ஆட்சிஉச்சக் கேந்திரநின் றிலகின்
முதல்திரம்பான் கவன்பொன்மற் றதிறைபெலக் கிலிறைபேர்
 மொழிவதுநேர் பதினேழுக் கிவைமுழுதும் உளவே. 238

பத்தாமிடத்தில் சேய் இருக்க, இரவி உச்சனாகி இரண்டாமிடத்தில் இருக்க, ஒன்பதாமிடத்தில் குரு இருந்த போதிலும்; இரண்டு, பத்து, பதினோராமிடத்திற்கு உடையவர்களில் ஒருவன் மதிக்குக் கேந்திரமாக; ஐந்து, பதினோராம் இடத்திற்கு உடையவன் குருவாகி இருக்கிலும், இரண்டு, ஒன்பதாமிடத்திற்கு உடையவன் குருவாகி, இரண்டாமிடத்தில் இருக்க, இதில் ஒன்பதாமிடத்திற்கு உடையவனுடைய அங்கிசகன் கூடிலும், இராகு, செவ்வாயும் ஆட்சி, உச்ச, கேந்திரத்தில் இருக்கினும்; இலக்கினம் திரமாகி சுக்கிரன் நிற்க, இலக்கனேசன் பெலக்கிலும், இலக்கனம் சரம், உபயமாகக் குரு நிற்கு, இலக்கனேசன் பெலக்கிலும் இராசயோகம். இது பதினேழாம் வருடம் முதல் நடக்கும்.

ஏழதனுக் கைந்திறைவன் உச்சமுமாய்ப் புகரோ
　　டெய்தவிறை கேந்திரிக்கில் இரசதமெட் டாகில்
வாழ்வினராய் மூன்றுறக்கோன் மருவிலிறை யனைமான்
　　வல்வுமின்மா னுடன்கூடி மானமுறத் தருமர்
வீழ்வதல்லா துறிற்கோண கேந்திரமே விறையை
　　விப்பிரன்பார்த் திடஉதய முறில்சேல் வில்
ஊழ்மதிபொன் ஒன்றில்மீன் பாசமின்னீ ராச
　　யோகமிவை முழுவதுமெட் டோடொன்பதனுக் குளவே.　239

பதினோராம் இடத்திற்கு உடையவன் உச்சமாகிச் சுக்கிரனைக்கூட, இலக்கனேசன் கேந்திரிக்கில் நட்சத்திர யோகம். எட்டாமிடத்தில் சுக்கிரன், ஆறாமிடத்தில் சுபர், மூன்றாமிடத்தில் ஒன்பதிற்குடையவன் நிற்கில் பாசயோகம். நான்காமிடத்திற்கு உடையவன் இருந்த இராசிநாதனை இலக்கனேசன் கூடி, பத்தாமிடத்தில் இருக்கச் சுபர் கேந்திர கோணில் இருக்கில் மின்யோகம். இல்க்கனேசன் கேந்திர கோணில் இருக்கக் குரு பார்க்க, இலக்கனத்தில் உச்சக் கிரகம் இருக்கில் செலயோகம். தனு, மீனம் இலக்கனமாகிக் குரு, மதி, இரவி கூடில் இராசயோகம். இவையெல்லாம் பதினேழாம் வருடம் முதல் நடக்கும்.

ஒன்பதில்அந் தணன்இதுவுக் குதயம்வர்க்கோத் தமமமாய்
　　ஒன்றிறையீன் றவனையுறில் பவமன்னுச்ச மாக
மன்பதிமன் இரசதமும் எய்தியுறில் மத்திறையை
　　மாதிறையங் கிசமனுச்ச மாயக்கூடில் வாக்கின்
முன்பிதிர்மன் னவர்களங்கி சத்திறைவ ருஞ்சேர்ந்துறைய
　　முப்புரிமார் பினன்பார்க்கினன் முறைக்குறைநோக் குறவே
இன்பதிஇந் தணனுறில்கே தாரமகி விரற்கு
　　ரிபயோக மறுமூன்று தேறுதநான் கெனுமே.　240

மதிக்கு ஒன்பதாமிடத்தில் குரு இருக்க, இலக்கனம் வர்க்கோத்தமமாக, இதற்கு ஆறாமிடத்தில் இலக்கனேசன் இருக்கில்கேதாரயோகம். இது பதினெட்டாம் வருடம் முதல் நடக்கும். பதினோராமிடத்திற்கு உடையவன் உச்சமாக, ஐந்தாமிடத்திற்கு உடையவன் சுக்கிரனைக் கூடி ஒன்றாம்

இடத்தில் இருக்கபூதலயோகம். இது பத்தொன்பதாம் வருடம் முதல் நடக்கும். பத்தாமிடத்திற்கு உடையவனை நான்காமிடத்திற்கு உடையவனுடைய அங்கிசாதிபதி இச்சமாகிக் கூடில் அங்குலியோகம். இது இருபதாம் வருடம் முதல் நடக்கும். இரண்டாமிடத்தில் ஒன்று, ஒன்பதாம் இடத்திற்கு உடையவர்களும் இவர்கள் அங்கிசாதிபர்களும் கூடியிருக்க, குரு பார்க்கில் அசுரயோகம். இது இருபத்தொன்றாம் வருடம் முதல் நடக்கும். ஏழாமிடத்திற்கு உடையவனும் மதியும், பதினோராமிடத்தில் இருக்க, இலக்கனேசன் பார்க்கில் கஜயோகம். இது இருபத்து இரண்டாம் வருடம் முதல் நடக்கும்.

நான்கினுக்கே ழிறைமதியும் வேளுறமுற் சரமாய்
நண்ணுதலவ் விரவாகி நண்டுதய மாக
மான்கணிமா லைச்சேரப் பொன்மதிபார்த் திடில்பொன்
மதிக்கறங்கேந் திரத்திவன்சேய்க் கணன்புகர்வந் தணையில்
கோன்கணுக்கெட் டுறராகு பத்துறவக் கோன்முற்
குடிலுறிற்றாய் நவமுறையங் கோயனிசைமான் குடும்பத்
தான்கதுவின் மழைகதையா னரிகந்துக யோகத்
தாமிருபான் மூன்றதனோ டாவதுமைந் தளவே. 241

பத்தாமிடத்திற்கு உடையவனும் மதியும்கூடி, ஏழாம் இடத்தில் இருக்க, இலக்கனம் சரமாக நிசி காலத்து உதயமாகில் மாரியோகம். இது இருபத்து மூன்றாம் வருடம் முதல் நடக்கும், இலக்கனம் கடகமாகப் புதன் கன்னியில் இருக்கக் குரு, மதி பார்க்கில் தெண்டயோகம். இது இருபத்து நான்காம் வருடம் முதல் நடக்கும். மதிக்கு ஒன்பதாம் இடத்தில் அல்லது கேந்திரத்தில் குரு இருக்கப் புதனுக்குப் பதினோராமிடத்தில் சுக்கிரன் இருக்கில் ரிஷபயோகம். இது இருபத்தைந்தாம் வருடம் முதல் நடக்கும். ஒன்பதாம் இடத்தில் இலக்கனேசன் இருக்க, பத்தாம் இடத்தில் இராகு இருக்க, இதற்கு உடையவன் இலக்கனத்தில் இருக்கில் சக்கரயோகம். இது இருபத்தாறாம் வருடம் முதல் நடக்கும். நான்காம் இடத்தில் இலக்கனேசனும் ஒன்பதாம் இடத்தில்

பத்தாமிடத்திற்கு உடையவனும் இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு உடையவனும் இருக்கில் கந்துகயோகம். இது இருபத்தேழாம் வருடம் முதல் நடக்கும்.

ஐந்தினுக்கைந் திறைபார்க்கப் பொன்மதிபார்க் கவனும்
மக்கமுறிற் சுக்கிரனோ டறக்கோளிற் கரசன்
வந்துவந் தணன்சேரின் போக்கிறையின் மேவ
மறையவனுக் கணிபுகருக் கறமிருட்கோன் மருவி
இந்திரவி சனிவேளைந் தணனுறவக் கவிபொன்
எட்டுறமா லலவனுறச் சரமுறையம் எய்தில்
சுந்தரருள் ளறம்வேள்பத் துறிந்கோல்சந் திரிகார்
சுனைசிலையோ கந்தினப்போர்த் தொகைமுழுதும் உளவே.

இரண்டாமிடத்தில் குரு, மதி, சுக்கிரன் கூடியிருக்க, ஒன்பதாமிடத்திற்கு உடையவன் பார்க்கில் சரயோகம். ஒன்பதாமிடத்திற்கு உடையவன் இருந்த இராசிநாதன் சுக்கிரனைக்கூட, ஐந்தாமிடத்தில் சேய் இருக்க சந்திரிகா யோகம். பத்தாமிடத்திற்கு உடையவன் நான்காமிடத்தில் இருக்கக் குருவுக்கு மூன்றாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இவனுக்கு ஒன்பதாமிடத்தில் மதி இருக்கில் மேக யோகம். ஏழாமிடத்தில் மதி, ஐந்தாம் இடத்தில் இரவி, பதினோராம் இடத்தில் சனி இருக்கக் குரு, சுக்கிரன் எட்டாமிடத்தில் இருக்கக் கடகத்தில் புதன் இருக்க, இலக்கனம் சரமாகில் வாவி யோகம். ஐந்து, ஏழு, ஒன்பது, பத்தாம் இடங்களில் சுபர் இருக்கில் பூதரயோகம். இவை எல்லாம் இருபத்து ஏழாம் வருடம் முதல் நடக்கும்.

உள்ளிறைஒன் பானிறையங் கிசத்துடுக்கோள் கூடின்
ஒன்றிறை திறைவனங்கினத் துறவிவனங் கிசமும்
கள்ளறைவிட் டொன்றுறையக் குருபார்க்கில் குருவில்
கருத்திறையுற் றிடப்பவக்கோள் கணிற்சியைக் கதுவில்
பிள்ளைமதி லாபனவம் பவம்குருபெற் றிடில்பாம்
பிசையிலண னசிதன்விழிப் பெய்துயறில் பிறையுள்
விள்ளலற னுளனுபரி னூல்வில்பட வுந்தி
விதண்டமலர் யோகமுடு மேலிருமூன் றெனுமே. 243

ஐந்தாமிடத்திற்கு உடையவன் ஒன்பதாம் இடத்திற்கு உடையவனுடைய அங்கிசத்தில் மதியுடன் கூடி இருக்கில் கந்துயோகம். இது இருபத்து எட்டாம் வருடம் முதல் நடக்கும். இலக்கனேசன், பத்தாமிடத்திற்கு உடைய வனுடைய அங்கிசத்தில் இருக்க, அவன் அங்கிசம் இலக்கனத்தில் இருக்கப் பாவ சகிதம் இல்லாமல் குரு பார்க்கில் சாபயோகம். இது இருபத்து ஒன்பதாம் வருடம் முதல் நடக்கும். ஒன்பதாமிடத்தில் ஐந்திற்கு உடையவன் இருக்க, பதினோராமிடத்திற்கு உடையவன் மதியுடன் கூடி இரண்டில் இருக்கில் பட்வு யோகம். இது முப்பதாம் வருடம் முதல் நடக்கும். பதினோராமிடத்திற்கு உடையவன் மதியுடன் கூடி ஒன்பதாமிடத்தில் இருக்க, பதினொன்றில் குரு இருக்கில் நாபியோகம். இது முப்பத்து ஒன்றாம் வருடம் முதல் நடக்கும். பத்தாமிடத்தில் இராகு இருக்க, சனி துலாத்தில் இருந்து பதினோராமிடத்தைப் பார்க்கில் விதண்டயோகம். இது முப்பத்து இரண்டாம் வருடம் முதல் நடக்கும். ஐந்தாமிடத்தில் மதி, இரண்டாமிடத்தில் ஒன்பதிற்கு உடையவன் இருக்க, ஐந்தாமிடத்திற்கு உடையவன் உச்சமாகில் புட்பயோகம். இது. முப்பத்து மூன்றாம் வருடம் முதல் நடக்கும்.

மூன்றினுக்கே ழிறைவனகி ஷனண்ணத்திரேக் காண
  முறில்பவக்கோள் திரேக்காண முளரிமன்சேய் ராகு
தோன்றுகல்பார்த் திடலாகில் குருப்புகரின் மாறில்
  சொல்லிசையொன் றாயமிவை சுதன்கணவம் பவனே
ஊன்றிடில்பொன் னைந்திலிவன் அறத்தசிதன் இசையில்
  உரின்மிதிக்கைந் தினனாயத் திசைக்கேந்திரத் துறல்பொன்
சான்றவரேல் சுபமசுப மறைமன்முடி சரம்போல்
  தரல்யோகம் முப்பத்திமூன்றதற்காறேற் றமுமே. 244

ஒன்பதாமிடத்திற்கு உடையவனுடைய அங்கிசாதிபதி இலக்கனாதிபதியின் திரேக்காணத்தில் இருக்கில் சுபயோகம். இது முப்பத்து நான்காம் வருடம் முதல் நடக்கும்.

பதினோராமிடத்திற்கு உடையவனுடைய திரேக்காணத்தில் இரவி, சேய், இராகு இருப்பது பார்ப்பதாகில் அசுபயோகம். இது முப்பத்து ஐந்தாம் வருடம் முதல் நடக்கும். குரு, சுக்கிரன் கிரகம் மாறில் வேதாந்தயோகம். இது முப்பத்து ஆறாம் வருடம் முதல் நடக்கும். இரண்டாமிடத்தில், ஐந்தாம் இடத்திற்குடையவன், பத்தாமிடத்தில் இரண்டாமிடத்திற்கு உடையவன், ஒன்றாமிடத்தில் ஒன்பதாமிடத்திற்கு உடையவன், பதினோராம் இடத்தில் இதற்கு உடையவன் இருக்கில் இராசயோகம். இது முப்பத்து ஏழாம் வருடம் முதல் நடக்கும். ஐந்தாமிடத்தில் குரு, இதற்கு உடையன் ஒன்பதாம் இடத்தில் இருக்க, பத்தாமிடத்தில் சனி இருக்கில் கீர்டயோகம். இது முப்பத்து எட்டாம் வருடம் முதல் நடக்கும். மதிக்கு ஐந்தாம் இடத்தில் இரவி, பதினோராம் இடத்திற்கு கேந்திரத்தில் குரு, பத்தாமிடத்திற்குக் கேந்திரத்தில் சுபர் இருக்கில் சுவாசயோகம். இது முப்பத்து ஒன்பதாம் வருடம் முதல் நடக்கும்.

ஆறதற்கா னனன்விதுவுக் கறத்தறத்தில் புகர்வந்
    தணையிலற னங்சனிடத் தரசனுச்ச னாகிப்
பூறுமவன் னுடன்கூடல் பொன்னுளத்தக் கோமான்
    புகுதலறன் திரேகாணத் தெனில்பிருவக் குருவும்
ஏறதிபன் னில்வேள்சந் திரன்பவஞ்சே யாக
    இறைபெலக்கில் லாபமுள ரின்மாற விலனிந்
துறகலக் கூடிலிலை நளன்சுகமிப் பெண்கோன்
    யோகமும்நாற் பதுமுதலைந் தாகவிப்பேர்க் குளதே. 245

ஏழாமிடத்திற்கு உடையவன் மதிக்கு ஒன்பதில் இருக்க, இலக்கனத்திற்கு ஒன்பதில் சுக்கிரன் இருக்கில் பத்திரயோகம். இது நாற்பதாம் வருடம் முதல் நடக்கும். ஒன்பதாம் இடத்திற்கு உடையவனது அங்கிசாதிபதி இருக்க, இராசிநாதன் உச்சனாகி இலக்கனேசனுடன் கூடில் நளயோகம். இது நாற்பத்து ஒன்றாம் வருடம் முதல் நடக்கும். ஐந்தாமிடத்தில் குரு இருக்க, இதற்கு உடையவன் ஆறுக்கு

உடையவனுடைய திரேக்காண இராசியில் இருக்கில் போகயோகம். இது நாற்பத்து இரண்டாம் வருடம் முதல் நடக்கும். இரண்டாமிடத்தில் குரு, நான்காமிடத்தில் சுக்கிரன் ஏழாமிடத்தில் சந்திரன், பதினோராமிடத்தில் செவ்வாய் இருக்க, இலக்கனேசன் பெலக்கில் காமினியோகம். இது நாற்பத்துமூன்றாவது வருடம் முதல் நடக்கும். பதினொன்று, ஐந்திற்குடையவர்கள் கிரகம் மாற, நான்காமிடத்திற்கு உடையவனும் சந்திரனும் பாவசகிதம் இல்லாமல் கூடில் இந்திரயோகம். இது நாற்பத்து நான்காம் வருடம் முதல் நடக்கும்.

விப்பிரனொன் பானாகிப் பார்க்கவெட்டீ றிறைவர்
வியத்தினில்கூ டிற்பூர்வ இதுவுறுமங் கிசகன்
வைப்புதயத் தவன்பார்க்கத் திவியுறில்பொன் உதய
வர்க்கோத்த மம்புகர்பார்த் திடவறக்கோள் வலுக்கில்
லுப்பதிபன் கட்குருவை உறவுபையன் பவத்தில்
உறஇவனொன் பானுறிலீ துளனணனங் கிசகன்
இப்பதிமிக் காய்ச்சேரின் மான்புள்பசுத் தார்நா
விற்பெண்ணைந்து யோகமையொன் பதமுதன்மேல் எனுமே. 246

ஒன்பதாமிடத்திற்கு உடையவன் குருவாகிப் பார்க்க, எட்டு, பன்னிரண்டாம் இடத்திற்கு உடையவர்கள் கூடி பன்னிரண்டில் இருக்கில் **மிருகயோகம்**. இது நாற்பத்து ஐந்தாம் வருடம் முதல் நடக்கும். பூர்வமதியின் அங்கிசாதிபன் இலக்கனத்தில் இருக்க, இலக்கனேசன் பார்க்க சனனமாகில் கருடயோகம். இது நாற்பத்து ஆறாம் வருடம் முதல் நடக்கும். குரு இலக்கனத்தில் இருக்க, இலக்கனம் வர்க்கோத்தமாக, ஒன்பதாமிடத்திற்கு உடையவன் பெலக்க, சுக்கிரன் பார்க்கில் பசுயோகம். இது நாற்பத்து ஏழாம் வருடம் முதல் நடக்கும். மதி, குரு கூடி இரண்டாமிடத்தில் இருக்க, இதற்குடையவன் பதினோராம் இடத்தில் இருக்க, இதற்குடையவன் ஒன்பதாம் இடத்தில் இருக்கில் தாமயோகம். இது நாற்பத்து எட்டாம் வருடம் முதல் நடக்கும். பதினோராம் இடத்திற்கு உடையவனது

அங்கிசாதிபதி உச்சனாகி ஒன்பதாமிடத்திற்கு உடையவனைக் கூடி பதினோரமிடத்தில் இருக்கில் சரசுபதி யோகம். இது நாற்பத்து ஒன்பதாம் வருடம் முதல் நடக்கும்.

மேற்பதிமன் இராகுசனி கூடஅதில் மேவில்
வேளுதயர் தம்மிலுற மெய்யிறைமிக் காகி
ஊற்புரளா கவன்பவன்பா கவனறத்தில் சேர
நோக்கிறைபார்த் திடில்வேண்ம னோன்பிறையின் மாறில்
காற்பதிக்கெட் டறனுறப்பத் திறைநவமுற் றிடில்கால்
கவியுறவிப் பதியுயரக் கைத்துறில்யோ கப்பேர்
சூற்பகடா திபன்கலைபாம் புத்திவிண்பா தாளம்
தோன்றுதலைம் பான்முதநேர் சொல்வதுமா றதற்கே. 247

பத்தாமிடத்திற்கு உடையவன் இராகு, சனியுடன் கூடி பத்தாமிடத்தில் இருக்கில் சண்டயோகம். இது ஐம்பதாம் வருடம் முதல் நடக்கும். இரண்டு, ஏழாமிடத்திற்கு உடைய வர்கள் சொட்சோத்திரத்தில் இருக்க, இலக்கனத்தில் உச்சனாகில் இரலையோகம். இது ஐம்பத்து ஒன்றாம் வருடம் முதல் நடக்கும். குருவும், பதினோராமிடத்திற்கு உடைய வனும், சுக்கிரனும் கூடி ஒன்பதாமிடத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு உடையவன் பார்க்கில் சேடயோகம். இது ஐம்பத்து இரண்டாம் வருடம் முதல் நடக்கும். ஏழு, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறில் சமுத்திர யோகம். இது ஐம்பத்து மூன்றாம் வருடம் முதல் நடக்கும். ஒன்பதாமிடத்திற்கு உடையவன் ஏழாமிடத்தில் இருக்க, பத்தாமிடத்திற்கு உடையவன் ஒன்பதாமிடத்தில் இருக்கில் கனயோகம். இது ஐம்பத்து நான்காம் வருடம் முதல் நடக்கும். பன்னிரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, இதற்கு உடையவன் உச்சனாகக் குருவைக் கூடில் பாதாளயோகம். இது ஐம்பத்து ஐந்தாம் வருடம் முதல் நடக்கும்.

ஆறினுக்கீ றனையகியங் கிசற்கினன்சேய் சேரில்
அசமறஞ்சொல் லினர்மாறில் தனுவிறைபு ரத்தும்
கூறலில்சோ மன்கருமக் குருவிறையைக் கூடில்
குருக்கோன்பொன் பார்க்கமறை தற்குடையோர் கிடையில்

ஏறில்விற்கோள் கட்படக்கா லாபனுறில் ஏழெட்
டிவைமுதலைம் பொறியோகம் அறுபதள வெனுமால்
பேறிதனுக் கெவ்வளவாம் எனில்செனனம் முதலாம்
பெறுவதும் கேட்பதுமத் துதயவன்பெற் றவனே. 248

இராகுவினுடைய அங்கிசாதிபதி ஐந்து, ஒன்பதாம் இடங்களில் இரவி, சேய் கூடில் காத்திரயோகம். இது ஐம்பத்து ஆறாம் வருடம் முதல் நடக்கும். இரண்டு, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறில் வசன யோகம். இது ஐம்பத்து ஏழாம் வருடம் முதல் நடக்கும். ஒன்றாமிடத்தில் ஏழாமிடத்திற்கு உடையவன், இரண்டாம் இடத்தில் மதி, பத்தாமிடத்தில் குருவும் இலக்கனேசனும் கூடில் அட்சயோகம். இது ஐம்பத்து எட்டாம் வருடம் முதல் நடக்கும். ஒன்பதாமிடத்திற்கு உடையவன் ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களுக்கு உடைவர்களுக்கு இடையில் இருக்க, குரு பார்க்கில் நாசிகாயோகம். இது ஐம்பத்து ஒன்பதாம் வருடம் முதல் நடக்கும். பதினோராமிடத்திற்கு உடையவன் பன்னிரண்டாமிடத்தில் இருக்க, குரு பார்க்கில் கர்னயோகம். இது அறுபதாம் வருடம் முதல் நடக்கும். இந்த யோகங்கள் முன்சொன்ன வருடத்திற்குமேல் எவ்வளவு காலம் நடக்கும் என்பது அறியவேண்டில் செனனம் முதல் நேர் சொல்லுவோம், கேட்பாயாக அகத்தியமா முனியே!

உதயமுதல் சதுர்யோகம் ஆயுவிரு முன்றெட்
ஒன்பதாம் போக்கணிபோக் குருவிலிமூன் றடிமற்
றகமுளது வைந்தணிமாய் வல்லதிரண் டணியெட்
டதுமூன்றவ் வாய்வுறமுள் ளவமறமா யுவுச்சேய்
மதனிருமூன் றற்கலையுண் மாரனமு முப்பூண்
மற்றவைரண் டெட்டிரெட் டணியுளணி யறம்வம்
சுதனில்பதி னாலேழொன் பதுவலெட்டிர் மூன்றெண்
சோடசமுன் னிதுவீறாய் ஆறணியுட் சொலுமே.

முன்சொன்ன வருடங்களுக்குமேல் யோகம் நிற்கும் காலம் அறியவேண்டில் செனனம் முதல் நேர் நாலு யோகமும் ஆயுர்த்தாயம் வரைக்கும் நடக்கும். இதன்மேல் ஐந்தாம்

*வருட யோகம் முதல் நேர் வருடம் 3, 3, 8, 9. 9, 10, 3, 10, 7, 3, 12, 12, 8, 5, 5, 5, 3, 8 ஆயுள் வரை; 3, 3, 8, 8, 3 ஆயுள் வரை; 9, 5, 8, 9 ஆயுள் வரை, 5, 7, 3, 3, 16, 5, 7, 9, 3, 3, 3, 3, 3. 3, 8, 8 , 12, 8, 3, 5, 9, 3, 5, 4, 14, 7, 9, 3, 8, 3, 3, 8, 15, 15, 12, 4, 6, 3, 5, 2.*

சொல்லியயோ கத்தொகையோ ரெழுபதுமேல் ஐந்தும்
சொற்றிடினோர் அறுபதல்லால் தோன்றொருபத் தைந்து
மல்லிறைவன் கலைமுனநாட் பெயர்க்கதிகத் தொகைப்பேர்
அதற்கதற்காம் இத்தொகைசம் வச்சரமீ தலது
வல்லம்மிக் குளயோக மின்னமுஞ்சற் றுளதா
மலையவனே எனுமூனம்பின் ஆகமென வாங்கும்
வில்லவனுக் கொருகுருவே என்றடிதாழ்ந் ததுவும்
விளம்புகவென் றானயில்வே லவனும்விளம் பினனே. 250

*முன்சொன்ன வருடத்தொகை வர்க்கம் எழுபத்து ஐந்தில் செனனம் முதல் அறுபது வருடம்போக நின்ற தொகை பதினைந்தும் பதினேழாம் வருடத்தில் கண்ட அதிகயோகத் தொகைக்கும் இருபத்து ஏழு வருடத்தில் கண்ட அதிகயோகத் தொகைக்குமாகச் செனனம் முதல் நேர்வைத்து நடத்தும் போது இத்தொகை சரிவர நடக்கும். இதன்மேல் சிறிது யோகம் பிரபலமாக இருப்பதும் உண்டு. பொதியாசலனே என்று சொல்லா முன்னம் பினாகபாணிக்கும் குருவே அந்த யோக மகத்துவம் திருவுளம் பற்றவேண்டும் என்று தெண்டம் பண்ணா முன்னம் திருவாய் மலர்ந்தருளினவன் கூர்மை தங்கிய வேலாயுதன்.*

இன்னமதியற்ற ழுகன்முத லோர்கேந்திர கோன் சொட்சேத்
திரமுயர்தல் அதிபெலமாய் இயல்பினர்ச்சேர்ந் திசைதல்
அனலெனில்பே ருசகமிதற் காயுவெண்ணொன் பதுமாம்
அழகுபுகழ்ந் திடதேக காந்தியதி சிவப்புத்
தனம்வினைமா சுசெய்யச மத்துளமெய் யுறுப்பத்
தனையும்வனப் பபிமானந் தற்தொழில்வஞ் சனைசெய்
மனமனிக பதிதாள்கை மகத்துவரே கையதாய்
வனவரைசஞ் சாரவிருப் பதிகமனோ ரதமே. 251

இரவி, மதி நீங்கலாகக் குசாதி பஞ்சக் கிரகங்களில் செவ்வாய் ஆட்சி, உச்சம், கேந்திர கோணமாய் அதிபெலமாகி சுபருடன் கூடிச் சுபவர்க்கம் ஏறில் பஞ்சமாயோகத்தில் ருசக யோகம். இதன் பலன் வயது எழுபத்து இரண்டு. அழகு கீர்த்தி, திடசரீரம், தேககாந்தி, அதிசிவப்பு, தனம், வினையம், இராசாங்கம், சமத்து, சரீர உறுப்பெல்லாம் அழகு அபிமானம், சுபதொழில், வஞ்சனையாகிய மனம், சேனாபதி கரசரணங்களில் உத்தமரேகை, வனவரை சஞ்சாரப் பிரியன் மனோரதம்.

இரதபதி முதனேர்யோ கப்பெயர்த் திரமங்
　　கிசமாள விசசமசி தன்னீறாம் இவர்கட்
குரைதருகா ரகப்பெயரில் சேய்க்குரைத்த இயல்போல்
　　உத்தமமிக் காகவெடுத்து ரைப்பதற் குளதாய்
வரும்வயதென் பதுஇதனுக் கதிகமிரண் டிதனில்
　　வாங்குதல் ராரொருப திதிவுமுன்போல் வகுத்துத்
தரைமிசைக்குச் சாதிபஞ்ச மாயோகப் பெயராய்ச்
　　சாற்றுவரீ தன்றியும்கேள் சாலுதயத் தவனே.　　252

**புதன் முதல் நேர்யோகப் பெயர் அறியும்படி :** முன்சொன்ன செவ்வாய்க்குச் சொன்னபடி புதன் உச்ச சொட்சேத்திர கேந்திர கோணத்தில் அதிபெலமாகச் சுபவர்க்கம் ஏறி இருக்கில், பத்திரயோகம். குருவாகில் அங்கிசயோகம். சுக்கிரனாகில் மாளவியோகம். சனியாகில் சசயோகம். இந்த யோகங்களுக்கு எல்லாம் பலன் சொல்லவேண்டில், செவ்வாய்க்குச் சொன்ன பலன்போல் அவரவர் காரகத்தை வைத்துச் சுபபலாதிகமாகப் பலன் சொல்லுக, பத்திர யோகத்திற்கு வயது எண்பது. அங்கிச யோகத்திற்கு வயது எண்பத்து இரண்டு. மாளவி யோகத்திற்கு வயது எழுபது. சசயோகத்திற்கு வயது எழுபத்து இரண்டு. இதன்மேல் சிறிது யோகப்பலன் கேட்பாயாகக் கும்போதயனாகிய அகத்தியமா முனியே !

உதயவனொன் றுறத்தாதை திரமாய்ச்சேய் மதியும்
உறில்சேயாங் சிசன்குருபார்த் திடக்கேந்திரத் துறையில்
சிதன்மதிபொன் சனிநலம்வேள் சிரமனையில் சுசமாய்ச்
சேரிலற முளர்கூடச் செடக்கோன்கேந் திரிக்கில்
பிதிரனையர் சேரஇறை பெலக்கிலறக் கோள்கோன்
பெற்றிடவின் மாறிடன்மெய் பெண்டிறைவ ராகில்
வதைமனுச்ச மில்லிசைமான் மருவறவன் பெலக்கின்
மன்யோக கடகமென வழுத்துவதிப் புவியே. 253

இலக்கனேசன் ஒன்றிலிருக்க, ஒன்பதாமிடம் திரமாகிச் சேய், மதி கூடிலும், சேய் அங்கிசாதிபதி கேந்திரத்திலிருக்க, குரு பார்க்கிலும், ஒன்தாமிடத்தில் சுக்கிரன், ஏழாமிடத்தில் மதி, ஒன்றில் குரு நான்மாமிடத்தில் சனியுமாக சுபவர்க்கம் ஏறிலும், ஐந்து, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் கூட இலக்கனேசன் கேந்திரிக்கிலும், நான்கு, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் கூட, இலக்கனேசன் பெலக்கிலும், ஒன்பதாம் இடத்திற்கு உடையன் ஐந்து, ஒன்பதாம் இடத்தில் இருக்க, ஒன்று, ஏழாமிடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறிலும், எட்டாமிடத்திற்கு உடையவன் உச்சமாக; நான்கு, பத்தாம் இடத்தில் புதன் இருக்க, ஒன்பதாமிடத்திற்கு உடையவன் பெலக்கிலும் கடயோகம் என்ப. இதன் பலன் ராசயோகம்.

இப்புரம னங்கிசகன் இருந்தவில்கோள் உச்சத்
தெய்துதல்கேந் திரமாக வேட்கிறைபார்த் திடின்மால்
அப்பவுமன் ஆட்சியிலுச் சாங்கிசம்பொன் விழிப்ப
தாகிலுச்சாங் கிசநீசத் தவனுறவப் பதிமான்
வைப்புதய னும்பெலக்கில் இவன்பெலமாய் நீசன்
மருவியஅங் கிசம்இவனும் உச்சமுறில் மனக்கோன்
தப்பிலவர் பார்க்கஅவன் அங்கிசமன் உச்சத்
தாகின்மிரு தங்கமெனச் சாற்றுவதிப் பெயரே. 254

இலக்கனேசனுடைய அங்கிசாதிபதி இருந்த இராசிநாதன் கேந்திர, உச்சத்தில் இருக்க, ஏழாமிடத்திற்கு

உடையவன் பார்க்கிலும்; சேய், புதன் இவர்கள் ஆட்சியில் இருந்து, உச்ச அங்கிசம் ஏற, குரு பார்க்கிலும்; ஒரு கிரகம் நீசக் கிரகமாக அதில் ஒருவன் உச்சாங்கிசம் ஏற, அதற்கு உடையவனும் இலக்கனேசனும் பெலக்கிலும்; ஒரு கிரகம் நீசமாகி உச்சாங்கிசம் ஏற, இதற்கு உடையவன் உச்சமாகி இலக்கனேசன் பெலக்கிலும்; ஐந்தாமிடத்திற்கு உடைய வனுடைய அங்கிசாதிபதி உச்சமாகச் சுபக்கிரகம் பார்க்கிலும் மிருதங்கயோகம் என்பது.

**சாற்கிறைசேய் இளர்வதைநோய் தனையுற உச்சத்**
தாதல்வெயில் அங்கிசங்கள் உகிலிரச தம்போய்
நாற்கிருநான் கிறைவனுச்ச மாகஇவர் சேர
நாயகன்கேந் திருக்கின்மிரு தங்கமிந்நா மமுமே
ழாற்குணம னோகரம்பாக் கியமரசர் வாழ்வு
அனேகசன ரெட்டகமீ தாவதிரே ழாண்டின்
மேற்குருவாம் வித்தைதனம் வேந்தர்வெகு மானம்
விடமார்க்கம் இவைநேராய் விளம்புவகைக் கெனுமே. 255

எட்டாமிடத்தில் சனி, ஆறாமிடத்தில் சேய், ஐந்தாம் இடத்தில் இரவி இருக்க, இவன் அங்கிசாதிபதி உச்சனாகிலும் பதினோராம் இடத்திற்கு உடையவன் உச்சனாகி சுக்கிரனுடனே கூட இலக்கனேசன் கேந்திரிக்கிலும் மிருதங்க யோகம் என்ப. முற்கவிதையில் சொன்ன மிருதங்கயோகம் ஐந்தும் இக்கவியில் சொன்ன மிருதங்கயோகம் இரண்டுமாக மிருதங்கயோகம் ஏழுக்கும் பலன் அறியவேண்டில் முன்பு சொன்ன யோகம் ஐந்திற்கும் பலன் நேர், குணதிகன், சதா சந்தோஷி, பாக்கியவான், இராசசமானன், அனேக சன இரட்சகன் என்ப. பின் சொன்ன யோகம் இரண்டிற்கும் பலன் அசாரிய, அபிஷேகம் உடையன், வித்தை, தனம், இராச வெகுமானம், விடமார்க்கம் இவை உடையவன் என்ப. இப்பலன் பதினான்கு வயதிற்குமேல் நடக்கும்.

கைக்கிசைக்கோள் ஆட்சியுச்ச கேந்திரக்கோள் இருக்கில்
கர்மதர்மம் அதில்சேரக் கவிபெலக்கில் கவியும்
மெய்க்கறனும் கேந்திரகோண் வேவிவிண்ணோர் வர்க்க
மிக்காகில் அணன்றனைய ரின்மாறில் வெயிலும்

மைக்கிறையும் தேவவர்க்கத் ததிகமுற முசையாய்
மன்பெலக்கின் நல்லவர்கேந் திரத்துறமற் றிடத்தில்
பொய்க்கதிபர் உரில்சேய்தொட் டைவருச்சாங் கிசத்தில்
பொருந்தவதற் குளர்பெலக்கில் பூமகட்பேர்க் குளதே. 256

இலக்கனேசன் ஆட்சி, உச்ச, கேந்திரகோணில் இருக்கிலும்; ஒன்பது, பத்தாமிடத்திற்கு உடையவர்கள் சொட்சேத்திரம் இருக்கச் சுக்கிரன் பெலக்கிலும்; சுக்கிரனும் ஒன்பதாமிடத்திற்கு உடையவனும் கேந்திரகோணில் இருந்து தேவதாங்கிசத்தில் அதிகவர்க்கம் ஏறிலும்; பதினொன்று, ஐந்தாமிடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறிலும்; இரவி, சேய் தேவதாங்கிசத்தில் அதிக வர்க்கம் ஏற; நான்கு, பத்தாம் இடத்திற்கு உடையவர்கள் பெலக்கிலும்; சுபர் கேந்திரமும் பாவர் உபசெயமுமாக இருக்கிலும்; ருசாதி சனி வரை ஐவரும் உச்சாங்கிசம் ஏற அதர்குடையவர்கள் பெலக்கிலும் இலட்சுமியோகம்.

மகற்கீறில் சிதனுதயம் மறையவன்சேய் இசையின்
மருவஇறை பெலக்கிலணி மற்றொருவன் உயரப்
புகர்த்தேவ புறமேறச் சுபரறத்தில் பொருந்தில்
பொன்மதிபார்க் கவனும்பொன் னுரங்கிசம்புக் கிடில்பொன்
தகர்க்கதி பனைக்கூடி ஒருவலவன் சேல்வில்
சடத்துறைய அதற்கதிபன் தாய்தனையர்ச் சாரில்
சகப்பதியில் கேந்திரத்தின் மூவருறப் பதனம்
தோன்றாமல் நால்வருறில் திருப்பேர்சொற் றிடலே !

நான்காமிடத்தில் சுக்கிரன், ஒன்றில் குரு, பத்தாம் இடத்தில் சேய் இருக்க, இலக்கனேசன் பெலக்கிலும்; மூன்றாமிடத்தில் ஒரு கிரகம் உச்சமாகச் சுக்கிரன் தேவலோக அங்கிசம் ஏறச் சுபர் ஒன்பதில் இருக்கினும்; குரு, மதி, சுக்கிரன் தேவலோகாங்கிசம் ஏறிலும்; குரு, சேய் கூடி மேடம், கடகம், மீனம், தனுசு இலக்கனமாகி இருக்க, இதற்கு உடையவன் நான்கு, ஐந்தாமிடத்தில் இருக்கினும்; நான்கில் அல்லது கேந்திரத்தில் இரண்டுபேர் இருக்க, மற்ற நான்கு பேரும் பதனம் இல்லாமல் இருக்கினும் இலட்சுமியோகம்.

திருப்பெயர்யோ கப்பலமன் னவர்போலும் பாக்யம்
செயம்வீரம் வித்தைதனம் சனங்களிடத் திதய
விருப்பமபி மானமின பந்துசனப் பிரயம்
வெகுதார புத்திரராம் மெய்யிறைகேந் திரமாய்க்
குருப்புகனீ றாயமிதில் கூடிலுள்வேண் மால்பொன்
குருகுவையொன் றுச்சமுறில் கோன்கடனுக் குடையோன்
இருப்பதெதிர் கேந்திரமாய் இறைபெலக்கில் உருக்கோள்
ஈழமுதல் சாசலமாய் எய்திடில்சங் கெனுமே. 258

இலட்சும்யோகப் பலன் : இராச சமான பாக்கியம், காரியம் செயம், பராக்கிரயன், வித்தை, தனம், சனங்களிடத்தில் மனோதயவு, அபிமானம், இனசனப் பிரியம், வெகு களத்திர புத்திரன் என்ப. இலக்கனேசன் கேந்தரிக்கக் குரு, புதன்கூடி பதினொன்று, பன்னிரண்டாம் இடங்களில் இருக்கினும்; ஐந்து, ஏழாமிடத்தில் புதன் இருக்க, ஒன்பதாமிடத்தில் குரு இருக்க, இந்த மூன்றாம் இடத்தில் தானம் உச்சம் ஏறிலும்; ஐந்து, ஒன்பதாமிடத்திற்கு உடையவர்கள் அன்னியோன்னிய கேந்திரமாக, இலக்கனேசன் பெலக்கிலும்; குரு, மதி கூடிச் சர சல இலக்கனத்தில் இருக்கிலும் சங்கயோகம்.

சங்கரன்பா லக்கணைக்கட் கோள்விழிக்க விடக்கண்
அனுவிறையும் நேர்கேந்திர தழவிலணிக் கோன்றாய்த்
துங்கனுமே விடிலிசையொன் றினர்தனமா யறக்கோன்
துர்ப்பெலமில் லாதிருக்கில் வளர்மதிநாட் டொழில்கோள்
அங்கமுற நிசியாக அம்புலிக்கில் லாகி
அனைவரும்கேந் திரகோணத் தாகிலும்சங் கதற்கா
மங்களசு பாக்கியம்வா கனந்தனம்வி வேகம்
மானமன றுறவுகொடை மனதுரைநல் லவரே. 259

செவ்வாயை இரண்டாமிடத்திற்கு உடையவன் பார்க்க, குரு, மதிகூடி ஏழாமிடத்திற்கு ஏழாக இருக்கிலும், மூன்றாம் இடத்திற்கு உடையவர், உச்ச கிரகத்துடனே கூடி, நான்காம் இடத்தில் இருக்கிலும்; ஒன்று, பத்தாம் இடத்திற்கு உடையவர்கள், இரண்டாம் இடத்தில் இருக்க, ஒன்பதாம்

இடத்திற்கு உடையவன் பெலக்கிலும்; பூர்வபட்சத்து நிசி காலத்தில் பத்தாம் இடத்திற்குடையவன் ஒன்றில் இருக்க, நான்காமிடத்தில் சந்திரன் இருக்கிலும், யாவரும் கேந்திர கோணத்தில் இருக்கினும் சங்கயோகம் என்ப. இதன் பலன் சுபசோபன பாக்கியம், வாகனம், தனம், விவேகம், அபிமானம், அரசர் உறவு, விதரணம், நல்மனது, நல்வாக்கு.

நல்லவர்மற் றவர்தனம்பூ ணவமிசைவர்த் தனைமெய்
  நண்ணிலிவர் மற்றதெனின் நலந்தீது நயக்கில்
வல்லணன்பொன் புகர்துலையின் மருவவிறை பெலக்கன்
  மாசுளர்கேந் திரகோண மாய்ச்சுபர்பார்த் திடின்மன்
கல்லியமும் திரசரமாய்க் கலந்துசுப மாகக்
  கதுவிலவை கூர்மமிவைக் கரசரில்வாழ் கருமம்
சொல்லியல்பு வெகுமானம் சுகஞ்சனக்கூட் டரவு
  துற்கிறாழில் உள்ளமைதி கொடைசுபுத்திரசோ பனமே. 260

சுபாசுபர் ஒன்று, இரண்டு, மூன்று, ஒன்பது, பத்து, பதினோரம் இடங்களில் இருக்கினும் அல்லது நான்கு, ஐந்து, ஆறு ஏழு, எட்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் இருக்கிலும், இந்தத் தனங்களில் நேர் கலக்கினும்; மூன்று, பதினொன்றில் குரு இருக்கத் துலாத்தில் சுக்கிரன் இருக்க, இலக்கனேசன் பெலக்கிலும், பாவர் கேந்திர கோணில் இருக்கச் சுபர் பார்க்கிலும், இலக்கனமும் இலக்கனேசனும் திர, சரமாய்க் கலந்து சுபவர்க்கம் ஏறிலும் கூர்மயோகம் என்ப. இதன் பலன் : இராசசமான பாக்கியம், நல்வாக்கு, வெகுமானம், சுகம், சனக் கூட்டுறவு, துர்த்தொழில், அடக்கம், விதரணம், சுபத்திர சோபனம்.

புத்தியில்பத் திறையுறமால் கேந்திரத்தக் கமன்கண்
  புல்லில்வர்க் கோத்தமமு தயம்பொருந்தவிறை சுபமாய்ச்
சுத்தினுக்கா நிறைபார்க்கத் தோன்றிலரி வைமான்
  தோன்றமது வைந்தாகில் சுபரனைமன் பெலக்கில்
அத்தினம னிற்கோண்மா லவற்கணன்கோண் பொன்சேய்
  ஆகிலொன்றூழ் குருபார்க்க வூணருகன் அணையில்
இத்தரும னங்கிசகன் கேந்திரமன் பெலக்கில்
  இந்துபுதன் பொன்சரமாய் ஏறினும்சா ரதமே. 261

ஐந்தாமிடத்தில் பத்தாமிடத்திற்கு உடையவன் இருக்க, புதன் கேந்திரிக்க; இரண்டாமிடத்திற்கு உடையவன் பார்க்கிலும், இலக்கனம் வர்க்கோத்தமமாக, இலக்கனேசன் சுபவர்க்கம் ஏற, பதினோராமிடத்திற்கு உடையவன் பார்க்கிலும், கன்னி ஐந்தாமிடமாகிப் புதன் இருக்கிலும், சுபக்கிரகங்களும் நான்காமிடத்திற்கு உடையவனும் அதிபெலமாகிலும், மதி இருந்த இராசிக்குத் திரிகோணத்தில் புதன் இருக்க, இவனுக்குப் பதினோராமிடத் திரிகோணத்தில் குரு இருக்கிலும், இரண்டாமிடத்தில் புதன் இருக்க, ஒன்றில் இரவி இருக்கக் குரு பார்க்கிலும், புதன் அங்கிசாதிபதி கேந்திரிக்க, இலக்கனேசன் பெலக்கிலும்; குரு, மதி, புதன் சர ராசியில் இருக்கிலும் சாரதயோகம்.

சாரதிகேந் திரமசுப உபசெயம்பொன் உதயத்
 தாகிலணி மண்பெலக்கத் தனுவிடபத் ததிபர்
பாரதிநா வலன்விழிக்க மனைமாறி நீசம்
 பற்றியமால் அங்கிசன்பொன் வர்க்கமுறப் பார்ப்பான்
போரதிபன் பார்க்கவுறில் சாரதமா மிதற்கன்
 புடைமைவிர தந்தவசு புத்திரபுர வலர்வாழ்
வேரதிக்கம் வெகுமானம் இனசனரெட் சகமீ
 விரக்கமபி மானநர வாகனமின் பமுமே. 262

புதன் கேந்திரமாகப் பாவர் உபசெயம் இருக்கக் குரு ஒன்றில் இருக்கிலும், மூன்றாம் இடத்திற்கு உடையவன் பெலக்கக் குரு, சுக்கிரன் கிரகம் மாறப் புதன் பார்க்கிலும், புதன் நீசம் ஏற, இவன் அங்கிசன் குரு வர்க்கம் ஏற, சேய், குரு பார்க்கிலும் சாரதயோகம் என்ப. இதன் பலன் அன்புடைமை, தவவிரதம், நல்லபுத்தி, இராசபாக்கியம், அழகு, வெகுமானம், இனசன இரட்சகம், ஈவிரக்கம், அபிமானம், நரவாகனம், சுகம்.

இன்பமிசைக் கிறையவர்கேந் திரத்தெதிர்க்கப் பார்ப்ப
 திறையெனிலொன் றனையாசொட் சேத்திரகேந்ரத் தேறின்
மன்பெறுமங் கிசமனுச்ச னாகவுச்சத் தவனை
 மனன்கூடில் ஒன்றுபய மாசுளரோன் பதனில்

பொன்பருதி பத்துறிலிப் பொன்னினைங் கிசகர்
புறத்துறக்கோள் கேந்திரகோண் பொற்பினரோ டிருக்கில்
அன்பர்பத னம்பெறற்கோள் கேந்திரகோன் உச்சத்
தசுபர்சொட் சேத்திரமரு விலாவதுகா களமே. 263

நான்கு, பத்தாமிடத்திற்கு உடையவர்கள் எதிர் கேந்திரமாக இலக்கனேசன் பார்க்கிலும், ஒன்று, நான்காம் இடத்திற்குடையவர்கள் சொட்சேத்திர கேந்திரத்தில் இருக்கிலும், இலக்கனேசனுடைய அங்கிசன் உச்சமாக, இலக்கனேசன் உச்சனுடன் கூடிலும்; ஒன்றாமிடத்தில், இரண்டாமிடத்தில் பாவர் இருக்க, பத்தாம் இடத்தில் இரவி இருக்கிலும்; குரு, இரவி அங்கிசகால் இலக்கனத்தில் இருக்க, இதற்குடையவன் கேந்திர கோணில் இருக்கப் பாவர் சொட்சேத்திரம் இருக்கிலும் எக்காளயோகம்.

களத்தினுக்கீ கழணிமன வர்கார்முக மானிருதிக்
கதிபருச்ச கேந்திரகோண் கதுவிலும்கா களமாம்
வளத்ததின்மேல் எழும்பும்வெகு பாக்கியவா கனராம்
மன்னவரில் புரநகர மகிதலமற் றுலதும்
அளத்தறிக வெகுமானத் தாதிபராய் உலகில்
அனேகசன ரெட்சகனாய் அபிமானத் தவராய்
உளத்தழிவில் கெற்சிதராய் இருப்பரெனப் புவியோர்
உரைத்திடுவர் ஓங்கியதெற் கோங்கலுக்கா தியனே ! 264

ஒன்று, ஒன்பதாம் இடத்திற்கு உடையவர்களும் புதன், குரு, சுக்கிரனும் உச்ச சொட்சேத்திர கேந்திரகோணில் இருக்கினும் எக்காளயோகம் என்ப. இதன் பலன் : நாளுக்கு நாள் வர்த்தனையாகிய பாக்கியம், வாகனம், புறநகர தேசாதிபத்தியம், இராச வெகுமானம், அநேகசன இரட்சகம், அபிமானம், சதா சந்தோஷம் இவை முதலாகிய ஆனந்தத்தை அனுபவிப்பர் என்ப பொதிய வரையினை உடையவனே !

அதிபெலமாய் இறைகேந்த்ரத் தாகநிசி காலத்
தங்கரசம் பொன்பார்க்கில் காகளமப் பலமா
நிதிகுலம்பேர் தயைமோக நிருபர்வெகு மானம்
நீதியுள தாமிறைவன் நின்றபதிக் கிறைசேர்

பதிபனுச்சம் அல்லதுகேந் திரமதிக்குற் றிடின்முற்
பதிமன்விதுத் திரமாய்எட் டொருவனுறப் பார்ப்பான்
மதியுடன்கேந் திரக்கிலுங்கா களமாம்வா லிபத்தின்
மத்திமநா லேழதின்மேல் வாகனயோ கமுமே. 265

*இலக்கனேசன் அதிபெலமாகிக் கேந்திரிக்க நிசிகாலத்தில் சர இலக்கனனாகி, குரு பார்க்கிலும் காகளயோகம் என்ப. இதன் பலன் தனம், குலம், பேர், தயவு, மோகம், இராச வெகுமானம், நீதி இவை உடையவன் என்ப. இலக்கனேசன் நின்ற இராசிக்கு உடையவன் இருந்த இராசிநாதன் உச்சமாக அல்லது மதிக்குக் கேந்திரமாகிலும், இலக்கனமும் இலக்கனேசனும், மதியும் திர வர்க்கம் ஏற, எட்டாமிடத்தில் சேய் இருக்க; குரு, மதி கூடிக் கேந்திரக்கினும் காகளயோகம் என்ப. இதன் பயன் : வாலிபத்தில் மத்திம பலமும் வருடம் இருபத்து எட்டுக்குமேல் வாகனயோகமும் உண்டாம்.*

வாகனத்துக் கில்லறமாய் அங்கிரகம் இருக்க
மானமனன் உச்சமுறின் மண்புகரந் தணனும்
கோகைபெறக் கேந்திரிக்கத் தாதைமனன் பார்க்கில்
ஒருஇறைக்குக் கேந்திரகோள் குருப்புகருற் றுறையத்
தேகமனுக் காயமனன் கேந்திரிக்கில் அசிதன்
சேய்பொனின னெட்டாறாய்த் தத்தமுறில் செடக்கோள்
ஏகமுறப் புகர்க்கீறில் ஈழமிவர்கை நடத
ழிற்புதனெய் துதல்பேரி கைப்பெயருக் கெனுமே. 266

*இரண்டு, ஏழு, பன்னிரண்டாமிடத்தில் கிரகம் இருக்க, பத்தாமிடத்திற்கு உடையவன் உச்சமாகிலும்: இலக்கனேசன் குரு, சுக்கிரனுக்குக் கேந்திரிக்க, ஒன்பதாமிடத்திற்கு உடையவன் பார்க்கிலும்; செவ்வாய்க்குக் கேந்திரகோணில் குரு, சுக்கிரன் இருக்க; இலக்கனேசனுக்குப் பதினோராம் இடத்திற்கு உடையவன் கேந்திரிக்கிலும்; சனிக்கு ஆறு, எட்டாமிடத்தில் சேய்; சேய்க்கு ஆறு, எட்டாமிடத்தில் குரு; குருவுக்கு ஆறு, எட்டாமிடத்தில் இரவி இருக்கிலும்; இலக்கனேசன் இலக்கனத்தில் இருக்க, சுக்கிரனுக்குப்*

பன்னிரண்டில் குரு இருக்க; குருவுக்கு ஐந்து, ஏழாமிடத்தில் புதன் இருக்கிலும் பேரிகையோகம்.

அருக்கன்முதல் பாவரிரண் டறமிருக்கச் சேய்பொன்
அண்ணலிவர் மூவர்களு மணிவிழிக்கி லாபம்
குருக்கணுறப் பவனுபரப் புகர்பெலக்கில் எட்டுக்
குடையவன்கேந் திரிக்கவொன்றுள் குருப்புதன்தான் குருவா
பிருக்கிலறத் தாதிபனுமந் தணனுமெ திர்க்கில்
இவன்கவிநேர் கேந்திரிக்க விறைபெலக்கில் இறையும்
முருக்கமுள மூவர்களும் இலக்கனத்தைப் பார்க்கில்
உரகவிற்கோன் மிக்குறினும் பேரிகைப்பேர்க் குளதே. 267

இரவி முதல் பாவர், இரண்டு, ஒன்பதாமிடத்தில் இருக்கச் சேய், குரு, இலக்கனேசன் இவர்கள் மூவரும் மூன்றாம் இடத்தைப் பார்க்கிலும் பதினோராம் இடத்தைக் குரு பார்க்க இதற்குடையவன் உச்சமாகச் சுக்கிரன் பெலக்கிலும், எட்டாமிடத்திற்கு உடையவன் கேந்திரிக்க; ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடத்தில் புதன் இருக்கப் பன்னிரெண்டாம் இடத்தில் குரு இருக்கினும்; ஒன்பதாம் இடத்திற்கு உடையவனும் குருவும் எதிர்க்கிலும்; வியாழனும் சுக்கிரனும் நேர் கேந்திரிக்க இலக்கனேசன் பலக்கிலும் இலக்கனேசனும் புதன், குரு, சுக்கிரனும் இலக்கனத்தைப் பார்க்கிலும், இராகு பவனாதிபன் உச்சம் ஏறிலும் பேரிகையோகம்.

பேரிகைப்பேர்க் கிளமைதனஞ் சனப்பிரிய மாயுப்
பெருமைகுலம் புகழதிகப் பெயர்த்தனையர் பெண்டிர்
வாரமிவை யாறாறாம் வயதுளதோன் றிறைவன்
மறையவன்பார்த் திடக்கேந்த்ர மருவிலிவர் உறவாய்ச்
சேர்தலிர சதம்பார்க்கப் பணபரப்பே ராகில்
தினமன்முதல் இறைதன்முன் சலசரமொன் றாகில்
பாரிமுதல் உள்ளருவர் சுபர்பார்க்கக் கூடப்
பார்ப்பதிறை யாகிலிவை சாமரைஎன் பனவே. 268

பேரிகை யோகப்பலன் : இளமை, தனம், சனப்பிரியம், தீர்க்காயுள், பெருமை, நல்லகுலம், கீர்த்தி, அதிகப்பெயர், வெகுபுத்திரர், வெகுகளத்திரம், தேவதா கடாட்சம் இவை வயது முப்பத்தாறுக்குமேல் உண்டு என்ப. இதன்மேல் சாமரை யோகம் அறியும்படி: இலக்கனேசன் கேந்திரத்தில் இருக்க, குரு பார்க்கிலும் இவர்கள் தங்களில் மித்திரமாகிப் பணபரத்தில் இருக்கச் சுக்கிரன் பார்க்கிலும்; இலக்கனம் செல, சரமாகி மதி இருக்க; இரண்டாமிடத்தில் இலக்கனேசன் இருக்கிலும், ஏழாமிடம் முதல் பதினோராம் இடத்திற்கு உள்ளாக இரண்டு கிரகங்கள் ஒன்றாகக் கூடச் சுபக்கிரகங்களும் இலக்கனேசனும் பார்க்கிலும் சாமரையோகம்.

**சாருதயம் குருபார்க்க இவனுறையங் கிசமன்**
**தாயுறுலொன் றிறைசுபர்கேந் திரகோணத் தணையில்**
**தோதிபன்கோ ணமுறவிரவி வர்க்கோத் தமமாய்**
**சிரத்திறைகேந் திரிக்கில்இதில் செம்பொன்உறச் செடக்கோ**
**நாருவதா போக்கிலிபம் வளர்மதிநாட் சரமாய்**
**ஆதியுறில் இதுதிரமாய் ஆயமனொன் பதுமாம்**
**ஓரதிபன் கேந்திரிக்கில் திவித்திரம்பூ றுவமொன்**
**றொருதனுவி றையுயரில் சாமரைப்பேர்க் குளதே. 269**

இலக்கனத்தைக் குரு பார்க்க, இந்தக் குரு அங்கிசன் நான்காமிடத்தில் இருக்கிலும், இலக்கனேசன் சுபருடன் கூடிக் கேந்திர கோணத்தில் இருக்கிலும்; புதன் ஐந்து, ஒன்பதாமிடத்தில் இருக்க, இரவி வர்க்கோத்தமமாக; இலக்கனேசன் கேந்திரிக்கிலும், குரு கேந்திரிக்கிலும், இலக்கனேசன் ஆபோக்கிலியத்தில் இருக்கப் பூர்வபட்சத்து இலக்கனம் சரமாக உதிக்கிலும், இலக்கனம் திரமாக பதினோராம் இடத்திற்கு உடையவன் ஒன்பதாமிடத்தில் இலக்க, இலக்கனேசன் கேந்திரிக்கிலும் திவா காலத்தில் திர இராசியுமாகப் பூர்வபட்சத்தில் உதயமான இலக்கனத்தில் ஒரு கிரகம் இருக்க, இலக்கனேசன் உச்சமாகில் சாமரையோகம்.

மரைக்கதிபன் புதன்புகர்கேந் திரகோண மாக
மனன்பெலக்கில் இவனிசைமன் சரமருவ மதத்தில்
உரைக்கணிம னுறில்இவன்கேந் திரத்துயர அதனில
ஒருவனுற இறையறத்துத் துற்றிடிலிது சாமரையாம்
தரைக்கதிபன் வெகுமானம் தனங்கீர்த்தி வித்தை
தர்மம்வெகு பாக்கியமாம் தரவெழுபத் தைந்து
வரைக்குமிருப் பைம்பதின்மேல் ஐந்தின்மேல் ஐந்து
வருடமிதன் பலமாங்கும் போதயமா தவனே. 270

இரவி, புதன், சுக்கிரன் கேந்திர கோணமாக, இலக்கனேசன் பெலக்கிலும், இலக்கனேசன் பத்தாம் இடத்திற்கு உடையவனும் சர ராசியில் இருக்க, ஏழாம் இடத்தில் நான்காமிடத்திற்கு உடையவன் இருக்கிலும், நான்காமிடத்திற்கு உடையவன் கேந்திர உச்சமாக இவனை சேய் கூட, இலக்கனேசன் ஒன்பதாம் இடத்தில் இருக்கிலு... சாமரையோகம் என்ப. இதன் பலன் இராச வெகுமானம், தனம், கீர்த்தி, வித்தை, தருமம், வெகு பாக்கியம், தயாவ, வயது எழுபத்தைந்து, இந்தயோகம் வருடம் ஐம்பத்தைந்... மேல் ஐந்து வருடம் நடக்கும், கும்போதயனாகிய அகத்தியமா முனியே!

மாதிறையில் சேரவுச்ச மதியாகத் திவியில்
வரில்சனிகேந் திரத்தாய்பொன் மானமிர சதமாய்
மேதைபல முறில்இரவி யிற்கிறையங் கிசத்தின்
மேவுதல்கேந் திரமாவெ யில்சுபமாய் மேவில்
ஆதிஇறை யங்கிசமன் ஆட்சியில்பொன் னுடனே
அம்புலிதே வாங்கிசத்தில் அதிகமுறில் அறக்கோன்
போதிறையும் உச்சமுறப் புதன்புகர்கேந் திரகோள்
பொருந்திலிப்பேர் கமலமெனப் புகர்வதுமிப் புவியே. 271

நான்காமிடத்திற்கு உடையவன் நான்காமிடத்தில் இருக்க, மதி உச்சமாகத் திவா உதிக்கிலும், சனி கேந்திரிக்க, நான்காமிடத்தில் குரு, பத்தாமிடத்தில் சுக்கிரன், பதினோராம் இடத்தில் புதனுமாக இருக்கிலும்; இரவி இருந்த இராசி நாதனுடைய அங்கிசராசி ஏறிக் கேந்திரமாகி; இரவி இருக்கச் சுபர் கூடிலும், இலக்கனேசனது அங்கிசாதிபதியுடைய

ஆட்சியில் தேவாங்கிசத்தில் அதிகவர்க்கம் ஏறிய மதியும் குருவும் கூடி இருக்கிலும் ஒன்பதாமிடத்திற்கு உடையவனும் இரவியும் உச்சம் ஏறப் புதன், சுக்கிரன் கேந்திர கோணம் இருக்கிலும், கமலா யோகம்.

புகர்பெலக்கப் பத்தனைய ரின்மாறில் உதயம்
பொருந்தியஅங் கிசமனில்பொன் கவியோ தயமா
மகமலது கேந்திரம தாகில்இது கமலம்
அரசனப்பால் சொர்க்கபுரத் தடைவனிப்பா லனற்சேம்
சுகன்மனைவி இசைபொனுறச் சுக்கிரன்ஈர் உதிக்கத்
தோன்றுதலத் திவியாகிச் சரத்துறில்பொன் தோன்றல்
பகருமிவர் தங்களில்கேந் திரமாகின் மன்னாம்
பலனிதுவாங் கிசவவதா ரபபெயரென் பதுவே. 272

சுக்கிரன் பெலக்க, நான்கு, பத்தாமிடத்திற்கு உடையவர்கள் கிரகம் மாறிலும்; இலக்கன அங்கிசாதிபதி இருந்த இராசியில் குரு இருக்கப் புதன், சுக்கிரன் இலக்கனம் அல்லாத கேந்திரத்தில் இருக்கிலும் கமலாயோகம். இதன் பயன், அரசன் சுவர்க்க பதமடைவான் என்ப. ஐந்தாமிடத்தில் சேய், ஏழாமிடத்தில் சனி, பத்தாமிடத்தில் குரு, நான்காம் இடத்தில் சுக்கிரன் இருக்கத் திவியில், சரத்தில் உதிக்கிலும், குருவும் இலக்கனேசனும் கேந்திரித்து எதிர்க்கிலும் அங்கிசாவதார யோகம். இதன் பலன், அரசன் என்ப.

தாரவிறைக் கெட்டறமின் மால்புகர்பொன் உதிக்கில்
சசியரியா சனம்பாரி சாதகமதத் தணனும்
வேரதிக கயம்புகராய்ப் பெறில்பாரா வதத்தில்
பிருகுறப்பொன் கோபுரமாய்ப் பிறைதேவ புரமாய்
ஆரிலிசைக் கோணிருந்த வகத்திறையங் கிசகன்
அங்கிசகன் உச்சசொட்சேத் திரகோணத் தணையில்
நீரிசையர் தாயம்ரவி புகரனனே ராக
நிற்பதிறைக் கெனின்மூவ ராகநிகழ்த் துவரே. 273

ஏழாமிடத்திற்கு உடையவனுக்கு எட்டு, நான்காம் இடத்தில் புதன், சுக்கிரன், குரு நேர் இருக்கிலும்; மதி

சிங்காதனமும் குரு பாரிசாதமும் சுக்கிரன் ஐராவதமுமாகத் தேவதாங்கிசத்தில் ஏறிலும்; சுக்கிரன் பாராவதத்திலும், குரு கோபுரத்திலும், சந்திரன் தேவலோகத்திலும் இருக்கில், பத்தாமிடத்திற்கு உடையவன் இருந்த இராசியாதிபதி இருந்த அங்கிசாதிபதி இருந்த அங்கிசன் உச்ச சொட்சேத்திரக் கோணில் இருக்கிலும், இலக்கனேசனுக்கு நான்காம் இடத்தில் இரவி, பத்தாம் இடத்தில் சுக்கிரன், பதினோராம் இடத்தில் சேய் நிற்கிலும் திருமூர்த்தியோகம்.

நிகழ்த்துவதற் கிறைக்கீறெட் டுபயமிவை சுபரும்
நிசுபருமாய்க் கலக்கிலிது வும்மூவர் திருபர்
சுகத்துடையர் இதன்மேலக் கினம்சுறவா எட்டில்
சுக்கிரன்பொன் இவர்க்கீறில் தெந்துவக்கோன் தோன்றில்
அகத்ததனு லாபமதில் அம்புலிஊழ் சனிநேர்
ஆகமுதல் திரமாக வலவநிதி யாகின்
மகத்துவனாம் வெகுகாலம் சுபமாக அரசர்
வாழ்வுளனா கும்பரமா னந்தம்வரு பவரே. 274

இரண்டாமிடத்திற்கு உடையவனுக்குப் பன்னிரண்டு, எட்டு, இரண்டாமிடங்களில் பாவர் சுபர் கலக்கிலும் திரிமூர்த்தியோகம். இதன் பலன் : அரசர் சுகம் என்ப. இதன்மேல் இலக்கனம் மகரமாக எட்டாமிடத்தில் குரு, சுக்கிரன்; ஏழாமிடத்தில் புதன் இருக்கிலும்; நான்கு, ஏழு, பதினோராமிடத்தில் மதி, இரவி, சனி நேர் இருக்க, இலக்கனம் திரமாகக் குரு உச்சனாகிலும் பரமானந்தயோகம். இதன் பலன் இராசசமானன், பெரியவன், வெகுகாலம் சுகம் உடையவன்.

வரும்உதயத் திறைஇருந்த விற்கிறைகேந் திரகோன்
மருவவதற் கிறைபெலக்கின் மனன்றுயின்மா னிவர்கள்
இருவரும்கேந் திரமெதிர்க்க சுபர்பார்க்கில் ஏழில்
இன்பமுள ரெட்டசுபர் இவர்பவனோ டிருக்கில்
பருபதம நகரபுரா திபராவர் கோணில்
பாவர்மதி கேந்திரத்தில் பாகவனொன் றுதித்த
திரமதெனில் சொல்வேண்மெய் திவியல்சிகி சேரில்
செல்வமிரு பதின்மேல்செந் திருக்கெனும்போ தினுக்கே. 275

இலக்கனேசன் இருந்த இராசிநாதன் கேந்திர கோணில் இருக்க, இதற்குடையவன் பெலக்கிலும்; ஒன்று, எட்டாம் இடத்திற்கு உடையவர்கள் ஏதிர் கேந்திரமாகி இருக்கிச் சுபர் பார்க்கிலும்; ஒன்பதாம் இடத்தில் சுபர், எட்டாமிடத்தில் பாவர், பதினோராம் இடத்திற்கு உரியவனைக் கூடி இருக்கிலும் பருப்பதயோகம். இதன் பலன் நரகபுராதிபர். இதன்மேல் ஐந்து, ஒன்பதாமிடத்தில் கேந்திரத்தில் மதி, இலக்கனம் திரமாகச் சுக்கிரன் இருக்கிலும், இரண்டு, ஏழு, ஒன்றில் இரவி, மதி, கேது நேர் இருக்கினும் குசுமயோகம். இதன் பலன் வயது இருபதுக்குமேல் செல்வனாவான்.

தினகரன்மற் றுளபவரொன் றறமிருக்க இறைகேந்
  திரத்திருக்கச் சிசுவசுபர் கலக்கில் சிரமும்
கனகமிரண் டேழினருங் கல்லியனும் சரமாய்க்
  கதுவுதல்கேந் திரமாகில் கவிபொனுற் றிரமாய்
மனநவமற் றவரிருக்க மெய்துயிலிப் பதிநிர்
  மலமாகில் இறைவன்மரு வங்கிசன்கோண் மருவத்
தனையரிறை பார்க்கிலற்கோன் அங்கிசனங் கிசகன்
  சார்வதும்சுபர் பார்க்கிலும்சே லெனசாற் றுவரே. 276

ஒன்றில் இரவி, ஒன்பதாமிடத்தில் பாவர், இலக்கனேசன் கேந்திரிக்க, ஐந்தாமிடத்தில் பாவர் சுபர் கலக்கிலும் இலக்கினமும் குருவும் இரண்டு, ஏழுக்கு உடையவர்களும், இலக்கனேசனும் சரவர்க்கம் ஏற, இவை கேந்திரங்களாக இருக்கிலும்; குரு, சுக்கிரன் அதிவர்க்கம் ஏற, ஐந்து, ஒன்பதாமிடத்தில் மற்றவர் இருக்க, எட்டாமிடம் சுத்தமாகிலும், இலக்கனேசன் இருந்த அங்கிசாதிபதி ஐந்து, ஒன்பதாமிடத்தில் இருக்க, ஐந்தாம் இடத்திற்கு உடையவன் பார்க்கிலும், மதியினுடைய அங்கிசாதிபதி இருந்த அங்கிசாதிபதி உச்சமாகச் சுபர் பார்க்கிலும் மச்சயோகம்.

சாற்றறக்கோள் அங்கிசகன் குருப்புகர்வர்க் கமுமாய்ச்
  சடத்துதிக்க அதற்கிறைகேந் திரக்கோணத் தாகி
நூற்றிதழ்மன் னர்கிறைவன் லக்கினம்இம் மூன்று
  நூற்புரன்மார் பினன்வகையாய் நோக்கிறைவன் பெலக்கில்

ஆற்றனுவி லான்றுவச மாம்இதுவும் இதனுக்
    கரசன்வெகு மானிகலைக் கியானியதி ரூப
நாற்றிசையும் புகழ்கொடையும் நன்மனதன் புடைய
    நந்தனனாம் மலர்வேதம் நல்கியநந் தனனே. 277

ஒன்பதாமிடத்திற்கு உடைய அங்கிசன் குரு, சுக்கிரன் வர்க்கம் ஏறி, இலக்கனத்தில் இருக்க, இலக்கனேசன் கேந்திர கோணில் இருக்கிலும்; இரவி, மதி, இலக்கனம் இம்மூன்றும் குரு வர்க்கமாக, இரண்டாமிடத்திற்கு உடையவன் பெலக்கிலும், மச்சயோகம் என்ப. இதன் பலன் : இராசன், இராச வெகுமானன், கலைக்யானி, அழகன், வெகுகீர்த்திமான் விரதணன், நன்மனசு, புத்திரவான் என்ப அகத்தியமா முனியே!

தனத்தினுக்கீ றாகவரத் தனவுமிருப் பதுபோல்
    தான்முதனே ரளவுமர வற்றுளமற் றிவர்கள்
இனத்தொருவர் ஒருவருடன் எய்தாமல் தனிக்கில்
    இவைகிரக மாலிகையாம் இப்பெயர்தொட் டதுவாய்
நினைத்திதனுக் கியல்புசொல வேண்டுவதில் இவர்கள்
    இதற்குமுதல் கெப்பலமப் பலமுநிகழ்த் துவர்மேல்
தினத்ததிபன் இவர்கட்ககி சிகியல் லாமல்
    சேய்முதல் சுன் னளவிருபால் சேர்வதும்சொற் றிடலே. 278

இலக்கனம் முதல் ஏழாமிடம் வரைக்கும் இராகு, கேது நீங்கலாக மற்றுள்ள எழுவரும் நேர் இருக்கில் கிரகமாலிகை யோகம் என்ப. இந்தப்படிக்கு இலக்கனம் நேராக நடத்துங்கால் பன்னிரண்டாம் இடம் முதல் ஆறாம் இடம் வரைக்கும் பன்னிரண்டு பிரகாரமாக நடத்தும். இதன் பலன் : இலக்கனம் முதலாக பன்னிரண்டாம் இடம் வரைக்கும் உள்ள காரகம் கொண்டு பலன் சொல்லுக. இதன்மேல் இரவி, மதிக்கு முன்பின் இராகு, கேது நீங்கலாகக் குசாதி பஞ்ச கிரகங்களும் இருப்பின் அதற்குப் பலன் சொல்லுவோம்.

திடத்தரிக்கோள் முதற்கிரகர் சேர்ந்திடில்வா சிப்போர்
சேய்முதற்றுற் களத்திரவான் செலவுவரல் சரியாம்
இடர்ப்படுதல் வித்தையுமாம் யாபாரந் தனையர்
இயல்புளதாம் இசையோகம் இறையபயம் தனமாம்
விடத்துளமார்க் கன்கபடன் வெகுசனக்கூட் டுறவு
பந்துசனம் உள்ளவனாம் மேல்பிறமே விடில்பேற்
நடத்துவதும் வேசியவ நலன்விகிர்தி முனர்க்கா
நவில்வரிதன் மேலிருபா னண்ணுதல்சொல் லுதுமே. 279

இரவிக்கு முன்னே கிரகம் நிற்கில் வாசியோகம். இதன் பலன் : சேய் நிற்கில் பொல்லாத களத்திரம். புதன் நிற்கில் ஆதாயமும் செலவும் சரி, சஞ்சலம். குரு நிற்க வியாபாரம், புத்திர பாக்கியம். சுக்கிரன் நிற்கில் கீர்த்தி, யோகம், மனோபயம், தனம். சனி நிற்க விடமார்க்கம், கபடி, வெகுசனக் கூட்டுறவு, பந்துசனம் உள்ளவன். இரவிக்குப் பின்பு கிரகங்கள் நிற்க வேசியோகம். இதன் பலன் : வாசியோக பலத்திற்கு நேர் விகிர்தியாகச் சொல்லுக. இதன்மேல் இரவிக்கு இருபுறமும் கிரகங்கள் நிற்பதற்கும் சொல்லுவோம்.

நண்ணினனை நெருக்கலுப சரியாமப் பலமா
நாட்கிறைமுற் சுபரனபை நல்லகுலம் ஒழுக்கம்
வண்ணமுலை யார்வசிகம் சகலகலா நிபுணன்
மன்னன்வெகு மானமுமாம் அற்பதின்பேர் சுனபை
உண்ணலன்சு யாற்சிதமும் உன்னுளதும் உளதாம்
உபயபுறத்தும் மாகிற்றுரு துரைப்பேர்க் குலகோர்
விண்ணவனாம் என்னவதி செயமுளவித் தையுமாய்
வெகுகாலம் சுகமாக வீற்றிருப்ப திவனே. 280

இரவிக்கு இருபுறமும் கிரகங்கள் இருக்கில் உபசரி யோகம் என்ப. இதன் பலன் : முற்பலன் இரண்டும் கூட்டிச் சொல்லுக. மதிக்கு முன் சுபர் நிற்கில் அனபா யோகம். இதன் பலன் : நல்ல குலம், ஒழுக்கம், ஸ்திரீவசியம், சகலகலா நிபுணம், இராசவெகுமானம். மதிக்குப்பின் சுபர் நிற்கில்

சுனபை யோகம். இதன் பலன் : நல்மனது, சுயார்ச்சிதமும் பூர்வமும் உளதாம். மதிக்கு இருபுறமு சுபர் நிற்கில் துருதுராயோகம். இதன் பலன் : யாவரும் இவனைத் தெய்வம் என்று சொல்லும்படிக்கு அதிசயமுள்ள வித்தை உடைவனாகி வெகுகாலம் சுகமாக வாழ்வான்.

இருட்கிறைசே லிடபம்விற் சாலிதிற்கலை வர்த்தனையால்
இல்லிசையுற் றிருப்பதுபொற் கெனிற்கெசகே சரியாம்
விருப்பமுள வாழ்வதிகன் வேந்தனுமாம் நீசம்
மேவியவிற் கிறைவனந்த வீட்டிலுச்சத் தவனில்
அருள்பெறஉற் றிடஅதனுக் காதிபன்கோண் இருக்கில்
அல்லவெனில் அம்புலிக்குக் கேந்திரிக்கில் அதுதான்
மருட்பெறுமந் நீசனுக்கா கிலுமாகிக் குருப்பேர்
வர்க்கமுறில் நீசபங்கம் பெயரிவன்மன் னவனே. 281

பூர்வபட்சத்துச் சந்திரனும், வியாழனும், நான்காமிடம், பத்தாமிடமாக மீனம், இடபம், தனுசு, கும்பம் இந்த இராசிகள் இருக்கில் கெசகேசரி யோகம். இதன் பலன் : சகல சனப்பிரியன், வெகு பாக்கியவான், இராசன் என்ப. இதன்மேல் நீசம் இருந்த வீட்டிற்குடையவன் அந்த வீட்டுக்கு உச்சாதிபதி வீட்டில் இருக்க, இதற்குடையவன் ஐந்து, ஒன்பதாமிடத்தில் இருக்க அல்லது மதிக்காகிலும் கேந்திரிக்க இது குருவர்க்கமும் ஏறில் நீசபங்க இராசயோகம். இதன் பலன் :

மன்னவன்பொன் உதயதிரத் திறைபெலக்கத் திலியின்
மத்யானத் துறில்அரசன் மனர்மன்முதல் சனியீ
றென்னுமிவர் ஒன்றுமுதல் ஏழளவும் கூடில்
கிசைப்பதுகோ ளகையூப மெரிச்சிரங்கே தார
மன்னியரல் லார்பேர் மன்னியம்யா ழிதனுக்
கரடையிலா மௌனியமுக் குடையுளமெய்ஞ் ஞானி
இன்னுயிரந் திரியுழவன் ரெட்சகன்கா லியினால்
இலங்குவனாட் டியகீதத் திதயவனிப் பலமே. 282

இலக்கனம் திரமாகக் குரு இருக்க, இலக்கனேசன் பெலக்கத் திவா காலத்தில் நடுமத்தியானத்து உதிக்கில், இராசயோகம். இதன் பலன் அரசன். இதன்மேல் இரவி முதல் சனி ஈராக எழுவரும் ஒரு இராசியில் கூடில் கோளகை யோகம். இதன் பலன் : திகம்பரன், மௌனி. இரண்டு இராசியில் இருக்கில் யூபயோகம். இதன் பலன் சரீராடை, மலினாதிக மெஞ்ஞானி. மூன்று இராசியில் இருக்கில் சூலயோகம். இதன் பலன் : ஆற்பனரந்திரி. நான்கு இராசியில் இருக்கில் கேதாரயோகம். இதன் பலன் உழவன். ஐந்து இராசியில் இருக்கில் பாசயோகம். இதன் பலன் : சனரெட்சகன். ஆறு இராசியில் இருக்கில் தாமன்னிய யோகம். இதன் பலன் : கன்று காலி, கறவையினால் பாக்கியவான். ஏழு இராசியில் இருக்க வீணாயோகம். இதன் பலன் நடன வாத்திய சங்கீதப் பிரியன்.

இவையமுதல் கோண்கேந்த்ர மிதன்முன்ன தன்முன்ன
ரெட்டிறா றுபசெயம் பாவஞ்சுப நீரலதுய
உதகஉபயம் சரமற்றொன் றிடைவிட்டி ருப்ப
துக்குளபேர்ச் சிருங்காட கம்மலர்நீ ரோடை
வதைவயிரம் அசுபசுபம் வரையுவரி ஞான
மனன்முசல மாழிமுற்போன் மருவிடின்மன் னவர்போல்
லிபிமகிதம் இரண்டுமறிந் தியம்புவதிப் பலமாம்
இவ்வளவும் யோகவகைப் பெயரியல்பும் இதுவே. 283

இரவி ஆதி, சனி வரை எழுவரும் ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடங்களில் இருக்கில் சிருங்காடக யோகம். இரண்டு, ஐந்து, எட்டு, பதினோராம் இடங்களில் இருக்கில் உதகயோகம். மூன்று, ஆறு, ஒன்பது, பன்னிரண்டாம் இடங்களில் நிற்கில் தடாகயோகம். ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் நிற்கில் மாரணயோகம். மூன்று, ஆறு, பத்து, பதினொன்றில் நிற்கில் வச்சிரயோகம். பாவ ராசியில் நிற்கில் அசுபயோகம். சுபராசியில் நிற்கில் சுபயோகம். சுட்கராசியில் நிற்கில் கிரியோகம். செலராசியில் நிற்கில் சமுத்திரயோகம். உபயராசியில் நிற்கில்

ஞானயோகம். சரராசியில் நிற்கில் இராசயோகம். திரராசியில் நிற்கில் முசலயோகம். இலக்கனம் முதல் ஒன்றிடை விட்டு நிற்கில் சக்கரயோகம். இதன் பலன் இராச சமான யோகம் வைத்துக்கொண்டுப் பாவகாரகப் பலமும் கூட்டிச் சொல்லுக. இவை யோக பலத்தின் இயல்பு.

யோகாதிசயப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் இருபத்து எட்டிற்குக் கவி 283

## 29. மகாதிசைப் பலப் படலம்

இயல்புளயோ கப்பெயரும் இதன்பலம்இவ் வளவு
மின்னதின்ன தென்னவகுத் தின்னமிழ்தில் கலந்த
பயமதுவா ழைப்பழம்ப லாப்பழமாம் பழமப்
பாற்பழமி ரண்டுமொன்றாய்ப் பதபாக மாக
சுயருசியாய் வங்காளச் சீனிகண்டச் சாரத்
துடனேக மாய்த்திரட்டி துண்டுதுண்டாய் உருட்டிச்
செயலுளபா லர்க்குணவாய்ச் சிறிதுசிறி தாகச்
செலுத்துதல்போல் சொலவெனது செவிக்குணவா கியதே. 284

இயல்புள்ள யோகப் பெயரும் இதன்பலனும் அடியேனுக்குத் தெரியும்படிக்கு இது இன்னது இன்னது என்று வகுத்து இனிய தேவாமிர்தத்தில் கலந்த தேனும், பாலும், முப்பழமும், பேரீத்தம்பழமும், முந்திரிகைப் பழமும், நல்ல பதமாக ருசியாக ருசிக்க வேண்டி, வங்காள சீனியும், சீனிக்கற்கண்டும், சர்க்கரையுமாக ஒன்றாகச் சேகரித்துத் திரட்டிச் சிறுகச் சிறுக உருட்டி பாக்கியாதிகமான சிறு குழந்தைகளுக்குப் பொசிப்பாகும்படிக்குச் சிறிது சிறிதாகச் செலுத்துதல் போலத் தேவரீர் திருவுளம் பற்றினது அடியேனுடைய செவிக்கு உணவாகியது.

செவிக்குணவாய் படியோகப் பலனுரைத்த படிமா
திசைமுதன்மற் றுலிபலமும் திருவுளம்சற் றிரங்கிக்
கவிதிறமாய்ச் சுவைப்பொருளாய்க் கலைக்கியானக் கவியாய்க்
கற்பவர்கேட் பவர்கள்கர் ணாமிர்தமி தெக்காலம்

பலிப்பதெனப் புலிப்புலவோர் படிப்பதுமெய் படியிப்
படியிலளப் பளக்கிலுரைப் படியால்சொற் படியால்
குவிப்பதிது அதிசெயமென் பதற்கன் பாகக்
கூறுமெனும் முனிக்குரைத்த தானுமுகக் குருவே. 285

தேவரீர் ! அடியேனுடைய செவிக்கு உணவாகும்படி திருவுளம் பற்றிய யோகாதிசயப் பலன்போல் மகாதிசை முதலாகிய பலன்கள் எல்லாம் அடியேனுக்குத் தெரியும்படி திருவுள்ளத்திலே சற்றுக் கிருபைவைத்துக் கவித்திறமாகச் சுவைப் பொருளாகக் கலைக்கியானக் கனியென்று சொல்லும்படி கற்பவர் கேட்பவர் இதுவே கர்ணாமிர்தம் எனவும்; இது நமக்கு எந்தக் காலம் பலிக்கும் எனவும், சகல வித்தவான்களும் இதனை எப்படிப் படிப்பது என்றும் உலகில் அளப்பளக்கில் பொருளாகிய படியினாலும் சொல்லாகியபடியினாலும் அளந்து குவிப்பதற்கு அளவில்லை என்றும் மகா அதிசம் என்றும் துத்தியம் பண்ணவேண்டி தேவரீர் திருவுளம் பற்றவேண்டுவது என்று அகத்தியமாமுனி விண்ணப்பம் செய்யாமுன்னம் திருவாய் மலர்ந்து அருளினவர் ஆறுமுகத்துடனே எழுந்தருளிய சற்குருநாதன்.

குருமுதன்மா லளவுமுள காரகமும் செடமாய்க்
குறித்திடுகா ரகமுமிதற் குடையபலா பலமும்
ஒருவனிரண் டகமமெனில் அதற்கதுவாய்த் திசைநா
ளுளதுமிரண் டாகவகுத் துரைத்திடுவர் உரக
இருவரதில் அரவுசுப பலஞ்சிகிதுற் பலபாம்
யாவருக்கும் இயம்புவரிப் பலமுழுதெப் பொழுது
தருவரெனில் அவருக்கிசைத் ததுங்கண் டிவர்கள்
தாற்காலத் துறவறிந்துந் திசைதிறஞ்சாற் றுதலே. 286

குரு முதல் புதன் ஈறாக இவர்களுடைய காரகமும், இலக்கன முதலாய் உள்ள காரகமும் வைத்து, இதற்குள்ள பலாபலமும் அறிந்து ஒருவனுக்கு வீடு இரண்டாகில் அந்த வீட்டுக்குள்ள பாவகமும் அறிந்து இதற்கு அவனவன் திசை

நாளும் இரண்டாகப் பகுந்துவைத்தும் திசாபலன் சொல்லுக. ராகு-கேது இருவரில் ராகுவுக்குச் சுபபலமும், கேதுவுக்குத் துர்ப்பலமும் சொல்லுக. இப்பலத்தை இவர்கள் கொடுப்பது எப்பொழுது என்னில், முன் இவர்களுக்குச் சொன்ன பலன் கொடுக்கும் காலம் அறிந்தும் தற்கால மித்திரபாவம் கண்டு சொல்லுக.

திசைமூன்றா யேழளவு நீசனெம னினனைச்
சேர்ந்தவனன் றேற்பவுமன் சேற்கிறைநண் ணலர்நேர்
இசைவதுமூன் றைந்தேழாய்க் கிம்மிடைதீர்க் காயுக்
கெய்தலும்பா காந்தத்திருந் தவன்மார கப்பேர்
வசையுகரத் தவர்காலப் பகைஞருபக் கிரகர்
மருவினரிற் குடையர்சிகி வளைவுமனைக் குடையோன்
அசடர்சுபர் மதிக்கிசையில் அணையிலிதற் கவர்பா
சகப்பெயர்சத் துருதிசையும் அவமிருத்தா குவதே. 287

மூன்றாம் திசை நீசம் அடைந்தவன் திசையும், நான்காம் திசை சனி திசையும், ஐந்தாம் திசை அத்தமனம் அடைந்தவன் அல்லது செவ்வாய் திசையும், ஆறாம் திசை குரு திசையும், ஏழாம் திசை சத்துரு திசையும், அற்பாயுளுக்கு மூன்றாம் திசையும், மத்திய ஆயுளுக்கு ஐந்தாம் திசையும், தீர்க்காயுளுக்கு ஏழாம் திசையும் பாகாந்தத்தில் இருந்தவன் திசையும் மாரக திசையாம். ஆறு, எட்டாமிடத்திற்கு உடையவர்கள் காலப்பகைஞர், உபக்கிரகர் இருந்த மனைக்கு உடைவர்கள், இவர்களுடன் கூடினவர்கள் திசையும், கேது இருந்த வீட்டுக்கு உடையவன் இருந்த திசையும், மதிக்கு நான்கு, பத்தாமிடத்தில் பாவர் சுபர் கலந்திருக்கில் அப்பாவர் திசையும், பாசக வர்க்கச் சத்துரு திசையும் அவமிருத்தான திசை.

அவனியுதயப் புருடர்கே ழுதயம் பெண்ணுக்
கபிமுகம்வைத் தத்தொகையோ டதனுமுதல் பெயராய்த்
தவமளவும் கூட்டியதைப் பகிர்தல்சர முதற்கால்
தற்றொகையின் மிக்கவமொன் றேறறள லதற்காம்

இவர்களிருப் பதற்கணிமா ரகதிசைமற் றுளதுக்
கிசைப்பதுகா ரகமெழுத்தி ரொன்பதுமீ ரறநேர்
பவுமனிர சகமால்பொன் பங்கினனிந் தகியப்
பணியகர திசைத்திறமாய்ப் பகர்வததற் காமே. 288

பூவோதய இலக்கனம் புருட இராசியாகில் இதற்கு ஏழாம் இடமே இலக்கனமாக வைத்தும், ஸ்திரி இராசியாகில் இதற்கபிமுக ராசியே இலக்கனமாக வைத்தும், இந்த இலக்கனம் தொட்டு முன்சொன்ன லக்கன திசைபோல நடத்திய வருடத்தில் புருட ராசிக்கு அமைந்த இலக்கனம் சரமாகில் ஏழும், திரமாகில் எட்டும், உபயமாகில் ஒன்பதும் கூடக் கூட்டிப் பகிர்ந்த வருடம் வைத்து நடத்துக. அபிமுக ராசி இலக்கனத்திற்கு உள்ளபடி நடத்திய வருடத்தில் உச்சத்துக்கு ஒருவருடம் கூட்டியும், நீசத்துக்கு ஒரு வருடம் குறைத்தும் நடத்துக. இந்தப்படிக்கு நடத்துங்கால், இந்த இலக்கனாதிபர் இருந்த வீட்டிற்கு மூன்றாம் இடத்திசையே மாரகதிசை. மற்றுள்ளதற்குக் காரகபலம் வைத்துச் சொல்லுக. இதன்மேல் அட்சரதேவதா திசை அறியும்படி.

ககர முதல் னகரம் ஈறாகிய பதினெட்டு மெய்யினுள்

| | | | |
|---|---|---|---|
| ககர | ஙகரத்திற்குச் | சேய் | தேவதை |
| சகர | ஞகரத்திற்கு | வெள்ளி | தேவதை |
| டகர | ணகரத்திற்கு | புதன் | தேவதை |
| தகர | நகரத்திற்குக் | குரு | தேவதை |
| பகர | மகரத்திற்குச் | சனி | தேவதை |
| யகர | ரகரத்திற்கு | இரவி | தேவதை |
| லகர | வகரத்திற்கு | மதி | தேவதை |
| ழகர | ளகரத்திற்கு | இராகு | தேவதை |
| றகர | னகரத்திற்கு | கேது | தேவதை |

உயிரெழுத்து பன்னிரண்டிற்கும் யகரவரிக் கற்றபடி என்க. இவர்களுக்கு முன்சொன்ன திசை வருடமே வருடம் என்க. இந்தப்படி அவனவன் நாம நட்சத்திரம் முதல் தொட்டு நடத்துவதில் மிருதாட்சரம் தள்ள நடத்துக. இஃது அக்ஷரதேவதா திசை.

ஆகுதலத்தி வியாகில்சனி ரவியற் ககிசுற்
    கானபுடத் தினதிசையும் அண்ணல்வெயிற் கவமே
ஏகமித யத்தசுபர் கலக்கி லகிதத்
    தினர்திசையு மிருத்துபய ராசியிகத் துதய
தேகமென வரில்புதன்பொன் னுக்கபலம் சனிகட்
    செவிக்குநல பலம்பவன திசைக்குளதில் பலமாய்
யோகையினர் வரிலபகா ரப்பலமிப் பலமேல்
    உரைப்பதுங்கோ சாரபலமென் றவனெனுளுற் றவனே. 289

திவா காலம் சென்னமாகில் சனி, இரவி புடத்தைக் கூட்டிக் கண்ட தினதிசையும் நிசியாகில் சனி, இராகு புடத்தைக் கூட்டி கண்ட தினதிசையும், இலக்கனேசனுக் காவது இரவிக்காவது ஒன்று, நான்கு, ஐந்து, எட்டாம் இடத்தில் பாவர் சுபர் கலக்கில், அப்பாவர் திசையும் மிருத்து திசை என்ப. உபயராசி இலக்கனமாகில் புதன், குரு திசை துர்ப்பலம் என்ப. சனி, இராகு திசை சுபபலம் என்ப. பாவக திசைக்கு அந்தந்தப் பாவகத்திற்கு உள்ள பலம் என்ப. இத்திசைப் பலம் போல அபகார பலமும் சொல்லுக. இதன்மேல் கோசார பலமும் சொல்லுவோம் என்று திருவாய் மலர்ந்தருளினவன் என் இதயாசனத்தில் எழுந்தருளி இருப்பவனான சுப்பிரமணியக் கடவுள்.

மகாதிசைப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம்இருபத்து ஒன்பதிற்குக் கவி 289

## 30. கோசரப்பலப் படலம்

உற்றிடுபா சகப்பகையில் உபக்கிரகர் இருப்பில்
ஒன்றாய மூன்றளவு அட்டவர்க்க முறும்பரலில்
பற்றலரிந் தனல்சிகிபங் கிவர்கூடில் இற்கிப்
பாருதயத் தினிலுறல்பார்த் தவரதிபர்க் கிசையச்
சொற்றிடுகா ரகப்பலந்துற் பலந்தினகண் டத்தும்
சூன்யமுற்ற விடத்துமிவர் தோன்றிடின்மா ரணமாம்
முற்றலநேர் கிரரசகி தப்பலமப் பலமாய்
மொழிவதும்கோ சரபலமுன் மதிமுதற்கா குவதே. 290

*பாசகாதிபர்க்குச் சொன்ன பகைத் தானத்திலும், உபகிரகங்கள் இருந்தவிடத்தும், அட்டவர்க்கத்தில் கண்ட பரல் ஒன்று, இரண்டு, மூன்றாக இருந்த இடத்தும் சேய், சனி, கேது வருங்காலம் அந்த இடத்தில் செனனகாலம் இருந்தவன், பார்த்தவன், உடையவன், அப்பாவகம் இதற்குடைய காரகங்களுக்குத் துர்ப்பலம் சொல்லுக. சொல்வதில் தற்காலம் உற்ற கிரக காரகமும் கண்டு சொல்லுக. இதில் நட்சத்திர கண்டமாக வரும் இடத்தும் பரம் சூன்னியமுள்ள இடத்தும், சனி, சேய், கேது கூடும் காலம் மாரணம் என்ப. இலக்கனம் முதல் நேர் கிரக சகிதமாகில் கிரக சகிதப்பலன் சொல்லுக. கோசார பலத்திற்குச் சொன்ன கால சந்திர இலக்கனமே இலக்கனமாக வைத்துச் சொல்லுக.*

உவசெயத்துக் கறமீறில் உள்ளிதுவேள் ஒன்றும்
குரைதுயின்முன் னதுமிசையில் ஊழ்க்குதுக் கீறும்
அவமதெட்டூண் போக்கணனோய் தரற்குடற்சேய் துயிறா
டவமிதன்மேல் வேளுள்பவம் தனத்தவத்துக் கனியி
லவம்வியம்பத் தும்மாறே ழறமிசையற் றலதுக்
காறணிபத் தறமுளணா னாதிரிபுவ னற்போல்
இவரினநேர்க் கிவருறலொன் றசிதன்முதல் சிகியில்
இயர்அறிவன் ஒருவலவன் இவரரவீ றவமே. 291

*இரவிக்கு மூன்று, ஆறு, பத்து, பதினொன்று சுபபலம். இதற்கு ஒன்பது, பன்னிரண்டு, நான்கு, ஒன்பது சுத்தமாகில்*

சொல்லுக. மதிக்கு மூன்று, ஆறு, ஏழு, பத்து, பதினொன்று சுபபலம். இதற்கு எட்டு, ஒன்பது, பன்னிரெண்டு, இரண்டு, நான்கு, ஐந்து சுத்தமாகில் சொல்லுக. சேய்க்கு இரண்டு, ஆறு, பதினொன்று சுபபலம். இதற்கு பன்னிரண்டு, ஐந்து, ஒன்பது சுத்தமாகில் சொல்லுக. புதனுக்கு எட்டு, இரண்டு, பத்து, பதினொன்று, ஒன்பது சுபபலம். இதற்கு ஒன்று, ஐந்து, எட்டு, பன்னிரண்டு, ஒன்பது சுத்தமாகில் சொல்லுக. குருவுக்கு ஏழு, ஐந்து, பதினொன்று, இரண்டு, ஒன்பது சுபபலம். இதற்கு மூன்று, நான்கு, எட்டு, பன்னிரண்டு, பத்து சுத்தமாகில் சொல்லுக. சுக்கிரனுக்கு ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, எட்டு, பதினொன்று, பன்னிரண்டு சுபபலம். இதற்கு ஆறு, மூன்று, பத்து,ஒன்பது, ஐந்து, பதினொன்று, ஒன்று சுத்தமாகில் சொல்லுக. சனி, இராகு, கேதுவுக்குச் சேய் சொன்னபடி சொல்லு. இதன்மேலும் ஒன்றில் சனி, இரண்டாமிடத்தில் கேது, மூன்றாமிடத்தில் குரு, நான்காம் இடத்தில் புதன், ஐந்தாமிடத்தில் இரவி, ஆறாமிடத்தில் சுக்கிரன், ஏழாமிடத்தில் செவ்வாய், எட்டாமிடத்தில் மதி, ஒன்பதாமிடத்தில் இராகு இருக்கில் ஆகாது.

அவரவருக் குரைத்ததல்லால் பூவுதயத் ததனில்
அண்ணலிற்கோள் குருவபல மதிபார்க்கப் பலமாம்
இவர்களுதப் பில்வேதைக் கிவருறிலிப் பலம்வாக்
கெட்டியதயத் தொன்றனையில் வீழ்தலில்எய் துதனால்
பவருறின்மூன் றாதியில்பங் குறப்பவுமன் பார்க்கில்
பாரிசுத வாத்மபயம் பத்தினில்பற் றியதபான்
புவனமக னைக்கூடில் பதிவிடல்கே டொனிக்கில்
பொற்கலச இதன்மேலாண் டதனியல்புக் குளதே. 292

அவரவர்க்குச் சொன்னது அல்லாமல் சென்ன இலக்கனத்தும் இலக்கனேசத் திரிகோணத்திலும் குரு வரில் நிர்ப்பலம். மதி பார்க்கில் பலம் என்ப, கிரக உதைப்பில் வேதையில் வரில் அப்பெயர்ப் பகுதிக்குப் பலன் சொல்லுக. இரண்டு, ஐந்து, எட்டிலாவது; ஒன்று, நான்கிலாவது, ஆறு, எட்டு, பன்னிரண்டிலாவது பாவர் நால்வர் சேகரிக்கிலும்,

மூன்றாமிடம் முதல் காலில் சனி இருக்கச் சேய் பார்க்கிலும் தாரசுத ஆதாயம் என்ப. பத்தில் குருவும், சேயும் கூடில் தான சலனம் என்ப, ஆறு, எட்டு, பன்னிரண்டில் இருக்கில் தனநாசம் என்ப. இதன்மேல் அகத்தியமா முனியே வருடபலன் சொல்லுவோம்.

கோசரப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பதிற்குக் கவி 292

## 31. வருடப் பலம் படலம்

**ஆண்டுதய வாரமுதல் மூன்றுதினங்க ளல்வைத்**
**தவர்கடிகை யில்பெருக்கி யாவருக்கும் பலமாய்க்**
**காண்டலிதற் கனுபவமும் அவ்வருட மனவன்**
**கல்யமுதல் கெதற்கதிப னோபலமக் கதியாம்**
**சேண்டபனன் மறைந்திடிலத் தினத்திசைவைத் துரைப்பார்**
**திவியரவுக் கிடையெனில்ரா சிக்கிறைவன் திசையாம்**
**மீண்டிவர்கள் சாதகத்தன் றெத்திறபத் திரமாய்**
**எத்திசைக்கும் சொல்வரிதன் மேல்மாதத் தியல்பே.** 293

வருடப்பிறப்புப் பகலாகில் அற்றை வாராதிபன் திசை முதலாகவைத்து வருடம் ஒன்றுக்கு நாள் மூன்று, நாழிகை மூன்றுமாய்ப் பெருக்கி, நேர் திசை நடத்துக. இதற்கு இவர்கள் செனன காலத்து இயல்பு அறிந்து பலமும் சொல்லுக. இதல்லாமல் அந்த வருடராசன் செனன காலத்தில் எந்தப் பாவகாதிபதியோ அந்தப் பாவக பலமும் கூட்டிச் சொல்லுக. வருடம் நிசியாகில் அற்றை நட்சத்திரத்திசை முதல் நேர் நடத்துக. சந்தியாகில் அந்த வருட இலக்கனாதிபன் முதல் நடத்துக. இது வருடப்பலம் என்ப. இதன்மேல் மாதப்பலன் சொல்லுவோம்.

வருடப்பல படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்தி ஒன்றுக்குக் கவி 293

## 32. மாதப் பலப் படலம்

மாதவுத யத்துடுமுன் மேலாறு மூன்று
மாகவகுப் பதுசுபமத் திமநேரா மாதத்
தாதலள உதயதின மாய்தாரத் தேற்றி
அதைஇருநான் குக்கீவ தாறிரண்டைந் தும்மா
மீதபலம் சேலைமுற மனமுடிபெண் ணாணவ்
வெண்டிருதீ யாழ்தைநுகம் வெயிலிவைமா தேந்த்ர
மீதயநேர் கானாள்வைத் தித்திசைமுற் பலமாய்
யாவையும்கண் டிசைப்பரிதன் மேற்றினத்துக் கியல்பே. 294

மாதம் பிறந்த நட்சத்திரத்திற்கு முன்பின்புள்ள நட்சத்திரம் தொட்டு ஆறும் ஒன்பதுமாக நேர் நடத்துவது சுபபலம் நிற்பலம் என்க. இதல்லாமல் சென்ம நட்சத்திரம் முதல் மாதோதைய நட்சத்திரம் வரைக்கும் எண்ணிக் கண்டதை ஏழில் பெருக்கி, எட்டில் கழித்துக் கண்டதில் இரண்டு, ஐந்து, ஆறு அதிகபலம் என்க. மற்றது நிர்பலம் என்க. இதல்லாமலும் சித்திரை மாதம் முதல் நேர் சித்திரை, விசாகம், கேட்டை, உத்திராடம், அவிட்டம், பூரட்டாதி, அசுபதி, கார்த்திகை, ஆதிரை, பூசம், மகம், உத்திரம் இவை மாதேந்திரம் என்ப. சித்திரை மாதம் முதல் இத்தின திசை நேர்வைத்து வருடம் ஒன்றுக்குக் கால் நாளாகப் பெருக்கி முன்சொன்ன வருடத் திசாபலன் சொல்லுக. இவ்வகைப்படி பலம் சேகரித்துப் பலம் சொல்வது மாதப் பலன் என்ப. இதன்மேலும் தினப்பலம் சொல்லுவோம்.

மாதப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து இரண்டிற்குக் கவி 294

## 33. தினப்பலப் படலம்

தினவேதைக் குளதறிந்தும் இதற்குரைத்த பலத்தின்
திறமறிந்து மத்தினம்வா ரந்திதிசே கரமாய்
முனராதி யத்தினமீ றாமதனுக் குயர்த்தி
மும்மூன்றுக் கீயமுதல் தினத்திசைமன் முதலாக்

கினதேதத் திசைநேர்வைத் தாண்டரைநா ழிகையாக்
கெதமுளதில் பலமாய தெட்டதனுக் கீய
வினனேரத் திக்கிறைநேர் ஏழரைநா ழிகையாய்
இயப்புதலத் தினபலத்தில் இதுவுமொரு பலமே. 295

நித்திய வேதைக் கண்டறிந்தும், இதற்கு உரைத்த பலாபலம் அறிந்தும், அற்றைத் திதி, வாரம், நட்சத்திரம் மூன்றும் கூட்டிச் சென்ம நட்சத்திரம் முதல் அற்றறை நட்சத்திரம் வரைக்கும் எண்ணிக்கண்ட தொகையில் பெருக்கி, ஒன்பதில் கழித்து, நின்ற தொகையைச் செனம் நட்சத்திரத் திசைநாதன் முதலாக வைத்துக் கண்ட கிரக திசையாக வருடம் ஒன்றுக்கு அரை நாழிகையாகப் பெருக்கிக் கெதம் நடத்திய பலன் போல, இத்திசா பலமும் சொல்லுக. ஒன்பதில் கழிப்பதற்கு முன் இருந்த தொகையை எட்டில் கழித்து, இரவி முதல் இராகுவரை திக்கதிபரில் கண்ட கிரகம் முதல் உதயாதி ஏழில் நாழிகையாக எட்டு சாமத்துக்குப் பலன் சொல்லுக. இதுவும் தினபலத்தில் ஒருபலம்.

ஒருமுதலக் கயலளவற் பகற்கிதுவென் பதினால்
உதிக்குமவ்வா ரத்துளதாய் உதயமுதற் றறிகால்
கிரகநடப் பதிலுளதும் கிழமையுணற் குவதும்
கெசபலத்தில் பலமாய்ப்புட் கிசைந்தபலத் துடனே
தரைவருசென் மாதிதினத் ததிமுதலக் கோள்நேர்
சாற்றுதிசா பலமுமச்சா தகப்பலத்துத் தரமாய்த்
தெரிதரயா வர்க்கும்உரைத் திடுதறினப் பலமாம்
தெற்கிறைசக் கரப்பலமும் இதன்மேல்செப் புதலே. 296

மேடாதி மீனம்வரை இராப்பகற்குப் பிரித்திருப்ப தினால், அந்தந்த வாராதிபர்க்கு உள்ள இராசியை உதயம் முதல் வைத்துத் தறிகால் கிரகமும் வைத்து நேர்நடத்து வதனாலும், வார ஊண் நடத்துவதனாலும், முன்போல் இவர்களைப் பாவகாதி வர்க்கம் வைத்துப் பலன் சொல்லுக. இப்பலத்துடனே பஞ்சபட்சி பலமும் கூட்டிச் சென்மாதி

*நட்சத்திரம் முதல் தினப்படி கண்ட நட்சத்திரத்தை வைத்து அதற்குடையவன் திசை தொட்டுச் சாதகப் பலன் போலப் பலன் சொல்லுக. இதன்மேல் காலச்சக்கரப் பலம் சொல்லுவோம்.*

தினப்பலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து மூன்றுக்குக் கவி 296

## 34. காலசக்கர நரசக்கரப் பலப் படலம்

சக்கரன்சேய்க் கொருதனை யதபனன்முதல் எழுவர்
  தலமுதலபே ரனுவாகச் சாற்றுதிசை நாத
ருக்கதர்ம தர்மரெனில் இப்பெயர்போல் பலமாய்
  உரைப்பபர பகாரமுமத் தலத்தியல்போல் உளதாய்
அக்கிரம மாகவரு மிருகரசி னவலோ
  கனத்தியன்மீன் தேளாகில் அனல்கருவி அரச
ரொக்கலலர் சோரபலம் தளைசிறைதற் போலும்
  உடற்பதனம் பவரிடையுற் றிருக்கில்உரைப் பதுவே. 297

*சக்கிராயுதனுக்குப் பவுத்திரனான அகத்தியமா முனியே! இரவி ஆதி சனி வரை எழுவரும் திசைநாதராக வருமிடத்தில் அந்தந்தக் கிரக முதலாலும் அதற்குடையவர்கள் பெயர் அடுத்தும் மேடச் செவ்வாய், இடப சுக்கிரன், மிதுன புதன், கடகச் சந்திரன், சிங்க ஆதித்தன், கன்னிப் புதன், துலாச் சுக்கிரன், விருச்சிகச் செவ்வாய், தனுர் வியாழன், மகரச் சனி, கும்பச்சனி, மீன வியாழன் என்பனவாகப் பன்னிரண்டு பாவகத்திற்கும் பெயர் நடத்துக. இந்தப்படி நடத்துமிடத்தில் பாவர் சுபர் அறிந்து பலமும் அப்படிச் சொல்லுக. அபகார பலமும் பாவக பலம் போலச் சொல்லுக. இதில் தப்புப் பாய்ச்சலாக வரும் இடத்தில் மீனத்தில் நின்று விருச்சிகத்தில் தாண்டும் காலம் இடையில் பாவக் கிரகங்களும் இருக்கில், கருவியாக்கினி, சோரர் பயம், இராச விரோதம், இனசன விரோதம், சத்துரு பயம், தளை, சிறை, காவல்கட்டு ஆற்பன சமான சரீர பதனம் உண்டாம்.*

உரைப்பதயஞ் சிலையாகி உயிர்த்தவன்தன் தனையர்
உடற்பரதி அல்லவெனில் தன்னுடைய உடல்போம்
வரைக்குவரு மென்பர்துர கதவவலோ கனமாய்
வரின்முனரில் சொற்பபலம் மண்டூக கதியாய்
விரைக்குழல்கற் கடகமெனில் களமரணம் சீயம்
வீணையெனில் பிதுர்மரணம் மிதுனமரி மேவில்
அரைக்கதின்மேல் விரணமிதற் கிடையசடர் இருக்கில்
அரசர்பயம் தலபேதம் அகாலமர ணமுமே. 298

மேடத்தில் நின்று தனுப் பிரவேசமாகில் பிதுர், புத்திர, களத்திர பயம் அல்லது தன்னுடைய சரீர பயம் என்க. துரகத லோகாபனமாகில் இப்பலம் சொற்பம் என்க. மண்டூக கதியாகக் கன்னியில் நின்று கடகப் பிரவேசமாகில் களத்திர தோசம் சொல்லுக. சிங்கத்தில் நின்று மிதுனம் தாண்டில் பிதுர்தோஷம் சொல்லுக. மிதுனத்தில் நின்று சிங்கம் தாண்டினால் அரைக்குமேல் விரணம் சொல்லுக. இக்கெதிகளுக்கு இடையில் பாவர் நிற்கில் இராசகோபம், தான சலனம், அகாலமரணம்.

காலனைப்பெற் றவன்முதலா (கக்)கசடர்திசை யாகும்
காலமப கார்முமப் படியாகக் கதியும்
மேலுயர்தல் விழலாகின் மெய்பதனம் எனவும்
விளம்புமவர் மற்றுளசுப முடிக்குறின்மிக் குளதாம்
சாலுதய மேலுநர சக்கரத்துக் கியல்கேள்
சனிக்கனலுக் கிடைவாய்மற் றவாக்கரைக்கம் மவமாம்
ஒலிமனர்க் குறவகங்கை தனநடைதா ளுயர
மூணலமற் றிடமாகின் மொழிவதவம் எனுமே. 299

இரவி ஆதி பாவருடைய திசை அபகாரச் சித்திரம் சேகரிக்கும் காலம் தப்புப் பாய்ச்சலும் கூடில் சரீர பதனம் சொல்லுக. சுபவர்க்கம் சேகரமாகில் சுபாதிக பலம் சொல்லுக. இதன்மேல் கும்போதயனே ! நர சக்கரத்து இயல்பும் கேட்பாயாக. சனி, சேய்க்கு அரையிலும், வாயிலும், மற்றவர்க்கு அரையிலும் சிரசிலும் நிற்பலம் என்க. ஆகையால் சிரசில் அரசர் உறவு, கையில் தனலாபம், காலில்

சஞ்சாரம், வயிற்றில் ஊண். மற்ற இடங்களுக்கெல்லாம் சுபபலம் வைத்து நடத்துக. இந்தத் தானங்களுக்கு எல்லாம் இடப்புறமாகில் துர்ப்பலம் சொல்லுக.

காலசக்கர நரசக்கரப்பலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து நான்கிற்குக் கவி 299

## 35. அட்டவர்க்கப்பலப் படலம்

**தவமுனியே ! அட்டவர்க்கப் பலமதுவும் கேளாய் !**
**தவன்முதலக் கினம்வரைஎட் டாகஇதைத் தகர்நேர்**
**பவனமிரா றில்பகுத்தல் பின்னமிப்பா வகத்தைப்**
**பானுமுதல் எட்டுளதில் பதுத்திடுமப் புவனத்**
**திவர்களுறில் ப்ரத்தியாரம் என்பரதன் பலத்துக்**
**கிதுவதிக சூட்சபலம் இவையொருசே கரமாய்**
**அவர்கள்வகைப் பரல்கூடி இவைசருவாட் டகப்பேர்**
**ஆகுமெனக் கூறினன்சந் தாசலத்தா திபனே !** 300

தவசினையுடைய அகத்தியமா முனியே! அட்டவர்க்கப் பலமும் கேட்பாயாக. இரவி முதல் சனி வரை ஏழும், இலக்கனம் ஒன்றுமாக அட்டவர்க்கம் என்ப. இவை மேடாதியாக நிரத்துவது பின்னாட்டவர்க்கம் என்ப. இவ்வட்டவர்க்கம் எட்டும் மேடாதி பன்னிரண்டில் பெருக்கிக் கண்ட தொண்ணூற்று ஆறு வீட்டிலும் நிரத்துவது பிரத்தியாராட்டவர்க்கம் என்ப, அதன் பலனுக்கு இது அதி நுட்பமானப் பலன் என்ப. இவை சேகரமாக வைத்து இரவி ஆதி கிரகப்பரலும் வகைப்படி கூடில் சருவாட்டகம் என்று திருவாய் மலர்ந்து அருளினவன் சந்தனசைலத்தை உடைய சுப்பிரமணியக் கடவுள்.

**ஆதவனேர் சனிஈறா யவரவர்கள் பரலுக்**
**கமைந்தவய தில்தினத்தில் அசிதனுங்கோ சரத்தால்**
**பாதகரோ டுடன்கூடிப் பற்றிலந்த வர்க்கம்**
**பதனமென லாலாதிப் பவனமுதல் சரணீ**

ஓதிடிலிப் பாவகத்துக் குள்ளதுமப் படியாம்
 உதயமுதல் நாற்கோணுக் கொக்கஒரு வன்கீழ்
ஈதல்கெடுத் திடல்மீநேர் யாவையும்மூன் றாக்கி
 இளமைமுதல் பலமுளதாம் பரலதிகத் தெனுமே. 301

இரவி முதல் சனி ஈறாக அவரவர்க்குக் கண்ட வயது தின கண்டத்தில் சனி பாவர் சகிதமாகக் கோசாரத்தில் வருவது கண்டு, அந்தந்த வர்க்கங்களுக்குத் தோஷம் சொல்லுவதால் இலக்கனம் முதல் பாவகம் பன்னிரண்டிற்கும் அந்தப்படி சர்வாட்டக வர்க்கத்தில் கண்ட பரல் கொண்டு, பாவ வர்க்கப் பலமும் சொல்லுக. இலக்கனம் முதல் நாற்கோணும் பகுத்துக் காணில் இலக்கினக் கோள் பரல் ஏறில் பத்து சனத்தோடுகூடி சீவிப்பன் என்க. இரண்டாம் கோளுக்குச் சேவகா விருத்தி என்க. மூன்றாம் கோளுக்குச் சன இரட்சகன் என்க. நான்காம் கோளுக்குச் சன நிற்க கண்டகத்தால் சீவனம் என்க. மீனம் முதல் நாலிலும் பரல் அதிகமாகில் வாலவயதில் பாக்கியம் என்க. கடக முதல் நாலிலும் பரல் அதிகமாயின் நடுவயதில் பாக்கியம் என்க. விருச்சிகம் முதல் நாலிலும் பரல் அதிகமாயின் அமரவயதில் பாக்கியம் என்க.

பரலதிகம் கேந்திரமப் பாவிரண்டுக் கவன்சேய்
 பயந்தவனப் படியாம்பத் தாதிவரை நான்கும்
வரதனில் அதிகம்விடின் மற்றெனில்வாழ் உளதா
 மனைமனைக்கெப் பரலோகஅப் பரல்படிவர்த் தனையாம்
இரவிமுதல் உள்ளவர்கள் இருப்புமுதல் உதயம்
 ஈறாகக் கண்டதைஏ ழிற்பெருக்கி இதைநாள்
குரைசெயிலத் தினம்வயதும் அவரவர்க்கு உளதாய்
 உரைப்பரினிப் பொதுப்பலத்துக் குள்ளதுரைப் பதுவே. 302

கேந்திரப் பரல் அதிகமாகில் சாதகன் பாக்கியவான் என்க. பணபரமாகில் புத்திரன் பாக்கியவான் என்க. ஆபோக்கிலிபமாகில் பிதா பாக்கியவான் என்க. சருவாட்டக வர்க்கத்தில் கண்ட பத்தாமிடப் பரலில் பதினோராமிடப் பரல் ஏறியும், பதினோராமிடத்திற்குப் பன்னிரெண்டாமிடத்தில் பரல் குறைந்தும், பன்னிரெண்டாமிடத்திற்கு இலக்கனம்

பரல் ஏறியும் இருக்கில் அதிக வாழ்வு உடையவன் என்க. இலக்கனம் முதல் பன்னிரெண்டாமிடம் வரைக்கும் பரல் அதிகம் தாழ்வு அறிந்து பாவகப் பலமும் அந்தப்படி சொல்லுக. இரவி முதலானவர் இருந்த தானும் தொட்டு இலக்கனம் வரை எண்ணிக்கண்ட தொகையை ஏழில் பெருக்கி, இருபத்து ஏழில் கழித்து அவரவரக்கு வயது தின கண்டம் சொல்லுக. இதன்மேல் பொதுப்பலம் சொல்லுவோம்.

அட்டவர்க்கப்பலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து ஐந்துக்குக் கவி 302

## 36. சமுதாயப்பலப் படலம்

**பொதுப்பலமே பலமாக யாவருக்கும் சமமாய்ப்**
**புகல்வதினால் சிறிதுளதும் பொய்பதுமற் றுளதால்**
**துதிப்பவர்போல் எடுத்துரைத்த லுதிரநிமித் தியமாய்ச்**
**சோதிடத்தோன் வீண்வார்த்தை சொற்றிடச்சம் மதியான்**
**உதிப்பதுமற் றுளதுவுமுள முடல்வாக் கிவைக்நேர்**
**ஒருகுணமாய்ச் சகலருக்கு முற்றிடிலுன் தாதை**
**விதிப்பதொ ரானனமா கில்பொதுப்பல மும்பலமாம்**
**வேணியனே ! என்றனன்றார் வெயிலயில்வே லவனே.** 303

பொதுப்பலமே பலமாக யாவருக்கும் சொல்லுங்கால், பொய் மிகுதியும், மெய் சொற்பமுமாகக் காண்பதினால் உதர நிமித்தியமாகத் துத்தியம் பண்ணுகிறதுபோல் காணப்படு கிறது. ஆதலால் சோதிடவான் வீண் வார்த்தை சொல்வதற்குச் சம்மதியான். செனன மரணமும் மனம், வாக்கு, காயமும் யாவருக்கும் ஒன்றுபோல் இருக்கவும், பிரம கற்பனையால் யாவருக்கும் ஒருமுகமாக இருக்கவும் கண்டால் ஒருவனுக்குச் சொல்லும் பலன் யாவருக்கும் சரி காணும் அகத்தியமா முனியே என்று திருவாய் மலர்ந்து அருளினவன் கூர்மை தங்கிய வெற்றிமாலையைச் சூடிய பிரகாசம் பொருந்திய வேலாயுதன்.

வேலவுனன் பரிடத்தன் பகுக்கன் புடையேன்
  விளம்பியவிண் ணப்பமிது திருச்செவிக்கும் ஏறா
தாலெனினும் அன்னையரின் பாலமிர்தம் அருந்தி
  அன்புடைமை செய்தவர்கள் அகிருசிச்சொல் அளித்தும்
பாலகர்தம் மழலைமொழி கேட்டிதயம் களித்த
  பாலுமின்ன மின்னமெனப் பகர்வதுபோல் அசுரர்
காலசுரர் அனுகூல திருவுளம்சற் றிரங்கிக்
  கழறெனவன் புறுமுனிக்காய்க் கழறினன்காங் கேயனே. 304

*வேலாயுத தேவரீர் இடத்தில் அன்பு செய்யும் அன்பருக்கும், அன்பு செய்யா நின்ற நாயடியேன் சுவாமி திருசெவிக்கு ஏறாத வண்ணம் விண்ணப்பம் செய்தேனாகிலும் தாய்மார், குழந்தைகளுக்கு இனிதான பாலும் புகட்டி அநேக உபசாரமும் செய்து, தங்களுடைய அதிருசியான வார்த்தையும் கொடுத்து, அவற்றின் மழலை மொழியைக் கேட்டு மிகுதியும் களிப்புற்று இங்ஙனம் இன்னம்சொல்வாய் என்று சொல்வதுபோலும் அசுரந்தாக தேவசகாய சற்றிரங்கித் திருவுளம் பற்றவேண்டும் என்று அநேக வர்த்தனை செய்யா நின்ற அகத்தியமா முனிக்காகத் திருவாய் மலர்ந்து அருளினவன் கங்கா புவனேசுவரிக்குப் புத்திரனான சுப்பிரமணியக் கடவுள்.*

கையிலுவ ரிக்கடலை அடக்கியவா உனது
  கருத்தெனசொல் எனக்கலசத் துதித்தவன்கா சினியில்
பொய்யலதிக் கலியுகத்தின் மெய்சொலல்சற் றரிதாம்
  புகல்வதுந்தன் னுகரநிமித் தியமெனினும் புவியோர்
மெய்யலதற் புதமாக வெகுமானப் பலமாய்
  விளம்பிலதி செயிப்பரல்லான் மெய்யெனினும் விரும்பார்
வையகத்தில் இவர்பிழைப்புக் காகமுன்னூல் பெலமாய்
  வழுத்துநற்காய் வழுத்தெனுமுன் வழுத்தின்மை யவனே. 305

*சமுத்திரத்தை ஒரு கைக்குள் அடக்கியவா ! உன் கருத்தென்ன சொல்லுவாயாக என்று சுவாமி திருவுளம் பற்றா முன்னம் கும்போதயனானவன் சொல்லும் உத்தரம். பூமியினிடத்தில் கலியுகத்தில் பொய்யல்லாமல் மெய் சொல்லல் சற்று அரிதாகையால் தன் உதர நிமித்தம் பொய்*

சொல்லவேண்டுவதானாலும் உலகினர் குணம் மெய் போலும் பொய்யை வெகுமானமாகச் சொல்லில் மிகுதியும் அதிசயிப்பர். வெகுமானக் குறையாக உள்ளபடி சொன்னாலும் செவிகொடுத்துக் கேளார்கள். ஆகையால் வெகுசுணப் பிரயோசனமாகப் பொய் சொன்னாலும் முன்னூல்படி என்று சொல்லவேண்டிச் சற்று வசனம் பெலமாக இருக்கவேண்டுவது என்று விண்ணப்பம் செய்யா முன்னம் திருவாய் மலர்ந்து அருளினவன் கிடாய் வாமனான சுப்பிரமணியக் கடவுள்.

**அவனிசம மாகமலை யத்துதய மான**
**அகத்தியகேள் வருடபலத் தவமானம் தாது**
**யுவம்விசுவி ரோதிகர விகிர்திபிர மாதி**
**உருவிலிகு ரோதிகுரோ தனவியமூ னசனம்**
**நிவமதிவி காரிரிபுக் கிருதுபில வங்க**
**நிகழ்த்தியவிப் பதினேழு நிற்பலநற் பலமாய்**
**இவையற்மற் றவைக்கெனினா மப்பலமும் கூட**
**விசைப்பர்வரு டப்பலத்துக் கினியயனப் பலமே.** 306

தெட்சணபூமி உயர்தல் கண்டு பொதிய வரையில் உதயமாகிய அகத்தியனே ! வருடப்பலம் கேட்பாயாக. பராபவம், தாது, யுவம், விசு, விரோதி, கர, விகிர்தி, பிரமாதி, மன்மத, குரோதி, குரோதன, விய, இராட்சத, துன்மதி, விகாரி, விரோதகிருது, பிலவங்க ஆக வருடம் பதினேழுக்கும் நிற்பலம் என்ப. மற்ற நாற்பத்து மூன்றிற்கும் சுபபலம் என்க. இந்தப் பலத்துக்கு அந்தந்த வருடப் பெயர்படிக்குள்ள பலமும் கூட்டிச் சொல்லுக. இவை வருடப் பலம். இதன் மேல் அயனபலம் சொல்லுவோம்.

**அலமதிகம் வடக்கயனத் துக்கதனுக் காசை**
**பாவகர்மம் ரோகமுதல் பலத்துடனுற் றிடலாய்ச்**
**சொலன்முதல்பேர்ப் பனிரிதுவிற் சொற்பதன மலது**
**சுபபலமாம் ரிதுப்போர்க்கான் துவைசனி யில்லவ**

அலதுளமா தத்ததிபர்க் காளசுப பலமற்
றதற்கதுவாம் பக்ஷமுமப் பலமாமத் திதியில்
நலநலதொன் றெட்டீரே ழாறொருநான் கலது
நன்மையுள தாமதியின் ஏந்தல்களவி ளாலே. 307

உத்தராயணத்துக்குச்சுபலம் என்க. தக்ஷிணாயனத்துக்கு துராசை, பாவகர்மம், ரோகம் இவற்றோடு முன்சொன்ன சுபபலமும் கூட்டிச் சொல்லுக. கார்கால ருதுவுக்குச் சொற்பமான தனம் என்க. முன்பனி ருதுவுக்குத் தரித்திரம் என்க. மற்றுள்ள ருதுவுக்கு சுபபலம் என்க. இதற்கு மாதாதி பலாபலன் கூட்டிச் சொல்லுக. பூர்வபட்சத்துக்குச் சுபபலமும், அமரபட்சத்துக்குத் துர்ப்பலமும் சொல்லுக. பிரதமை, சதுர்த்தி, சஷ்டி, அஷ்டமி, சதுர்தசி இவைகளுக்குத் துற்பலம் என்க. அமாவசைக்குத் தரித்திரம், சோரம், துன்பம் என்க.

இனன்முதல்வா ரப்பலத்துக் கவரவருக் கமைத்த
இயல்புளதாம் உடுக்காலுக் கிசைப்பதுமப் பலமாம்
வனசன்முதல் வாரமுமத் திதிதினமிம் மூன்று
மருவதுசு பம்அசுப மற்றெனிலப் படியாம்
தினமதிலத் திதியிலுள கெண்டாந்த மாகில்
சிசுபிதுர்மா துருதோடம் சேர்தலவ சித்தோர்
தனமிலிபொல் லாதவனாம் தார்நீர்புள் ளாடை
தானவரில் அபுத்தமிவை தாய்பிதுர்சஞ் சலமே. 308

ஞாயிறு முதல் சனி வரைக்கும் வாராதிபர்வர்க்கத்தைக் கொண்டு பலம் சொல்லுக. நட்சத்திரத்திற்கு அந்தந்த பாதாதிபருக்குத் தக்க பலன் சொல்லுக. வாரம், நட்சத்திரம், திதி கூட்டிச் சுபயோகத்திற்குச் சுபபலமும், அசுப யோகத்திற்கு அசுப பலமும், சித்தயோகத்திற்கு இவை இரண்டும் கூட்டிய பலமும் சொல்லுக. சித்தயோகத்திற்கு இவை இரண்டும் கூட்டிய பலமும் சொல்லுக. நட்சத்திர கெண்டாந்தம், திதி கெண்டாந்தமாகில் சிசு, பிதுர், மாதுரு தோஷம் சொல்லுக. அவசித்தாகில் தரித்திரன், பாவி என்க. பூசம், பூராடம், அவிட்டம், சித்திரை, அபுத்தமூலம் இவையாகில் மாதுர், பிதுர், சஞ்சலம் என்க.

சஞ்சலம்சூல் அதிகண்டம் பரிடணம்சாத் தியம்பொய்
 சனத்வேடம் வைதிரிதி துருவமவத் தமுமாம்
வஞ்சகம்பத் திரங்கீட மற்பாயு இலைவயின்
 மற்றுளயோ கம்கரனம் யாவையும்நற் பலமாம்
மஞ்சலென வாதநித்த அதிகசனத் துறவெற்
 கற்கெனில னாசார பற்பசுத ரமைதி
மிஞ்சியதப் பலமுளதா கும்உதய மாகில்
 வெகுமானம் தனம்பாக்யம் வெகுசனமித் திரமே. 309

சூலயோகம், அதிகண்டம், அரிடணம், சாத்தியம் இவையாகில் கோள் சொல்லல், சனத்துவேடம் என்க. வைதிரிதி, துருவமாகில் துர்ப்பலம் என்க. பத்திரவா கரணமாகில் வஞ்சம் என்க. கீடமாகில் அற்பாயுள் என்க. மற்றுள்ள யோக, கரணமாகில் சுபபலம் என்க. பகலாகில் வெகுசன இரட்சகன், வெகுசன மித்திரன் என்க. நிசி காலமாகில் அனாசாரம், அற்ப புத்திரர், அடக்கம் இவற்றோடு முற்பலம் கூட்டிச் சொல்லுக. உதயகால சனனமாகில் வெகுமானம், தனம், பாக்கியம், வெகுசன மித்திரம் என்க.

மித்திரம்சொல் செலவரசர் வெகுமானம் ரிணமில்
 வெகுதனம்மத் யானமெனில் அபரமிதில் சமமாம்
மத்தமன மனமவமா னந்தரித்திரம் அற்பாயுள்
 வாமகிருத் திரனாகில் அதற்குளதுற் றொழிலா
நித்தியவோ ரைபலமும் வேளைவர்க்கம் பட்சி
 நிகழ்த்தியபேர்ப் பலம்போலும் நேருளதாம் சரத்தில்
சத்திசிவம் சுபமசுபக் கினிமார ணமாய்ச்
 சாற்றிலைம்பூ தமெனிற்றற் பெயர்தற் பலமே.310

மத்தியான காலமாகில், வெகுசனமித்திரம், வெகுசனாங்கு கார வசனம், இராச வெகுமானம், ரிணம் இன்மை, வெகுதனம் என்க. அபரான்னமாகில் சமபாக்கியம் என்க. அத்தமன சந்தியாகில், அவமானம், தரித்திரம் அற்பாயுள் என்க. சர்ப்ப முகூர்த்தமாகில், சர்ப்ப வெகுசனத் துவேடம், அற்பாயுள் என்க. ருத்திர முகூர்த்தமாகில், வங்கிச நாசம், ஆற்பன இங்கிசை, தாரசசுததோடம், தரித்திரம்,

*அற்பாயுள் என்க. காலவோரையாகில், அதிபதி பேர்க்குள்ள பலன் சொல்லுக. வேளைக்கு அப்பெயர் பலன் சொல்லுக. வர்க்கத்துக்கும் பட்சிக்கும் நேர்த்தொழில் பெயர் வைத்துப் பலன் சொல்லுக. சரத்தில் சந்திரகலைக்குச் சுபபலமும் சூரிய கலைக்குத் துர்ப்பலமும் அக்கினி கலைக்கு மரணமும் பூதகலைக்கு அப்பெயர்ப்படி பலமும் சொல்லுக.*

தற்பெயர்மற் றுள்ளவைக்கும் தற்பெயரில் சொல்லன்மேல்
    சாற்றுதலக் கனபலமாம் தவமுனியே தகர்ப்பேர்
முற்பவன மாகவரி லரசர்வெகு மான
    மூர்க்கன்வெகு சனப்பிரியன் மோகிதை ரியவான்
நற்கனனா சாரன்மன தமைதிபொறை அறிவ
    ஆகம்ரம்யன் மனப்பயமெய் யனற்றருவா யுதத்தால்
கற்படன்மட் சுவ ர்விழத லால்விரணா திக்கன்
    களத்ரத்வயன் தனனயறர்பங் கபங்கனிட்டர் சிரேட்டர்களே 311

*சொன்னவை அல்லாமல் மற்றது எது உதயமோ அந்தப் பேர்ப்படி பலன் சொல்லுக. அகத்தியனே ! இலக்கன பலன் கேட்பாயாக. இலக்கனம் மேடமாகில் இராச வெகுமானம், மூர்க்கன், வெகுசனப்பிரியன், மோகி, தைரியவன், அற்பன், அனாசாரன், அடக்கமுடையவன், பொறுமை, அறிவு, அழகு, மனோபயம் இவை உடையவன். அனல், மரம், ஆயுதம், கல்சுவர் விழுதல் இந்த வர்க்கங்களினாலே விரணம் அதிகம் உள்ள சரீரம், உபய களத்திரம், அற்ப புத்திரர், சகோதர சிரேஷ்டன்.*

களத்திரதோ டந்தனையர் காலாந்த்ர முளர்தற்
    கார்யபரன் குணதோடன் கண்டறிவன் கபடத்
துளத்தவனாம் விடயசள னனையுபய மனைவி
    உரைக்குடையன் மூத்ரகிரிச் சனனுதர ரோகி
வளர்த்திசொற்ப தனமறவ ழக்கறிவன் கணக்கன்
    மைதுனவ பேட்சையவ மனையுமகா கபடி
அளப்பிலவ மானமுள அற்பசுதர் காமத்
    தமுதுசதா துக்கிஇவை யான்கதைகண் டதற்கே. 312

இலக்கனம் இடபமாகில் களத்திரதோடம், காலாந்திர புத்திரர், சுயகாரியபரன், குணதோடம் அறிவன், மனோகபடி என்க. மிதுனமாகில் விடயசளன், உபயமாதா, களத்திரம் சொல் கேட்பவன், மூத்திரகிரிச்சனன், உதரரோகி, வளர்த்திடுவனாதிகன், வார்த்தை சோர்வு இல்லாதவன், வழக்கறிஞன், கணக்கன், மைதுன அபேட்சி, ரோக களத்திரன் என்க. கற்கடகமாகில் களத்திர சுகவீனன், கபடுள்ள அவமான களத்திரம், அற்ப புத்திரர், வெகு காமி, சதாதுக்கி என்க.

அதமகர்மி நேத்ரசிர சாசனநோய் ஈன்றோர்க்
  காகுலன்கெம் பீரவசனத் தவனாம் அழகு
சுதரதிகம் பின்னிரக்கம் வஞ்சகம்து றாசை
  சுயகார்ய பரன்பிறரால் தொழில்தனம்பெற் றுடையோன்
இதமதிதம் இரண்டுமறிந் தினசனபந் துவினால்
  எப்பொழுதும் பூச்யமுள னாம்இரக்கம் பீதி
மதனசுகி பொறுமைபுகழ் மதிகுணம்வல் லமைநல்
  வடிவறிவாம் சீயமுதல் துலைவரைக்கு மாமே. 313

இலக்கனம் சிங்கமாகில் பாவகர்மி, நேத்திர, சிர முக ரோகி, மாதுர், பிதுர்த்துவேசி, கம்பீர வசனி என்க. கன்னியாகில் அழகு, வெகுபுத்திரர், பின்னிரக்கம், மனோவஞ்சகம், துர் ஆசை, சுயகாரியபரன், பிறரால் தொழில் தனம் பெற்றுடையோன், இகமதிகம் இரண்டும் செய்வன், பந்துசன பூச்சியன் என்க. துலாமாகில் இரக்கம், மனோபீதி, மன்மத சுகி, பொறுமை, புகழ், நல்ல புத்தி, நல்ல குணம், வல்லமை, அழகு, அறிவு இவை உடையவன்.

வரைவில்விச யப்பிரியன் பந்துசனது வேசி
  வஞ்சகனாம் துலனுபய மானிமாதி மானாம்
உரையில்வணங் கினவருற உண்மைஅபி மானம்
  உத்யோக வானாம்வா சாலகனு மாயி
திரமதிது ராசையினன் ஆகுமகட கண்ட
  தரித்திரன்மித் திரரையினல் செய்பவனாம் தெய்வம்
பெரியவர்பி ராமணர்தம் மிடத்ததிக பக்தி
  பெருஞ்செலவு தேள்முதல்சேல் அளவிவையே சுவ தே. 314

இலக்கனம் விருச்சிகமாகில் வரையற்ற விஷப்பிரியன், பந்துசன துவேசி, வஞ்சகன், தரித்திரன், வெகுமானி, அவமானி, புத்திமான் என்க. தனுவாகில் நல்ல வசனன், மித்திரன், சத்தியவான், அபிமானி, சதா உத்யோகபரன் என்க. மகரமாகில் வாய்ச்சால்கன், துராசை உடையவன் என்க. கும்பமாகில் அகண்டவயிறு, தரித்திரன், மித்திரரை உபாதிப்பவன் என்க. மீனமாகில் தேவ பிராமணர், பெரியவர்களிடத்தில் பக்தியுடையவன் வெகு செலவாளி.

**பேசுவதல் வோரைமுதல் சட்டியாங்சம் வரைக்கும்**
**பேரசுப சுபமதாய்ப் பேசுவதப் பலமாம்**
**வாசமலர் இறையுதயம் வரில்சிரநேத் திரநோய்**
**வழிப்பயணம் சஞ்சாரம் மனரனன்மாப் பீதி**
**கேசமச னந்தனையாற் பமதி யாகில்**
**கீர்த்திதய வழகுசுப கிரியைசளன் றழலேல்**
**பூசல்களத் திரஈனன் சஞ்சலம்பொ றாமை**
**பூமிசகோ தரலாபம் பிரவிரணங் கரவே.** 315

இலக்கன வோரை முதல் சட்டியாங்கிசம் வரைக்கும் உள்ள பேர்ப்படி அசுபசுபம் அறிந்து அதற்கு அதுவாய்ப் பலன் சொல்லுக. இலக்கனத்தில் இரவி நிற்கில் சிரநேத்திர ரோகம், வழிப்பயணம், சஞ்சாரம், இராசாக்கினி, மிருகபயம், அற்பகேசம், அற்பபோசனம், அற்ப புதல்வர் என்க. மதியாகில் கீர்த்தி, தயவு, அழகு, நல்ல தொழில், காரியசளன் என்க. சேயாகில் பூசல் களத்திர ஈனன், சஞ்சலம், பொறாமை, பூமியால் சகோதரத்தால் இலாபம், சரீரவிரணம், சோரம்.

**புரப்புதனேல் வித்தைதனம் புகவ்வேசர் புசங்கம்**
**புலவன்வெகு சனபூச்சியன் பொறுமைபுத்தி அறிவு**
**குருப்பெயரில் அநேகசன இரட்சகன்வி வேகி**
**குலேசனதி ரூபனுல குடையவர்கொண் டாடும்**
**வரக்கவிதை தெய்வீக வசனம்வெகு மானம்**
**மதியறிவு நல்லகுணம் மனசுபுக பாகில்**
**விரைக்குழலார் வசியமுகன் விசையகுசலன்**
**வெகுமானி இவர்க்குடைய காரகமிக் குளதே.** 316

இலக்கனத்தில் புதனாகில் வித்தை, தனம், புகழ், வேசர், புசங்கம், புலவன், வெகுசன பூச்சியன், பொறுமை, புத்தி, அறிவு என்க. குருவாகில் அனேக இரட்சகன், விவேகி, குலேசன், அதிரூபன், உலகுளோர் கொண்டாடும் வரகவிதை, தெய்வீக வசனம், வெகுமானம், நல்ல புத்தி, அறிவு, நற்குணம், நல்மனசு என்க. சுக்கிரனாகில் ஸ்திரீ வசியன், சுமுகன், விடயகுசலன், வெகுமானி என்க. இவர்களுடைய காரகமும் கூட்டிச் சொல்லுக.

மிக்கபவச் சனியுதயம் மேவிலவ மானம்
விதனம்வெகு போசனம்வி சாரநிரு வித்தை
அக்கிரமம் பொய்கொலைசெ யவக்யாதி சோர
மனாசாரம் வாயடித்தல் அடித்ததட்டிப் பறித்த
துக்கமன மடிவுறக்கம் சோம்பலர வாகில்
சோரம்வெகு சனபூச்யம் துற்தொழில்வி ரோத
மக்கள்வெகு பாக்யபன வஞ்சகந்தி யாகம்
வர்மமாக கோபம்வெகு வார்த்தையுடை யவனே. 317

இலக்கனத்தில் சனி இருக்கில் அவமானம், தரித்திரம், வெகுபோசனம், விசாரம், நிருவித்தை, கிரமத்தப்பு, பொய் சொல்லல், கொலை செய்தல், அவக்யாதி, சோரம், அனாசாரம், வாயடித்தல், அடித்ததைத் தட்டிப் பறித்தல், துக்கம், மனமடிவு, சதாநித்திரை, சோம்பல் என்க. இராகுவாகில் சோரம், வெகுசன பூச்சியன், துர்த்தொழில், விரோதம், புத்திரம், வெகுபாக்கியம், மனவஞ்சகம், தியாகம், மனோவர்க்கம், மகாகோபம், வெகுவார்த்தை உடையவன்.

அவமதிதுற் சிகியுதிக்கில் யாசகம பாய
அவமானம் அரசர்பயம் அதிகசனத் வேடம்
பவம்வதைசெய் குகன்முதல பாதகம்வி காதம்
பயமிலதாம் மாந்தியெனில் பயங்குழலம் கர்வம்
சுவைவிகட மந்தபுத்தி இலன்பவனன் கதுவில்
காரியவிக் கினநிதனம் காலன்மர ணம்செய்
குவன்மதிநந் தனன்முதல்வர் தற்பெயர்தற் பலமாய்க்
குணமகுணத் தீறளவுக் கூறுவதவ் வியல்பே. 318

இலக்கனத்தில் கேது இருக்கில் பாவபுத்தி, பொல்லாதவன், யாசக சீவனன், அபாயம், அவமானம், இராசபயம், வெகுசனத் துவேடம், பாவம், வதைசெய்தல் முதலாகிய பாதகம், விகாதம், மனோதிடம் என்க. குளிகனாகில் மனோபயம், குடிலம், கர்வம், சஞ்சலம், விகடம், மந்தபுத்தி என்க. குளிகபவனனாகில் காரிய விக்கினம், தரித்திரம் என்க. காலனாகில் மரணம் என்க. கலைக்கியான பாதன் முதலானவராகில் அவரவர் பேர் போலும் பலன் சொல்லுக. இந்தப்படி பன்னிரண்டாமிடம் வரைக்கும் குணாகுணம் அறிந்து பலன் சொல்லுக.

சமுதாயபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து ஆறுக்குக் கவி 318

### 37. மாதர் சாதகப் படலம்

இயல்புளசந் தாசச்செந் தூரபொதுப் பலமும்
இசைந்ததந் நாரியர்சா தகப்பலமெய் படியே
வயநடவு கந்தமயில் வாகனவென் றேத்தும்
அகத்தியனுக் குரைத்தனன்மின் னார்க்கள்இது வாமோ
தயபலமும் பூவுதயத் தற்காலக் கிரக
சாரமும்சேர்ந் துரைப்பரதால் தபனன்முதல் மலடாம்
புயமின்வித வைதரத்தம் விரகி சோரம்
புகல்வதுநே ராம்வாரப் பலன்ருதுப்பூப் பதற்கே. 319

இயல்புள்ள சந்தாசலச் செந்தூரா ! பொதுப்பலமும் அடியேனுக்குத் தெரியும்படி புலப்படுத்தியது சரியே. இதன்மேல் மாதர் சாதகப்பலமும் திருவுளம் பற்றவேண்டும். கிடாய் நட உகந்த மயில்வாகனா என்று அனேகமாகிய தோத்திரமும் செய்து தெண்டம் பண்ணிநின்ற அகத்தியமா முனிக்குத் திருவுளம் இரங்கித் திருவாய் மலர்ந்தருளினன். மாதருக்கு ருது உதயப் பலமும் சென்ன உதயப் பலமும் கூடச் சேகரித்துப் பலன் சொல்வார்கள். ஆதலால் ஞாயிறில் ருதுவானால் மலடி, திங்களாகில் செல்வி, செவ்வாயாகில் விதவை, புதனாகில் புத்திரவாட்டி, வியாழனாகில் தனவாட்டி, வெள்ளியாகில் விரகி, சனியாகில் கள்ளி.

பூப்பதனை யாழகித் புனலெமனே ரைந்தப்
புல்லிவைப்பால் கற்பருத்தம் புதல்வரிலொன் றவமாம்
மீப்பலமற் றொன்பதொன்றெட் டீரேறி றவமான்
மீன்துலையாழ் வில்சேயில் தீதவைமிக் குளதாய்
மூப்பிளமை மற்றவர்காண் டதுகாலம் இடமும்
முதற்குளதாய் இரவிமுதல் மொழிவர்பலம் புதிது
தீப்படுதல் எழுதல்எழில் பான்மலினம் பீறல்
சீர்ணம்இவைக் குளவொலியல் கியல்பதும்செப் புதலே. 320

பூரம், திருவாதிரை, ஆயில்யம், கார்த்திகை, பூராடம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுவதி, அனுசம், விசாகம், கேட்டை இவை ருது தினமாகில் கற்பு, அருத்தம், புதல்வர் இவை மூன்றில் ஒன்று அவம் என்ப. நவமி, பிரதமை, அட்டமி, சதுர்த்தி, அமாவாசை இவை முன்போலும் ஆகாது என்ப. இடபம், மீனம், துலாம், மிதுனம், தனுசு, மேடம், விருச்சிகம் இவை தீது என்ப. மற்றுள்ளவை. சுபபலம் என்ப. மூத்தவர், இளையவர், மற்றவர் ருது கண்டவர்கள் என்பதும் இராப்பகல் என்பதும்; உள், வெளி, இடை என்பதும் இலக்கன வர்க்கம் கண்டு சொல்லுவது, இரவி நேர் உடுப்பினம் அறியவேண்டில், பலம் புதிது, தீப்படல், எழுத்துள்ளது, அழகுள்ளது, வெளுப்பு, அழுக்குள்ளது, பீற்றல், சீரணம் என்றும் கேது வரைக்கும் சொல்லுக.

## *ருதுவாகும் காலம்*

தலச்சுதனொன் றேழுதிக்கில் ருதுப்பலபக் குவமந்
தணனெனில்வி வாகமிர சதமெனில்சை யோகம்
பெசப்பதுமற் றுளர்க்குளதாய்ப் பேசுதலப் பலமாம்
பிறந்ததினப் பலமுமிந்தப் பலமுமொன்றாய்ப் பிணைந்துப்
பலத்தியல்புக் குரைப்பதுநற் பலமாமிப் பலமும்
பகர்ந்திடக்கேள் முனியேயிப் பாருதயம் புகராய்
நலத்திதிதாய் பெண்ணயனிந் நாட்களிலக் கனமும்
நன்மைபெறில் எந்நாளும் நன்மையிவட் கெனுமே. 321

ருது கால இலக்கனத்திலாவது இதற்கு ஏழிலாவது சேய் நிற்கில் பக்குவகாலம் அறிந்து ருது என்க. குரு நிற்கில் விவாக கால ருது என்க. சுக்கிரன் நிற்கில் சையோககால ருது என்க. மற்றவர்கள் நிற்கில் பலம் கொண்டும், காரகம் கொண்டும் ருதுப்பலன் சொல்லுக. இந்தப் பலமும் சனனகாலப் பலமும் கூட்டிச் சொல்வது நற்பயன் என்க. ஆதலால் அகத்திய முனியே! செனனகாலப் பலமும் கேட்பாயாக. செனன காலம் சுக்கிர வாரத்தில் சுப திதியாகப் பூரம், அவிட்டம், உரோகிணி இந்த மூன்றில் ஒரு நட்சத்திரமாகில் இலக்கனமும் சுபமாகப் பலக்கில் ஆயுர்த்தாயம் வரைக்கும் பாக்கியவதி.

## *சாதகி இயல்பு*

**இவளுதயம் ஒற்றையுமாய் இந்துசித னபெலத்**
**தெய்தினும்சே யாங்சமுதல் சீயமிருக் கினுமான்**
**அவளுருவ மேதையிலொன் றாயிவனங் கிசமும்**
**ஆகிலல வன்னுதய மாகமதி யாகில்**
**தவமுநடை இவன்மகனும் சத்துருவுற் றிருக்கில்**
**சரத்துதய மதியாகத் தபனன்வசை சாலில்**
**பவளயிதழ்த் திருவழகைந் துதயமினல் லவர்கள்**
**பற்றிலறி வியல்புகுணம் பாக்யவதிப் பேரே.** 322

இலக்கனம் ஒற்றையாக மதி, சுக்கிரன் துர்ப்பெலமாகிலும், சிங்க இலக்கனத்தில் சேயாங்கிசம் ஏறிலும், சாதகிக்குப் புருட வடிவு என்ப. மிதுனம், கன்னி லக்கனமாகப் புதன் அங்கிசம் ஏறிலும், இலக்கனம் கடகமாக மதி இருக்கிலும்; மதி, புதன்கூடி ஆறாம் இடத்தில் இருக்கினும், இலக்கனம் சரமாகி மதி இருக்க, இரவி எட்டாமிடத்தில் இருக்கிலும் மகாலெட்சுமி போலும் அழகுடையவள் என்ப. ஒன்று, நான்கு, ஐந்தாம் இடங்களில் சுபர் இருக்கில் இயல்பு குணம், பாக்கியவதி.

**பதியிவளைச் சேர்வதுவும் ருதுகாலத் தினநேர்**
**பதினாறா நாள்வரைகர்ப் பம்முறுநாட் பேரால்**
**உதிதரல்பெண் ஒற்றைமற்ற தேகதசம் பதின்மூன்**
**றுதித்தல்விப சாரமதால் ஒழித்திவைமற் றுளதி**

அதிபெலமுஞ் சுபமுமுள திதிவரை நாள்மற்
றாதலும்பார்த் தற்காலத் துதயமுங்கண் டனைதல்
இதில்அதிக பிரபலயோ கத்துளகர்ப் பமுமாம்
இதன்மேலும் கர்ப்பவியல் கேட்பதகத் தியனே. 323

சையோக காலம் அறியவேண்டில் ருது காலத்தின் முதல் பதினாறு நாள் அளவும் கர்ப்ப உற்பத்திக்குக் காலம் என்ப. ஆதலால் இவற்றில் ஒற்றித்த நாளில் பெண்ணும், இரட்டித்த நாளில் ஆணுமாக உற்பவிக்கும். பதினொன்று, பதிமூன்றாம் நாளில் பிறந்த பெண் விபசாரத்தை அடையும் என்க. ஆதலால் இவை அல்லாத நாட்களில் அதிபெலமும் சுபமும் உள்ள நாள், வாரம், திதி இவை முதலானவை எல்லாம் சுபமாக நிசி காலத்தில் இலக்கனம் சுபமாகப் பார்த்துச் செய்வது சேயோகம் என்ப. இதில் சனித்த கர்ப்பம் அதிபிரபல யோகமாக இருக்கும். இதன்மேல் கர்ப்ப இயல் கேட்பாயாக அகத்தியமா முனியே!

## *கர்ப்பவியல்*

பதனமில்லா தசுபருப சயமாயா தானம்
பற்றியலக் கனகோணில் குருவுறப்பார்க் கவன்சேய்
மதிரவிமித் திரராக மருவிடில்கர்ப் பமுமாம்
வரத்தனையு மாந்தரித்த மாதமுதல் புகர்சேய்
நிதிரவிஇந் தசிதபுதன் நேரிவர்கள் பலக்கில்
நிசமான கர்ப்பநிரா குலமாநேர் இவர்கள்
அதனமுறில் அவரவருக் கமைந்திடுமா தத்தில்
ஆகுலமாம் சுபர்பார்க்கில் சஞ்சலமாம் அதற்கே. 324

ஆதான இலக்கனத்துக்கு உபசெயத்தில் பாவர் நிற்க ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடங்களில் குரு இருக்க, சுக்கிரன், சேய், மதி, இரவி நால்வரும் மித்திரராகக் கூடில் கர்ப்பவர்த்தனை என்ப. சுக்கிரன், சேய், குரு, இரவி, மதி, சனி, புதன் இவர்கள் பலக்கில் கர்ப்பம் தரித்த மாதம் முதல் நேர்வர்த்தனை சொல்லுக. இவர்களில் ஒருவன் ஆறாம் இடத்தில் இருக்கில் அவனுக்குச் சொன்ன மாதம் கர்ப்ப சலனம் சொல்லுக.

## கர்ப்பம் தரித்திருக்கும் கால அளவு

மதத்தசிதன் அங்கிசமொன் றாய்க்குருபா ராமன்
மருவிலந்தக் கர்ப்பம்வரு டம்மூன்றுக் குளதாம்
இதற்குடுகோன் கூடில்முந்நான் கிரவியிடத் தணிக்கோ
ணேயதொன்றேல் பூர்ணமதற் கெய்துதல்அப் படியாம்
அதற்கிலயல்பால் பெண்அலிமற் றரவுகொடி கூட
அங்கபங்கம் ஒற்றைரட்டை யதனோர்மற் றுளது
முதல்தனையர் பலத்துரைத்த இயல்பதுபோல் இதற்கு
மொழியரினிக கர்ப்பசல னம்முறல்சொற்றிடலே. 325

*ஏழில்இருந்த சனி, இலக்கனத்தில் அங்கிசம் ஏற, வியாழன் பாராது இருக்கில் மூன்று வருட கர்ப்பம் என்க. இப்பலத்துடனே சந்திரன் கூடில் பன்னிரண்டு வருட கர்ப்பம் என்க. இரவி இருந்த இராசிக்கு மூன்றாமிடம் திரிகோணமே இலக்கனமாகில் முன்னூறு நாளைக் கர்ப்பம் என்ப. அக்கோளுக்குக் குறையில் குறையும் என்ப, ஏறில் ஏறும் என்ப. இதற்கு ஆண், பெண், அலி, ஒற்றை, இரட்டை, கொடிச்சுற்றல், பாம்புடன் உதித்தல், அங்க ஈனம் இவை முதலானவையெல்லாம் முன்சொன்ன சனனோதயப்படி சொல்லுக. இதன்மேல் கர்ப்ப சலனம் சொல்லுவோம்.*

## கர்ப்ப சலனம்

சொற்பர்விழித் திடக்கனலொன் றைந்தேழுற் றிருக்க
துர்ப்பலமாய்க் குருமறையில் கர்ப்பமும்துர்ப் பலமாம்
அற்பர்விய மாறனையாய் ஐந்தேழ்சேய் இருக்கில்
ஆயுதத்தால் கர்ப்பம்விழ லாலவளு வதுவாய்
முற்பதியில் சனியணையில் சுபரீறில் பவராய்
முந்நூல்மார் பினன்பாரா திருக்கின்முகம் ஏழுள்
பொற்புகர்பொல் லாதவர்கள் கிடையிருக்கில் சனிசேய்
புரமுனிவர் வர்க்கமுறில் புகல்வதுமுற் பலமே. 326

*ஒன்று, ஐந்து, ஏழாமிடங்களில் சேய் இருக்க, பாவர் பார்க்கக் குரு துர்ப்பெலமாகி மறையில் கர்ப்ப சலனம் என்ப.*

நான்கு, ஆறு, பன்னிரண்டாமிடங்களில் பாவர் இருக்க, ஐந்து, ஏழாமிடங்களில் சேய் இருக்கில், கருவியாடலால் கர்ப்பம் மரணம் என்ப. அதனால் மாதுரு மரணம் என்ப. ஒன்றில் சனி, மூன்றில் சுபர், பன்னிரண்டில் பாவர் இருக்கக் குரு பாராது இருக்கிலும்; இரண்டு, ஐந்து, ஏழாமிடங்களில் குரு, சுக்கிரனும் பாவ மத்தியமாய் இருக்கிலும்; ஒன்று, ஐந்தாமிடம் , இதற்கு உடையவர்களும், சனி, சேய் வர்க்கம் ஏறிலும் முன்சொன்ன பலம்.

புகர்வேளுக் கிறைபெலமாய்ப் பாதகரைப் பொருந்தி
புக்குதலப் பதனமெனில் பிதுர்மரணம் புதல்வன்
செகமுதயம் ஆகுமுனம் சிசுவிறைபொன் பதனத்
தெய்திடினும் கர்ப்பசல னப்பெயர்சொற் றிடுவார்
சுகனுதயம் வயமாவங் கிசமுறினும் இவனில்
சுடரனலாங் கிசம்முதலாய்த் தோன்றிடில்துக் கியுமாம்
மகமுகமைந் தொன்றேழொன் பதுசுபமாய் இவர்கள்
அதிபலமுற் றிடில்பாக்ய பதிவிரதை அவளே. 327

சுக்கிரனும், ஏழுக்குடையவனும் பெலமாகிப் பாவருடன்கூடி ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருக்கில் கர்ப்ப காலத்தில் பர்த்தா மரணம் என்ப. ஐந்தாம் இடத்திற்குடையவனும் குருவும் மறையினும் கர்ப்பசலனம் என்ப. சனி இலக்கனத்திலிருந்து சிங்காங்கிசம் ஏறிலும் மகர, கும்ப இலக்கனமாகி, இரவி, சேய்கூடி அங்கிசம் ஏறிலும், சதா துக்கி என்ப. நான்கு, இரண்டு, ஐந்து, ஒன்று, ஏழு, ஒன்பதாமிடங்கள் சுபவர்க்கமாகிச் சுபகிரகங்களும் அதில் பலமுற்று இருக்கில் பாக்கிய பதிவிரதை.

பதிவிரதை சேயிலொன்றாய்ப் பார்ப்பானுற் றிடிலான்
பாகனிலொன் றாய்க்குருவின் அங்கிசம்பற் றிடின்கோள்
மதிநிதிமால் புகர்இருக்கின் மால்விலொன்றாங் கிசகம்
வவ்விலொன்றே ழுதற்குடையர் மாழைவர்க்கத் தேறி
இதுபலமெட் டுசிதனுற மூன்றொருவர் எய்தில்
இற்பாவர் சேகரிக்கில் உபதேசங்கேந் திரக்கோள்
அதில்சுபருற் றிடில்சுதரா மானரிதேள் மாதொன்
றாய்மதியுள் ளுரின்மதிக்கீ தாகிலற்ப மகவே. 328

மேடம், விருச்சிகம் இலக்கனமாகிக் குரு இருக்கிலும், இடபம், மிதுனம், கன்னி இவை இலக்கனமாகிக் குரு அங்கிசம் ஏறிலும், ஒன்று, ஐந்து, ஒன்பதாம் இடங்களில் மதி, குரு, புதன், சுக்கிரன் இருக்கிலும், இலக்கனம் தனுவாகி புதன் அங்கிசம் ஏறிலும்; ஒன்று, ஏழாமிடங்கள் இவற்றிற்கு உடையவர்களும் குரு வர்க்கம் ஏறிலும் பதிவிரதை என்ப. எட்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, மூன்றாமிடத்தில் ஒரு தனி கிரகம் இருக்கிலும், நான்காமிடத்தில் பாவர் கூடிலும், பாவர் உபசெயமும் சுபர் கேந்திர கோணமுமாக இருக்கிலும், புத்திரவாட்டி என்ப. இடபம், சிங்கம், விருச்சிகம், கன்னி இலக்கனமாக, ஐந்தாமிடத்தில் மதி இருக்கிலும் அல்லது இந்த இலக்கனங்களில் இருக்கனும் அற்ப புத்திரர்.

அற்பதிலக் கினக்கோனி லானனமுற் றிடிலீ
தரிவைவர்க்கத் துற்றிடினும் பெண்பெறுவள் அதிக
எற்பதிபத் துறில்பாவ புத்திரர்மால் ஈறில்
இரவியன லாபமுறில் இதமுளநந் தனராம்
நிற்புரனில் இரவிமுதனில் பவர்களி யல்போல்
நிகழ்த்துதலப் பதிபகநி டேகமிவைக் கியல்பாம்
முற்பதிம னுற்றவர்பார்த் தவரியல்பு போல
மொழிவதிவட் கியல்பிதுவும் முழுதும்உள தெனுமே. 329

ஒன்று, ஐந்து, ஒன்பது, நான்கு, இரண்டு இவை திர வர்க்கமாகி மதி நிற்கில் பெண் பெறுவாள் என்ப. இரவி, சனி கூடிப் பத்தாமிடத்தில் இருக்கில் பாவ புத்திரர் என்க. பன்னிரண்டாமிடத்தில் புதன், பதினோராமிடத்தில் இரவி, சேய் கூடில் சுபபுத்திரர் என்ப. ஏழாமிடத்தில் இரவி முதல் உள்ளவர்களில் இருப்பது அறிந்து பதிபக நிடேக இயல்பு சொல்லுக. இலக்கனத்தை, இலக்கனாதிபதியைக் கூடினவர் பார்த்தவர் கண்ட சாதகி இயல்பு சொல்லுக.

உளமசுப ரேலிலகி ஒன்றாமன் மால்வீ
டுதயமெனச் சனியாங்கிட முறின்மதிபொன் வீட்டில்
களர்தரும ரைக்கூடில் கடகமொன்றாங் கிசகம்
கனகமுறில் பெற்றிழப்பள் காரியிலொன் றாகி

இளமைஅதி பதியாங்கிட மேறிலசி தன்மால்
ஏழணையில் விற்குருவை இரவியுறின் மலடாம்
விளவரவா றனல்சனிதான் மேவிலழல் வீட்டில்
இதுவுறில னாசார மென்பதிவட் கெனுமே. 330

*ஐந்தாமிடத்தில் பாவர் இருக்கினும், நான்காமிடத்தில் கேது இல்லாமல் மிதுனம், கன்னி இலக்கனமாகிச் சனி அங்கிசம் ஏறினும், கடகம், தனுசு, மீனம், பாவர், சுபர் கூடிலும், கடகம் இலக்கனமாகக் குரு அங்கிசம் ஏறிலும், பெற்றிழப்பள் என்க. மகரம், கும்பம் இலக்கனமாகச் சேய் அங்கிசம் ஏறிலும், ஏழாமிடத்தில் சனி, புதன் இருக்கிலும், தனுசில் குரு, இரவி கூடினும் மலடி என்ப. ஆறாமிடத்தில் கேது, பன்னிரண்டில் சனி, சேய் இருக்கிலும், மேடம், விருச்சிகம், மதி இருக்கிலும் அனாசாரம் உடையவள்.*

பதிபுருட லட்சணமா மணியாயத் திறைவர்
பாலருறில் ஏழில்ரவி பவர்சேரில் ரிபுவா
மறியிலுத யக்கனலாம் கிழமாக விதவை
மாசுளர்கூ டில்புகர்சேய் மலனபவமாய்ச் சேரில்
அதிகவிர கப்பிணியால் பதிஅறியா வண்ணம்
அனேகபுரு டர்க்கூட அனல்புகராங் கிசவேள்
விதுமருவ வம்மதியை ரவியனல்சேர்ந் திருக்கில்
விபசாரம் பதியறிய மேவுவதும் இவளே. 331

*மூன்று, பதினோராமிடத்திற்கு உடையவர்கள் ஐந்தாம் இடத்தில் இருக்க, பதிக்குச் சத்புருட லட்சணாங்கம் என்ப. ஏழாமிடத்தில் இரவி, பாவருடன் கூடில், பதி சத்ரு என்ப. இலக்கனம் கடகமாகச் சேய் அங்கிசம் ஏற, மதி பாவருடன் கூடிலும், சுக்கிரன் ஏழாமிடத்தில் இருக்கச் சேய் பதினோராம் இடத்தில் இருக்கிலும், அதிக விரகினியாகி, இரகசியமாக விபசாரம் நடத்துவாள் என்ப. ஏழாமிடத்தில் சேய், சுக்கிரன் அங்கிசம் ஏற், இதில் இரவி, மதி, சேய் கூடில் பதியறிய விபசாரம் பண்ணுவாள்.*

மேவலராய்ப் பவர்பார்க்கச் சேய்சனியில் ஒன்றாய்
 விதுப்புகர்சேர்ந் திடில்தாயும் மகளும்விபச் சாரம்
பூவுதய வில்சனியாங் கிசமாகில் லீறம்
 புயனிருக்க ஒன்ரேழில் அசிதனுறில் புரக்கோன்
பாவருடன் பதனமுறப் பல்லசுப மாகில்
 பதிதுயிலொன் றதன்மருறில் பாதகர்நீர் ஏறத்
தேவகுரு மதிஇவரில் ஒன்றாகி இவளும்
 தரித்திரியாம் பதியுமனோ சஞ்சலம்செய் பவனே. 332

சனி, சேய் வீடு இலக்கனமாகி; மதி, சுக்கிரன் கூடப் பாவர் சத்துருவர்க்கம் ஏறிப் பார்க்கில், தாயும் மகளும் விபசாரி என்ப. இலக்கனத்தில் சனி அங்கிசம் ஏறிலும்; ஒன்று, ஏழாம் இடத்தில் சனி இருக்கப் பன்னிரண்டாம் இடத்தில் இரவி இருக்கிலும், இலக்கனேசன் பாவ சகிதமாகி மறைய இரண்டாம் இடத்தில் பாவர் இருக்கிலும்; ஒன்று, ஏழு, எட்டாம் இடத்தில் பாவர் இருக்கிலும்; மதி, குரு, வீடு இலக்கனமாகப் பாவர் நான்காமிடத்தில் இருக்கிலும் தரித்திரி என்ப. பதியும் சதா மனோசஞ்சலி.

வனசன்மகன் அங்கிசகக் கடகமுத லாக
 மாசுளாவே ளூரில்சனிஏழ் பவர்பார்க்க மருவில்
கனலனைவே டுயிலணையக் கல்லியமால் வீடாய்க்
 கரியவங்கி டம்கதுவில் காமவிறை மறைய
வனன்மனைமன் மதனாகில் அறத்திறைஅந் தணனும்
 அசுபமுறத் துயில்வேல்வஞ் சகரணை யில்லவள்
தனுசுகயல் உடலாகப் பாவர்சுபர் கலக்கச்
 சர்ப்பமிசை யுற்றிடினும் வைதவியத் தவளே. 333

இலக்கனம் கடகமாகிச் சனியாங்கிசம் ஏற, ஏழாம் இடத்தில் பாவர் இருக்கிலும் சனி இருக்கப் பாவர் பார்க்கிலும், நான்கு, ஏழு, எட்டாமிடத்தில் சேய் இருக்க, மிதுனம், கன்னி இலக்கனமாகிச் சனியாங்கிசம் ஏறிலும், மேடம், விருச்சிகம், ஏழாமிடமாகிச் செவ்வாய் மறையிலும், ஒன்பதாமிடத்திற்கு உடையவனும், குருவும், துர்ப்பெலமாக ஏழு, ஏட்டாமிடத்தில் பாவர் இருக்கிலும்; கடகம், தனுசு, மீனம், இலக்கனமாகிப் பாவர் சுபர்கூட பத்தாமிடத்தில் இராகு இருக்கிலும் வைதவியம் அடைவள்.

வையகத்தின் அதிபனிலொன் றாகவசி தன்சேர்
வதுவுமங் சமாவதுமாய் வக்கிரநீ சமுமாய்ச்
செய்வதெனில் இலக்கினத்தில் கன்லாங்ச மாகச்
செம்பொனதி நீசமுறில் தினத்திறைலக் கனத்தை
பொய்யினர்பார்த் திடக்கூட குளிகவர்க்க மாகில்
புகல்வதிவ டொழுத்தையெனல் புரைமினர்வேட் புகுதல்
ஐயமற மூவரெனில் பதிக்கடங்கா தவளாம்
மனலேழுற் றிடினுமன வைரியென லாமே. 334

மேடம், விருச்சிகம் இலக்கனமாகிச் சனி இருந்து வர்க்கோத்தமாகச் சேய் நீசம் ஏறிலும், இலக்கனத்தில் சேய் அங்கிசம் ஏறக் குரு அதிநீசம் ஏறிலும், இலக்கனத்தையும் சந்திரனையும் பாவர் கூடிப் பார்க்கக் குளிக வர்க்கம் ஏறிலும், தொழுத்தை என்ப. ஏழாமிடத்தில் மூன்றாமிடத்தில் பாவர் இருக்கில் பதிக்கு அடங்காதவள் என்ப. ஏழாமிடத்தில் சேய் இருக்கில் மனவயிரி.

அனல்வீடொன் றாகவதில் சனிபுகரைச் சேரில்
அவளிதய வைரமிவள் பதியுடனா மனன்மான்
முனர்வீடவ் வரியாக வங்கிசமு திக்கின்
மூர்க்கமுளாள் பதிக்கிரியை முழுதுமுடிப் பவளாம்
சனியாதி தன்னிலவர்க் கோத்தமமா கிற்றுட்டை
தழலிவைபோல் வரில்கலகி தபன்னிலொன் றாக
வனவாடே றிறைவரங்ச மாதல்பதி ரோக
மகிழ்நரசு பஞ்சுபம்வேண் மருவிலிரண் டெனுமே. 335

மேடம், விருச்சிகம் இலக்கனமாகிச் சனி, சுக்கிரன் கூடில் பதிக்கும் இவளுக்கும் வயிரம் என்க. இலக்கனம் சிங்கமாகி சேய், புதன் அங்கிசம் ஏறில் மூர்க்கம் உள்ளவள். பர்த்தா செய்யும் கிரிகையைத் தான்செய்துமுடிப்பள். இலக்கனத்தில் சனி வர்க்கோத்தமமாகில் துட்டை என்ப. சேயாகில் சதா கலகி. இலக்கனம் சிங்கமாகி சேய், சுக்கிரன் அங்கிசம் ஏறில் ரோக பர்த்தா உடையவள். ஏழாம் இடத்தில் பாவர், சுபர் கூடில் தூய பர்த்தா உடையவள்.

மருமலர்க்கோன் சுதனாங்சம் யாழிட மாக
வருதன்முத லாகிலிரு மகிழ்நிறையுற் றவளாம்
குருமுதல்கோ னாகமத நல்லவர்பெற் றிருக்கில்
குறையாத வாழ்வையுள கோகனகத் தவளாம்
பருதியிருட் காலமுள கடிகையைமுப் பிரிவாய்ப்
படுப்பதற்குப் புருவமெதிர் பார்வையடிப் பார்வை
பொருமுலைக்கண் ணுடையவளாம் ருதுகாலப் பலமாய்ப்
புகல்வதுமீ தொன்றாம்புட் போதயன்புத் திரனே. 336

இடபம், மிதுனம் இலக்கினமாக சனியாங்கிசம் ஏறிலும் தூய பர்த்தா உடையவள். இலக்கனேசன் குருவாக, ஏழாமிடத்தில் சுபர் இருக்கில் குறையாத வாழ்வுடைய செல்வி. பகல்-இராக் காலத்தில் ருதுவாகில் அறிந்து ஒரு சாமம் பத்தி நாழிகையாக நேர்வைத்து இதற்கு நேர் புருட பார்வை, நேர்ப்பார்வை, கீழ்ப்பார்வை உள்ள முலைக் கண்களை உடையவள் என்க. இதுவும் ருது பலத்தில் ஒரு பலன் புட்போதயனுக்குப் புத்திரனானவா!

மாதர் சாதகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து ஏழிற்குக் கவி 336

**இரண்டாவது சாதக காண்டம் முற்றிற்று**



## 3. முகூர்த்த காண்டம்

### 38. தினாதி சுபாசுபப் படலம்

உதயவரெண் ணிலதிக்கில் ஒருகோணத் திலகு
 மொளிக்கொளியற் றுண்மழுங்கவு தித்தொளிர்பே ரழகென்
னிதயமுள தாகவறி வீனமுள புழுவுக்
 கிறகுயிர்ப்பத் தன்னுயிராய் இயற்றியவேட் டுவப்போர்
அதயுமுரைப் பதற்காய்ச்செய் வனபோனா யடியேற்
 கருள்சுரந்தா எக்கடனென் றாண்டுகொண்டாய் அதனால்
விதையும்விதைக் கிடமுமென மேவியவா ! வேறா
 விண்ணப்ப மொன்றுளதென் றேத்தினன்வே ணியனே. 337

*எண்ணிறந்த கோடி சூரியர் உதிக்கிலும் ஒரு கோணத்தில் இலங்கா நின்ற ஒளிக்கும் ஒளியற்று உள்மழுங்கும்படி அதிகப் பிரகாசமாகப் பிரகாசியா நின்ற நினது திருவழகு என் இதயத்தில் உளதாகும்படி அறிவீனம் உள்ள புழுவுக்கு இறகும் உயிரும் உண்டாகத் தனது வடிவமாய்ச் செய்த தன்னுடைய பெயரும் கொடுத்த வேட்டுவக் குளவியின் தன்மையைப்போல தேவரீர் ! திருவுளம் இரங்கித் தடுத்தாட்கொண்டு அருளவேண்டும், கடனுக்காக நாயடியேனை ஆட்கொண்டவா ! விதையும் விதைக்கு இடமுமாக மேவியவா ! திருச்செவிக்கு ஏறாதாயினும் அடியேன் விண்ணப்பம் ஒன்று உள்ளதென்று மிகுதியும் துத்தியம் பண்ணினான் அகத்தியமா முனிவன்.*

வேணிதென் மலையரவி லென்றனனென் னாமுன்
 வீழ்ந்தடிதாழ்ந் தெழுந்தமுதல் சாதகவி லாசம்
காணும்வரை தொகைஇனமும் இன்னதின்ன தெனநீ
 காட்டினதென் னிருசெவிக்கும் கனிகனிந்ததூற் றமிர்த
ஊணதுஊட் டியபோல்என் னுளத்தினவா வடங்க
 உரைத்தனையீ தன்றியுள்ள முகூர்த்தவிலா சத்தும்
பூணும்விருப் புற்றனனென் றோதுமுனிக் கன்பால்
 புகன்றனன்முன் றினத்தியலசந் தளப்பொருப்புற் றவனே. 338

சடாமகுடத்தை உடையவா ! தென்மலையவா ! உனது மனதில் விருப்புற்றதைச் சொல்லுவாயாக என்று சுவாமி திருவுளம் பற்றா முன்னம், சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து சுவாமி சாதக விலாசத்துள்ள வகை தொகை இனம் எல்லாம் அடியேன் அறியும்வண்ணம் இன்னது இன்னது என்று இரு செவிக்கும் கனிகனிந்து உற்ற அமிர்தென்ன அடியேன் உளத்திலவா அடங்கும்படிக்கு திருவுளம் பற்றி அருளினது போல முகூர்த்த விலாசமும் திருவுளம் பற்றி அருளவேண்டும் என்று அகத்திய மாமுனி விண்ணப்பம் செய்யா முன்னம் நட்சத்திர சுபாசுபம் உரைத்தான் சந்தன சைலத்தில் எழுந்தருளி நின்ற சுப்பிரமணியக் கடவுள்.

தினத்தவயோ கங்கிரக வேதையவ சித்தாம்
  தியம்விடம்கெண் டாந்தம்வைநா சிகம்வதையோ பத்துக்
கனல்சிகைசூன் மாசூலே கார்க்களஞ்சாற் பூர்த்தி
  கண்ணிலுயி ரிலதுசலா வேதைகளர் நெருக்கன்
மனத்தினமா சுணந்தொடலா குலமிருத்து ரோக
  மலடலிசத் துருவுத்தல் வாய்வனல்மண் டலம்தீ
தினத்துளது குருதோடம் கலைக்யான பாதம்
  இவைமுதல விகழ்ந்துதின முகூர்த்தமியம் புவதே. 339

நட்சத்திர அவயோகம், கிரகவேதை, அவசித்து, நட்சத்திராந்தியம், விடகடிகை, கெண்டாந்தம், வைநாசியம், வதை, ஆபத்து, அனற்சிகை, சூல், மகாசூல், ஏகார்க்களம், கும்பபூர்த்தி, நட்சத்திராந்தம், நட்சத்திர மாரணம், சலாவேதை, பாபமத்திபம், பாவர் கூடல், கிரகண தினம், ஆகுலம், ரோகம், மிருத்து, மலடு, அலி, சத்துரு, உதைப்பு, வாயு மண்டலம், அனல் மண்டலம், தீதினத்துள்ளது, குரு தோடம், கலைக்கியான பாதம். இவை முதலாகிய தோடம் நீக்கி இயல்புள்ள நட்சத்திர முகூர்த்தம் சொல்லுக.

இயல்புளநாள் சுபயோகம் தாற்காலத் துயிர்கண்
  எப்பொழுதும் சீவனுள தியல்புளதென் றுவுக்கு
முயலற்கும் உறவாகி அதிசுபக மாக
  முப்புரிநூல் இவன்மரபின் முயங்கியதிற் குளதில்

கயமிவதாய் வருணன்மகா கேந்திரமண் டலம்பால்
கமலமரோ கம்அமிர்த கடிகைதிங்கட் கதப
மயலறுமித் தினங்கள்தனில் அவரவருக் கிணங்க
மானதுங்கண் டுரைப்பரிதன் மேல்வாரத் தியல்பே. 340

*நட்சத்திர சுபயோகம் தற்காலிகத்து உயிர் கண்ணுள்ளது எப்போதும் சீவன் உள்ளது. இரவி, மதிக்கு மித்திரமாகி அதிக சுபமாகக் குருவர்க்கம் ஏறினது, நட்சத்திர வர்த்தனை உள்ளது, வருண மண்டலம், மகேந்திர மண்டலம், பால், சலம், அரோகம், அமிர்தகடிகை, மாதேந்திரம் இவை முதலாகிய சுபதினங்களில் அவரவர்க்குப் பொருந்துதல் கண்டு சொல்லுக. இதன்மேல் வார இயல் சொல்லுவோம்.*

வாரவுண அத்தமனம் சூன்யருத்ரம் அரவம்
மாசுணமற் றவர்கட்கு மக்களுத யம்சேய்
காரியப ரானமிராப் பகலும்விட கடிகை
கதுவவமிர் தொழித்திடன்மா நிசியசுபம் கால
வோரைசரம் வேளைவர்க்கம் பட்சியிற்றீ துளரா
குக்காலம் தன்னியநாள் பஞ்சகமற் றொழிய
சேருநல்ல வாரமதில் யாதொருகா ரியமும்
செய்வரிதன் மேல்திதி தொட் டுள்ளதும்செப் புதலே. 341

*வார ஊண், அத்தமனம், வார சூனியம், உருத்திர முகூர்த்தம், சர்ப்பமுகூர்த்தம், அமிர்தகடிகை, அல்லாத உபக்கிரக உதயம், சேய், சனி வாரம், அபரான்னன், இராப்பகல், விடகடிகை உள்ளதாகி அமிர்தகடிகை பூச்சியமான வாரம், மகாநிசி காலம், அசுபயோகம், காலவோரை, வேளை, சரம், பட்சி, இவற்றில் தீது உள்ளது. இராகுகாலம், தன்னியநாள், பஞ்சகதோடம் இவை முதலாகிய மற்றுள்ள தோடமும் நீங்கிய சுபவாரத்தில் யாதொரு காரியமும் செய்க. இதன்மேல் திதி முதலானவைக்கு உள்ளதும் சொல்லுவோம்.*

திதிக்குருடு நத்தைஇருத் தையுளதும் யோகத்
　　தில்தோஷம் மற்றுளதும் கரணமதில் தீதும்
விதிப்பதறு விவ்வகையில் அவ்வியமற் றுளதாய்
　　விளம்புவாரவ் வினைக்குமிதன் மேலுமிரா சிப்பேர்
இதற்கொருநேர் மணத்தல்சிராத் தங்கெமனந் தருவைத்
　　திடல்கேள்வி புல்லலகம் எடுத்தலுழ வின்னீர்
மதித்தன்மரக் கலநடத்தன் மயிர்வினைகற் பனவு
　　மாற்றியம லத்தியல்பு வழுத்துவதற் கதுவே. 342

திதிக்குருடு, நத்தை, இருந்தை இவை முதலாகிய திதித் தீதும், யோக தோடம் மற்றுள்ளதும் கரணதோஷமும், தீர்த்து முகூர்த்தம் சொல்லுக.

இராசித்தீது அறியும்படி : மேடம் நேர் கலியாணம், சிராத்தம், கமனம், தருவைத்திடல், புராணகாவிய உபதேசக் கேள்வி, சையோகம், மனை எடுத்தல், உழவு, கிணறு, குளம் வெட்டல், கப்பல் ஓட்டல், மயிர்வினை, வித்யாரம்பம் இவற்றிற்கு ஆகாது என்ப.

வழுத்தரிவை சால்வில்லல வன்மாதம் சூன்யம்
　　மற்றுளவுத் தமம்அயனம் தையாடி மாதத்
தழுத்துமுதல் சத்தமிதொட் டதுடைந்தெக் கணங்கந்
　　தாயமொரு நான்கிரண்டே ஆனிமுதல் ருதுவாம்
தொழில்படில்பேர் கார்குளிர்முன் பின்பனிவே னிற்பேர்
　　தோன்றலிலி வேனில்முன் பாந்துருவை சுறாமாத
மொழித்தலதில் செய்வர்முதல் கலியாணத் துடைய
　　உபயகளத் திரக்கரிமா தத்தவநவ் வுதுவே. 343

புரட்டாசி, மாசி, மார்கழி, ஆடி இம்மாதங்கள் சூன்யம் என்ப. மற்றுள்ள மாதங்கள் உத்தமம் என்ப. தை மாதம் பூர்வ பட்சசப்தமி முதல் உத்தராயணம் என்ப. இந்தப்படி ஆடிமாதம் முதல் தெட்சணாயனம் என்ப. மாதம் நான்கு கூடில் கந்தாயம் என்ப. இரண்டாகில் இருது என்ப.

*இருது பெயர் அறியும்படி*

| | | |
|---|---|---|
| *ஆவணி, புரட்டாசி* | - | *கார்காலம்* |
| *ஐப்பசி, கார்த்திகை* | - | *குளிர்காலம்* |
| *மார்கழி, தை* | - | *முன் பனிக்காலம்* |
| *மாசி, பங்குனி* | - | *பின் பனிக்காலம்* |
| *சித்திரை, வைகாசி* | - | *இளவேனிற்காலம்* |
| *ஆனி, அடி* | - | *முதுவேனிற்காலம்* |

*தை, சித்திரை தலைக் கல்யாணத்திற்கு ஆகாது என்க.*
*ஆவணி மாதம் இரண்டாம் களத்திரம் முகிப்பதற்கு ஆகாது.*

தினாதி சுபாசுபப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து எட்டிற்குக் கவி 343

## 39. மணாதிப் பொருத்தப் படலம்

நவ்விமகட் கதிமோக நாயகசு வாமி
நாதசுப சோபனகல் யாணமுத லாக
வவ்வியமற் றுளமுகூர்த்தம் விதிப்பதற்கெப் படிவே
லாயுதவென் றேத்துமுனிக் ககமகிழ்ந்தா தரவாய்ச்
செவ்விதரு மணப்பொருத்தம் முதலுரைக்க வேண்டித்
திருவளர்செவ் வாம்பலம்போ தவிழ்த்தனன்செந் தூரில்
பவ்வமெழுந் திரைபொருசந் தசையிலத் திருந்தென்
பாலிலன்பால் வளர்ந்தருள்கிர் பாலிதன்பா லகனே. 344

*வள்ளியம்மனுக்கு அதிகமோக நாயக, சுவாமிநாத வேலாயுத சுபசோபன கலியாணம் முதலானவைக்கு எல்லாம் குற்றமற்ற முகூர்த்தம் விதிப்பது எப்படி அருளல்வேண்டும் என்று அநேகமாகிய தோத்திரங்களும் செய்து துத்தியம் பண்ணிநின்ற அகத்தியமா முனிக்குத் திருஉளம் இரங்கி, அன்புற்று, மணப்பொருத்தம் உரைக்கவேண்டி அழகினை உடைய செவ்வாம்பல் மலரை ஒத்த திருவாய் மலர்ந்தருளினவன் திருச்செந்தூரில் கடல்திரை பொரா நின்ற சந்தன சைலத்தில் உதயமாகி என்னிடத்தில் அன்பாக வளர்ந்தருளிய கிருபாலிபாலகன்.*

பாலவளு மற்றவனு மாகில்இரு வோரும்
பாலாகில் பாலர்தன மற்றெனில்உற் பலமாம்
நூலடிதொட் டதனமல டாய்அழிதல் ஆண்பெண்
ணுக்கழிவு சுரர்நரரல் லாதகணம் நுவலொன்
றேலிவைநன் றாண்பெண்ணிது வல்லதுபெண் இருவோர்
என்னிலுமாம் கிழமைதிதி இராசிதினம் மிருகம்
கோலமறை பட்சிபெண்டீர்க் கமுமாகேந் திரமும்
கூட்டுவதற் கேற்றிருந்தால் விவாகமும்கூட் டுவதே. 345

பெண் பாலும், புருடன் வைரமும் ஆகிலும் அல்லது இருவர்களும் பாலாகிலும் புத்திரரும், தனமும் உண்டு என்ப. இருவரும் வைரமாகில் ஆகாது என்ப. அடிக்கயிறு ஒன்றாகில் தரித்திரம் என்க. இடைக்கயிறு ஒன்றாகில் மலடு, அகடாகில் பெற்று இழத்தல், கழுத்தாகில் புருடனுக்கு ஆகாது என்க. சிரமாகில் பெண்ணுக்கு ஆகாது என்க. தேவகணமும் மனுட கணமும் பொருந்தும் என்க. இராட்சத கணமாக இரண்டும் இருக்கில் பொருந்தும் என்க. ஆண் ஆணாகவும், பெண் பெண்ணாகவும் இருக்கில் ஆம் என்க. அல்லவெனில் இருவரும் பெண்ணாகில் ஆம் என்க. இதன்மேலும் அதிபதி, திதி, இராசி, நட்சத்திரம், மிருகம், வேதக்கயிறு, பஞ்சபட்சி, ஸ்திரீ தீர்க்கம், மாகேந்திரம் இவை கூட்டுவதற்கு இயல்பாக இருக்கில் விவாகமும் கூட்டுவதற்கு உத்தமம்.

கூட்டுதல்பொன் புகர்பலக்கக் குருவரிவிட் டிருக்கக்
குசன்சனிஇவ் வாரமதி மாதமுங்கூ டாமல்
நாட்டமுயிர் உளசுடரே ரினனவுண்புன் மதிநேர்
நாவாய்முக் குளமெனுமிந் நாட்களி நற்றியும்
வாட்டமிலொன் றேழிறைவர் பலமாய்ப்பொன் பார்க்க
மதமுமதற் கடுத்ததுநிர் மலமாக மறையோர்
ஈட்டுகன லோமமுகத் தவர்கதெய்வ மாக
எண்ணியவர் வாக்கியங்கொண் டிசைப்பதுநன் மணமே.346

விவாகம் கூட்டுதல், குரு, சுக்கிரன் பலமாக, மாமக காலமும் சேய், சனி வாரமும் அதிகம் அல்லது மலமாதமும் நீக்கி கண் உயிர் உளதாகிய சோதி, மகம், அத்தம், மூலம்,

அனுடம், மிருகசீரம், ரோகணி, ரேவதி, உத்தரத்திரயம் இந்த தினங்களில் நல்ல திதியுமாக; ஒன்று, ஏழாமிடத்திற்கு உடையவர்கள் பலக்கக் குரு பார்க்க; ஏழு, ஆறாமிடம் சுத்தமாக ஓமாக்கினி சாட்சியாகத் தேவப்பிராமணர் ஆசீர்வாதத்தினாலே அவர்களைத் தெய்வமாக நினைத்து அவர்கள் சொற்படிக்கு நடத்துவிப்பது நல்மணம்.

மணம்விதித்த நாட்குமுதல் ஒன்றையுள தான
வாரமுதல் சுபமுளதாய் மணக்கானாட் டுதலாம்
கணவரிதுத் தனம்ரோமங் கனல்மதிகே திவாரம்
காலமிதன் முன்மணத்தல் கற்புடைமைக் கழகாம்
பணவகிநீர் கற்றருமான் பணிலமிப்பேர் இலதாய்ப்
பாதவிரல் படிதோயப் பருமுழங்கா லலதாய்க்
குணமுமதிப் பொறையுளதாய்க் கூரியமூக் கிலதாய்க்
கூடுநுதல் பல்லசமம் பங்கமிற்கூ டுதலே. 347

கலியாண முகூர்த்தம் விதித்த நாட்கு முன்னதாக ஒற்றித்த வாரத்தில் திதி முதலானவை சுபமாகி அதில் மணக்கால் நாட்டுக. விவாக காலம் அறியவேண்டில், ருதுவாகில் அக்கினிக்குப் பாரி, தனம் அரும்பில்; சந்திரனுக்குப் பாரி, ரோமம் உற்பத்தியாகில், கேதுவுக்குப் பாரி. ஆகையால் இவற்றிற்கு முன்னதாக விவாகம் முடிப்பது பதிவிரததாரனமம் என்ப. சர்ப்பம், சலம், பருப்பதம், தரு வர்க்கம், மிருகம், சங்கு இப்பெயருள்ள கன்னிகையை விவாகத்துக் கூட்டுதல் மத்திமம். பாதவிரல் பூமியில் தேய்வதாகவும் முழங்கால் பருத்திராததாகவும் குணாதிகமாய் அடக்கமுடையதாகவும் பொறுமையுள்ளதாகவும் நாசி நுனி கூர்மை இல்லாததாகவும் பல் அசமம் இல்லாததாகவும் அங்கம் பங்கம் இல்லாததாகவும் பார்த்து விவாகத்திற்கு நேமிப்பது தர்மம்.

கூடல்ருதுப் பின்பொருநாள் நிசியின்மணத் தினத்தில்
கோனுகமற் றரிசதயம் கூட்டுதற்குண் டான
நாடிதிவா ரங்கரணம் யோகமுந்நல் லதுவாய்
நண்ணியலக் கினமுமொன்றே ழினர்புகரும் நலமாய்

வேடலநிர் மலமாகில் இயம்புதல்சீ மந்தப்
    வேய்ரதமுக் குளம்ஓணம் வெயிலிவைநல் வாரத்
தோடதிக சுபதிதியோ கங்கரணத் தாறெட்
    டுளமாதத் துயிலுள்சுத் தமாகிலதுத் தமமே. 348

நிசேக முகூர்த்தம் அறியும்படி : ருதுவுக்குப் பின்புள்ள நாட்களில் நிசி காலமுமாகக் கலியாண முகூர்த்தத்திற்கு அமைந்த தினத்தில் மிருகசிரம், மகம் நீக்கித் திருவோணம், சதயம் கூட்டித் திதிவரை சுபயோக கரணமும் சுபமாகப் பொருந்திய இலக்கனமும் இலக்கனேசனும் ஏழாமிடத்திற்கு உடையவனும் சுக்கிரனும் பலக்க, ஏழாமிடம் நிர்மலமாகக் காட்டுவது நிசேக முகூர்த்தம்.

சீமந்த முகூர்த்தம் அறியும்படி : புனர்பூசம், உரோகிணி, உத்திரத்திரயம், திருவோணம், அத்தம் இவற்றோடு சுபவார திதி, யோக, கரணமாக ஆறாம் மாதத்தில் எட்டாம் மாதத்தில் ஐந்து, எட்டாமிடம் சுத்தமாகச் சீமந்தம் செய்வது உத்தமம்.

உத்தமம்புத் ரோதயநீ ராடைகுரு கெண்டாம்
    தும்மவுணர் புத்தமுமற் றுளதில்
புத்திரரெட் டமமுறப்பூ வுதயம் சுபமாய்ப்
    பொன்விழிப்பெய் துதனலனாம் புதல்வர்முகம் பார்க்க
உத்தமிதன் கோண்சுடர்வே அம்பிமதிக் குளந்தார்
    அவுண்சதயம் புட்புலிவை யாதவர்க்கா னற்கோ
வத்தினக்கோன் மூன்றொருநான் கீராறீ ரைந்து
    மற்றவர்க்காம் தினமிதிர்பேர் பகர்வதற்கு மாமே. 349

பூராடம், சித்திரை, பூசம், கெண்டாந்தம், அபுத்தமூலம் இவை முதலாகிய தீது அகல ஐந்து, எட்டாமிடம் சுத்தமாகப் பூவோதய இலக்கனம் சுபமாகக் குரு பார்க்கில் புத்திரோதயம் உத்தமம் என்க.

புத்திரர் முகம் பார்க்கவேண்டில் : அத்தம், உரோகிணி, திருவோணம், சோதி, புனர்ப்பூசம், ரேவதி, மிருகசிரம், உத்திரம், பூசம், மூலம், சதயம், அவிட்டம், அனுசம் இவை உத்தமம். இதற்கு மூன்றாம் நாள் ஆதித்த தெரிசனையும், நான்காம் நாள் கோமுக தெரிசினையும், பன்னிரண்டாம் நாள்

சந்திர தெரிசனையும், பத்தாம் நாள் தேவப்பிராமணர் தெரிசனையும் பண்ணுவிப்பது உத்தமம். இவற்றிற்குச் சொன்ன முகூர்த்தமே நாம உதயத்துக்குமாம்.

வதனம்விழிப் பதினாமம் வழுத்துவதற் கிலதேன்
மாதமுமாம் அமரரினர் நாள்வரிலதி லாதிரைவேய்
விதுதைரகம் பயதோடம் வெயிலரிமுக் குளம்புள்
விமலமுள திதிவாரம் மற்றதுடிக் குளதாய்க்
கதையுபதே சம்பவமும் பெலமாயத் தலமும்
களங்கமுமற் றிடல்காது குத்துதற்கா றெட்டேழ்
உதயமுதல் திங்களுமா மூணாறா தீர்த்தார்
உடுபதிக்கோள் மாவேயீ றோடைநல்வாக் குளதே. 350

புத்திர தெரிசனக்கு அமைந்த நாளில் நாம கர்மத்துக்குக் கூடாதே போனால் முப்பதுநாள் வரைக்குமாம் என்க.

காது குத்துகிறதற்கு முகூர்த்தம் அறியும்படி : நாள் பதினொன்று, பன்னிரண்டில் திருவாதிரை, புனர்பூசம், மிருகசிரம், பூசம், உரோகிணி, சித்திரை, அத்தம், திருவோணம், உத்திரத்திரையம், அவிட்டம் இந்த நாட்களில் திதி, வார, யோக, கரணங்களும் சுபமாக இருக்க; மூன்று, பதினோராமிடம் பெலமாகி, இந்த இடங்களும் சுத்தமாக இருக்கில் காது குத்துகிறதற்காம் என்க. இந்நாட்கள் தப்பில் மாதம் ஆறு, ஏழு, எட்டிலுமாம் என்க.

அன்னப்பிராசனத்துக்கு மாதம் ஆறு, அல்லது வருடம் ஒன்றில் பூரம் ,மிருகசிரம், சித்திரை, அவிட்டம், அசுபதி, புர்னர்பூசம், ரேவதி, உத்திரம் இவற்றில் இரண்டாமிடம் சுத்தமாக இருக்கில் அன்னப்பிராசனம் பண்ணுவது உத்தமம்.

குளமுதனான் கியமுதல்மூன் றயன்மதிதார் கணிற்றிக்
குடுமிழுறத் தைந்தகற்றிக் குறைமதிநாள் நீக்கிக்
களமருவவ் வருடமுமக் கர்ப்பமுள நாளும்
கடகரவி அயனமுமா தக்கசடுங் கழிய

நளிர்கலைமால் புகரில்கய லக்கனம்ஈர் நான்கில்
அனரெனினும் உறலறநிர் மலமாய்ச்சேய் நாட்கோள்
முளரிமன்சுன் நிறைபெண்விப கர்சூத்திர ருக்கலதா
மூன்றோரைந் தாண்டுதித்த வர்க்காஞ்சவன முகூர்த்தமுமே.

***சவன முகூர்த்தம் அறியும்படி :*** உத்திரம் முதல் நான்கும், உத்திரட்டாதி முதல் மூன்றும், உரோகணி, மிருகசீர்ஷம், பூசம், புனர்பூசம் இந்த நாட்களில் அனற்சிகை, விசாகாதி, பஞ்சமி, அமரபட்சம், கல்யாணம் பண்ணின வருடம், கர்ப்பம் உள்ள வருடம், தட்சணாயனம், சூனிய மாதம் இவை முதலானவை நீக்கிக் கடகம், மகரம், மிதுனம், கன்னி, இடபம், துலாம், மீனம் இந்த இலக்கனங்களில் அட்டம சுத்தி உண்டாக ஆயுள்கர்மம் செய்விப்பது உத்தமம். இதற்கு அரசர்குச் செவ்வாயும், மாதர்க்குத் திங்களும், பிராமணர்களுக்கு ஞாயிறும், சூத்திரர்களுக்குச் சனியும் ஆகாத வாரம் என்க. பிறந்த பிள்ளைக்கு மூன்றாம் வருடம் ஐந்தாம் வருடம் சவனத்துக்காகும்.

அத்தமயன் கோள்மால்புள் ஆதிரைவேய் தாரீ
தனுடமுடை யான்மாவைந் தாம்வருடத் தயனம்
உத்தரமாய்ச் சனிசேய்விட் டுளவாரம் திதிமற்
றுஞ்சுபமா யைந்திரண்டொன் றுடையவர்மால் பலமாய்
வித்தைசொலல் பரிதேர்மற் றாயுதமுத் தமிழ்கால்
வேதமறஞ் சாத்திரமாம் வெயில்குளம்யாழ் வேய்செக்
கித்துவர்வாய் மால்சுடரீ ததற்கதற்குத் தம்மாம்
என்பரிதன் மேலுஉப நயனம்இயம் புவதே. 352

***வித்தை ஆரம்பத்திற்கு முகூர்த்தம் அறியும்படி :*** அத்தம், உரோகிணி, உத்திரட்டாதி, திருவோணம், அவிட்டம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ரேவதி, அனுஷம், சித்திரை, உத்திரம், அசுபதி இந்த நாட்களில் ஐந்தாம் வருடத்தில் உத்திராயணத்தில் சனி, சேய் அல்லாத வாரத்தில் திதி, யோகம், கரணமும் சுபமாக; ஒன்று, இரண்டு, ஐந்தாமிடத்திற்கு உடையவர்களும், புதனும் பெலமாகில் வித்தை ஆரம்பத்துக்காம் என்க. இதற்கு அசுபதி குதிரை

ஏற்றத்திற்கும், அத்தம் தேர் ஏற்றத்திற்கும், உத்திரம் யானை ஏற்றத்திற்கும், திருவாதிரை ஆயுத பரிட்சைக்கும், புனர்பூசம் முத்தமிமுக்கும் சதயம் சாத்திரம் முதலாகிய யோக கர்மங்களுக்கும், அவிட்டம் வேதம் முதலானவைகளுக்கும், திருவோணம் தரும சாத்திரத்திற்கும், சோதி சாத்திரம் முதலானவைக்கும் விசேஷித்துச் சொல்லுக. இதன்மேல் உபநயனம் சொல்லுவோம்.

**இயம்புவதே ழாம்வயதின் முக்குளந்தேர் தார்வே**
**யிரலைகலை சோதிவிது வீறிரவி அனுட**
**நயந்தருவா ரந்திதியும் மற்றுளதும் நலமாய்**
**நடையனையுள் ளமலமுமாய் நாகமுநிர் மலமாய்ப்**
**பயந்தினத்துப நயனமா வணிப்பூர ணைமாற்**
**பகலிலிராப் பக்கம்வெயில் புரட்டாதிப் பகலில்**
**கயந்தைமதி முக்குளப்புற் றேர்மால்வே யீறில்**
**ககனமெட்டீ தமலனுமசமா வர்த்தனைக்கா குவதே** 353

***உபநயன முகூர்த்தம் அறியும்படி :*** ஏழு வயதில் உத்திரத்திரயம், உரோகிணி, பூசம், புனர்பூசம், அசுபதி, சித்திரை, சோதி, மிருகசிரம், ரேவதி, அத்தம், அனுடம், இவற்றில் திதி, வாரம், மற்றுள்ளதும் சுபமாக நான்கு, ஐந்து, பத்தாமிடம் சுத்தமாக ஆகாசம் நிர்மலமாகில் உபநயனத்திற்கு முகூர்த்தம் சொல்லுக.

***சமாவர்த்தனைக்கு முகூர்த்தம் அறியும்படி :*** ஆவணி மாதம் பௌரணை, திருவோணமாகப் பகல் காலத்தும், புரட்டாசி மாதம் அமாவாசி அத்தமாகப் பகல் காலத்தும், அத்தம், பூசம், மிருகசிரம், உத்திரத்திரயம், அனுசம், உரோகிணி, திருவோணம், புனர்பூசம், ரேவதி இவற்றில் அட்டமசுத்தியாக ஆகாசம் நிர்மலமாகில் சமாவர்த்தனைக்கு முகூர்த்தம் சொல்லுக.

**வத்திரக்கோள் தேர்க்கோள்முக் குளத்தார்வேய் நாவாய்**
**மாவனுசஞ் சோதியும்நல் வாரமுதல் உளவு**
**மித்திரமொன் றெட்டில் மாசிலபி ஷேகம்**
**வேந்தருரி மைக்காரன் மால்விதுக்கோள் விளக்கீ**

றுத்திரமூன் றத்தமுன்னாண் மற்றதுமுத் தமுமாம்
ஒன்றிரண்டாய் அறத்தொழில்சுத் தம்மாகிலு ரைப்பா
சித்திரைமுக் குளந்தேர்க்கோள் மாமகம்வேய் மதிபுற்
தெபபமுமற் றுளசுபமும் செருவெதிர்க்கைக் காமே. 354

*அபிஷேக முகூர்த்தம் அறியும்படி :* சித்திரைக்கோள், உரோகிணிக்கோள், உத்திரத்திரையம், பூசம், புனர்பூசம், ரேவதி, அசுபதி, அனுசம், சோதி இவற்றில் திதி, வாரம் முதலானவையும் சுபமாய் ஒன்று, நான்கு, எட்டாம் இடம் சுத்தமாகில், அபிஷேக முகூர்த்தத்திற்கு உத்தமம்.

*அரசியற்கை முகூர்த்தம் அறியும்படி :* கார்த்திகை, திருவோணம், மிருகசிரக் கோள், சோதி, ரேவதி, உத்திரத்திரயம், அத்தம், அசுபதி இவற்றில் மற்றவையும் சுபம். ஒன்று, நான்கு, ஒன்பது, பத்து சுத்தமாகில் அரசியற்கை முகூர்த்தத்திற்கு உத்தமம்.

*செரு எதிர்க்கை அறியும்படி :* சித்திரை, உத்திரத்திரையம், உரோகிணிக்கோள், அசுபதி, மகம், புனர்பூசம், மிருகசிரம், அனுசம், ரேவதி இவற்றில் மற்றுள்ளவையும் சுபமாகில் செரு எதிர்க்கைக்கு உத்தமம்.

காமனர வாதிரைநீர் கனல்சுடர்பா ராடை
கங்குலரி ஏர்தாரில் கதிர்சனிசேய் கனக
மாமிவையோ டிருத்தைவிட் டியுங்கூடில் ரிபுவோ
டமர்செயவ னீகவகுப் பாவதுங்கா ணுதற்காம்
கோமன்முத லாறிரலை வேய்ரதந்தை யோடங்
கோவாடி மாலவிட்டங் கோடியுடுப் பதற்காம்
பூமன்விது மாவீறு புற்றேர்தார் கலையில்
பொன்மதிமால் சனிபுகர்பொன் பூணுதற்கு மாமே. 355

*கோடி உடுப்பதற்கு அறியும்படி :* கேட்டை, ஆயில்யம், திருவாதிரை, பூராடம், கார்த்திகை, சோதி, உரோகிணி, சித்திரை, பரணி, திருவோணம், மகம், பூசம், இவற்றில் ஞாயிறு, சனி, செவ்வாய், வியாழன் இந்த வாரங்களும், திதியில் இருத்தையும், கரணத்தில் விட்டியும், உத்திரம் முதல் ஆறும் அசுபதி, புனர்பூசம், உரோகிணி, பூசம், ரேவதி, உத்திரட்டாதி, உத்திராடம், திருவோணம், அவிட்டம் இவை கோடி உடுப்பதற்கு உத்தமம்.

*பொன் பூணுவதற்கு அறியும்படி :* அத்தம், மிருகசிரம், அசுபதி, ரேவதி, அனுசம், உரோகிணி, பூசம், சித்திரை இவற்றில் ஞாயிறு, செவ்வாய் வாரம் நீக்கி மற்றுள்ள வாரத்தில் பொன் பூணுதற்கு உத்தமம்.

மாமனவு ணாதிரைமுக் குளம்பரணி ஆடை
மகஞ்சுடர்தா ரனுடம்வயல் பார்ப்பதுவான் திரையம்
பூமன்ரதம் வேய் தோணி பூசமுழ விதிலோர்
புன்முறஞ்செக வுண் சோதி பொருந்தில்விதைப் புக்காம்
சேமனுக மான்முறம்தோ டுப்பிரவி சாற்பூர்த்
திப்பெயரில் லாதிருக்கில் கதிரருத்தல் சேலை
சோமன்முற முக்குளம்புல் லவுணனவீ தேர்தேர்
சோதிபுள்யாழ் வேய்தைகதை யுஞ்சொலநெல் லிடற்கே.356

*வயல் பார்ப்பதற்கு அறியும்படி :* திருவோணம், மூலம், திருவாதிரை, உத்திரத்திரையம் பரணி, சித்திரை, மகம், சோதி, பூசம், அனுசம் இத்தினங்கள் வயல் பார்ப்பதற்கு உத்தமம்.

*உழவிற்கு அறியும்படி :* உத்திரத்திரயம், அத்தம், உரோகிணி, புனர்பூசம், ரேவதி, பூசம் இத்தினங்கல் உழவுக்கு உத்தமம். இவற்றொடு மகம், அனுசம், விசாகம், சதயம், மூலம், சோதியும் விதைப்புக்கு உத்தமம்.

*கதிர் அறுக்க அறியும்படி :* திருவாதிரை, மகம், உத்திரம், விசாகம், உரோகிணி, பரணி, அத்தம் இவற்றில் கும்பபூர்த்தி நீங்கில் கதிர் அறுப்பதற்கு உத்தமம்.

*புதியது கொள்ள, களஞ்சியத்தில் சேர்க்க அறியும்படி :* சித்திரை, மிருகசிரம், விசாகம், உத்திரத்திரையம், அனுஷம், மூலம் இத்தினங்கள் புதியது கொள்ள உத்தமம். இவற்றோடு மகம், உரோகிணி, சோதி, அவிட்டம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ரேவதியும் தானியம் களஞ்சியத்தில் சேர்ப்பதற்கு உத்தமம்.

அற்கனெமன் முக்குளந்தே ரரிநுகந்தை சுடர்வேய்
அனுடமிரே வதிஇவையில் சாந்திஅபி டேகம்
அற்கிறைமாக் கலைபார்புல் லோர்சுடர்தார் கண்புள்
ஈரெமனில் துரயறே சாந்திகனல் இரலை

கற்கடக மன்முறந்தார் கதிரரிவை ஈறில்
கமலரவி பரியரசர் கடவுளுக்காம் கரிக்காம்
முற்கிழமை தேளுறத்தை பூர்வமாந் திதியின்
மும்மூன்றுக் கிருபுறமாஞ் சாந்திமுகூர்த் தமுமே. 357

*சாந்தி அபிசேகம் செய்ய அறியும்படி :* அத்தம், சதயம், உத்திரத்திரயம், உரோகிணி, திருவோணம், மகம், பூசம், சோதி, புனர்பூசம், அனுஷம், ரேவதி இவற்றில் சாந்தி அபிசேகம் செய்வதற்கு உத்தமம்.

*தேச சாந்தி செய்ய அறியும்படி :* அத்தம், அசுபதி, சித்திரை, உரோகிணி, அனுசம், மகம், சோதி, பூசம், புனர்பூசம், அவிட்டம், ரேவதி, சதயம் இவற்றில் தேச சாந்தி செய்வது உத்தமம்.

*இராச தேவ சாந்தி செய்ய அறியும்படி :* கார்த்திகை, அசுபதி, மிருகசிரம், விசாகம், பூசம், அத்தம், அவிட்டம், ரேவதி இவற்றில் சோதியில் சூரியன் நிற்கும் காலம் குதிரை மானாவிக்கும் இராச தேவ சாந்திக்கும் உத்தமம்.

*யானை மானாவி செய்வதற்கு அறியும்படி :* இரவி விருச்சகத்தில் நிற்கப் பூசத்தில் பூர்வபட்சத்து அட்டமி, தசமியில் கூடில் யானை மானாவி செய்வதற்கு உத்தமம்.

முகிலூதி யாழகியல் சுடர்கலைமுப் பூர
முறந்தீயேர் நோய்க்கிகழ்தன் மூலமுமா வான்கோன்
புகனோய்தீர்த் திடுஞ்சாந்திக் கரிவிதுத்தா ரெமன்வேய்
பொருந்துமருந் துணற்கேர்தேர் புண்முதலைந் தமர
ரசுசோதி முக்குளம்சாக் காடதனுக் காகா
தரவொழிய மாமதிதா ரறுடமதை அணையில்
சுகிர்தாதி முதல்தேவ ரிசமானர்க் கிசையச்
சொல்வதும்பர திட்டைதனக் கத்தியமா முனியே. 358

*ரோக சாந்தி செய்ய அறியும்படி :* கேட்டை, திருவாதிரை, ஆயிலியம், பரணி, சோதி, சித்திரை, பூரத்திரயம், விசாகம், கார்த்திகை, மகம் இவற்றில் பிணி கொள்ளலாகாது. மூலம், அசுபதி, உத்திரம், உத்திரட்டாதி இவைகளில் ரோக சாந்தி செய்ய உத்தமம். திருவோணம், மிருகசிரம், பூசம், சதயம், புனர்பூசம் இவற்றில் ஔஷதம் கொள்ள உத்தமம்.

*மரணத்திற்கு ஆகாத நாட்கள் அறியும்படி :* மகம், உரோகிணி, அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, புனர்பூசம், ஆயிலியம், சோதி, உத்திரத்திரயம் இவை மரணத்திற்கு ஆகாது. இவற்றோடு ஆயிலியம் நீங்கலாக அசுபதி, மிருகசிரம், பூசம், அனுஷம் கூடில் தேவ வர்க்கத்துக்கும், எஜமானனுக்கும் பொருந்தில் பிரதிட்டைக்காகும் அகத்திய மாமுனியே !

**முன்னாநேர் பலதான்ய நாட்செயமாக் கொள்ள**
**முளைத்தெளிக்கக் கழைதாழை முதலதருக்கள் ஊன்ற**
**பின்னான விதைவிதைக்க லாம்படாபைங் கூழ்நெல்**
**பேர்விதைக்கத் தரிபோட விதைக்கநடப் பீத**
**மிந்நாளில் கொளலாம்புற் புதைக்களரு வாங்க**
**வில்லீய வாந்தருவி லின்கனிப்போ வைக்க**
**வந்நாண்முற் காலினென்னால் தூன்றுதற்கா நெல்வித்**
**தயம்சேர்க்க வான்புரைகட் டுதற்குமதி யாமே. 359**

அசுபதி நட்சத்திரத்தில் பலதானிய நாள் செய்யவும், குதிரை கொள்ளவும், முளைத் தெளிக்கவும், கரும்பு, தென்னை முதலாகிய மரம் வைக்கவும், பசானவிதை விதைக்கவும் உத்தமம். பரணியில் படர்பயிர் போடவும், நெல் விதைக்கவும், கத்தரி நடவும், பொன் கொள்ளவும் உத்தமம், கார்த்திகையில் பனங்கொட்டை புதைக்கவும், ஆடு கொள்ளவும், மனை விலைக்குக் கொடுக்கவும் உத்தமம், உரோகிணியில் வாழை வைக்கவும், இதன் முதல்காலில் நெல் நாற்று நடவும் உத்தமம். மிருகசிரத்தில் நெல் விதை சுருணைக் கட்டித் தண்ணீரில் போடவும், எருத்துப் புரை கட்டவும் உத்தமம்.

**ஆன்முதநான் காலியுழ வுக்குளது வாங்கற்**
**காமதமத் தஞ்சுடரி லாக்கொளற்காம் அமரர்**
**கோனதிற்கி ரீடம்வைக்க லாமானை கட்ட**
**கோள்கொளநீ ராமுடியில் குதிரைகநி கூட்ட**
**மானிதியம் கொள்ளஎள்ளு விதைப்பதற்கா மானை**
**மறலியிற்கட் டுதற்காமா னாற்கான்மற் றெவைக்கு**
**மீனமுள தாங்காண்வித் திரவிமுதல் உளதாம்**
**இயம்புவர்மற் றெவைக்குமுள வியற்படிசொற் றிடலே. 360**

திருவாதிரையில் உழவு மாடு வாங்குவதற்கு உத்தமம். மகம், அத்தம், சோதியில் பசு கொள்ள உத்தமம். கேட்டையில் கீரீடம் வைக்க உத்தமம். பூராடத்தில் ஆனை கட்டவும், பசு கொள்ளவும் உத்தமம், உத்திராடத்தில் குதிரை, யானை சேர்ப்பதற்கு உத்தமம். திருவோணத்தில் பொன் கொள்ளவும், எள் விதைக்கவும் உத்தமம். சதயத்தில் யானை கட்டுவதற்கு உத்தமம். உத்திரம் நாற்காலி முதலானவைக்கு ஆகாது. ஞாயிறு வாரம் முதல் அவரவர்க்கு அமைத்த தானியப்படிக்கு சிறுதானிய வித்து விதைப்பதற்குச் சொல்லுக. மற்றின்னவை கடம் அந்தந்தத் தினத்துக்குள்ள இயல்புப்படி சொல்லுக.

இவ்வியல்புற் றிடுமுகூர்த்தம் இயற்றுதினத் துற்கை
இடியுடுவா ராலம்விழ எரிகருவி விரணம்
வெளவுதலுற் குரலெழுதன் மழைபெயலம் மனையில்
மனையகல ருதுவாதல் சரீரவாக் கவமாய்ச்
செவ்விலதுற் றீடனீர்ச்சால் பயங்கவிழத் தெங்காய்
சிதறிடறெவ் விகல்புரித ரேசிகதே வர்க்கம்
சௌவையுறல் கடவுளர்வி ழாவயர்தல் யாவும்
கண்டுரைத்தன் முகூர்த்தமினிக் கமனமுரைப் பனவே. 361

இந்தப்படி முகூர்த்தம் வைத்ததினத்தில் குறைக்கொள்ளி இடி, நட்சத்திரம், ஆலங்கட்டி இவை விழுதல், கருவி அக்கினியால் விரணம் படல், துர்க்குரல் எழுதல், மழை பெய்தல், வளவிலுள்ளவள் மாத ருது வந்து வெளிப்படல், அசரீர வாக்கு, துர்வசனமாக எழுதல், பூரண கும்பம் கவிழ்தல், கடகாலில் பால் கவிழ்தல், தேங்காய் சிதறல், சத்துரு போர் செய்தல், தெய்வப் பிராமணர் குருவர்க்கம் மனோசஞ்சலியப்படல், தேவாலயத்தில் திருவிழா நடத்தில் துர்க்குறி நீக்கி முகூர்த்தம் நிறைவேறப்பண்ணுக. இதன்மேல் யாத்திரை முகூர்த்தம் சொல்வோம்.

மணாதிப்பொருத்தப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் முப்பத்து ஒன்பதுக்குக் கவி 361

## 40. யாத்திரைப் படலம்

அனன்முதலே ழேழாறே ழாரலும்சுன் மதியும்
அந்தணன்மா லும்மலவு மிருத்தையலா தனதோர்
முனருளகீழ்த் திசைமுதலாய் முச்சிதிரிந் தபர
முதிர்நிதிர்மத் யானமுனர் மொழிவதும்யாத் திரைக்காம்
இனன்மதிமால் புட்புல்சுடர் இரலையில்கோல் உதயத்
தெய்துதன முந்நீர்யாத் ரைக்கொன்பதிர சதமால்
கனன்மொழிசா லலவனிம்மா தங்கள்பெண்கட் கவமாம்
கடுத்திதிபூச் சுக்கிரன்யோ கினிக்கசடா காதே. 362

கார்த்திகை, உரோகிணி, மிருகசிரம், திருவாதிரை, புனர்பூசம், பூசம், ஆயிலியம் ஆகிய இந்த ஏழு நட்சத்திரங்களில் செவ்வாய்க்கிழமையும் நத்தையும் கூடில், மத்தியானம் திரிந்ததன் பேரில் கீழ்த்திசை யாத்திரைக்கு உத்தமம். மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சோதி, விசாகம் ஆகிய ஏழு நட்சத்திரங்களில் சனி, திங்களும் பத்திரையும் கூடில் அபரான்ன காலத்தில் தென்திசை யாத்திரைக்கு உத்தமம். அனுசம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம் இந்த ஆறு நட்சத்திரங்கில் புதன், வியாழமும் ஐயையும் கூடில் மாநிசி காலத்தில் மேல்திசை யாத்திரைக்கு உத்தமம். அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி, அசுபதி, பரணி, இந்த ஏழு நட்சத்திரங்களில் ஞாயிறு வெள்ளியும் பூரணையும் கூடில் உதயத்துக்குமேல் வடதிசை யாத்திரைக்கு உத்தமம். அத்தம், மிருகசிரம், திருவோணம், அவிட்டம், அனுசம், சோதி, அசுபதி இந்த நட்சத்திரங்களில் துலா லக்கனத்தில் சமுத்திர யாத்திரை செய்ய உத்தமம். புதன் வெள்ளியிலும்; ஆடி, புரட்டாசி, மாசி மாதங்களிலும் பெண்கள் பயணம் செய்யலாகாது. திதி விடமும், பூமி, சுக்கிரன், யோகினி, வேதையும் பயணத்திற்கு ஆகாது.

ஆகினமுன் றற்தீயாழ கிமுறமே ராடை
அளிசுடரவ் விருத்தைதிர ராசியேல்சே யருகன்
ஏகுவதற் கிவையறவா ரச்சூன்மற் றுளது
மிகழ்ந்திதய நிர்மலமாய் ரண்டணியா தாயம்

வாகனமித் தலமெதிரிக் கட்டமமாய் இருப்ப
மங்களவாத் தியமுழங்க மாங்கிசம்பான் மலர்த்தார்
தோகையாநீர்க் குடங்கள்நிகழ் எதிர்வரநீர்ப் பெய்து
சுணங்கனிரு செவியடிப்பத் தோன்றுவதுத் தமமே. 363

பூரத்திரயம், பரணி, கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், விசாகம், மகம், சித்திரை, கேட்டை, சோதி இவற்றில் இருத்தையும்கூட திர ராசியில்; ஞாயிறு, செவ்வாய், புதனில் யாத்திரை போகல் ஆகாது. வாரச்சூலை முதலிய தோடம் நீக்கி, ஐந்தாமிடம் சுத்தமாகத் தனது சென்ம இராசிக்கு இரண்டு, மூன்று, நான்கு, பதினோராமிடமும், இராசி தனது சத்துருவுக்கு அட்டம இராசியாக மங்கள வாத்தியம் முழங்க, மாங்கிடம், பால், பூமாலை, சுமங்கலி, சுமந்துவரும் நிறைகும்பம், மணி, மது இவை முதலானவை எதிர்வர, நாய் நீர் விட்டு, இருசெவியும் அடித்துக்கொள்ளக் காணில் உடனே யாத்திரை பண்ணுவது உத்தமம்.

உத்தமம்யாத் திரைதனக்கோர் சூத்திரன்பார்ப் பானே
உபயம்வெகு தாவெனில்கண் டெதிற்வலமுற் றேக
தத்தலமா னிடர்எதிராய் மலம்விடலே காலி
அழுக்கொலியல் கொண்டுவரல் சாரைஎதி ராதல்
மத்தகய நாவிகொடி மான்மரைசெம் போந்து
மயிலிகல நாரைகிள்ளை சிவல்வலமார்ச் சசரலங்
கத்தபநாய் வானரம்புள் ளரசுகரிக் குருவி
காடையிட மாய்க்கானில் காண்பதுங்கை பலமே. 364

யாத்திரையாகும் காலத்தில் ஒற்றைச்சூத்திரன், இரட்டைப் பிராமணர், பசுத்திரள்கள் எதிர்காணில் எதிர்கொண்டுபோய் பிரதட்சணமாக நடப்பது உத்தமம். எதிரில் இருந்து மனுஷர் மலம் களைதல், வண்ணான் அழுக்குப் புடவை சுமந்து வரல், சாரைப்பாம்பு எதிர்வரல், யானை, நாவிப்பிள்ளை, காகம், மான், மிழா, செம்போந்து, மயில், நரி, நாரை, கிளி, கவுதாரி இவை வலமாகவும், பூனை, கழுதை, நாய், குரங்கு, கருடன், கரிக்குருவி, காடை இவை இடமாகவும் காணில் கைமேல் பலன்.

கைமைகுசக் கலந்தயிர்நெய் எண்ணெய்உடும் பாமை
　　கட்செவிசெக் கான்குருடன் இந்தனங்காங் காடை
லெய்மைநிறத் தாயுதக்கைக் கட்டையன்வெண் குட்டன்
　　விரிதலையன் மொட்டையன்கூக் குரலினன்தாள் வீழ்வோன்
செம்மயிருற் றவன்முடவன் நாவிதன்மூக் கிழந்த
　　தேகபங்கன் தவசிதிகம்ப ரன்அதிதே சிகன்றீ
தும்மனுடர்ந் தழைத்தன்முட் டலிடறனரர் சிறுநீர்
　　சுணங்கன்மலம் விடம்கரணீற் றுற்குறியாத் திரைக்கே. 365

அமங்கலி, நவபாண்டம், தயிர், நெய், எண்ணெய், உடும்பு, ஆமை, நல்லபாம்பு, வாணியன், குருடன், விறகுக் கட்டு, காங்குச்சீலை, கருத்தரூபக் கட்டையான ஆயுதக் கையன், வெண்குட்டன், விரிதலையன், மொட்டையன், கூக்குரலிட்டு எதிர்வருவோன், தாளில் வீழ்வோன், செம்மயிர் உடையோன், முடவன், நாவிதன், மூக்கிழந்தவன், அங்க ஈனன், தவசி, திருவாணி, சன்னியாசி, குரு, அக்கினி, தும்மல், துடர்ந்தழைத்தல், முட்டல், இடறல், நரர் சிறுநீர் இடல், நாய் மலம் களைதல் இவைகள் காணில் யாத்திரைக்கு ஆகாது.

இரவிமுதல் நேரடிப்பன் னொன்றுரைத்தே குதலோ
　　ரேழரையில் படிதலொன்பான் நீர்சுழற்றால் எட்டா
யுரைதருசந் தனிதன்மதி போல்பூதி பாதி
　　ஒடித்திடலச் சுள்ளியைந்தில் கரும்பூச்சூ டுதலா
மருகன்முதல் எள்ளைநெல் பயறுநெய்பால் வெல்லம்
　　மருந்திடநெய் யெள்பால்வெல் லம்திசைக்காம் உதயம்
பருகுதல்பால் தயிர்திலம்தேன் மற்றுளநாட் டிதிக்கும்
　　பதிப்பெயர்கண் டுணவுரைத்தல் பயணமதற் காமே. 366

ஞாயிறில் அடி பதினொன்று அளந்து வார்த்தை சொல்லிப் போவதும், திங்கட்கிழமை அடி ஏழில் படுத்துக் கிடந்துபோவதும், செவ்வாய்க்கிழமை அடி ஒன்பதில் நீர் சுழற்றிப்போவதும், புதன்கிழமை அடி எட்டில் சந்தனம் அணிந்துபோவதும், வியாழக்கிழமை அடி ஏழில் விபூதி அணிந்துபோவதும், வெள்ளிக்கிழமை அடி மூன்றில் சுள்ளி முறித்துப்போவதும், சனிக்கிழமை அடி ஐந்தில் கரும்பூச் சூடிப்போவதும் பிரயாணத்திற்கு உத்தமம். புதனில் எள்

தின்றுபோவதும், வியாழனில் தயிர் சாப்பிட்டுப்போவதும், வெள்ளியில் நெல்லைத் தின்று போவதும், சனியில் பயிறு தின்று போவதும், ஞாயிறில் நெய் குடித்துப்போவதும், திங்களில் பால் குடித்துப் போவதும், செவ்வாயில் வெல்லம் தின்றுபோவதும் உத்தமம். கீழ்த்திசை யாத்திரைக்கு நெய்யும், தென்திசை யாத்திரைக்கு எள்ளும், மேல்திசை யாத்திரைக்குப் பாலும், வடதிசை யாத்திரைக்கு வெல்லமும் சாப்பிட்டுப்போவது உத்தமம். உதயம் முதல் யாத்திரைக்குக் கிரமமாக பால், தயிர், எள், தேன் இவற்றைச் சாப்பிட்டுப்போவது உத்தமம். மற்றுள்ள திதி, நட்சத்திரம் முதலானவைக்கும் அதிபதிப் பெயர்கண்டு உணவு சொல்லுக.

பயணமொரு தேள்மிதுனம் இருத்தரிவை ரூட்சை
 பைஞ்சிலைசான் மகரமழை பிரகரம்பம் தனங்கோல்
செயமலவன் அரிஏறில் தனலாபம் புரிவைச்
 செயித்தல்சிலை சேய்சனிகட் செவிமதியோ கயந்தீ
தியல்பலது பஞ்சகதோ டந்தபன முதனாள்
 கிறையளவுக் கேழ்க்கீதல் பிரமணம்பூ ணிரண
மயமுளமெய் நலதலது மற்றுளதிப் பலமும்
 அறிந்தடனம் செய்வததி சுபலமகத் தியனே. 367

யாத்திரை போவதற்கு மேடம், விருச்சிகம், மிதுனம் மிருத்து என்ப. கன்னி ரூட்சை, மீனம் மழை, கும்பம் பிரகரம், மகரம் பந்தனம், துலாம் விஜயம், கடகம், சிங்கம், இடபம் தனலாபம், தனுசு சத்துரு ஜெயம். சேய், சனி, இராகு, கேது, சந்திரன் இவர்கள் உதயமான இலக்கனம் தீது. பஞ்சகதோடம் ஆகாது என்ப.

*அடனப்பிரமணம் அறியும்படி :* ஆதித்தன் நின்ற நாள் முதல் சந்திரன் நின்ற நாள்வரைக்கும் எண்ணி, ஏழிற்குக் கொடுத்து நின்ற சேடம் அடனப்பிரமணம். அப்படிக் கழித்து நின்ற சேடம் மூன்று, ஆறு, நான்கு, ஐந்து, ஒன்று ஆகில் உத்தமம். மற்றுள்ளது மத்திமம் என்ப. இப்பலம் கூட்டி யோசனைப் பண்ணி யாத்திரை செய்யில் சுபபலம் மிகவும் உண்டு அகத்தியமா முனியே.

யாத்திரைப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பதிற்குக் கவி 367

## 41. கிரகவியல் படலம்

அகத்தியல்பு கேள்முனியே இரவித்தினம்தான் நீட்டில்
அதற்கெதிர்வீ திப்புருடன் கிடப்பவன் எழுநாட்
டகர்த்தையரி பானொருசால் குளிரொடுகோள் ஏழில்
தசமினரா றெழுமூன்றார் தரித்தவரெட் டதனேர்
வகுத்ததெய்தி அனற்சிகைமண் டலந்தினமப் பாடா
வாரியற முக்குளந்தேர் மதிவேயூழ் நாவாய்
சுகத்துளவத் திதிமுதல்மற் றுஞ்சுபமாய்க் கூடில்
சொன்மனைநாள் செய்யவமிர் தத்துதயம் சுபமே. 368

*அகத்தியமா முனியே ! கிரகவியல் கேட்பாயாக. இரவி நின்ற நாளில் கால்நீட்டி, அதற்கு எதிர்நாளில் தலைவைத்து வாஸ்து புருஷன் கிடப்பன். இவன் சித்திரை மாதம் பத்தாம் தேதியிலும், தை மாதம் பன்னிரண்டாம் தேதியிலும், ஆவணி மாதம் ஆறாம் தேதியிலும், வைகாசி-மாசி மாதங்களில் இருபத்து ஒன்றாம் தேதியிலும், ஆடி-ஐப்பசி மாதங்களில் பதினொன்றாம் தேதியிலும், கார்த்திகை மாதம் எட்டாம் தேதியிலும் எழுந்திப்பன். இத்தினங்களில் அனல்சிகை, அக்கினி மண்டலம், அக்கினி தினம், பாடாவாரி இவை முதலானவை நீக்கி உத்திரத்திரயம், உரோகிணி, மிருகசிரம், புனர்பூசம், அத்தம், ரேவதி இவை சுபமாகத் திதி, வாரம், யோகம், கரணங்களும் சுபமாகில் அமிர்த உதயத்தில் கிரகத்து நாள் செய்க.*

உதயமிரண் டேழிதிய மனையிவர்பார்க் கவனும்
உடுபதிபொன் வர்க்கமுற சேயினன்வர்க் கொழியப்
பதமனைநிர் மலமாகில் பகல்திரமுத் தமனமம்
பதின்மேலீ ரேழரைநாப் பன்னான்கும் பிரமம்
வதமொருநாள் கோண்டிசைஎட் டவர்க்கரமா றெட்டு
மனைக்காங்கீழ்த் திசைமுதலட் டின்மாட்டின் மலின
மீதமுள நற்றருமே தியற்குதிரு ணிற்சாற்
கிடம்சயனம் தென்மேற்காய் இயம்புவதும் இயல்பே. 369

இலக்கனமும் இரண்டு, ஏழு, ஐந்து, நான்காமிடம் இவற்றிற்கு உடையவர்களும், சுக்கிரனும், சந்திர வர்க்கம்,

வியாழ வர்க்கம்பெற, செவ்வாய், சூரியன் வர்க்கத்தில் இல்லாது இருக்க, பன்னிரண்டாமிடம், நான்காமிடம் சுத்தமாகில், பகல் காலத்தில் இராசியில் வீடெடுக்க முகூர்த்தம் செய்வது உத்தமம். மனையில் விஸ்த்தீரணத்தை அறுபத்து நான்கு பங்கு செய்க. அவற்றுள் நடு நான்கு அறையும் பிரமஸ்தானம் நான்கு மூலையும் பசாசு ஸ்தானம் திக்கிலுள்ள எட்டு பங்கும் திக்குப் பாலகருடைய கூறு நின்ற நாற்பத்து எட்டு பங்கும் கிரகஸ்தானம். இதில் கீழ்த்திசையில் சமையல்புரை, தென்கீழ்த் திசையில் பசுவர்க்கப்புரை. தெற்கில் தொழு, தென்மேற்கில் தரு முதலானவை வைக்கும் இடம், மேற்கில் எருமை வர்க்கப்புரை, வடமேற்கில் நெற்குதிர், வடக்கில் போசன ஸ்தானம், வடகிழக்கில் தண்ணீர்ச்சால் வைக்குமிடம் இருக்கவேண்டியது. இதில் தென்மேற்காகச் சயனத்துக்கு இயல்பு.

இயல்புளவின் முழுத்தொகைஎட் டொன்பான்மூன் றாசை
　ஈரிரண்டொன் பதுதினமீ தேற்றலினர் தசம்எட்
டுயருடுமூ வைந்தோழொன் பதுநூறுக் குதவி
　உளத்தில்குறி நாட்டிதிவா ராங்கிசமா யுளுக்காம்
கயமுயல்புள் ளிறைபூஜை யரிநாய்பாம் பெலிலிங்
　கம்விதுப்பாய் னேராந்தற் காமதிரட் சகநெல்
வயமிடர்நோய் நிதனநிதி அங்கிசம்மீ தெட்டு
　வர்க்கமுமுத் தமமாகின் மனக்கியல்வர்த் தனையே. 370

கிரகத்துக்கு அமைந்த இடத்தின் முழத்தை எட்டால் பெருக்கி, பன்னிரண்டுக்குக் கொடுத்து நின்ற மிச்சத்தொகை ஆதாயம். ஒன்பதில் பெருக்கி பத்துக்குக் கொடுத்து நின்ற மிச்சத்தொகை செலவு. மூன்றில் பெருக்கி, எட்டுக்குக் கொடுத்து நின்ற மிச்சம் யோனி. எட்டில் பெருக்கி, இருபத்து ஏழுக்குக் கொடுத்து நின்ற மிச்சத்தொகையின் எண்ணம் நட்சத்திரம். நான்கில் பெருக்கி, பதினைந்திற்குக் கொடுத்து நின்ற மிச்சத் தொகையின் எண்ணம் திதி. ஒன்பதில் பெருக்கி, ஏழுக்குக் கொடுத்து நின்ற மிச்சத்தொகையின் எண்ணம் வாரம். இருபத்து ஏழில் பெருக்கி, ஒன்பதிற்குக் கொடுத்து

நின்ற மிச்சத்தொகையின் எண்ணம், அங்கிசம். இருபத்து ஏழில் பெருக்கி, நூற்றுக்குக் கொடுத்து நின்ற மிச்சத் தொகை ஆயுள் என்ப.

திசை யோனி அறியும்படி : வடக்கு யானை, வடகிழக்கு முயல், கிழக்கு கருடன், தென்கிழக்கு பூனை, தெற்கு சிங்கம், தென்மேற்கு நாய், மேற்கு பாம்பு, வடமேற்கு எலி. இவற்றைத் தெரிந்துகொண்டு பலனைச் சொல்லுக.

*அங்கிஷப்பலன் அறியும்படி*

| | |
|---|---|
| ஒன்றாவது அங்கிசத்திற்குப் பலன் | தற்கரம் |
| இரண்டாவது அங்கிசத்திற்குப் பலன் | புத்தி |
| மூன்றாவது அங்கிசத்திற்குப் பலன் | இரட்சகம் |
| நான்காவது அங்கிசத்திற்குப் பலன் | தானியம் |
| ஐந்தாவது அங்கிசத்திற்குப் பலன் | வெற்றி |
| ஆறாவது அங்கிசத்திற்குப் பலன் | துன்பம் |
| ஏழாவது அங்கிசத்திற்குப் பலன் | ரோகம் |
| எட்டாவது அங்கிசத்திற்குப் பலன் | தரித்திரம் |
| ஒன்பதாவது அங்கிசத்திற்குப் பலன் | தனம் |

இந்த அங்கிசம் முதலான முற்கூறிய வர்க்கம் எட்டும் உத்தம வர்க்கமாகில் அந்த மனைக்குச் சுபவர்த்தனை உண்டு.

கிரகவியல் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து ஒன்றுக்குக் கவி 370

## 42. குளங்கூவல் படலம்

வத்திரநான் கவன்தனைய குளம்கூவற் கியல்சேர்
வாரமுதல் திதியோக கரணதின மயமாய்
உத்தமமாய் அமிர்தஉத யத்தறலோர் உதிக்க
உறவிசைவே ளூரன்மழை யாறிதனோர்க் குளதில்
சுத்தமுமாய்ச் செலமதித்தல் கவிப்புகையா ரூடத்
துக்குயர்தல் கீழ்நடுவாம் சுடர்முதல்கால் நீக்கி
அகத்தியமா தவனுறுநாள் ஏரிவெட்ட இவன்மா
வாந்தமடுப் பரைக்குளநாள் கரைசுமத்தற் காமே. 371

நான்முகனுக்குப் புத்திரனானவா ! குளம், கிணறு வெட்டும் இயல்பு கேட்பாயாக. வாரம், திதி, யோகம், கரணம், நட்சத்திரங்களும் சலவர்க்கமாய் உத்தமமாகி அமிர்த கடிகை உதயத்தில் சலக்கிரகங்கள் உதயமாகக் கிணற்றுக்கு நான்காமிடம் சுத்தமும், வானாமாரி குளத்துக்குப் பத்தாமிடம் சுத்தமும், ஆற்றுவரத்துக் குளத்துக்கு ஏழாமிடம் சுத்தமுமாக சலமதித்தற்கு நாள் செய்வது உத்தமம். அந்த வேளையில் கவிப்பு இராசி ஜெலமாகில் மேலூற்று. உதய இராசி சலமாகில் கீழ்ஊற்று. ஆரூட இராசி சலமாகில் நடு ஊற்று. சோதி முதல்கால் நீக்கி மற்ற மூன்று காலிலும் இரவி நிற்கும் நாள் குடம் வெட்ட உத்தமம். அசுபதி நாலாங் காலிலும் பரணி முன்னரையில் இரவி நிற்கும்போது கரை சுமப்பது உத்தமம்.

ஆகுமனைக் கிந்திரனேர் கூவல்விபத்ப துதிப்போர்க்
கந்தகனப் பேர்களத்துக் காந்தனக்கப் பேராம்
தேகசுகம் கருவிபயம் செல்வநல்வாழ் வாமத்
தினத்துளலஞ் சாங்கமுநா லேழுமொன்றாய்ச் சேய்நாள்
கீகுவதச் சிரசோடென் புமியோடிந் தனம்பேர்
எரிந்தவெரு கரிப்பிணநெல் பொன்கலர விற்கோல்
யூகமிலை எனில்நாய்செங் கல்லிவைசாண் அளவாய்
உரைத்தபரித் தாழ்வரையில் அப்பாலூற்றுளதுத் தமமே. 372

கிரகத்திற்குக் கீழ்த்திக்கில் கிணறு வெட்டில் விபத்து, தென்கிழக்கில் புத்திரநாசம், தெற்கில் களத்திர தோஷம், தென்மேற்கில் தனக்கு ஆபத்து, மேற்கு சரீரசுகம், வடமேற்கு கருவி பயம், வடக்கு செல்வம், வடகிழக்கு நல்வாழ்வு, கிணறு வெட்டுவதற்கு அமைத்த முகூர்த்ததன்று உள்ள பஞ்சாங்கமும் அதனுடன் இருபத்து எட்டும் கூட்டிப் பதினாறுக்குக் கொடுத்து நின்ற மிச்சத் தொகையாகிய சாண் ஒன்றில் தலையோடு, சாண் இரண்டில் எலும்பு, சாண் மூன்றில் உமி, சாண் நான்கில் ஓடு, சாண் ஐந்தில் விறகு, சாண் மூன்றில் உமி, சாண் ஏழில் சாம்பம், சாண் எட்டில் கரி, சாண் ஒன்பதில் பிணம், சாண் பத்தில் நெல், சாண் பதினொன்றில்

பொன், சாண் பன்னிரண்டில் கல், சாண் பதிமூன்றில் பாம்பின்வளை, சாண் பதிநான்கில் கம்பு, சாண் பதினைந்தில் குரங்கு அல்லது நாய், சாண் பதினாறில் செங்கல். இந்தப் பதினாறு சாணுக்கும் கீழ் ஊற்று உள்ளதாகில் உத்தமம்.

ஊற்றறிதற் குதயமுகத மேற்காயுற் றெதிரெட்
　　டும்மிடையில் ஐந்தும்வரை யும்மாகக் கீறிக்
காதறனல் கோள்நிறுத்தில் வலமாய்முற் மீறாக
　　கணித்ததின்மேல் கரைநான்காய் தன்மேற்றெற் காயைந்
தேற்றிமற்ற திதன்கீழாய் இருத்துமவ சுத்தோ
　　டெழுநான்கில் அரவுசிதன் இந்திவரீ றாய்ப்பார்
தேற்றுதய தினமுதல்நூ தனநன்கு வர்நீர்
　　தோன்றனிசிக் கவைமாறாச் சொலல்கூவற் கிடமே.　　373

கினற்றிற்கு ஊற்றறிய வேண்டில் உதயகாலத்தில் மேற்கு முகமாக இருந்துகொண்டு, ஒத்த நிலத்தில் கீழ்மேலாக எட்டுவரை தென்வடல் ஐந்துவரையும் கீறிக்கண்ட இருபத்தெட்டு அறையில் அக்கினிமூலையில் அனுசம் வைத்து அவசித்துக்கூட்டி வலமாக விசாகம் வரைக்கும் நிறுத்தி, அதன்மேலறை தொட்டு வடக்குமுகமாக நேர் ஆயிலியம் வரைக்கும் நிறுத்தி, அதன்மேல் அறை தொட்டுத் தெற்குமுகமாக நேர் சித்திரை வரைக்கும் நிறுத்தி, அதன் கீழ் அறையில் சோதியை நிறுத்துக. இத்தினங்களில் சென்ம நட்சத்திரம் தொட்டு இராகு வரையும் நடத்தில் புராதனக் கிணறு, இந்தப்படி சுக்கிரன் வரைக்கும் நடத்தில் சுத்த சலம், மதி வரையில் நடத்தில் உவர்ச்செலம், இதற்கு நிசியாகில் வாயு மூலையில் கார்த்திகை வைத்து முன்போல் நடத்துக.

குளம்கூவல் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்தி இரண்டிற்குக் கவி 373

## கூவல் சக்கரம்

வடக்கு

இரவு - மேற்கு

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகை | உரோகிணி | மிருகசிரம் | திருவாதிரை |
| பரணி | அசுபதி | ரேவதி | புனர்பூசம் |
| மூலம் | பூராடம் | உத்திரட்டா | பூசம் |
| கேட்டை | உத்திராடம் | பூரட்டாதி | ஆயிலியம் |
| அனுசம் | அவசித்து | சதயம் | மகம் |
| விசாகம் | திருவோணம் | அவிட்டம் | பூரம் |
| சோதி | சித்திரை | அத்தம் | உத்திரம் |

கிழக்கு

தெற்கு

வடக்கு

பகல் - மேற்கு

| | | | |
|---|---|---|---|
| அனுசம் | கேட்டை | மூலம் | பூராடம் |
| விசாகம் | சோதி | சித்திரை | உத்திராடம் |
| மிருகசிரம் | திருவாதிரை | அத்தம் | அவசித்து |
| உரோகிணி | புனர்பூசம் | உத்திரம் | திருவோணம் |
| கார்த்திகை | பூசம் | பூரம் | அவிட்டம் |
| பரணி | ஆயிலியம் | மகம் | சதயம் |
| அசுபதி | ரேவதி | உத்திரட்டா | பூரட்டாதி |

கிழக்கு

தெற்கு

## 43. சதாமுகூர்த்தப் படலம்

அம்மதின்கோள் தீயகியா ழாடைமுதல் மூன்றே
ரளிராழி இவையிரண நோய்நடையா காதப்
பம்முதய மிக்கோள்போக் கணைதல்பிணி மருந்தப்
பாகமெண்ணெய் சவனமறப் படமுதற்பூண் அணிதல்
சம்முதல வியற்றலுண விற்புகநெல் விதைக்க
தான்யமிட உழவியன்ற தர்மமும்செய் திடல்காந்
செம்மகவவ் ஒக்கலுறல் கெமனமருந் துண்ணல்
செனனமுதல் கோணேருத் தமனெனச்செப் புதலே. 374

பூராடக்கோள், கார்த்திகை, ஆயிலியம், திருவாதிரை, சோதி, சித்திரை, விசாகம், மகம், கேட்டை, பூரட்டாதி இவற்றில் கடன் கொடுக்கல் வாங்கல், நோயில் விழல், யாத்திரை போதல் ஆகாது என்ப. சென்ம நட்சத்திரம் அதன் கோளும் யாத்திரை, சையோகம், பிணி, மருந்து, பாகம், எண்ணெய், சவனம் இவை நீங்கலாக வத்திராபரணம் பூண, சந்தோஷம் முதலான காரியம் செய்ய, புதியது உண்ண, குடி புகுதல், நெல் விதைக்க, தானியமிட, உழவு செய்ய, இயன்ற மாத்திரம் தர்மம் செய்ய உத்தமம். சென்ம நட்சத்திரம் தராசுத பந்துசனம் சேர்ப்பதற்கு உத்தமம். சென்ம நட்சத்திரத்திற்குப் பத்தாம் நாள் யாத்திரைக்கும், பத்தொன்பதாம் நாள் மருந்து உண்பதற்கும் உத்தமம்.

செப்பியகெண் டாந்தமைமூன் றைந்தொருநா ழிகைநேர்
தினந்திதிரா சியிலுள்ளதீ துளதின்மி கத்தீ
தெப்படியோ வெனில்முதல்போ னேரொருநான் குபயம்
இருகாலம் குளிகனுத யத்தூரேற் றிடுதல்
வைப்புமுதல் தானயமற் றுஞ்சேகரமாய்ச் சேர்த்தன்
மனைஎடுத்தல் குடிபுகுதல் மணக்காணாட் டுதற்காம்
துப்பரவா காயமெனில் வாரசுபம் விடமில்
சுதினம்விழிப் புளதிதியுள் ளதற்குளதுத் தமமே. 375

கெண்டாந்த தோஷம் அறியும்படி :

நட்சத்திர கெண்டாந்தத்திற்கு நாழிகை பதினைந்து.

திதி கெண்டாந்தத்திற்கு நாழிகை ஐந்து.

இராசி கெண்டாந்தத்திற்கு நாழிகை ஒன்று.

இவற்றுள் நட்சத்திரத்திற்கு நாழிகை நான்கும், திதிக்கு இரண்டும், இராசிக்கு அரையும் அதிக கெண்டாந்தம் என்ப. குளிகன் உதயத்தில் ஊரேற்றல் வைப்பு முதலாகிய தானியம், மற்றுள்ளனவும் சேகரித்துச் சங்கிரகம் பண்ண, மனை எடுக்க குடி புக, மணக்கால் நாட்ட உத்தமம். ஆகாசம் நிர்மலமாகில் அவற்றை வாரம் சுபம் என்ப. விடகடிகை பூச்சியமாகில் அத்தினம் சுபதினம் என்ப. விழிப்புள்ள திதியும் சுபம் என்ப. இவை உள்ளதுக்குள்ளே உத்தமம்.

உத்தமம்பஞ் சாங்கமுத யத்தியல்பு வேளை
    ஓரைசரம் பட்சிவருக் கம்அவத்தை யோகம்
மித்திரமண் டலமாதம் பட்சமய னம்பால்
    விண்ணமலங் கமலம்விலோ சனமுயிர்மே டாதி
சுத்தமமிர் தங்காலம் கெணமுருவ மதிபம்
    சுபர்விழிப்புற் றொன்றாக இவைசுபமுற் றிடினும்
மத்தினந்தன் னியநாட்கீ தபலம்விட கடிகை
    அவமிருத்தம் நாட்பறவை படிலவர்க்கப் படியே. 376

திதி, வார, நட்சத்திர, யோக,கரணம் உத்தமமாக இருக்க, இதன்மேலும் உதய இலக்கனம், வேளை, ஓரை, சரம், பட்சி, வர்க்கம், அவத்தை, யோகம், மித்திர மண்டல தினம், மாதம், பட்சம், அயனம், பாற்றினம், ஆகாச நிர்மலம், சலவர்க்கம், கண்ணுள்ளது, சீவன், மேடாதி சுத்தம், அமிர்தவர்க்கம், காலம், கெணம், உருவம், அதிபம், சுபர் விழிப்பு இவை முதலானவை யெல்லாம் சுபசேகரமாகச் சேகரித்த தினமானாலும் அந்தந்த தினத்தில்தன்னிய நாள்வரில் மேற்கூறிய சுபசேகரவர்க்கமெல்லாம் நிர்பலம் என்ப. விடகடிகையாகில் அவமிருத்து என்ப. படுபட்சியாகில் மாரணம் என்ப.

படித்தவத்தெப் பொழுதினும்செய் சஞ்சாரமு கூர்த்தம்
பஞ்சாங்கம் ஓரைசரம் வேளைஇயல் பாகத்
தொடித்தினந்தன் னியநாணம் சலதமிர்த கடிகை
தோன்றுதல்புட் கரசெனினிர்த் தோஷமெத்தோ டமுமாம்
வடித்தசெழுந் தமிழ்ப்புலவ முகூர்த்தவிலா சத்தோர்
மார்க்கமிதாம் என்றனன்ரே மற்சபலை வாய்ப்பத்
தடித்திடங்கொண் டிறுமாந்தண் ணாந்துசெம்மாந் தெழுந்த
தரமெனும்பொற் றனக்குறமான் தழுவுபுயா சலனே. 377

பூமியின் இடத்தில் சதாமுகூர்த்தம் அறியவேண்டில் பஞ்சாங்கம், ஓரை, சரம், வேளை இவை இயல்பாகும் தினத்தில் தன்னிய நாளும் விடகடிகையும் பூச்சியமாக அமிர்த கடிகை, உதயகாலம் பட்சிக்கு அரசு என்னில் அத்தின முகூர்த்தத்திலுள்ள தோடம் எல்லாம் நிர்த்தோடம் என்ப. வடித்த செந்தமிழ்ப் புலவ ! முகூர்த்த விலாசத்துளெல்லாம் இதுவுமொரு மார்க்கம் என்று திருவாய் மலர்ந்தருளினவன் தேமலும் பசலையும் பூத்தும் தடித்து இடங்கொண்டு எழுந்து இறுமாந்து அண்ணாந்து செம்மாந்து பூரித்தெழுந்து தனக்குத்தானே ஒப்பாகி சகலாபரணங்களும் அணிந்த குறுதடங்கலையுடைய ஒரு குறமான் தழுவிய புயாசலத்தை உடைய சுப்பிரமணியக் கடவுள்.

சதாமுகூர்த்தப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து மூன்றுக்குக் கவி 377

*மூன்றாவது முகூர்த்தக் காண்டம் முற்றிற்று.*



## 4. சிந்தனா காண்டம்

### 44. பலஞாபகப் படலம்

சலத்தினிலக் கினியுருவாய் உதித்தவசெந் தூர !
 சடாக்கர சடனன் சந்தாசல விசாக !
மலைத்தலைவர்க் குபதேச வானவர்ச காய !
 மயூரஒரு வாகனசெம் மான்மகள்ம ணாள !
நலத்ததிப முகூர்த்தவிலா சத்துளதன் பாக !
 நவின்றதுபோ லதிதசிந்த னாகாண்டத் துடைய
பலத்தியல்சொல் லெனப்பணியும் முனிக்கவனா மலக
 பலத்தினில்காண் பதுபோல் பலமும்உரைத் தனனே. 378

*சலத்தினிடத்தில் அக்கனி உருவாகி வந்ததுபோல உதயமாகியவா ! திருச்செந்தூரை உடையவா ! சடாட்ரா ! சண்முகா ! சந்தனாசல ! விசாக ! கைலாச வாசனனுக்குத் தேசிகா ! தேவசகாய ! மயில்வாகன ! கிடாய்வாகன ! வள்ளி மணாள! சுகாதிப ! முகூர்த்தவிலாசத்துள்ள சகலபலமும் அடியேனுக்குத் தெரியும் வண்ணம் திருவுளம்பற்றி அருளிதுபோல அதீதமாகிய சிந்தனா காண்டத்தில் உள்ள பலமும் திருவுளம்பற்றி அருளவேண்டும் என்று தெண்டம் பண்ணிய அகத்தியமா முனிக்கு சுவாமி திருவுளம் இரங்கி நெல்லியங்கனியைக் கையில் வைத்துக் காண்பதுபோலும் சிந்தனாபலம் முழுவதும் திருவாய் மலர்ந்தருளினன்.*

உரைத்திடுசிந் தனைக்குடையர் விழிப்பதற்கே ழாமார்
 ஊடமுத யாதியுள துறையமுமற் றுளதும்
விரித்துரைக்கில் உதயநட்டம் பிடிப்பதற்குக் கவிப்பு
 மிக்குளதற் காரூடம் விளம்புவரிப் பெயர்க்கும்
சரத்திரமற் றதுதனதில் உறவுயர்தல் இவைநேர்
 சாற்றலுமாம் சிந்தனையிற் றாதுமுத லறிதற்
கொருத்தபனன் முதலாய்முன் னுரைத்ததல்லா துதயா
 ரூடசத் நேருளதீ தன்றியும்சற் றுளதே. 379

சிந்தனைக்கு உடையவனாக வந்திருந்தவனுடைய முகப்பார்வைக்கு ஏழாமிடம், எட்டாமிடம் ஆரூடமாகவும், உதயாதி தொட்டு தாற்காலிக இராசியே உதயமாகவும் வைத்து முன்சொல்லியிருக்கிற கவிப்பும் கூட்டி விதரித்துச் சொல்லுங்கால், உதயம் நட்ட சிந்தனைக்கும், கவிப்பு முட்டிக்கும் ஆரூடம் சிந்தனைக்கும் ஆம் என்ப. இது அல்லாமலும் முன்சொன்ன நட்டமுட்டி சிந்தனை நேர்வைத்து சர, திர, உபயம் கொண்டும்; ஆட்சி, நட்பு, உச்சம் கொண்டும் சொல்லுக. இதன்மேலும் தாது, மூல, சீவ சிந்தனை அறியவேண்டில், முன் மேடம் முதல் நேராகவும், இரவி முதலாகவும் சொன்னது அல்லாமலும் உதயம் தாதுவுக்கும், ஆரூடம் மூலத்துக்கும் சத்திரம் சீவனுக்கும் வைத்துச்சொல்லுக. இதன்மேலும் சொல்லவேண்டுவது சிறிதுண்டு.

சற்றிடைமால் இரவிமதி தத்தமின்பான் தவிரச்
    சனிகனலுக் கெவ்விடத்தும் ஆமியிர்ப்பேர் தருவில்
உற்றிடலம் மனைகவிக்கில் லுந்தாதுப் பெயராம்
    உரைத்ததல்லா ததும்புகரெவ் விடத்துறினும் உயிர்த்தான்
திற்றனைமூ டினுமூல மெத்தலம்பொன் தரிற்றா
    தினமூலத் தேறுகினும் சீவனிவைக் கினம்பேர்
மற்றதுமுன் னுரைத்திடலால் யாவையும்கண் டறிவர்
    மாதவகேள் ! இதன்மேல்சோ ரத்தியம்பால் அதற்கே. 380

புதன், மதி, இரவி சொட்சேத்திரம் இருக்கிலும், சனி மகரம் அல்லாது இருக்கிலும், சேய் யாதொரு வீட்டில் இருக்கிலும், சீவ கிரகங்கள் மூல இராசியில் இருக்கிலும் அல்லது சீவ இராசி மூல இராசியைக் கவிக்கிலும் தாது சிந்தனை என்ப. புதன், இரவி, மதி, கன்னி, சிங்கம், கடகம் இவற்றில் நேரல்லாமல் இவர்கள் மற்ற இடங்களில் இருக்கினும், சுக்கிரனும் யாதொரு கிரகத்தில் இருக்கிலும் சீவ இராசி தாது இராசியைக் கவிக்கிலும் மூல சிந்தனை என்க.

குரு யாதொரு பாவகத்தில் இருக்கிலும், மூல இராசியில் தாது இராசி வர்க்கம் ஏறிலும் சீவ சிந்தனை என்க. இவ்வகைக்கு எல்லாம் இனம், பேர், நடவடி முதலானவைகளையும், முன்சொல்லி இருப்பதால் யாவையும் கண்டறிவர். மகத்தாகிய தவசினையுடைய அகத்தியமா முனியே இதன்மேல் சோர இயல்பு சொல்லுவோம்.

பலஞாபகப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து நான்கிற்குக் கவி 380

## 45. சோரப் படலம்

சோரபலஞ் சனிஅனல்பாம் பாறிவன்பார்த் திடுதல்
தோன்றலுத யத்துமிறை தோய்வினும்சொல் லுவரார்
ஓரிருநாள் காறுவியம் வீழ்தல்கர அசதி
ஒன்றிறைகேந் திரமேறப் போனதிலை ஒருநேர்
சேருவதும் வெளியுளிடை தேளலவன் மனையா
தினகரனேர்க் குளதலமான் சேலிறப்பில் அசிதன்
சாருதல்பார்த் திடலெனில்அந் தரம்இவைஅல் லாதத்
தகர்முதல்நேர்க் குளராசிச் சார்புநிகழ்ந்த துவதே. 381

சோர பலன் அறியவேண்டில் சனி, சேய், இராகுவும் ஆறாமிடமும், ஆறாமிடத்திற்கு உடையவனும், இலக்கனத்தையும் இலக்கனாதிபதியையும் பார்த்தல் அல்லது சேர்தலாகில் சோர சிந்தனை என்க. உதய இலக்கனாதிபதி எட்டாமிடத்தில் இருக்கில் கைவிட்டு விழுந்துபோனது என்க. ஆறாமிடத்தில் இருக்கில் சோரரிடம் என்க. பன்னிரெண்டாம் இடத்தில் இருக்கில் வைத்து மறதி என்க. கேந்திரத்தில் இருக்கில் போனது அல்ல என்க. இதற்கு இடம் அறியவேண்டில் மேடாதி நேர்வெளி, உள், இடை என்றும்; விருச்சிகம், கடகமாகில் கிரகத்தில் என்றும்; அசுபதி முதல் நேர்க்குள்ளவர்கள் தானத்தில் என்றும்; மகரம், மீனமாகில் இறப்பில் என்றும்; சனி பார்த்தல் அல்லது சேர்தலாகில் அந்தரத்தில் என்றும் மேடாதி இராசிக்கு உள்ள இடத்தில் என்றும் கண்டு யோசனை பண்ணிச்சொல்லுக.

நிகழ்த்தலிதற் குருவினம்பேர் நிறந்தொகைமற் றதுமுன்
இசைத்ததுங்கண் டுரைக்கிலிவை நிசமாமா தலினான்
முகத்ததிகத் திறைவரோன் றேழினர்பெலக்கா தாகின்
முற்றலம்பிரிட் டோதயமொன் றாகமுய லகனும்
மகத்தினனா ரூடமதற் காதலிதற் கேழாய்
அயமுதன்முன் பின்மூன்றைந் துதயமெனில் அலவன்
சுகத்துரைமா னொருவுதய மவமாகத் தோன்ற
துயம்விழலா ரூடம்வரல் போதல்வரா ததுக்கே. 382

முன்சொன்ன வகைக்கெல்லாம் உரு, இனம், பேர், நிறம், தொகை மற்றவையும் முன்சொல்லி இருப்பதனால் அவற்றைக் கண்டறிந்து சொல்லுவாராகில் சதலபலமும் நிசமாம் என்க. இரண்டு, பதினொன்று, ஒன்று, ஏழுக்கு உடையவர்கள் பலகீனமாகி மறையிலும் பிரிட்டோதயமே உதயமாகி மதி இருக்கிலும் ஆரூடத்திற்கு ஐந்தாமிடத்தில் இரவி இருக்கிலும் ஆரூடத்திற்கு ஏழாமிடம் உதயமாகி மேடம், இடபம், மிதுனம், தனுசு, மகரம், கும்பம், மீனமாக வரினும் அல்லது கற்கடகம், கன்னி, மகரம், மேடம் இவை உதய இலக்கனமாகிப் பாவர் உதயமாகிலும் உதயத்துக்கு இரண்டு, ஆறு, எட்டு, பன்னிரெண்டு ஆரூடமாகவரினும் போனது வாராது என்க.

வரலுதயா ரூடமிவைக் கணிப்பவர்மற் றவருண்
மருவினன் மதிபடுமப் பதியிலுறின் மகனோன்
புருவிலிநல் லவர்களுற வுதயசிரோ தயமாய்
உற்றிடில்வில் லுதயமறை யோன்பார்க்கி லொருமீன்
தருகுறத்தீ முதலாய்நந் நான்குளஅந் நாளில்
அமுர்தமுற விடமொழிக்கி லசுபருப செயமாய்த்
தருமர்சுபர் கேந்திரகோண் டமுவிலுத யஞ்சார்
தனுவிடையாய் உற்றிடல்தப் பாதெனச்சாற் றுதலே. 383

உதயாரூடத்துக்கு மூன்றாமிடத்தில் பாவரும், மூன்றாம் இடத்தில் சுபரும் இருக்கிலும்; இரவி, மதி படுகிற இராசி இருக்கிலும்; ஐந்து, ஒன்பது, ஏழாமிடங்களில் சுபர் இருக்கச் சிரோதயமே உதயமாகிலும் உதயம் தனுவாகிக் குரு

பார்க்கிலும் கார்த்திகை முதல் நான்காமிடம் மூன்றாமிடமாக நேர் நடத்தில் நான்காக வரும் நாளில் அமிர்தகடிகை இருக்க, விடகடிகை பூச்சியமாகிலும், பாவர் உபசெயமும் சுபர் கோண கேந்திரம் இருக்கிலும்; கும்பம், தனுசு, இடபம் உதயமாக வரினும் போனது தப்பாமல் வரும்.

உதயசத்ரம் ஆருடம்கவிப் பிவைமானி டர்மா
　　ஹூர்வனபுள் வர்க்கமுங்கண் டிழப்பொளிப்போ துதற்காம்
விதைமுதலத் தான்யவர்க்கம் கலைமுதல்பட் டினமும்
　　விபூடணபாத் திரபாண்டம் விருட்சம்வகை முதலாய்
நிதிமுதல்மற் றவைக்குமுதல் உரைத்த தறிந்து
　　நிகழ்த்திடுவர் உதயமுதல் பத்தினில்சேய் நிசிதன்
கதிருறில்நாற் காலிகெடல் வலியவரும் படனாற்
　　காலகிக்கு மொன்றிருகால் கட்டுணல்கா ணாதே. 　　384

உதய சந்திர ஆரூட கவிப்பு இவை கொண்டு மானிடர், மிருகம், ஊர்வன, பறப்பனவாகிய வர்க்கங்கண்டு நட்ட சிந்தனை சொல்லுக. இதன்மேல் விதை முதலாகிய தானிய வர்க்கம், புடவை முதலாகிய பட்டு வர்க்கம், பூடண பாத்திர பண்டம் முதலான சொர்ணம், ரத்தனம் முதலானவை ஆகிய இவற்றிற்கெல்லாம் முன்சொல்லி இருப்பதால் அவற்றை அறிந்து உருவின முதலானவை சொல்லுவர். உதயத்துக்குப் பத்தாமிடத்தில் சேய், சனி, இரவி இருக்கில் நாற்காலி போனது என்றும், வலிலி வரும் என்றும் சொல்லுக. படுகிற இராசி நாற்கால் இராசியாகி, இராகு இருக்கிலும் முன்சொன்ன பலன் என்ப. உதயம் நாற்கால் இராசியாகி இராகு இருக்கிலும் நாற்காலி கட்டுண்டு நிற்கிறது என்க. இந்தப்படி இருகால் இராசியாகில் நாற்காலி காணாது என்க.

காணல்கி ரகமிருந்த விடங்கவிக்கி லிதன்பேர்க்
　　கானதிசை உதயமுதல் மூவர்களுக் கிடமாய்ப்
பூணுமவ்விற் றிசையிலும்உற் றிடல்புகல்வர் சோமன்
　　பொருந்துடுத் தொட்டுதய முருநாளை வில்போத

தோணுமென இவைகரவேல் சோரநட வடியும்
சொரூபமும்மற் றுளதுமுதல் யாவையும்சொல் லுதலால்
வேணதுஞ்சொற் றிடுவரிதன் மேற்பிடிப்பீ தென்ன
விளம்பும்வகைக் குடையபலத் தியல்பும்விளம் புவதே. 385

கிரகம் இருந்த இராசியைக் கவிப்பது. எந்த இராசி என்று அறிந்து, அந்த இராசித் திசையில் காணும் என்க. இது அல்லாமலும் உதயாரூட சத்திராதிபர் இருந்த இராசித் திசையிலும் சொல்லுக. இதற்குச் சந்திரன் இருந்த நட்சத்திரம் தொட்டு உதய இராசி நட்சத்திரம் வரைக்கும் கண்டநாள் அளவில் வரும் என்க. இவ்வசை சோர சிந்தனையாகில் சோரனுக்கு நடவடி முதலாகிய உருவினம் சொல்ல வேண்டில் முன்சொல்லி இருப்பது கொண்டு சகலமும் சொல்லுக. இதன்மேல் கையில் ஒன்றை வைத்துக்கொண்டு இது என்னவென்று கேட்கும் முட்டி சிந்தனையும் சொல்லுவோம்.

சோரபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து ஐந்திற்குக் கவி 385

## 46. முஷ்டிபலப் படலம்

பிடிப்பதற்கொன் றுளவினநேர் வித்தினம்வேர் நாற்வெற்
பினமுரிவை உலர்ந்ததுகம் பென்புகிர்கொம் பினமும்
உடுப்பனபைங் கூழடலை நூலரிசி இரைத்தன்
டுளத்தையும ரிசனந்தீ உற்றதுமுள் ளுளதவ
வடுபடல்செங் கல்லோடு தட்டைபடை தவிடு
மண்ணுளமற் றுளதான்ய வர்க்கத் துளதும்
படிப்பினம்புல் லிற்கோலை பச்சிலைபாக் கும்மேன்
பாடிளது நெல்லிவைபார்ப் பாளனவென் பதற்கே. 386

முட்டி சிந்தனை அறியும்படி, இரவி உதயமாகில் வித்தின முதலானவை, வேர், நார், கல் முதலானவை. கோல், வைக்கோல், உலர்ந்தது, கம்பு, எலும்பு, நகம், கொம்பு முதலானவை என்க. மதியாகில் சீலை முதலானவை, பயிர்,

சாம்பல், நூல், அரிசி, இலைத்தண்டுள்ளது, இறைச்சி முதலானவை என்க. சேயாகில் மஞ்சள், தீப்பட்டது, முள் உள்ளது, வடுப்பட்டது, செங்கள், ஒடு, தட்டைக் கருவி முதலானவை. தவிடு மண்ணுள்ளவை மற்றுள்ள தானியம் முதலானவை என்க. புதனாகில் எழுத்துள்ள ஏடு முதலானவை, பசும்புல், இறகு, பச்சிலை, பாக்கு என்க. குருவாகில் மேம்பாடுள்ளவை, நெல்.

## இதுவுமது

பதனூனற் கினற்குரைத்த தினிசித்த முளதப்
பாற்பருத்தி யுமிநரம்பு பட்டமரம் ரோம
மதமாந்துற் கெந்தமுள துங்கரியு மாகும்
மதிமணவர்க் கம்படிகஞ் சுண்ணாம்பப் படிமண்
சிசுநாகங் கொடிகயிறு புகையிலைநீர்க் காணம்
செங்காண நஞ்சுளது சிகிக்காங்கட் செவிசேர்
புதனாகில் வெற்றிலைசேய் பொன்மதியேர் மண்மம்
புலியாழல்கா சிவைகுருப்பொன் னிரசதமப் புகர்க்கே. 387

சனியாகில் களைந்த தோல், நகம், எலும்பு, கொம்பு, பருத்தி, உமி, நரம்பு, பட்டைமரம், களைந்த மயிர், துர்க்கந்தம் முதலானவை, கரி என்க. வெள்ளியாகில் அதிகவாசம் உள்ளது, படிகம், சுண்ணாம்பு, வெள்ளைமண் என்க. இராகுவாகில் கொடி, கயிறு, புகையிலை, கருங்காணம் என்க. கேதுவாகில் செங்காணம், விடவர்க்கம் என்க. புதன், இராகு கூடில் வெற்றிலை என்க. சேய், குரு, மதி கூடில் பணம் என்க. சேய், மதி கூடில் காசு என்க. இவை குரு வர்க்கமாகில் பொற்காசு என்க. சுக்கிர வர்க்கமாகில் வெள்ளிக்காசு என்க.

## இதுவுமது

புகர்க்குயிரே லெட்டாறப் புதற்கொருநான் கனலம்
புயர்குளகாற் செந்துவுமாம் நெடுங்காலம் புலிக்காம்
சுகர்குயிரற் றதுதவழ்தல் அகிக்கவறகவ் விஷமும்
சொல்வாறிற மினம்ருசிபேர் தொகைவகைதா தாகி

இகத்திடையந் தரத்துளதும் இலைமுதல்மற் றதுமுன்
இசைத்ததுகண் டுரைத்திடுவர் இதற்குதயத் திறைவன்
மகத்துவங்கண் டதற்குளதாய் மறையிலிது விலதாய்
வகுப்பரிதன் மேற்சொலல்சிந் தனைப்பலமா முனியே. 388

*சுக்கிரன் சீவவர்க்கமாக வரில் எட்டுக்கால் சந்து என்க. புதனாகில் ஆறுகால் செய்து, சேய் இரவியாகில் நான்கு கால் உடையது, மதியாகில் நெடுங்காலுடையது, சனியாகில் சீவன் இல்லாதது, இராகுவாகில் தவழ்வது, இதில் விடமுடையது கேதுவாம், இதன் மேலும் நிறம், இனம், ருசி, பேர், தொகை, வகை முதலானவைகளையும்; தாதுமூல, சீவவர்க்கமும், பூமி, அந்தரம், ஆகாயம் இவற்றில் சஞ்சார வர்க்கமும் இலை, பூ, காய், கனி, வேர், கிழங்கு ஆகிய இவ்வர்க்கங்களுக்கு எல்லாம் முன்சொல்லியிருப்பதால் சகலமும் அறிந்துசொல்லுக. இதற்கு உதயமான இலக்கனாதிபதியினுடைய நடவடி அறிந்து சகலமும் சொல்லுக. இவை மறைதலாகில் பிடித்தகை சூன்யம் என்க. இதன்மேல் சிந்தனாபலம் சொல்லுவோம்.*

முட்டிபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து ஆறுக்குக் கவி 388

## 47. சிந்தனாபலப் படலம்

சிந்தனையுற் றவனுதயம் செடத்துதய மாயத்
தினக்கிரகர் முற்கிரகத் திரத்தினில்வைத் திதனால்
எந்தவினம் எந்தவகை எப்பலமும் சொல்லா
விதையமுள ததற்குதய மேடாதி எதுவோ
வந்தவிடத் தும்இறைமே அவ்விடத்தும் உளகா
ரகப்பெயரில் அதிபலப்பேர் அறைகுவரா லசியம்
வந்தவனுக் குதயமசு பத்தலமாய் விழித்தன்
மற்றவரா இறைபெலக்கின் மரணமின்மற் றதற்கே 389

*சிந்தனையாக வந்தவனுக்குக் கண்ட உதயராசி இலக்கனமாகவும், அன்றைத்தினத்து தாற்காலக் கிரகமே*

செனன காலக் கிரகமாகவும் வைத்து, அவன் முதலாகிய குடும்பத்துக்கு எல்லாம் பலன் சொல்லபடுவன ஆதலால் அவன் நினைத்துவந்த சிந்தனை சொல்லவேண்டில் உதய இலக்கினம் மேடாதிக்கு எவ்விடம் என்று அறிந்தும் உதய இலக்கனேசன் இருந்தவிடம் எவ்விடம் என்று அறிந்தும் இந்த இடங்களுக்குள்ள காரகங்களை வைத்துப் பெலமான இடத்துக்குள்ள காரகப் பெயர்கொண்டு சிந்தனை சொல்லுக. பிணியாளனுக்குக் கேட்பவனாகில் உதயம் பாவ ராசியாகவும் இந்த உதயத்தைச் சுபர் பார்க்கவும் உதயாதிபதி கோண கேந்திரம் இருப்பனாகில் மரணம் இல்லை என்க. இது அல்லாமல் சுபஇராசி, சுபக்கிரகம் உதயமாகில் மரணம் உண்டு என்க.

**தற்கமொரு வர்க்கொருவர் உற்றிடில்வெல் பவரார்**
**சாற்றெனுமுன் மனையோனி தங்களில்சத் துருவாய்**
**நிற்குமிதற் கடலுளநா ளொருபாத முதனோர்**
**நெருப்பளவாய் எலிமுயறோ லரவிவைநேர்க் குளதாம்**
**சொற்குளவத் திசைக்குளதும் பஞ்சபட்சிக் குளதும்**
**சொற்றிடுநா மத்துளதும் சுடர்முதலெண் டிசைப்பேர்**
**மற்குளது மற்றதுவும் கண்டுறைத்திடு வரிதுவெவ்**
**வளவுளநாள் கெனிலதிபர்க் குளதும்வகுப் பதுவே. 390**

ஒருவர்க்கொருவர் தர்க்கமாவது கண்டு வெல்வது தோற்பது கேட்பதாகில், கிரக யோனியாகி அவைகீழ்திசை முதல் நேர் கருடன், பூனை, சிங்கம், நாய், சர்ப்பம், எலி, யானை, முயல் என்க. இத்திசையும் இப்பகையும் அறிந்து சொல்லுக. இதற்குச் சித்திரை மாதம் முதல் மூன்று மாதம் எலி பூனையை வெல்லும். மேல் மூன்று மாதம் முயல் நாயை வெல்லும், மேல் மூன்று மாதம் யானை சிங்கத்தை வெல்லும். மேல் மூன்று மாதம் சர்ப்பம் கருடனை வெல்லும். ஆதலால் இத்திசையும் இருப்பதையும் அறிந்து சொல்லுக. பஞ்சபட்சி பலனும் நாமநட்சத்திர பலமும் எண்டிசைக் கிரக பலமும் அறிந்து இவை முதானவைக்கு உள்ள பலாபலமும் அறிந்து

சொல்லுக. இதற்கு எவ்வளவு நாளென்பது அறியவேண்டில், இதற்குக் கண்ட பலவானுக்குச் சொன்ன சங்கை சொல்லுக.

அதலுவிறை அண்ணலுதயம் இவைநற் சரமாய்
அதிபெலமுற் றிடிலாற்றாம் உபயநகர்க் கணித்தாம்
இதுவலதத் தலம்பெயர்தல் இல்லையெனல் வருவோர்க்
கீசனள வுரைத்ததின் நான்குயர்த்தி எழுவோர்க்
குதவிலவ ணிவணுறல காவற்குளனுள் னதனோ
உளன்வழியன் வருவதிலை என்பதிது வும்மாஞ்
சிதவிறைவெய் யவனிறைமேல் சேர்வதுயாத் திரைக்காய்ச்
செப்புவரித் திறம்போல மற்றதும்செப் புதலே, 391

ஏழாமிடத்திற்கு உடையவன், இலக்கனேசன், இலக்கனம் சர வர்க்கமாகி அதிபெலம் உற்றிடில் போனவன் வழியில் வருகிறான் என்க. உபயமாகில் ஊருக்குச் சமீபத்தில் வருகிறான் என்க. திரமாகில் அவிடம் விட்டுப் புறப்பட வில்லை என்க. அது அல்லாமலும் எப்போது வருவான் என்று கேட்பவனை ஒரு நட்சத்திரம் சொல்லச்சொல்லி அத்தினம் தொட்டு திருவாதிரை வரைக்கும் எண்ணி நான்கில் பெருக்கி, ஏழுக்குக் கொடுக்க வந்தமிச்சம், ஒன்றாகில் அவிடத்தில் இருக்கிறான். இரண்டாகில் இவிடத்திற்குச் சமீபித்தான். மூன்றாகில் காவலுக்கு உள்ளானான். நான்கில் பயணமாக எழுந்திருந்தான். ஐந்தாகில் பிணி கொண்டான். ஆறாகில் வழியில் வருகிறான். ஏழாகில் வரவில்லையென்று சொல்லுக. இதுவும் ஒரு பலனாம். யாத்திரை இல்லையோ உண்டோ என்று கேட்கில் பத்தாமிடத்திற்கு உடையவனும் இரவியும் இலக்கனேசனும் பத்தாம் இடத்திற்கு உடையவன் வர்க்கம் ஏறில் யாத்திரை உண்டு என்க. இந்தப்படி யாதொரு சிந்தனைக்கும் அதிபதி காரகம் கொண்டு பலன் சொல்லுக.

சிந்தனாபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து ஏழிற்குக் கவி 319

## 48. உலகியல் படலம்

செப்புதலிப் படிக்கதிபன் காரகம்மற் றுளதும்
தெரிந்துரைத்தல் சிந்தனைக்காம் இதன்மேல் செப் புவது
முப்புரிமார் புனன்பால உலகியல்முன் மழைக்காம்
மும்மூன்றேழ் நவம்உபய முதற்றினநேர் இவைநேர்
அப்புகர்மால் கூடிலதி கம்மிலற்பந் திரட்சி
அனாவிருட்டி வெகுமழையாம் அரிதுலைகெர்ச் சிதமின்
இப்பருதி இவைஉறவிக் குறிஎழுநாட் குளதாம்
என்னில்உண் டாமற்றெனின் மற்றில்வருஷத் தியல்பே. 392

*சிந்தனா பலத்துக்குக் காரகம் அதிபதி முதலானவை கொண்டு யோசனை பண்ணிச்சொல்லுக. இதன்மேல் பிரமாவுக்குப் புத்திரனானவர் உலகியல்பு சொல்லுவதில் முதலாவது மழைக்கியல்பு சொல்லுவோம். அசுபதி, பரணி, கார்த்திகையில் சுக்கிரனும், புதனும் கூடில் அதிக மழை. உரோகிணி, மிருகசிரம், திருவாதிரையில் கூடில் மழை இல்லை. புனர்பூசம், பூசம், ஆயிலியத்தில் கூடில் அற்ப மழை. மகம், பூரம், உத்திரம், அத்தம், சித்திரை, சோதி, விசாகத்தில் கூடில் சிலாமழை. அனுசம், கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணம், அவிட்டம், சதயம், பூரட்டாதியில் கூடில் அனாவிருட்டி. உத்திரட்டாதி, ரேவதியில் கூடில் வெகு மழை என்க. ஆவணி மாதம் ஒன்றாம் தேதி முதல் ஏழாம் தேதிவரைக்கும் இடி முழங்கிலும், ஐப்பசி மாதம் இந்தப்படி மின்வெட்டிலும் அந்த வருடம் மழை மிகுதியும் உண்டு என்க. இந்தக் குறி தப்பில் மழையில்லை.*

### *இதுவுமது*

அத்தமுத லைந்தரன்மா வடுப்பெமன்பெண் படியில்
அசிதன்வரில் சால்விலொரு வங்கனையான் துலையில்
வித்தம்வரில் அனல்சுகன்போல் வெயில்மனைபெண் நீக்கி
வெள்ளியுறின் மாகேந்த்ர தகிகிரணம் மேவில்
சித்திரைமா தம்புகர்பொன் திங்கள்பெறில் இவையில்
தீபமுறில் பஞ்சமிமுற் பட்சமுறில் சிகிதீண்
டத்தினம்பெய் திடில்சிலைகோ லினன்பாவ வாரத்
தனதணையில் மாரிபெய்வ தாவசியம் எனுமே. 393

அத்தம், சித்திரை, சோதி, விசாகம், அனுசம், திருவாதிரை, அசுபதி, பரணி, சதயம், அவிட்டம், பூரட்டாதியில் சனி வரினும்; கும்பம், தனுசு, மேடம், கன்னி, இடபம், துலாத்தில் குருவரினும்; சனி போலும் செவ்வாய் வரினும், சிங்கம், கன்னி நீங்கலாக மற்ற இராசிகளில் சுக்கிரன் தீண்டிலும், மாகேந்திர மண்டலத்தில் இராகு கிரகணம் தீண்டிலும், சித்திரை மாதம் சோதி நட்சத்தியம் பொருந்திய வெள்ளி, வியாழன், திங்களில் பிறக்கினும்; பூர்வபட்சத்துப் பஞ்சமியில் பிறக்கிலும் கேது கிரகண காலத்தில் மழை பெய்யினும்; ஐப்பசி மார்கழி மாதம் பாக வாரத்தில் பிறக்கினும் மழை அவசியம் பெய்யும்.

## இதுவுமது

அம்மிறைகை மான்தலைபுல் லாய்குளம்சோ தியில்வரன்
    அவ்விலுறி நாளிருநான் காடிமுடி உதயம்
பம்மிறைபார்க் கவன் திசைக்காற் றடிக்கிலுவா சோதி
    பகலுதயம் வில்லூன்றி மேகம்வரில் பருதி
இம்மதியம் வட்டமுறில் தேள்கோள்பொன் மதிகக்
    கிரனுமுறில் பொன்புகருக் கெமன்பவுமன் தோற்கில்
சொம்மிறையை மைக்கோனைச் சோமனுறி லினன்முன்
    சுங்கனுறில் நிர்மலம்விண் தோன்றின்மழைக் கியல்பே. 394

பூராடம், திருவாதிரை, அத்தம், மிருகசிரம், அனுசம், பூரம், உத்திரம், சோதி, இந்திரசரபம் தோன்றில் நாள் எட்டில் மழை என்க. ஆடி மாதம் உத்திராடத்து அன்று உதயத்தில் வடகாற்று மேல்காற்று அடிக்கினும், ஆடி மாதம் உவாவிலாவது சோதியிலாவது உதய காலத்தில் இந்திர சாபத்துடனே மேகம் வரினும் இரவியை மத்தியான காலத்தில் பரிவேடம் சுற்றினும்; சுக்கிரன், மதி, குரு, விருக்ஷிகக் கோளில் கூடிலும், குருவுக்குச் சனி தோற்கிலும், சுக்கிரனுக்குச் செவ்வாய் தோற்கிலும் குரு, சேய், மதி கூடிலும், இரவிக்கு முன் சுக்கிரன் ஓடிலும், ஆகாயம் நிர்மலமாகிலும் மழை உண்டு.

## இதுவுமது

மழைஇலைஉண் டென்பதிது ஐப்பசிநேர் மகர
மாதஉத யத்துறினீர் வாய்ப்புறவின் வடமேல்
கழறிசையும் மின்எதிர்க்கில் சேறலவன் ஏற்றி
அதிகவேயர் சனங்களிடத் தாகிலின னார்ந்தந்
தழலுறினும் மழையுளதாம் தகர்மாதத் துதயம்
தபனனெனில் ஆடிமுடச் சிதிசைக்காற் றடிக்க
குழமதிமிக் காநாளின் நவமிசுடர் கூடில்
குறுமுனியே அற்பவருடப் பெயர்கூ றுவதே. 395

ஐப்பசி மாதம் முதல்தேதி உதயத்தில் மழை பெய்யில் அந்த வருஷத்திற்கு மழையில்லை என்க. தை மாதம் உதயத்தில் மழை பெய்யில் மழையுண்டு என்க. ஆகாசம் நீர்வாக்கோடிலும், வடமேல் மூலையும் அக்கினிமூலையும் எரிந்து மின்னிலும் நண்டு தன் வளைச்சேற்றை வெளியேற்றிலும் சனங்களுக்கு எல்லாம் அதிக வியர்வை உண்டாகிலும், இரவிக்குப் பன்னிரெண்டில் சேய் இருக்கிலும் மழை உண்டு என்க. சித்திரை மாதம் ஞாயிறில் பிறக்கிலும், ஆடி உத்திராடத்து அன்று வடகாற்று அடிக்க அம்மாதம் பூர்வபட்சம் சோதி, நவமி கூடிலும் அற்பமழை.

## இதுவுமது

கூறியஇவ் வியல்பலது மழைஇலையென் பதற்காம்
குருமாற்கும் புகர்சனிக்குந் தோற்கிலுத யங்கொண்
டூரவவ்வி இரவிமதியைத் தீண்டில் இடபத்
துடுவீழிற் சானான்காய்ப் பின்னுடன்முன் னோடன்
மாறபன னுடனாகில் வருஷமில்லா தவநீர்
வவுநாளில் கெற்பகுறி மாதமியாழ்க் கைங்கால்
ஏறலொரு காற்றேண்மட் டிடபவரை முக்கால்
இதின்மாரிக் குறிகாணின் மழையெனச்சொற் றிடலே. 396

முன்சொன்ன மழைக்குறி வர்க்கத்தில் ஒன்றுமில்லாது இருக்கில் மழை இல்லையென்க. இதல்லாமலும் புதனுக்குக்

குரு தோற்கிலும், சனிக்குச் சுக்கிரன் தோற்கில் உதயகாலம் இரவி, மதியை அரவு தீண்டிலும், இடப இலக்கனத்தில் நட்சத்திரம் வீழிலும் புதனோட்டம் தப்பிலும் மழையில்லை என்க. பூராடத்தில் சூரியன் நிற்கும் வரைக்கும் கற்பக்குறி என்க. இதற்கு ஆனிக்கு நாள் ஒன்றேகால். ஆடி முதல் கார்த்திகை வரைக்கும் மாதம் ஒன்றுக்கு நாள் ஒன்றுக்கு மேல் வைகாசி வரைக்கும் மாதம் ஒன்றுக்கு நாள் முக்கால் என்ப. இத்தினங்களில் மழைக்குறி காணில் மழை உண்டு.

**சொல்லியஇம் மழைப்பலனெற் பலன்கவிபொன் மாலாய்த்**
**தோன்றுதன்மா தத்துதய மாகவுருள் சூரல்**
**அல்லிறைதை தீக்கோளில் ஆண்டுதிக்கச் சோமன்**
**நடுகயற்றெற் குயரவொப் பரவான குடமாய்ச்**
**செல்லுறன்மற் றிடமாகில் அகம்ஏறும் வேய்மா**
**தீபமுடி அவுணர்நுகந் தெப்பமும்சேய் மதியும்**
**புல்லிடமா தம்பிறக்கில் சமமிதுவல் லதுவாய்ப்**
**புகல்வரகந் தாழ்தலெநப் பொதியவரை முனியே.** 397

*முன்சொன்ன மழைப் பலமெல்லாம் நெல்பலம் என்க. இதன்மேலும் புதன், வியாழன், வெள்ளியில் மாதம் பிறக்க, ரோகிணி, புனர்பூசம், மிருகசிரம், பூசம், கார்த்திகை, உத்திரம், உத்திராடத்தில் வருஷம் பிறக்கிலும்; பங்குனி, சித்திரை மாதங்களில் பிறை தெற்கு உதயமாகி, வைகாசி சமமாக நிற்க, மற்ற மாதங்களில் வடக்கு உயரிலும் தானியம் உயரும் என்க. புனர்பூசம், அசுபதி, சோதி, உத்திராடம், மூலம், மகம், ரேவதியில் திங்கள், செவ்வாய்கூட மாதம் பிறக்கில் தானியம் சமவிலை என்க. இவை அல்லாது எல்லாம் தானியம் தாழ்வு என்க. பொதியவரையினை உடைய அகத்தியமா முனியே!*

**வரைக்கிறைகை யல்லகிபுற் றீபமசி தன்னூழ்**
**வருடமுறில் குறையுமற்ற தொப்பரவாந் தினத்தில்**
**உரைத்ததல்லா ததுமாந்தி உவாஇருத்தை விட்டில்**
**உதயமுமப் பெயராகில் அத்தமனம் உதயம்**

சுரப்பெயர்தேட் பெயர்மாதம் தோன்றிலுவா வன்று
துர்க்குறியாய் இடியுடுவால் ஆலம்விடில் சோமம்
அரிக்கிறையோர் பட்சமதி லரவிருவர் தொடல்வில்
ஆனிகுளிர் தேள்மாத மாகினெற்றா முதலே. 398

*திருவாதிரை, அத்தம், பரணி, ஆயிலியம், அனுசம், சோதியில் சனி, ஞாயிறுகூட வருஷம் பிறக்கில் நெல் தாழும் என்க. முன்சொன்னது அல்லாதவையாகில் சமவிலை என்க. முன்சொன்ன நட்சத்திரம் அல்லாதவையாக உவா, இருத்தை விட்டி கூட குளிகன் உதயமாக வருஷம் பிறக்கிலும், அத்தமன காலத்தில் தை மாதம் பிறக்கிலும், உதயகாலத்தில் கார்த்திகை மாதம் பிறக்கிலும் உவாக்காலம் இடிவிழல் ஆலங்கட்டி விழல் உடு விழல் இவை முதலாகிய துர்க்குறி உண்டாகிலும்; இரவி, மதியை ஒரு பட்சத்தில் இராகு-கேது பிடிப்பது. மார்கழி, ஆனி, ஆடி, கார்த்திகை மாதங்களிலும் தானியம் குறையும்.*

தலத்தாடி முடியுதயம் தழலருகன் திகைக்கால்
தடிக்கிலிப்பேர் மண்டலத்தூழ் சசியையகி சாரில்
செலத்தாதி பர்குருவை விழுங்கிலசி தன்சேய்
செயமாக நிதிதோற்கில் சேய்சனிகட் செவியை
நலத்தாதி பன்சேரில லதிவர்களே திர்க்கின்
ஆகமனற் பங்கணையி னவெகிர்தீ பறைமன்
சொலத்தீர்மூன் றுபயமொரைந் திவைநேர்தொட் டுளத்தில்
சுகன்கனலுற் றிடில்சனமும் அகமும்சுருங் குதலே. 399

*ஆடி உத்திராடத்து உதயம் தென்கீழ் மூலையிலும், தென்மேல் மூலையிலும் காற்றடிக்கிலும், வாயு மண்டலத் தினத்தில் இரவி, மதியை அரவு தீண்டிலும்; மதி, சுக்கிரன், குருவை விழுங்கிலும்; சனி, சேய்க்குக் குரு தோற்கிலும்; சேய், சனி, ராகு, குரு கூடிலும் அல்லது இவர்கள் ஏழுக்கு ஏழாக வரினும்; இராகு, சேய், சனி கூடிலும்; ஆயிலியம், மகம், பூரம், கார்த்திகை, ரோகிணி, மிருகசிரம், உத்திரட்டாதி, ரேவதி, கேட்டை, மூலம், பூராடம், உத்திராடம், திருவோணத்தில் சேய், சனி கூடிலும் சனமும் தானியமும் குறையும்.*

சுருங்கிடைமா வானாதி தேள்கயலாந் தியம்சேய்
சுகனுறில்சால் கோலலவன் சுறவிதிற்பம் முதரில்
சுரந்தவிர மற்றதில்தேள் கோல்குளிர்யாழ் சனியில்
சங்கராந்திப் பெயருறில்தா ழுதல்குருபெண் துலையில்
வரும்பொழுதில் அளப்பனவும் நிறுப்பனவும் குறைதன்
மற்றதுமற் றவர்க்காஞ்சான் மாதமதில் மகத்தில்
பொருந்துதெற் கொன்றாய்நேர் கால்கானெற் றாழ்வாய்ப்
புகல்வதென்றால் என்னிகயத் துளதுபுணர்ப் பவனே. 400

சிங்கம், இடபம் ஆதியிலும்; விருட்சிகம், மீனம் அந்தத்திலும் சனி, சேய் கூடிலும்; கும்பம், துலாம், கடகம், மகரத்தில் நட்சத்திரம் வீழிலும் திர, உபய இராசியில் சனி வாரத்தன்று கார்த்திகை, ஐப்பசி, ஆடி, ஆனி இந்த மாதங்கள் பிறக்கிலும் தானியம் குறையும் என்க. கன்னி, துலாத்தில், குருவரும்போது அளப்பனவும் நிறுப்பனவும் குறையும் என்க. மற்றுள்ளது மற்றவர்க்கு உள்ளபடி சொல்லுக. மாசி மகத்தன்று சந்திரன் ஒரு மீன் தெற்காக விட்டோடில் தானியம் கால்வாசி குறையும், இரண்டு மீன் விட்டோடில் அரைவாசி குறையும். மூன்று மீன் விட்டோடில் முக்கால்வாசி குறையும். நான்கு மீன் விட்டோடில் முழுவாசி குறையும் என்று திருவாய் மலர்ந்து அருளினவன் என் இதயத்துள யாவும் தானாக நடத்திய சுப்பிரமணியக் கடவுள்.

பவுமனைச்சுன் மதிவிழுங்கில் பாகவன்சேய் மால்பொன்
பங்கனுமம் புலிக்கிளைக்கில் பார்த்திபர்க்குத் தமமாம்
சவுரியன லான்றிதேட னுமீன்வக்கி ரிக்கில்
தழல்வீட்டந் தணனிருக்கில் இவன்நீசம் தழுவி
அவனிசுதன் மால்புகருக் கற்கோமான் தோற்கில்
அத்தமனத் திரவியையூ ரரவுவளைத் தணையில்
இவண்மதிக்கா கிலப்போதி டிமழைமீ னுற்கை
இனன்பொன்னன் மனையாய்வீழ்ந் திடின்மனருக் கெமனே.

சனி, மதி, சேயை விழுங்கிலும்; சுக்கிரன், சேய், புதன், குரு, சனி இவர்கள் மதிக்குத் தோற்கிலும்; அரசர்க்கு அனுகூல காலம். இடபம், சிங்கம், விருச்சிகம், தனுசு, மீனத்தில் சேய்,

சனி வக்கிரிக்கிலும்; மேடம், விருச்சிகத்தில் குரு இருக்கிலும் அல்லது குரு, நீசம் ஏறிலும்; சேய், புதன், சுக்கிரனுக்கு மதி தோற்கிலும் அத்தமன சமயத்தில் இரவியைப் பரிவேடம் வளைய அரவு தீண்ட அல்லது மதியையாகிலும் இந்தப்படி தீண்ட அப்பொழுது இடி வீழ்தல், மழை பெய்தல், நட்சத்திரம் குறைக்கொள்ளி வீழ்தல்; இரவி, சேய், குரு வீடான இராசிகளிலாகில் அரசருக்கு ஆகாத காலம்.

எமமுதிக்க உடுவிழிப்பு தற்கனதோற் கினுமந்
திரிமரண மாற்கசிதன் சேயிவர்கள் இளைக்கில்
குமனுக்குச் சனிதோற்கில் குறும்பழிவு தேள்மான்
கோல்குளிர்யாழ் இதின்மாத முறில்சனிசேய் கூடி
மமதிபரி வேடமுறில் அந்தணன்சால் கலையில்
அணையிலனல் சனிவிழுங்கில் இவர்க்கனல்மால் தோற்கில்
சமர்குருச்சேல் உறவரவு தீண்டவிடி முதல
தழல்குறைபெண் துலைமாதம் தரித்தானை மடிவே. 402

மிதுனத்தில் நட்சத்திரம் வீழிலும், புதனுக்குச் சேய் தோற்கிலும், மந்திரி மரணம் என்க. புதனுக்குச் சனி, சேய் தோற்கிலும்; சேய்க்குச் சனி தோற்கிலும் குறும்பு அழிவாம் என்க. விருச்சிகம், மகரம், துலாம், கடகம், மிதுனத்தில் மாதம் பிறக்கிலும்; சனி, சேய் கூட பரிவேடம் கூடிலும்; மகரம், கும்பத்தில் குரு இருக்கிலும், சேயைச் சனி விழுங்கிலும், சனிக்குச் சேய், புதன் தோற்கிலும் யுத்தகாலம் என்க. குரு மீனத்தில் இருக்க, கிரகண காலமாக இடி, நட்சத்திரம், குறைக் கொள்ளி, ஆலங்கட்டி இவை வீழ்தல்; புரட்டாசி, ஐப்பசி மாதமாகில் சேனைகள் மடியும்.

மடிவுலகின் மனுவாடி முடியுதய மாக
மறலிதிசைக் காற்றடிக்கின் மாதவுத யப்பே
ரிடபமரி ஆடாகக் குருமீன்சால் இருக்கில்
என்பருத யத்தினனை ஊர்வளையில் எமனில்
கடகமொரு மாலிறுலை கனல்சனிவக் கரிக்கில்
கட்செவிதிண் டம்புவியைப் பரிவேடம் கதுவின்
முடியுதயந் தன்மேல்காற் றடிக்கிலத வுமிழ
முளரிமனை ஊடறுக்கின் மொழிவதுல கழிவே. 403

ஆடி உத்திராடத்தில் தென்திசைக் காற்று அடிக்கிலும்; இடபம், சிங்கம், மேடத்தில் மாதம் பிறக்கக் குரு மீனம், கும்பத்தில் இருக்கிலும் மானுடர் மடிவாம் என்க. உதயகாலம் இரவியைப் பரிவேடம் வளையிலும் மகரம், கும்பம், கடகம், மேடம், மிதுனம், கன்னி, துலாம் இவற்றில் சனி, சேய் கூடி வக்கரிக்கிலும்; மதியை அரவு தீண்டப் பரிவேசிக்கிலும்; ஆடி உத்திராடத்தில் தென்மேல் காற்றடிக்கிலும் இரவியை அரவு ஊடு அறுக்கிலும் உலகு அழியும்.

**உலகுசுத னில்வருட முறிலாடி முடியில்**
**ஒருபகடூ ரலர்திசைக்காற் றுதிலதிற்பூ றுவமும்**
**அலவனுறி நீசனும்பஞ் சமியும்உறில் சிதனும்**
**கனற்குநிதி கவிதோற்கின் மாவனல்கூன் னடுக்கில்**
**கலகமனற் பூர்வமுறில் அவர்க்குளதாம் மேதை**
**கதுவஇவன் வருடமுறில் காற்றசித னாகி**
**நலனறுநாட் டிதிவார வருடமுறில் உலகில்**
**நண்ணுதலா குலமிடன்மேல் நவில்வதும்சொர்ப் பனமே.** 404

செவ்வாய்க்கிழமையில் வருடம் பிறக்கிலும், ஆடி உத்திராடத்தில் அக்கினிமூலையிலும் தெற்கிலும் காற்று அடிக்கிலும், ஆடி மாதம் பூர்வபட்சத்துப் பஞ்சமியும், செவ்வாய்க்கிழமையும் கூடிலும், சுக்கிரனுக்குக் குருவும், செவ்வாய்க்குச் சுக்கிரனும் தோற்கிலும், அசுபதியில் சனி, சேய் கூடிலும் உலகத்தில் கலகம் என்க. இலக்கனத்தில் சேய் இருக்க வருடம் பிறக்கிலும் சோராக்கினி பயம் என்க. இலக்கனத்தில் புதன் இருக்க, புதவாரத்தில் வருடம் பிறக்கிலும், காற்று அதிகம் என்க. இலக்கனத்தில் சனி இருக்க பாவ வர்க்கமாகிய திதி, வார, நட்சத்திரமும் கூடில் நோயும் அனர்த்தமும் தொக்கடையும் சொல்லுக. இதன்மேல் சொர்ப்பன பலமும் சொல்லுவோம்.

உலகியல் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து எட்டிற்குக் கவி 404

## 49. சொர்ப்பனபலப் படலம்

சொற்றிடல்புன் முரல்செய லசேகரங்கை அசைத்தல்
சொர்ப்பனமாய்த் தேவிடத்தில் தோன்றல்பராட் டமதாம்
சற்றிடைமின் வாலைசுமங் கலிதீப நீர்ச்சால்
சற்சனர்தம் மனைபுகுதல் சௌபாக்ய மாகும்
மிற்றனிற்றீப் பட்டெரிதல் சோபனம்பான் மலஞ்சோ
றின்கனிவி பூதிதனம் இவைநுகர்த லதன
நற்றகைமா சுணம்பணிதி யரிசஞ்சந் தான
நரிகவிநீல் பணிநாய்நண் ணலர்பயம்நண் ணூதற்கே. 405

*சொர்ப்பனபலம் அறியும்படி :* தேவபிம்ப தரிசனையில் தேவபிம்பம் வாய்விட்டுப் பேசல், புன்முறுவல் செய்தல், சிரமும் கையும் அசைத்தல், காணில் பாராட்ட சஞ்சாரத்துக் காலம் என்க. தம்மனையில் இலக்குமிபோலும் வாலைப்பெண் வரல், சுமங்கலி வரல், தீபம், நிறைகும்பம், சற்சனர்கள் கொண்டுவந்து தரக்காணில் சௌபாக்கியம் என்க. பால், மலம், சோறு, இனிய கனி ,விபூதி இவை காணில் தனலாபம் என்க. இவை பொசிக்கக் காணில் தனநாசம் என்க. அழகுடைய சர்ப்பம், ஆபரணாதி, மஞ்சள் இவை காணில் சந்தானம் என்க. நரி, குரங்கு, கருத்திருப்பன், துர்ப்பாம்பு, நாய் இவை காணில் சத்துரு பயம்.

உதகமுகுந் தாற்றில்வரல் பயிர்தழைதன் மகிழ்வீ
துடலறல் படைகினைக்கா குலமுதிரம் ஓடல்
பதமறைபெய் திடல்காநீர்ப் படுகர்நதி கூவல்
பயஞ்சுதற லகமுளதப் பாலெழனிர்ப் பலமாம்
கதைகொடுதெற் கொருவன்வரல் கண்டலற தனதங்
கத்திலொரு உறுப்பதனைக் கவர்தலழைத் திடல்சாம
புதலுளதி இவனேற இவைகவிபெற் றெமன்பால்
போதல்கன வெனிற்றினப்பேர்க் குயிர்சமன்போக் குதற்கே.

ஆற்றில் நிரம்பத் தண்ணீர்வர, பயிர் தழைவாகவர, களவு காணில், சந்தோஷ காலம் என்க. ஆறு பெருகித் தண்ணீர் ஊடெடுக்கில் படைவரும் என்க. பயிர் விளைந்து அறுக்கக்

காணில் பந்துசனத்துக்கு ஆகுலம் என்க. இரத்தம் ஓடக் காணில் பதமழை என்க. வாவி, குளம், நதி, கூவல் இவற்றில் பெருகி நின்ற நீர் சுவறிப் போகக் காணில் தரித்திரக் காலம் என்க. தென்திசையில் இருந்து ஒருவன் தடி பிடித்துக்கொண்டு வருவது கண்டு அலறிடில் அல்லது சரீர உறுப்பில் ஒன்றைக் கவர்ந்துகொண்டு போதல் அல்லது அழைத்திடல், பிணத்தின் பேரில் தான் ஏற குரங்கு சுமந்துகொண்டு தெற்கினில் போதல் இவற்றில் ஒன்று காணில் இருபத்து ஏழு நாளையில் ஆற்பன சமான சரீர பதனம்.

சமன்திசைநாய் பகடொருவே சரியெடுத்தோ டுதனில்
இராசிகுற ளுருவாகித் தழுவியுடன் ஏகல்
சுமந்தசுரத் துடனெடுகத் துர்க்குரல்விட் டெழுப்பச்
சுதனையெடுத் தோடிலவனைத் துடர்தல்சு ராதே
அமைந்ததெழுந் தோடுதலத் திசையாத லிலைகொம்
பற்றமரத் தெண்ணையும்பொ டித்துடனே றுதலாம்
இமந்தழுவ உடலினடுக் குற்றிடச்சொர்ப் பனங்கண்
டெழுதலொரு கந்தாயத் தெமபுரம்சே ருதற்கே. 407

தென்திசையில் நாய், கிடாய், ஆடு, கழுதை இவற்றுள் ஒன்று எடுத்தோடக் கனவு காணிலும், கறுத்த நிறமும் குறளுருவமுமான தாசியைக் கைபிடித்துக் கொண்டு தெற்கே போகக் காணிலும், ஒருவன் வந்து பிள்ளையை எடுத்துக் கொண்டு தென்திசையில் ஓடுகிறதைக் கண்டு இரு கையையும் தலைமேல் வைத்துக்கொண்டு நெடுங்குரலிட்டுத் தொடர்ந்து போகிலும், தேவ பிம்பமாவது தேவராவது தெற்கினில் போதல், இலைகொம்பு அற்ற பட்டமரத்தில் பொடித்ததுடனே எண்ணெயிட்ட உடலுமாக ஏறுதல், பனி மூனம் பெறாமல் நடுக்குற்ற உடல்போல கைகால் உடல் பதறக் கனவு கண்டு எழுதல் ஆகிய இவை காணிலும் நான்கு மாதத்தில் மரணம்.

புரம்பருத்தன் மணக்கோலம் புனைதலெண்ணெய் அணிதல்
புலையர்தொ டல்சிரரோ மம்போக்குகல் புண்படற்காம்
வறம்பறநாய் நரிகரமிற் புகுதல்சிறு தான்யம்
வரையிலுளன் மோதகவர்க் கம்வரனோய் அவர்க்காம்

குரம்பரிய வாம்புரவி சிவிகைகயம் ஊர்தல்
கோபுரமுப் பரிகைகிரிக் குவட்டிடத்துன் னதத்தும்
கரம்புனையும் சிரசினர்நிற் பதற்காய்வீற் றிருக்கக்
கனவுதிக்கின் வாழ்விதன்மேல் காலமறி வதற்கே. 408

சரீரம் பருத்திருக்கக் கனவு காணில், கலியாணக் கோலம் அலங்கரித்தல், உடல் முழுதும் எண்ணெய் இடுதல், புலையர் தொடர், சிரசு உரோமம் களைதள் ஆகிய இவை காணினும் மனசு புண்படல் என்க. நாய், நரி, கழுதை மனையில் புகுதல், சிறுதானியம் மலைபோல் குவிதல், பணிகார வர்க்கம் வரல் ஆகிய இவை காணில் ரோக காலம் என்க. குதிரை, பல்லக்கு, யானை ஏறி நடத்த, கோபுரம், உப்பரிகை, மலையின் உச்சி இவற்றில் இருக்க, அநேகம்பேர் குவித்த சிரசினால் நிற்கக் காணில் ஐசுவரிய காலம் என்க. இதன்மேல் காலம் அறிதல் சொல்லுவோம்.

சொர்ப்பனபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் நாற்பத்து ஒன்பதிற்குக் கவி 408

## 50. காலம் அறிதல் படலம்

கால்கரந்தெப் புண்ணனையா தொருதரநீர் குளிக்கில்
கண்ணாடி யில்சிரங்கா ணாதுநுதல் கவித்து
மேலெதிர்பார்த் திடன்மணிக்கை பருக்குமொடு விரலில்
விளக்கடங்கா தொளிருநடு விரல்மடக்க மிகுந்த
நால்விரலில் அணிவிரல்மேல் எழும்புமித ழெயிறு
நாக்கறுக்கும் கண்செவிநா சிகைகுளிர்பஞ் சணைதல்
போல்வெளிரி நொய்துறும்வாய் புகையுமலம் கழியும்
போதுபுலால் வெடிநாறும் திதித்தினம்பொன் றுதற்கே. 409

ஒருதரம் நீரில் குளித்து எழுந்திருக்கில் உள்ளங்கை, கால், தொப்புள் நனையாது இருக்கிலும், கண்ணாடி பார்க்கில் சிரசு காணாது இருக்கிலும், புருவ மத்தியில் மணிக்கையை வைத்து மேலாகப் பார்க்கில் அடிக்கை சிறுத்து, மணிக்கை பருத்திருக்கிலும், ஒரு விரலில் விளக்கு அடங்காது

ஒளிரிலும், நடுவிரல் பூமியில் மடக்க நின்ற நான்கு விரலில் அணிவிரல் மேல் எழும்பினும், இதழ், எயிறு, நாக்கு இவை கறுக்கினும்; கண், செவி, நாசி இவை குளிர்ந்து பஞ்சணைந்து மிருதுவாய் வெளிரினும், வாய் புகையினும், மலம் கழியும் போது புலால்வெடி நாறுகினும் ஒரு பட்சத்தில் மரணம்.

தற்குணம்பே தித்தல்பருத் தல்விளைத்த லிதுவ
 தாதல்பெறு நாட்கடந்தப் பாற்றனையர் காண
இற்பெறுதல் வெகுகாலம் பாழடைந்த இடத்தில்
 இளமையிழந் தவறைமண மேற்றன்மனம் இசையாள்
கற்புடமை அழித்தலுப காரமறந் தவர்கட்
 காகுலம்செய் திடலான்ம வதைக்காதல் பெரியோர்
சொற்குரமேற் றல்புலால் மறுத்தும்வெகு நாட்பின்
 துய்த்தலவ்வாண் டலதிரண்டில் பொன்றுதல்சொல் லுகவே. 410

தன்னுடைய சுயகுணம் பேதிக்கிலும், பருத்தவன் இளைக்கிலும், இளைத்தவன் பருக்கிலும், பேறுகாலம் கடந்தபின்பு புதல்வரைப் பெறுதலும், வெகுநாள் பாழடைந்த இடத்தில் மனை எடுத்தலும், இளமை தப்பின பெண்ணை மணம் செய்யிலும், மனதிசையாதவளைக் கற்பழிக்கிலும், ஒருவர் செய்த உபகாரத்தை மறந்து அவருக்கு அபகாரம் செய்யிலும், ஆன்மவதை செய்யிலும், பெரியோர்கள் மனசு நோகப்பண்ணி, அவர்களுடைய குரூர வசனம் ஏற்கினும், வெகுநாள் புலால் மறந்து மேம்பாடாக நடந்துகொண்டு பின்பு புசிக்கிலும், அந்த வருடத்தில் மரணம் என்க. தப்பாமல் இரண்டாம் வருடம் மரணம் தப்பாது.

பொன்றுதலோர் புறத்தொருநாள் காண்டயனம் உபய
 போதெனின்முத் தினம்தினமாய்ப் புகல்வர்சர மாகி
நின்றவன்மெய் அசையாமல் நிழலசையில் திதியாம்
 நீருமிழ்வான் வின்மறைந்தெ திரோடினி லத்தில்
ஒன்றியகால் சுவட்டுருவம் பாதியுறில் செவிக்கு
 ஓசையறில் ருசிபிறழின் நயனவிழிப் பொளிக்கில்
தென்திசையுற் றிடற்குளநாள் தெசமாகும் இதன்மேல்
 திரிமல்வி னோதவியல் குள்ளதும்செப் புதலே. 411

ஒருநாள் முழுவதும் ஒருபுறமாகச் சரம் ஓடில் வருடம் ஒன்றில் மரணம். இரண்டு நாள் ஓடில் ஒரு அயனத்தில் மரணம், மூன்றுநாள் ஓடில் நாள் இருபத்தேழில் மரணம். சரீரம் அசையாமல் நிழல் அசையில் பதினைந்து நாளில் மரணம். வாய் நீர் உமிழும்போது வானவில்போலும் பஞ்ச நிறமும் வளைதலும் இல்லாமல் நேர் ஓடிலும், நிலத்தில் காணிலும், செவிக்குள் ஓசை அறியிலும், ருசி பேதிக்கிலும், நயன விழிப்பு ஒளிக்கிலும் பத்து நாளையில் மரணம். இதனமேல் திரிமல சம்பிரதாயவியல் சொல்லுவோம்.

காலமறிதல் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ஐம்பதிற்குக் கவி 411

## 51. திரிமல சம்பிரதாயப் படலம்

புதுமலர்வா சனைதனம்பூ விரிமணம்சம் போகம்
புத்திரர்பா லுற்றவர்பொன் றுவதுசுண்ணாம் புக்காம்
மதமதனத் தேன்ரோகம் பானகம்அற் பாயுள்
மலடுபுலால் நாவிமணம் தீர்க்காயு வனசம்
சுகரதிக முவர்தொழும்புற் றிடல்கமுகின் பாளை
சுகமதிகம் சுவறலிற்று விடில்சுடிறுக் கமுகா
மிதமில்வெறுத் திடலிறைச்சி மலமிறப்பிந் திரியத்
தியல்புமிதாம் இதன்மேல்சின் னீரதனுக் கியல்பே. 412

இந்திரியம் விடும்போது புதுமலர் வாசனை வீசில் தனம் உண்டாம். பூவிரி வாசம் வீசில் சம்போகம், பால்போலும் கமழில் புத்திரப்பேறு. சுண்ணாம்பு நாற்றமாகில் பெற்றிழப்பு. யானை மதம் போலும் வீசில் தரித்திரம், தேன் போலும் கமழில் ரோகம். பானகம் போலும் மணக்கில் அற்பாயுள். புலால் நாற்றம் தோன்றில் மலடி. கஸ்தூரி போலும் பரிமளிக்கில் தீர்க்காயுள். தாமரைபோல் வாசிக்கில் வெகுபுத்திரர். உவர் நாற்றம் தோன்றில் தொண்டுபடல். கமுகின் பாளைபோலும் மணக்கில் அதிக சுகம். சுவறுதல், இற்று விழுதல், சுடுதல் இவையாகில் துக்கம். சதா ஓடி சஞ்சலம் இறைச்சி, மலம் போலும் நாற்றம் தோன்றில் மரண காலம். இதன்மேல் சிறுநீர் இயல்பு சொல்லுவோம்.

நீர்சுவறல் இற்றுவிழல் வெலச்சாற்றின் மணத்தல்
நேர்பாயா தசைந்துவிழல் நிலந்துளையா தயர்தல்
சோர்தல்பிணி பணித்திடுதல் வயம்பகிர்தல் சுகமாய்த்
தோன்றல்சுதற் கம்புயவா சத்துடன்பான் மணமும்
சேர்தறனம் பிணநாற்றம் தரித்திரஞ்சத் துருவை
செயித்தலரி சனங்காவி செல்வமதி கமுமாம்
கார்நிறமுற் றழன்றெழுதல் சிதரிடன்மா ரணத்துக்
காமிதன்மேல் மலத்தியல்புக் காதல்கடி நுதலே. 413

*நீர் விடும்போது சுவறல், இற்று விழல் வெல்லச் சாற்றின் மணத்தல், நேர் பாயாது அசைந்து விழுதல், நிலந்துளையாத யற்றல், சோர்தல் இவையாகில் ரோகம் என்க. தாமரை வாசனையும் பால் வாசனையும் கலந்து வீழில் ஐஸ்வர்யம். பிண நாற்றம் தோன்றில் தரித்திரம். மஞ்சள் வாசனையாகில் சத்துரு ஜயம். நீலோத்பல வாசனையாகில் சௌபாக்கியம். நிறம் கறுத்து அழன்றெழுதல், சிதறிடல் இவையுமாகில் மரணம் என்க. இதன்மேல் மலத்தியல்பு சொல்லுவோம்.*

அறலிருசாண் அளவதன்மேல் ஆகுததீர்க் காயுள்
வாமுதகங் காற்குமுன்பாம் அதற்குளதைஸ் வரிய
மிறுகல்ரோ கங்கழிதல் இற்றுவிழல் குதத்தில்
எரிவொடனன் எமுதல்பிணி எப்பொழுதும் சுகமாய்
உறலதுசற் றெனினும்பா னத்தலமொட் டாமல்
உற்றிடல்சம் போகமதி கத்துளவாழ் உளதாம்
மறிமலமுற் றுதிரம்பச்சென் றொழுகிடலூண் கழிதல்
வானவில்போல் நிறம்காட்டல் மரணமலத் தியல்பே. 414

*மலம் விடும்போது இரு சாண் அளவும் அறாது வீழில் தீர்க்காயுள் என்க. வாய்வு, ஜலம் இரண்டும் முந்தாமல் மலம் முந்தில் ஐஸ்வரியம். இறுகி வீழில் அரோகம். கழிதல், இற்று வீழல், குதத்தில் எரிவோடு அனன்று எழுதல் இவையாகில் ரோகம். எப்போதும் சுகமாக உற்றிடல் சற்றெனினும் அபானத்தலம் ஒட்டாமல் விழில் சம்போகம் அதிகமான சௌபாக்கியம் என்க. ஆட்டுப்பிழுக்கை போல் உதிரம் பச்சை நிறமாகக் கழிதல், ஊன் கழிதல், பஞ்சவர்ணம் காட்டல் இவையாகில் மரணகாலம்.*

திரிமல சம்பிரதாயப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ஐம்பத்து ஒன்றுக்குக் கவி 414

## 52. தெரிசனாபலப் படலம்

மலர்உதித்த வன்பாலன் தெரிசனை விநோதம்
வகுப்பதுங்கேள் அமாவாசி மத்யானத் தினனாள்
இலகிவளைத் தாம்ப்ரவட்டத் தினின்றுநெய் பரப்பி
இப்புவியின் மேன்மையின்வைத் துவனுருவப் பார்க்கில்
நிலவசைதல் நிற்றல்கறுத் திடல்சிவந்த லிவைநேர்
நிதிபதிவிட் டோடலிருப் பிறப்பினனேர் குணபால்
குலமனைநந் தனர்தாதை துணையவன்வங் கிசந்தாய்
குடும்பமிவைக் கவ்வாண்டாம் குலங்குறைவுற் றிடலே. 415

*பிரமாவின் புதல்வ ! தெரிசனை விநோதமும் கேட்பாயாக. ஆதித்த வாரமும் அமாவாசையும் கூடின நாளில் மத்தியான காலத்தில் ஒத்த நிலத்தில் சுசி முதலானவை செய்து ஒரு தாம்பிரவட்டத்தில் நிறைய நறுநெய்விட்டுச் சூரியன் உருவம் பார்க்கில் அதில் இரவி ரூபம் மதிபோலும் காணில் ஐசுவர்யம். அசைமில் தானப்பிரட்டம் நிற்குமாகில் ஸ்திர கிரகவாசம். கறுக்கில் மரணம். சிவக்கில் மனோ சஞ்சலம் என்க. கீழ்திசையில் குறைந்து காணில் களத்திரத்துக்கும், தென்திசையில் குறைந்து காணில் புத்திரருக்கும், நிருதியில் குறைந்து காணில் பிதாவுக்கும், மேல்திசையில் குறைந்து காணில் சகோதரத்துக்கும், வடமேல் திசையில் குறைந்து காணில் தனக்கும், வடதிசையில் குறைந்து காணில் பந்து சனத்திற்கும் ஈசானத்தில் குறைந்து காணில் மாதுர் குடும்பத்துக்கும் ஆகாது.*

குறைவறுசோ மனைப்பூர்ணை நிசியிவனா ணடுமிக்
கொண்டமுகம் உத்தரமாய்ச் சுகிகொடுநோக் குதலும்
நரைமலரா திபனியல்போன் நண்ணிடில் பலமா
நடுவைபிரு கரம்பிடித்து நாட்டிதியும் கலப்பாம்
நிறையவிராய் பகல்பொழுதுற் றிடுங்காலம் வடக்காய்
நின்றமல வான்பார்க்க நிறைவிலுரு நிறைதன்
மனைதல்வியா குலநிதிய மரணமிதன் பலமா
மலையமுனி யேகாதற் கிதன்மேல்சொல் லுவதே. 416

சோமவாரமும் பூரணையும் கூடில், அந்நாள் நிசி மத்தியத்தில் விரதமாய் இருந்து பூரணசந்திரனை நடு மத்தியத்தில் வரும்பொழுது உத்தரமுகமாய் நின்று மல்லாந்து பார்க்கில் சூரியனுக்கு முன்சொன்ன லட்சணம்போலக் காணில் அதற்கதற்குச் சொன்ன பலன் சொல்லுக. இதன் மேலும் சித்திரை, ஐப்பசி மாதங்களில் ஆதித்தவாரமும், பூரணையுமாகில் நிசியிலும் சேமாவாரமும் அமாவாசியு மாகில் திவாவிலும் ஆகாசம் நிர்மலமாக இருக்கும்பொழுது இடையே இரண்டு கரத்தாலும் பிடித்துக்கொண்டு வடக்கில் நின்று தெட்சிணாமூர்த்தமாகப் பார்க்கில் கண்ட ரூபம் குறைந்து காணில் மனோவியாகூலம், நிறைந்து காணில் ஐஸ்வர்யம், மறைந்து காணில் மரணகாலம். இவை தெரிசனாபலம். இதன்மேல் அகத்தியமா முனியே ! காதல் பலன் சொல்லுவோம்.

தெரிசனாபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ஐம்பத்து இரண்டுக்குக் கவி 416

## 53. காதல் பலப் படலம்

சொல்லசக்கோண் டனக்கயல்கேள் பகையதற்கல் லவுதேர்
　　சூற்றனிய இரண்டிசையர் சுடரிவர்சுற் றுதல்நேர்
நல்லவர்க ளாகிலிது அல்லதற்குள் அதுவாய்
　　நவில்வதிவர் காரகத்தில் நடத்துவது நிசமாம்
அல்லவெனில் சுற்றவல மதால்தானிதற் கிவைமற்
　　றவருரைக்கில் அவரிருந்த ஆரூடம் அதுவாம்
வல்லபமாய்ப் பல்லிசொல் உதயமும்மற் றுளதும்
　　வைத்ததில்காண் பனபலமே மனதுரம்ப பலமே. 417

*கௌளிக் காதல் அறியும்படி :* மேடக்கோள் தனக்கும், இடபக்கோள் அயலாருக்கும், மிதுனக்கோள் பந்துவிற்கும், கடகக்கோள் சத்துருவிற்கும் என்ப. தனிச்சூலக் கிரகமும் எண்டிசைக் கிரகமும் அருக்க நிலையும் அறிந்து, இவர்கள் தொட்டு நேர் நடத்துவதில் சுபசேகரமாகில் சுபபலம் என்க. மற்றவையாகில் அசுபபலம் என்க. இவற்றிற்கு இவர்கள்

காரகம் கொண்டு நடத்துவது நிசமான பலமாம். நிசியாகில் இடமாக நடத்துக. இப்பலம் தானறிதற்கு என்க. மற்றவர் சொல்லில் அவரவர்கள் ஆருடமே அத்திசை என்க. இதன் மேலும் புத்தி வல்லமையினால் பல்லி சொன்ன இடமும் இலக்கினமும் மற்றத்தானமும் அற்றைக் கிரக நிலையும் வைத்துப் பலன் சொல்லுவது மனோரம்மிய பலமாம்.

**மனையிலிட நடையில்வல மற்றெதிர்மின் பொதுவின்**
**மலடிலையின் முள்ளுளகைப் புளமரமற் றிவைபோல்**
**எனிலினல்சொற் கொன்றிடர்பொன் இறப்பியல்புற் றார்நேர்**
**ஏழுமெட்டு நெல்லுயர விற்பதற்கிப் பலமூ**
**மனல்புகர்பாம் புறவினுக்கன் னியர்க்குமதி குருமற்**
**றதுதனக்கா கமகதத்தில் வலம்வாச லுச்சமருத்திந்**
**தனைவளைத்தல் உடலில்சொன் நச்சுநச்சென் பதுபோல்**
**சலிப்பறற்கா முழங்கல்கெவு ளிப்பலஞ்சாற் றுதற்கே.** 418

சுயமனையில் இடமாகவும், யாத்திரை போகையில் வலமாகவும் அன்னியர் மனை மற்றுள்ளதில் இருக்கும்போது முன்பாகவும், அம்பலத்தில் இருக்கும்போது பின்பாகவும், காய், பூ முதலானவை இல்லாத மலட்டுமரம், இலை இல்லாத மரம், முள் உள்ள மரம், கைப்புள்ள மரம் ஆகிய இவை முதலானவற்றில், இவ்வர்க்கம் போலும் மற்றுள்ள இடத்திலும் கெவுளி சொல்லில் மனோசஞ்சலம் என்க. ஒரு குரல் செல்லில் துன்பம், இரண்டாகில் தனம், மூன்றாகில் மரணம், நான்காகில் சவுக்கியம், ஐந்தாகில் உற்றரார் வரவு, ஆறாகில் ரோகம், ஏழ-எட்டாகில் நெல் மலியவிற்கும். இப்பலம் யாருக்கு என்னில், அக்கினி மூலை, மேற்கு, ஈசானியம் இவை மூன்றில் சொல்லில் உறவினருக்கு என்க. தெற்கும் வடக்கும் சொல்லில் அன்னியருக்கு என்க. மற்ற இடங்களில் சொல்லில் தனக்கு என்க. சுயமனையில் வலத்திலும், வாசலில் உச்சத்திலும் சொல்லில் தனம் என்க. தன்னை வளைந்து சொல்வதிலும் புலவியில் சொல்வதும், நச்சுநச்சென்று சொல்வதும் கலகம் என்க. கெர்ச்சிதமாகச் சொல்லில் சஞ்சலம் இல்லை என்க.

சாற்றுகெவு ளிக்குருவங் குனங்குலமற் றுளதற்
　　தலைவரில் போலுளதாந் தாதுமுதல் உளது
மாற்றுளதுந் தெரிந்துரைப்ப பருதயமதற் குளலாய்
　　வந்ததினத் திசைநேரராய் வகுத்துமற்றத் திசைக்கு
மேற்றபகா ரம்மதுவும் இசைந்திடுவர் இதனால்
　　இறப்பிருப்புள் ளதுவும்அவர்க் கீறளவும் வெகுவாய்
வேற்றொருநூல் பாராமல் சகலபலா பலமும்
　　விரித்துரைப்பர் இதன்மேல்தும் மல்குடைய இயல்பே. 419

கெவுளி சொல்லில் அதற்குடைய உரு, குணம், குலம், மற்றவையும் அந்த இலக்கனாதிபதியைக் கொண்டு சொல்லுக. தாது முதலானவையும் மற்றுமுள்ள வர்க்கமும் தெரிந்து சொல்லுக. உதய இலக்கன இராசியில் கண்ட நட்சத்திரத்திசை முதல் நேர் நடத்திய அபகாரம் சித்திரம் முதலானவைக்கு எல்லாம் பலன் சொல்லுக. ஆகையால் இறப்பு, இருப்பு முதலானவையும் ஆயுர்த்தாயம் வரைக்கும் உள்ள பலாபலமும் வேறொரு நூல் பாராமல் மிகுதியும் விரித்துச் சொல்லுவார்கள். இதன்மேல் தும்மல் இயல்பு சொல்லுவோம்.

தும்மலொன்றேல் பலன்சொலன்மற் றடுத்திடனும் ஒருவன்
　　தூண்டினும்நிற் பலம்வற்றோர் சொரூபமெனில் சுபமாம்
செம்மையில்கை மைவலக்கை ஆயுதனேல் விரித்த
　　சிரசினனேல் தீதாம்சேய் எடுத்துறில்செல் வமுமா
கும்மரணம் தனமிகல்கேள் கூடல்செயல் சுபமாம்
　　குலம்பிணிநே ரருக்கன்முதல் கூறுதற்காங் குசனேல்
சம்சயலுற் றார்வரலா தாயநற்போ சனம்போர்
　　சாம்புதநீ திதன்மேல்கா கத்தியல்சாற் றுதலே. 420

*தும்மல் பலன் அறியும்படி :* ஒரு தும்மலாகில் பலமாம். அடுத்த தும்மலாகில் ஒருவன் தூண்டிக் காட்டிலும் நிர்பலமாம். ஆணுக்குப் பெண்ணும், பெண்ணுக்கு ஆணுமாகில் உத்தமம். பெண்ணெனில் விதவையும், ஆணெனில் வலக்கை ஆயுதனும் அல்லது விரிதலையனும் தும்மில் தீதாம். குழந்தையை வைத்திருப்ப வளாகில் மிகுதியும் செல்வம் உண்டு என்க. அருக்கன் முதல் நேர்

தும்மலுக்கு மரணம், தனம், தனம், கலகம், உற்றார் வரவு, காரியஜெயம், சுபம், மனோசஞ்சலம், ரோகம் என்க.

*திக்கு பலம் அறியும்படி :* அக்கினி மூலையில் சந்தோஷம், தெற்கு சஞ்சலம், கன்னிமூலையில் உற்றார் வரவு, மேற்கு தனலாபம், வடமேற்கு சுகபோஜனம், வடக்கு கலகம், வடகிழக்கு மரணம், கிழக்கு தீது என்க. இவ்வளவும் யோசனைப் பண்ணிச் சொல்வது தும்மல் பலமாம். இதன்மேல் காகத்தின் இயல்பு சொல்லுவோம்.

இயல்புரிபுச் செயம்விருந்நா தாயமழை கலகம்
　　இறப்புமனோ பயங்கிழக்காய் உதயமுதல் இவைநேர்
முயல்வதரைச் சாமமதாம் மேகமொடைந் திவைநேர்
　　முதல்வனன்பர் உறவுபகை மொழிவதுநேர் குரற்கம்
புயமனர்ச்சேர்ந் தளந்தவடி யையெழுவர்க் குதவ
　　பொருளுவகை மழைகலகம் செயமிறப்புற் றார்பால்
தயைபுரிதல் இவைகருங்கா கத்தியல்பாம் இதன்மேல்
　　சாற்றுதலாந் தைக்கியல்ப தாமலையத் தவனே. 421

குரல் காகம் கூப்பிடும்போது உதயம் முதல் மூன்றே முக்கால் நாழிகை ஒரு சாமமாக வைத்துக் கீழ்திசை முதல் நேர் சுகம், சத்துரு ஜெயம், உற்றார் வரவு, இலாபம், மழை, கலகம், மரணம், மனோபயம் என்க. குரல் ஒன்று-ஐந்து தனக்கும், இரண்டு-ஆறு அன்னியருக்கும், மூன்று-ஏழு உறவுக்கும், நான்கு-எட்டு பகைக்கும் என்க. காக்கைக் குரல் எழும்பின உடனே அடியளந்து பன்னிரெண்டு கூட்டி ஏழுக்குக் கொடுக்க மிச்சம் ஒன்றாகில் தனம், இரண்டாகில் சந்தோஷம், மூன்றாகில் மழை, நான்காகில் கலகம், ஐந்தாகில் சத்துரு ஜெயம், ஆறாகில் மரணம், ஏழாகில் உறவின்முறை சிநேகமாம். இவை கருங்காகத்துக்கு என்க. இதன்மேல் ஆந்தை இயல்பு சொல்லுவோம்.

ஆந்தைகிளை கூட்டல்சுகம் குரற்கிகல்பொன் மனர்சா
　　வாதாயம் பஞ்சமினா ரோலையிறப் பரிவாழ்
வரந்தசமீ றாங்கிழக்காய்ப் பொருள்வீதல் வரல்பொன்
　　மாரணம்சஞ் சலம்கீர்த்தி மகிழ்விவைவே சரிக்காம்

பூந்துணர்சந் தனம்புழுகு பூகிசவா தாடை
புரக்முதற்கோண் கேந்திரமெனில் சுந்தரிக்காம் புயலாம்
கூந்தலிட மற்றவர்க்காய் உறுப்பிறைவர்க் குளதாய்க்
கூறுவர்மெய் துடிக்கிதன்மேல் பதனவியற் குளதே. 422

ஆந்தை கிளை கூட்டில் சுகம். ஒரு குரலுக்குக் கலகம், இரண்டுக்குத் தனம், மூன்றுக்கு மன்னர் மடிவு, நான்கிற்கு இலாபம், ஐந்திற்குப் பஞ்சம், ஆறுக்குப் பெண் வரவு, ஏழுக்கு ஓலைவரவு, எட்டுக்கு மரணம், ஒன்பதிற்குச் சத்துரு பயம், பத்துக்குப் பாக்கியம். இவை ஆந்தை காதல் என்க.

*வேசரிக்கால் அறியும்படி :* கீழ்த்திசை நேர் தனம், மரணம், நினைத்தது வரவு, ஐஸ்வரியம், மரணம், மனோபயம், கீர்த்தி, சந்தோஷம் என்க.

*மூஞ்சுறு வீச்சிடல்:* சுக்கிரன் இருந்த இராசி திரிகோண கேந்திரமாகில் பூக்கொத்து, சந்தனம், புழுகு, விபூதி, சவ்வாது, புடவை வரும் என்க.

*மெய்யில் துடிக்கில் :* பெண்களுக்கு இடமும், புருடர்க்கு வலமும் சுபபலமாக வைத்துக்கொண்டு அந்தந்த உறுப்புக்கு உடையவனைக் கொண்டு பலம் சொல்லுக. இதன்மேல் பதனபலம் சொல்லுவோம்.

காதல்பலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ஐம்பத்து மூன்றுக்குக் கவி 422

## 54. பதனபலப் படலம்

பதனமுடிப் பாலுடும்பிற் பல்லிநரர் ஓந்தி
பருந்துகொடித் தொங்குகட்டிப் படினுமவ்வாண் டிறப்பாம்
இதுபுணர்ப்போ டவ்வுருவப் பல்லியெனி லயனம்
இடையிரண்டொன் றரைமேல்கீழ் அதிலிரட்டிப் பிவைநேர்
முதலுவிதுக் குரைப்பாழ கிளமைவெளுப் பரத்த
முத்துருவப் பல்லிவல முற்றிடில்சஞ் சலமாம்
அதிகசுமங் களந்தனம்வா மதெனின்மற் றேறல்
காமிதுவு மாம்பூரம் ஆகிலுமற் றதற்கே. 423

*பதனபலம் அறியும்படி :* உடும்பின் வடிவு போன்ற பல்லி, நரர், ஓந்தி, பருந்து, காகம், தொங்குகட்டி இவை சிரசில் விழில் அந்த வருடம் மரணம். முன்சொன்ன பல்லி பிணைந்து சிரசில் விழில் மாதம் ஆறில் மரணம், இடையில் விழில் வருடம் ஒன்றில் மரணம், கழுத்துக்கீழ் அரைக்குமேல் விழில் மாதம் ஒன்பதில் மரணம். அரைக்குக் கீழ் விழில் மாதம் இருபத்து ஒன்றில் மரணம். இவை நேர் இரட்டிப்பாக முன்சொன்ன நரர், ஓந்தி முதலானவைகளுக்கும் சொல்லுக. அழகு, இளமை, சிவப்பு, வெளுப்பு, முத்துருவமாகிய பல்லி வலப்புறம் விழில் மனோசஞ்சலம், இடப்புறம் விழில் சுப சோபனம், தனலாபம். இவை வலப்புறத்து ஏறில் மரணம். இப்பலம் பூரத்துக்குமாம் என்க. இடப்புறம் ஏறில் மத்திம பலம்.

இல்லிடும்பா மைகராவ ருதல்பருந்த டித்த
ஈக்கூடித் தேனிழைத்தல் செஞ்சிதல்புற் றெழுதல்
நல்லரவு பேய்தினமும் ஆடல்புலை ஆட
நாசமுறு நாள்கணித்த தாஞ்சிவிகை நாகம்
கல்லணைவாம் பரியிலிவை ஏறிவிழ நேர்தே
கப்பதனம் சிறைபடுதல் கருதலருற் றிடர்க்காம்
பல்லுகிரென் புரிகரிநூல் பங்கியவம் இருந்துண்
பதிலசனத் தாகிலரி சனம்சவுபாக் கியமே. 424

மனையில் உடும்பு, ஆமை, முதலை வரில், பருந்து அடிக்கில், ஈக்கூடி தேன் வைக்கில், செஞ்சிதல் புற்றெழும்பில் நல்லபாம்பு, பசாசு தினமாடில், புலையாடில் இவை நாசமாகும் காலத்துக்கு அடுத்த குறி என்க. பல்லக்கில் ஏறி விழில் தேகபதனம், யானை ஏறி விழில் சிறைபடல், குதிரையில் ஏறி விழில் சத்துரு பயம் என்க. பல், நகம், எலும்பு, தோல், கரி, நூல், மயிர் இவை பொசிக்கும் வர்க்கத்திலாவது அசனத்திலாவது கிடக்கில் அவமிருத்து என்க. மஞ்சள் கிடக்கில் சௌபாக்கியம்.

பாரிலுயிர்ப் பிறப்பிறப்பும் பல்குணமும் தொழிலும்
பகருமவைக் குறுமிடரும் பல்கியநன் நலமும்
தேரியுல கோரொழகும் சீர்கொள்விதிவி லக்கும்
சேர்கதியும் மற்றவையும் சேர்த்துரைத்தாம் இந்நூல்
ஏரியல நிகழ்கவென வியம்பியகத் தியனுக்
கீறிலருள் சுரந்தவனை இருக்கையிலுய்த் திருந்தான்
போரியலும் வேலனிறை பூரனன்வி சாகன்
பூங்கடம்பன் எனதுளமாம் பூங்கமலா சாகன். 425

பூலோகத்தின்கண் சகல ஜீவராசிகளும் பிறந்திறக்கும் தன்மையும், அவற்றின் பலவகை குணகுணங்களும், தொழில்களும், இருவினைக்கு ஈடாய் அவற்றிற்குப் பொருந்தும் இன்ப-துன்பங்களும், இவ்வுலகின்கம் உள்ள யாவரும் தெளிந்து ஒழுகற்குரிய விதிவிலக்குகளும், மறுகையில் அவர்கள் அடையும் கதியும், உலகியல் நட்டமுட்டி சிந்தனை முதலிய மற்ற யாவையும் நினைக்குப் புலப்படும் வண்ணம் யாம் திரட்டிக்கூறி இந்நூலானது அழகோடும் கூடி இப்பூலோகத்தின்கண் என்றும் அழிவுறாது நிகழ்கவெனத் திருவாய் மலர்ந்தருளி அகத்தியமா முனிவருக்கு ஈறில்லாத தண்ணருள் சுரந்து, அவனைத் தனது இருப்பிடமாகிய பொதியாசலத்துக்குச் செல்கெனப் பணிந்து திருச்செந்தூரில் இனிது வீற்றிருந்தவன் போர்த் தொழிலை உடைய வெற்றி வேலாயுதத்தைத் தரித்தவனும் சர்வேசனும் சர்வபரி பூரணனும் விசாகன் எனும் திருப்பெயர் உடையவனும் வாசனை கமழாநின்ற கடப்பமாலையை உடையவனும், எனது இருதயகமலமாகிய ஆலயத்தின்கண் நீங்காமல் எழுந்தருளியிருப்பவனுமாகிய சுப்பிரமணியக் கடவுள்.

பதனபலப் படலம் முற்றிற்று.

ஆகப்படலம் ஐம்பத்து நான்கிற்குக் கவி 425

# பாடல் முதற்குறிப்பு அகராதி

*பின்னிணைப்பு : I*

குமரன் துணை

*திருநெல்வேலி ஸ்ரீ புதூர். இராமசுவாமியா பிள்ளையவர்கள்*
*குமாரரும் சாலிவாடீசுர ஓதுவா மூர்த்திகள்*
*மாணாக்கருமாகிய*
*புதூர். வள்ளிநாயகம் பிள்ளையவர்கள் இயற்றிய*

**சிறப்புப்பாயிரம்**

*பொன்கிளர் மருமப் பூந்துழாய் மிகிலும்*
*புலமகள் பொருந்துநா வினினும்*
*தென்கிளர் நறிய எழுந்தரு நீழற்*
*திகழ்வுறு தேவனும் இறைஞ்சும்*
*மின்கிளர் விதுஞ்செஞ் சடையினான் தனது*
*மெய்யடி யவர்வி ளங்க*
*மன்கிளர் சைவப் பயிர்தழைத் தோங்கும்*
*வளர்கெழு பாண்டிநன் னாடு.* 1

*துன்னிய மலர்ப்பூம் பொழில்களும் எகினத்*
*தொகுதியார் தூயநல் தடமும்*
*கன்னிய கதலிக் கானமும் செந்நெல்*
*கழனியும் கன்னல் காடு*
*மன்னிய கருவி மழைமுகில் தவழும்*
*மணிதிகழ் மாடமும் பொலிந்து*
*மின்னிய தரளப் பொருநைவண்டு றைசூழ்*
*வீரைமா நகரத்தில் விளங்கும்.* 2

---

*1923-ஆம் ஆண்டு பதிப்பிக்கப்பட்ட குமாரசுவாமியம் நூலில் இருந்த சிறப்பாயிரம், எளிமை கருதி சீர்கள் பிரிக்கப்பட்டு இணைக்கப்பட்டுள்ளது.*

அன்னதின் மாறி யாடிய பெருமாள்
என்றொடு அருந்தவக் குறிசின்
மன்னிய வணிகர் மரபெலாம் வயங்க
வாழ்ந்தனன் மற்றவன் தன்பால்
மின்னிய வேற்கை விமலன தருளால்
விரிதிரை யுலகெலாம் வியப்ப
உன்னரும் புகழ்சேர் அறிவெலாம் நிறைந்த
ஒருமகன் உதித்தனன் வந்து. 3

நற்றவம் முயன்று பெற்றவம் மகற்கு
நலந்தரும் சாதகம் எழுதி
முற்றுநற் பலனே மொழிந்தவந் தணர்க்கு
முறைமுறை இருநிதி வழங்கி
மற்றைய வினைய மரபினுக் கேற்ப
மகிழ்வுறு வியற்றுபு வணிகம்
உற்றகு மார சுவாமியென் றுரைக்கும்
ஒப்பிலா நாமமும் புனைந்தான். 4

பொருவடி வேற்கைப் பூரண னழியாப்
போதவா னந்தமெய்ப் பரமன்
திருவடி யவர்தாம் செய்தவம் போன்று
சிறுவனும் அகவையைந் துற்றான்
கருவடி வெடுத்துக் கதியிலா துழலும்
கசடனேர்க் கருள்செயும் பரம
குருவடி வழூத்திக் கலையெலாங் குரவன்
கொளுத்தினான் குமரனுக் கொருங்கே. 5

மைந்தநற் றிரமு மாக்கமு நோக்கி
மாறி யாடியபெரு மாளும்
சந்தத மானா மகிழச்சியுள் திளைத்துச்
சாருநாள் முன்னைஊழ் வலியால்

அந்தமில் குலமும் அருமைநன் மகனும்
அணிமனைக் கிழத்தியும் இரங்கிச்
சிந்தைநொந் தரற்றி அயர்வொடும் புலம்பத்
தென்புலம் சேர்ந்தனன் அன்றே. 6

இறந்ததன் தாகைக் கீற்றுறு கடன்கள்
இயம்பிய விதிவழி இயற்றிச்
சிறந்தநல் லறிஞர் தேற்றடித் தெளிந்து
செல்வமும் கல்வியும் பழுக்க
நிறந்திகழ் பூணான் நிகழும்அந் நாளில்
நிகரில்தன் குலத்தினுக் கிசைய
வறந்தரு கற்பில் அருந்ததி யெனுமோர்
அணங்கினை அருங்கடி முடித்தான். 7

அலர்நெடும் பகழிக் காமனும் அழகார்
அணிமுலை இரதியும் போன்று
சிலபகல் இன்பத் துறையினில் பொருந்திச்
செய்யவாய்க் குழவியைப் பயந்து
குலவிய மஞ்ஞைக் குமரவேள் வனசக்
குரைகழல் குறைவறத் தொழுது
பலபல தரும தானமும் இயற்றிப்
பல்வளம் பழக்க வாழ்ந் திருந்தான். 8

இன்னண மொழுகு நாட்களில் ஒருநாள்
ஈன்றநல் அன்னைதன் முகத்தில்
துன்னிய வாட்டம் தோன்றிட இருந்தாள்
தூயமைந் தனும் தறிந்து
பொன்னடிக் கமலந் தொழுதுநின் றன்னாய்
புலர்ந்துநீ இருப்பது தகுமோ!
வென்னைகொ ளிகழ்ந்த திசையென லோடும்
இவ்வணம் இசைந்தனன் மாதோ! 9

நன்றுமங் கலநா ணுறும்பொழு திறந்த
நாயகன் இறந்தவப் பொழுதே
பொன்றுதல் அல்ல தோராண்டில் பொன்றல்
பொற்றொடி மகளிருக் கடிகாம்
என்றசொல் உணர்ந்தும் இற்றைநாள் வரையும்
இருந்தனன் இணையிலாக் கொடியேன்
கன்றினன் அதலால் கதியிலே னென்றாள்
கண்கணீர் கலுழ்தரச் சோர்ந்தே. 10

அன்னைதன் மொழிகள் அனைத்தையும் கேளா
அகங்கரைந் தறிஞனும் அறைவான்
பொன்னுல கதனில் புலவர்க ளேனும்
புனிதமெய்ஞ் ஞானிக ளேனும்
மன்னிய கற்பின் மகளிர்க ளேனும்
மாதவ முனிவர்க ளேனும்
முன்னுமூழ் வினைதுயர் உறுதலே அன்றி
ஒழிந்திடப் பாலரே உரைப்பாய்! 11

உலகெலாம் ஈன்ற உமையவள் தனையும்
ஒப்பிலா மகளெனப் பெற்ற
திலகவா ணுதல்பொன் மாலையும் கொழுநன்
சோணகர் அடைந்தபின் சிலவாண்
டிலகுபூ மியினில் இருக்கவும் இலையோ?
இருங்கதி எய்தவும் இலையோ?
அலகிலாப் புகழ்சேர் அரிவையர் இவ்வா
அளப்பிலா ராய்ந்திடப் புகினே. 12

என்றிதி காசம் பலபல இயம்பா
வீன்றிடும் அன்னையைத் தேற்றிப்
பொன்றுகா லமுமற் றவன்புகு கதியும்
புந்தியில் தெளிந்திட நினையாச்

சென்றுதே சிகனைச் சீரடி பணிந்து
செப்பினன் கருத்தெலாம் வினவி
நன்றுநீ கொண்ட கருத்தென நகையா
நவையறு காட்சியாய் நவில்வான். 13

புள்ளிமான் ஈன்ற காதல் பூவையைப் புனித மான
வள்ளிநா யகியை வேட்டு மணந்திடும் வடிவேல் கந்தன்
வெள்ளிமா மலையின் மேனாண் மேவிமா லயனுங் காணாத்
தெள்ளுவார் புனல்கொள் வேணிச் சிவனடி பணிந்து நின்றான். 14

பொருக்கென எழுந்து முக்கண் புதல்வனும் புதல்வர் புல்லி
இருக்கென பாங்கர் வைத்தே எழிலுறும் முதுகு தைவந்
தருட்கணால் இனிது நோக்கி ஐயநீ வந்த தென்கொல்
விருப்புற மொழிதி என்றான் வேலனும் விளம்ப லுற்றான். 15

இருதினை உயிர்க ளுக்கு இவையலா தவைக ளுக்கு
ஒருதனி கடவு ளர்க்கும் உறுவன பலவும் சொல்வான்
கருதியிங் கொருநூல் நன்கு பழநினன் அனைய நூலைப்
பொருதிறல் விடையாய் என்றும் புகழுத வருடி என்றான். 16

இணையன வினவி ஈசன் எமக்கினி வருவ தொன்று
நினைவுற நிகழ்த்து என்றான் நிமலனும் அப்போ துற்ற
வினையுறு கோள்கள் நோக்கி மேவுசின் னாளில் ஏகற்
பனையது கடந்து பாதா பலியெடுத் துழல்வை என்றான். 17

மாதிட மருவு நாதன் மைந்தனை நோக்கி இந்தச்
சோதிட வலியால் அன்றோ தூயஎன் நிலையும் சொற்றாய்
கோதிட ஒழிவி லாத குவலையத் தாரும் இங்ஙன்
ஓதிய வல்ல ராயின் உறகமுற் றழிவு மன்றே. 18

ஆதலால் இனைய நூறான் அவனியில் ஐந்து நானா
பேதமாய் உழல்க வென்று பேசினன் பெரிய சாபம்

வேதன்மால் பதவி எல்லாம் விரும்பினார்க் கினிது நல்கும்
நாதனாம் குமர வேளும் நகையறு முகத்த னானான். 19

அன்னைதை அரனும் நோக்கி ஐயநீ கவலல் வேண்டா
இன்னல்செய் கொலைகள் காமம் இருங்குர வனுக்குத் தீங்கு
முன்னல்பொய் மொழிதல் சைவ முறையினை இகழ்ந்து பேச
உன்னுமிக் குணங்கள் எல்லாம் மொழிந்துமெய் அறிஞ ராகி 20

சந்தமார் உனது பாத சரோருகம் இறைஞ்சு வார்க்கே
இந்தநூல் பலிப்ப தாக என்றலும் இறைவன் போற்றிக்
கந்தமார் குழலாள் வள்ளி கணவனும் கயிலை நீங்கி
வந்தமா மயில்மீ தேறி வளங்கொள்செந் தூரைச் சார்ந்தான் 21

அனந்தனும் வியந்து கூறும் அறிவுடை வணிகா! நல்ல
மனந்தனில் விழைந்த வெல்லாம் வழங்குவன் கருணை வள்ளல்
சினந்தனர் நீயும் அன்னாள் சேவடிக் கமலம் போற்றில்
கனந்தரும் அனைய நூலைக் கசடறப் பயிற்று மன்னோ 22

அந்தநூல் முறைமை யாலே அனைத்தையும் தெளிய லாகும்
மைந்தநீ போதி என்றாள் வணிகனும் குரவற் போற்றிச்
சந்தமா மனையில் ஏகித் தாயிடை விடையும் பெற்றுச்
சிந்துபூம் பொழில்கள் ஆரும் செந்திலம் பதியைச் சேர்ந்தான். 23

அரம்பையர் நடிக்கும் ஓசை அணிகெழு முழவின் ஓசை
அரம்பயில் யாழின் ஓசை சுருதிகள் முழங்கும் ஓசை
வரம்பெறு கவிகள் கூறு மங்களப் பாட்டின் ஓசை
நிரம்பிவிண் ணளவும் ஓங்கும் நெடுமதில் கோயில் புக்கான். 24

அண்டமும் அயனும் மாலும் ஆயிரம் செங்க ணானும்
தொண்டரும் மிடைந்து நிற்கும் தூயசன் னதியைச் சார்ந்து
பண்டரு மொழியாள் வள்ளி பாகனைப் பரமன் ஏற்றி
கண்டரும் அமல வேளைக் கண்ணிணைக் களிப்பக் கண்டான். 25

கரமலர் சிரமேல் கூப்பிக் கண்கள்நீர் பொழிய நின்று
புறமது புளகம் போர்ப்பப் பொய்யிலன் புருவ மாகி
விரவிய அழல்சேர் வுற்ற வெண்ணெய்போல் உருகி நெஞ்சம்
பரவும்நாத் தழுத ழுப்பப் பணிந்தனன் பழிச்ச லுற்றான். 26

ஆதியே போற்றி போற்றி அனகனே போற்றி போற்றி
நீதியே போற்றி போற்றி நிமலனே போற்றி போற்றி
சோதியே போற்றி போற்றி தூயனே போற்றி போற்றி
பூதியே இலகும் எண்தோள் புனிதநல் புதல்வா போற்றி. 27

ஆரணா போற்றி போற்றி ஆறுமா முகனே போற்றி
காரணா போற்றி போற்றி கருணையங் கடலே போற்றி
வாரணா போற்றி போற்றி வள்ளிநா யகனே போற்றி
பூரணா போற்றி போற்றி பூங்கடம் பணிவாய் போற்றி. 28

வேலனே போற்றி போற்றி விண்ணவர்க் கிறையே போற்றி
கோலனே போற்றி போற்றி குஞ்சரி கொழுநா போற்றி
மூலனே போற்றி போற்றி முருகனே போற்றி போற்றி
சீலனே போற்றி போற்றி செந்தில்வாழ் குகனே போற்றி. 29

வெருவரு பிறவிக் கெல்லாம் வித்தெனும் வரனை யுற்றே
இருநில மதனி லென்று மிழிதொழில் பூண்டு ளேற்கும்
குருமணி இமைக்கும் செந்தில் குழகனே குமர வேளே!
அருமறை சிரத்தின் வாழும் அமலநின் அருளும் உண்டோ? 30

நீரிடைக் குமிழி போலும் நிலையிலா யாக்கை தன்னைப்
பாரிடை நிலையென் றுன்னாப் பழித்தொழில் பூண்டு ளேற்கும்
வாரிடைப் பொலியும் கொங்கை வனக்குற மடந்தை பாகா!
வோரிடை யூறு மின்றி உயருநின் னருளும் உண்டோ? 31

வறியநுண் மருங்கு லாரை மண்ணொரு நிதியை வேட்டுப்
பொறிவழி யூடு சென்று புண்தொழில் பூண்டு ளேற்கும்

வெறிகமழ் மலர்ப்பூஞ் சோலை விளங்கிய செந்தில் நாதா !
அறிவுறும் அமல வேற்கை அனக ! நின் அருளும் உண்டோ ? 32

அடியனேன் புரியும் குற்றம் அனைத்தையும் பொறுத்தல் செய்து
படியிலா தரங்கை ளெல்லாம் பழுதற வொழித்தெந் நாளும்
முடிவிலா னந்த வீடும் மூடனேற் கருள்செய் வாலோ
கடியுலாக் கடப்பங் கண்ணிக் கந்தனே ! கருணை வேளே ! 33

இன்னவா றென்னை யாளும் இறைவனைப் பழிச்சி நின்று
மன்னுசோ திடநூல் தன்னை வழுவுற உபதே சித்து
முன்னியான் விழைந்த வெல்லாம் முனிந்திடா தருடி யென்று
பன்னுமா தரத்தி னோடும் பணிந்துதன் இருக்கை புக்கான். 34

மின்னிய சுடர்வெய் யோனும் மேலைவா ரிதியில் ஆழ்ந்தான்
மன்னிய குமர வேளும் வணிகர்கோன் கனவில் தோன்றி
அன்னவன் குறித்த வண்ணம் அருளியவ் வடிவம் காட்டி
இன்னகை சிறிது தோன்ற வினையன விளம்ப லுற்றான். 35

மகத்துவம் பொருந்த நாமுன் வழங்கிய சோதி டத்தை
அகத்திய முனிவர்க் கன்றே அருளினம் அணைய நூலை
செகத்திடை முனிவர் சில்லோர் திரிபொடு ஐயம் நீக்கி
மிகுந்தநுண் அறிவின் ஆய்ந்து விளம்பனர் அளவின் நூலே. 36

அந்தநூல் எல்லாம் நீயே ஆய்ந்திடும் நாமும் நின்றன்
சிந்தையே மேவி நின்று தெருட்டுவ நமக்கன் பாகும்
மைந்தநீ அவற்றை யெல்லாம் வழுவற தெறிந்த பின்னர்
புந்தியால் நினைந்த வெல்லாம் புரையற நினக்கே தோன்றும். 37

ஆயகா ரியங்க ளெல்லாம் அறிவினில் தெளிந்த பின்னர்
தூயசோ திடநூ லொன்று சொல்லுதி யுலகுக் கெல்லாம்
மாயமாம் உலக வாழ்வை மறந்திடு வினையும் அற்று
மேயநான் நினக்கு மேலாம் வீடுநாம் அருள்வோம் என்னா. 38

சான்றினன் கருணை பூத்துச் சனனவெந் துயர மாற்று
நீற்றினை இனிது நல்கி நிறைந்தவன் மறைந்து போனான்
சீற்றமில் வணிக ரேறுந் திடீரென விழித்தான் வேலர்
போற்றினன் புகழ்ந்தான் கண்ணீர் பொழிந்தான் புகை முற்றான்.39

ஆடினான் அழல்சேர் வுற்ற வரக்கென அகங்கு ழைந்தான்
பாடினான் பரமா னந்தப் பரவையில் படிந்தான் அன்பில்
நீடினான் நிமலன் கோயில் நிலவுசன் னதியைச் சார்ந்து
சூடினான் கரங்கள் சென்னி துதித்தனன் வாய்கொ ளாதே. 40

வேலவன் கருணை எல்லாம் விளங்கி செய்யுன் மாலை
சாலநன் கினிது சாத்தித் தரைமிசைப் பணிந்தெ ழுந்து
பாலன மொழியாள் வள்ளி பாகனல் விடையும் பெற்று
மேலவர் புகழா நிற்கும் வீரையும் பதியைச் சார்ந்தான். 41

உருகுமெய் யடியா ருள்ளம் உவந்தன வெல்லாம் நல்கும்
குருதிகொப் பளிக்கும் வைவேற் குமரன தருளைக் கொண்டு
முருகவிழ் முல்லை மார்பன் முந்துசோ திடங்க ளெல்லாம்
கருதியே வயன மொன்றில் கசடற பயின்றிட் டானால். 42

கான்றமின் மணிப்பூண் மார்பன் கற்பமும் குணிக்க வல்ல
வான்றநல் லறிஞ னாகி அற்புதம் எவர்க்கும் தோன்றச்
சான்றமெய்ப் பலன்கள் எல்லாம் தரணியோர்க் கிசையக் கூறி
ஈன்றவட் கிறுதி நாளும் எய்திடும் கதியும் தேர்ந்தான். 43.

பெரியபன் மலைக ளெல்லாம் பிறங்குகண் ணாடி தன்னுள்
தெளிவுற காட்டு மாபோல் சீவபல் கோடி கட்கு
முரியபல் குணமும் இங்ஙன் நோவறு தொழிலும் மற்றும்
விரியுமுக் காலந் தன்னுள் விளைபொருள் பலவும் தோன்ற. 44

உலகமும் அலைவு றாமல் உயர்ந்ததன் பெயரா லென்றும்
இலகுற இந்த நூலை எம்மனோர்க் கியம்பி னானால்

விலகிவில் லுமிழும் வேற்கை விமலனே பரமென் றுற்றோன்.
அலகறு கலைகட் கெல்லாம் ஆகர மாயி னானே. 45

சொல்லுறும் பொழில்கள் சூழும் செந்திலம் பதியைச் சேர்ந்து
வெல்லரும் கதிர்கொள் வேலன் விளங்குசன் னதியில் அந்தச்
சொல்லரும் புகழ்க்கு மார சுவாமியம் என்னும் நூலை
எல்லுறும் கனகப் பூணான் இனிதரங் கேற்றி னானே. 46

மனிதரும் வானு ளாரும் மகிழ்ந்துகொண் டாட வப்போ
இனிதினி தென்னா வங்ஙன் எழுந்ததோர் தெய்வ வாக்குப்
புனிதவந் நூலி லுள்ள பொருளெல்லாம் செவிக ளாரக்
கனிதரு கருணை வேலன் களித்தருள் புரிந்தான் மன்னோ ! 47

*சிறப்பாயிரம் முற்றிற்று.*



## துணைநூல் பட்டியல்

1. **குமாரசுவாமியம் மூலமும் உரையும்,**
*ஸ்ரீ வள்ளிநாயகம் பிள்ளை (பதிப்பு),*
*வைத்தியரத்னாகர அச்சுக்கூடம்,*
*சென்னை, 1923.*

2. **சோதிடப் பேரகராதி,**
*எஸ். பி. ராமச்சந்திரன் (பதிப்பு),*
*தாமரை நூலகம்,*
*சென்னை - 26,*
*முதல் பதிப்பு 1995.*

3. **ஜோதிடக் கலைக் களஞ்சியம்,**
*எஸ். பி. சுப்பிரமணியம் (பதிப்பு)*
*நர்மதா பதிப்பகம்,*
*சென்னை - 17,*
*முதல் பதிப்பு 1994.*